# தொல்காப்பியம் ஆராய்ச்சிக் காண்டிகையுரை

## சொல்லதிகாரம்

பாவலரேறு ச. பாலசுந்தரம்

தமிழ் வாழ்க

# தொல்காப்பியம்

## சொல்லதிகாரம்

ஆராய்ச்சிக் காண்டிகையுரை




உரையாசிரியர்
பாவலரேறு, பேராசிரியர்
ச. பாலசுந்தரம்

தாமரை வெளியீட்டகம்
367, மேலவீதி, தஞ்சாவூர்-9.

## காணிக்கை

எனக்கு மொழியறிவித்து வழிகாட்டிய
ஆசான்மார் அனைவர்க்கும்

இந்நூல் வாளமர் கோட்டை தவத்திரு
காத்தையா சுவாமிகள் அருளாசியும்
தஞ்சை சால்பக நிறுவனர்
திரு உலக. சுப்பிரமணியனார் நல்லாதரவும்
தமிழ் வளர்ச்சிக்கான தமிழ்நாடு அரசின்
திட்டத்தின் கீழ் நிதியுதவியும் பெற்றது.

விலை ரூ. 45

ஜெமினி அச்சகம், மேலவீதி, தஞ்சாவூர்-9.

25-2

# அணிந்துரை

முனைவர் ச. அகத்தியலிங்கம்,
எம். ஏ., பிஎச்.டி., கேரளா. பிஎச். டி ,(இந்தியானா அமெரிக்கா)
துணைவேந்தர்
தமிழ்ப் பல்கலைக்கழகம் — தஞ்சாவூர்.

பேராசிரியர் ச. பாலசுந்தரம் அவர்கள் எழுதியுள்ள தொல்காப்பியம் - சொல்லதிகாரம் - ஆராய்ச்சிக்காண்டிகையுரை நூலைப் படித்து மகிழ்ந்தேன்.

தஞ்சைத்தரணியில் பல ஆண்டுகள் புலவர் வகுப்பு மாணவர்க்குப் பாடம் சொல்லிக் கொடுத்தவர் பாவலர் ச. பாலசுந்தரம் அவர்கள். இப்போது தமிழ்ப்பல்கலைக் கழகச் சங்க இலக்கிய அகராதித்திட்டத்தில் பணிபுரிபவர். தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத்துறை போகியவர். யான் பெற்ற பேறு பெறுக இவ் வையகம். என எண்ணும் சிந்தனையாளர். தான் கற்றதைக் கேட்டதை அனுபவத்தில் பிறரும் அறியவேண்டும் என்ற அவாவினால் தொல்காப்பியம் என்னும் பேரிலக்கண நூலுக்குப் புதிய உரை எழுதி வளம் சேர்த்துள்ளார். தொல்காப்பியச் சொல்லதிகாரம் என்றும் என் நெஞ்சைக்கவரும் இலக்கணமாகும் இதனைப் படித்துப் படித்துச் சிலநேரங்களில் புது உரைகள் கண்டு மகிழ்திருக்கிறேன் இத்தகைய ஒரு சிறந்த இலக்கணத்தை உருவாக்கிய தமிழ்ப் பாரம்பரியத்தை நான் நினைத்துப் போற்றியிருக்கிறேன். இந்நிலையில் பாவலர் எழுதியுள்ள புதிய உரையைப் படிப்பதற்குரிய வாய்ப்பு எனக்குக் கிடைத்தது அவருடைய அறிவிலும் ஆராய்ச்சியிலும் கண்ட பல நுணுக்கமான செய்திகளை இந்நூலுள் தந்துள்ளார். இப்பெரும் இலக்கணத்தைச் சில கோணங்களில் பார்ப்பதற்கு இவருடைய உரை பயன்படும் என எண்ணுகிறேன். உரையாசிரியர்கள் கருத்துக்களோடு தன்னுடைய எண்ணத்தையும் பல இடங்களில் இவர் தந்து செல்கிறார். இந்நிலையில் இந்நூல் அறிஞர்களுக்கும் ஆராய்ச்சியாளர்களுக்கும் பல்கலை மாணவர்களுக்கும் பயன்படும் என எண்ணுகிறேன். இத்தகைய நல்ல முயற்சிக்கு என்னுடைய நல்வாழ்த்துக்கள்.

தஞ்சாவூர்
31—8—88

ச. அகத்தியலிங்கம்.

# வாழ்த்துரை

திருப்பணிச் செல்வர்

தவத்திரு காத்தையா சுவாமிகள்

எனது அன்பிற்குரிய பாலசுந்தரம் எழுதிய தொல்காப்பியம் சொல்லதிகாரம் ஆராய்ச்சிக் காண்டிகையுரை யான் வேண்டிக் கொண்டவாறு விரைந்து வெளிவந்துள்ளதைப் பார்த்து மகிழ்ந்தேன். பிற செய்திகளை எழுத்ததிகார வாழ்த்துரையில் சொல்லியிருக்கிறேன். அடுத்துப் பொருளதிகார உரையும் உடன் வெளிவர அம்பிகை திருவருள் புரியப் பிரார்த்திக்கிறேன். இவ் உரை நூல்களைத் தமிழ்ப் பெருமக்களும் ஆய்வாளர்களும் மாணாக்கர்களும் வாங்கிப் படிப்பதன் வாயிலாக இவருக்கு ஊக்கமும் ஆக்கமும் அளிப்பார்களாக. இவர் மேலும் பல்லாண்டுகள் உடல்நலத்தோடு இருந்து முத்தமிழ்க்கும் தொண்டாற்றி மூவாப்புகழும் ஓவா ஆக்கமும் பெற்று வாழ எல்லாம் வல்ல சவுந்தர நாயகி சமேத சுந்தரேசப் பெருமான் திருவடிகளைப் போற்றி வாழ்த்துகிறேன், வாழ்க!

செ. காத்தையா

திரு. உலக. சுப்பிரமணியன்

இ. ஆ. ப. (ஓ) தஞ்சாவூர்

இறையருளால் பாவலரேறு ச. பாலசுந்தரம் அவர்களின் தொல்காப்பியச் சொல்லதிகார ஆராய்ச்சிக் காண்டிகை, யான் எழுத்ததிகார வாழ்த்துரையில் வேண்டியபடி விரைந்து வெளி வந்தமை கண்டு மகிழ்தேன். எழுத்ததிகார உரையைப் போலவே இதனுள்ளும் பல அரிய விளக்கங்களையும் ஆராய்ச்சிக் கருத்துக்களையும் படித்தறிந்து உவந்தேன். தமிழ் வளர்ச்சியை விரும்பும் பெருமக்கள் அனைவரும் இவ்வுரை நூல்களை வாங்கிப் படித்து இன்புற வேண்டுமென்பது என் அவா. விரைந்து பொருளதிகார உரையும் வெளிவர இறைவனை வேண்டுகிறேன். பிற செய்திகளை எழுத்ததிகார வாழ்த்துரையில் கூறியிருக்கிறேன். பாவலர் பல்லாண்டு எல்லா நலமும் பெற்று மேலும் நல்ல பல தமிழ் தொண்டாற்ற விரும்பி வாழ்த்துகிறேன். வாழ்க.

யு. சுப்ரமணியன்

# ஆராய்ச்சி முன்னுரை

பண்டித வித்துவான்

தி. வே. கோபாலையர், எம். ஏ.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டு வேற்றுமொழித் தாக்கத்தால் தன் தன்மையில் மாறுபாடு யாதும் நிகழ்தற்கு வாய்ப்பின்றித் தனக்கே உரிய தனித்தன்மையுடன் தமிழ்மொழி வழங்கிய காலத்து அதன் இலக்கணக் கோட்பாடுகளின் தனித் தன்மையை மனங்கொண்டு அதற்கு எழுத்து சொல் பொருள் என்ற முப்படலப் பகுப்பொடு தொல்காப்பியனாரால் இயற்றப் பெற்ற இயற்றமிழ் இலக்கண நூலுக்கு அவர்காலத்து உரைவரை யும் தேவை இலதாக ஆயிரத்துக்கும் மேற்பட்ட ஆண்டுகள் கழிந்த பின்றை, "பாரததேயத்துப் பயிலும் மொழிகள் எல்லா வற்றினுக்கும் தாய் சமற்கிருத மொழியே" என்ற எண்ணம் தமிழ் வடமொழி இரண்டனையும் புரைதபக்கற்றார் மாட்டும் உறுதிப்பட்ட அக்காலத்துத் தாம் தமிழ்மொழிக்கும் உரியனவாக உளங்கொண்ட மொழியியல் கோட்பாடுகளைத் தம் உரைகளின் இடைமிடைந்து கற்றுவல்ல சான்றோர் நால்வருக்கும் மேற்பட்டவர் தொல்காப்பியச் சொற்படலத்துக்கு வரைந்துள்ள உரைகள் இன்று நமக்குக் கிட்டுவனவாக, அவற்றிடை ஒப்பன ஒவ்வாதனவற்றை இக்காலத்து வளர்ந்து வரும் மொழியியற் கோட்பாடுகளில் தோய்ந்து உண்மை கண்டதம் நுண்ணறிவான் ஆய்ந்து நல்லனபலவற்றை ஏற்றும் அல்லனவற்றைத் தமிழியலுக்கு ஏற்பக் காரணங்காட்டி மாற்றியும் தொல்காப்பியச் சொற்படல நூற்பாக்களுக்குப் பெரும்பாலும் ஆசிரியர் கருத்தொடு பொருந்துவனவாகத் தாம் கண்ட பலவற்றையும் சுருக்கமாக முன்னுரையிலும் நூற்பாக்கள் உரையிலும் சுட்டி அவற்றின் விரிவை இனித்தாம் வரையவிருக்கும் தனிக்கட்டுரை களில் "உரைத்தும்" என்றும் தெரிவித்து இயற்றமிழ்ப் பெரும் புலவர் பாலசுந்தரனார் வரைந்துள்ள தொல்காப்பியச் சொற் படல ஆராய்ச்சிக் காண்டிகையுரையினை, விரைந்து நோக்கி நலங்கண்டு மகிழாத வகையில் என் மூப்பிற்கு உற்ற நட்பாய் அமைந்த நெடுநீரும் மடியும் இருபாலும் நின்று தகைக்க மறவி அவற்றுக்கு உற்ற துணையாக உதவ ஆகூழின் ஆற்றலான் அவற்றை ஒருபால் மீதூராவாறு தகைத்து நூல் முழுதும் ஒருமுறை நோக்கிப்பல இடங்களில் நயந்தும் சில இடங்களில் வியந்தும் யான்பெற்ற இன்பத்தை 'நல்லோர்

பலரும் முன்னரே இம் முன்னுரையைக் காணும் அளவிலேயே நுகரத் தொடங்குதல் வேண்டும்' என்ற வேணவாவால் இம் முன்னுரை வரைதற்கு முற்படுகின்றேன்.

திருவாய்மொழியின் பேருரையாகிய முப்பபதாறாயிரப்படிக்கு மகாப்பிரவேசம் என்ற நுழைவாயில் அமைந்துள்ளமை போல இக்காண்டிகையுரைக்கும் "தொல்காப்பியச் சொல்லிலக்கணக் கோட்பாடுகள்" நுழைவாயிலாக அமைந்துள்ளது. இந்நுழைவாயில் சொல்லிலக்கணத்தைப்பட்டாங்கு உணர்தற்கு ஊக்கமளிப்பதோடு அறியவேண்டிய செய்திகளைத் தொகுத்துக் கூறுகிறது.

இதன்கண், சொற்கள் பொருளுணர்த்துந்திறன், 'எண்' என்ற தனிப்பகுப்பைத் தமிழ் நூலார் கொள்ளாததன் விளக்கம், தமிழில் உள்ள படர்க்கைவினை முற்றுக்களின் சிறப்பு, பெயர்ச் சொல் வினைச்சொல் அமைப்பிற்கு இடைச் சொற்களும் உரிச்சொற்களும் உதவும் திறன், அஃறிணை இயற்பெயர் உயர்திணைக்கண் இடுபெயராக அமைதல், எட்டு வேற்றுமை களின் தோற்றம் ஒவ்வொரு வேற்றுமைக்கும் சிறப்பாக ஒவ்வொரு பொருளே அமைதல், உருபுகளை நோக்காமல் பொருளை நோக்கியே வேற்றுமையை உணர்தல், வினைப்பகுதிகள் ஓசை வேறுபட்டால் பெயராகவும் முன்னிலை ஏவல் வினையாகவும் ஆதல், தெரிநிலை, குறிப்பு வினைகளின் தோற்றம், வியங்கோள் சொல்லமைப்பால் படர்க்கைச்சொல்லாக இருந்தே இருதிணை ஐம்பாற்கும் வருதல், வினையெச்சம் வினை முற்றின் குறை வடிவம் என்பன, இடைச்சொற்கள் ஓரெழுத்தாயும், அசையாயும் சொல்லாயும் வடிவுற்று நிகழ்தல், உரிச்சொற்களின் அமைப்பு, சொற்கள் குறிப்புப்பொருள் பயக்கும் பல்வேறு முறைகளின் விரிவான பட்டியல், தொகைமொழி, தொகைச்சொல் இவற்றின் வேறுபாடு, கிளவி என்ற சொற்பொருள் விளக்கம், ஆகுபெயர் அன்மொழித்தொகை இவற்றின் வேறுபாடு, கனங்குழை என்பதன் பொருள் விளக்கம் போல்வனவற்றின் நுட்பமான, செய்திகள் தொடக்கத்தில் உளங்கொளற்பாலன இவற்றை நன்கு உளங்கொண்டு நூற்கண் செல்லின் நூல் தன்னைக் கற்போருக்குப் பெருவிருந்தாக உவகை செய்யும்.

**உரையிற் காணப்பெறும் சிறப்பான செய்திகளுள் சில :-**

***கிளவியாக்கம் :-***

தெய்வச்சிலையார் தொடர் மொழியுள் அல்வழித்தொடர் களைக் கிளவியாக்கத்தும், வேற்றுமைத் தொடர்களை அடுத்த

மூன்று இயல்களிலும், பெயர் வினை இடை உரி, என்ற தனிச்சொல் நான்கனையும் பற்றிய செய்திகளை அடுத்த நான்கு இயல்களிலும் சொல்லுள் எஞ்சியவற்றை எச்சவியலிலும் ஆசிரியர் குறிப்பிடுவதாகத் தெரிவிக்கிறார். இவ்வுரையாசிரியர் ஆராய்ச்சிக்குத் தெய்வச்சிலையார் ஓரளவு வழிகாட்டுகிறார்.

‘‘யாதானும் ஒரு சொல்லை இருதிணை ஐம்பாலுள் ஒன்றற்கு உரியதாக ஆக்கிக்கொள்ளுதலும், செப்பும் வினாவுமாக வரும் தொடர் மொழிகளை வழுவின்றி ஆக்கிக் கொள்ளுதலும், இலக்கண வரையறையிற் சிறிது பிறழ்ந்து வரினும் சான்றோர் வழக்காய்ப் பொருளுணர்ச்சி திரியாமல் மரபாக வருவனவற்றை மரபாக மேற்கொள்ளுதலும் ஆக்கமாம் .- கிளவி : தனிமொழி, தொகைமொழி, தொடர் மொழிகளுக்குப் பொதுவாக நின்றது. வழுவை நீக்கிக் கொள்ளுதல் ஆக்கம் ஆகாது’’ என்று கிளவி யாக்கத்துக்கு விளக்கங் கூறி அதனை அள்வியல் முழுதும் பொருத்திக் காட்டுகிறார் - பக் (24, 25).

ஆவும்ஆயனும் செல்க, என் புழித் திணை விராய் எண்ணுதல் வழுவமைதி எனின், இதற்கு வழாநிலை வடிவம் யாது ? என்ற வினா பொருட் சிறப்புடையது-(பக்:70) மக்கட் சுட்டு என்பதன் விளக்கம். (பக்-26) பவணந்தியார் மக்கள் தேவர் நரகர் உயர்திணை’ என்ற கூற்றின் பொருத்தமின்மை (பக் 28, 29)’ அஃறிணையில் ஒன்று பல என்ற பாகுபாடே கொண்டதன் கருத்து (பக்-31) பேடன் வந்தான் என்ற தொடர் பொருந்தாதெனல் (பக்-33).

னஃகான் ஒற்று முதலியன ஆடூஉவறிசொல் முதலியவற்றின் ஆக்க இலக்கணம் கூறுதற்கே எழுந்தன என்பது (பக் 34, 35) பகர உயிர்மெய் பலர்பாலையும் வகர உயிர்மெய் பலவின் பாலையும் ஆக்க உதவுவன எனல் (பக்-38) ‘தம்மரபினவே’ என்ற தொடரின் விளக்கம் (பக் 41, 32) தொடர்மொழியாக்கத் தின்கண் மயங்கல் கூடா என விதித்த திணை முதலிய ஐந்தும் செப்பினும் வினாவினும் வழுவாமற் போற்றுக’ என்று கூறி இவ்வியல் முழுதும் செப்பும் வினாவுமாக அமையும் தொடர் பற்றியதே என்பதைச் சுட்டுதல் (பக்-44), சுட்டு முதலாகிய காரணக்கிளவி அதனால் என்பதன்று ‘அதனான்’ என்பதே — என்பது பற்றிய விரிவான விளக்கம் (பக்-65)

‘‘தன்மைச் சொல்லே .. ........ வரையார்’’ என்பது பெயர் பற்றிய விதியாதலின், அது, ‘‘பன்மையுரைக்கும் தன்மைக்கிளவி ........உளவே’’ என்ற நூற்பாவில் அடங்காது எனல்

(பக்-68, 69) வியங்கோள் எண்ணுப் பெயர் திணை விரவி வருதல். வழாநிலையே எனல் (பக்-70)

"பெயரினும் தொழிலினும் ......... பட்டன" என்ற நூற்பாவின் பொருளுக்கு எடுத்துக்காட்டுக்கள் (பக் 73, 74) "குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி" என்ற நூற்பா உரை. கிளவி என்பதனைப் பிரயோக விவேக நூலார் போன்று வியங்கோளாகக் கொள்ளுதல் (பக்-78) "குடிமை யாண்மை" "காலம் உலகம்" என்ற நூற்பாக்கள் நுவலும் தொடர் மொழியாக்கம் பற்றிய செய்திகள்.

*வேற்றுமையியல் :–*

கிளவியாக்கத்தின் பின் வேற்றுமையியல் வைக்கப்பட்டதன் தொடர்பு (பக் 87,88) பெயர்ப்பொருள் எய்தும் வேறுபாடே வேற்றுமை என்பது (பக் 88, 89) பெயர் ஐ ஒடு கு முதலியன வேற்றுமைகளின் குறியீடு எனல் (பக்90, 91) பெயர் தோன்றும் நிலை என்பதன் விளக்கம் (பக் 92) வியங்கொள வருதல் என்பதன் விளக்கம் (பக்-94) பெயரினாகிய தொகை என்பதன் விளக்கம் (பக்-96) "கூறிய முறையின் ...... என்ப" என்னும் நூற்பாப் பொருள் (பக்-99) 'பெயர்நிலைக் கிளவி' என்ற நூற்பாவின் பயன் (பக்-100) அவ்விரு முதல் என்பதன் விளக்கம் (பக்-101,2) வினை முதற் கிளவி அனை முதற்று விளக்கம் (பக்-104, 5) அதனொடியைந்த ஒருவினை—வேறு வினை—விளக்கம் (பக்-107, 8) இன் ஆன் ஏது விளக்கம் (பக்-108) உடனிகழ்ச்சிப் பொருளும் மூன்றாவதும் (பக்-109) ஒடு என்ற சொல் பல பொருளில் ஆளப்படுதல் (பக்-110) அதற்குடம்படுதல், அதற்குப்படுபொருள் விளக்கம் (பக்-113) 'இதனின் இற்று இது' தொடர் விளக்கம் (பக்-114,5) ஐந்தாவதும் ஏதுப்பொருளும் (பக்-115), ஆது, அ என்பன ஆறன் உருபுகளே (பக்-119) ஏழன் பொருளாக நன்னூல் கூறுவது பொருந்தாமை, சேனாவரையரை ஒட்டி ஏழாவதன் பொருள் வகை கூறல் (பக்-124,5) கண்ணுருபின் பின் கால் புறம் அகம் முதலியவை வாராமைக்குக் காரணம் (பக்-125) ஈற்று நின்றியலும் தொகை வேற்றுமைத் தொகையே எனல் (பக்-128)

*வேற்றுமை மயங்கியல் :–*

உருபு மயக்கம் பொருள் மயக்கம் பற்றிய விளக்கம் (பக்-130) "மூன்றனும் ஐந்தனும் ... ... புலவர்" பொருள் விளக்கம் (பக்-135) "அவ்இரண்டன் மருங்கின் ஏதுவுமாகும்" விளக்கம் (பக்-137) இறுதியும் இடையும் ...... வரையார்—நூற்பாச்செய்தி

(பக்-144) பிறிதுபிறிது ... ... என்ப'' நூற்பா உரை (பக்-145) எதிர் மறுத்து மொழியினும் வேற்றுமைச்சொல் திரியாமையா மைக்குக் காரணம் (பக்-148) ''வினையே செய்வது'' என்ற நூற்பா வேற்றுமை மயங்கியலில் இடம் பெறக் காரணம் (பக்-152) பலசொற்கள் ஒரு பொருளைத் தருதற்கும் ஒரு சொல் பல பொருளைத் தருதற்கும் காரணம் (பக்-155) ஆகுபெயர் எழுவாய் வேற்றுமை மயக்கம் என்பது (பக்-156) இருபெய ரெட்டாகுபெயரும் அன்மொழித் தொகையும் (பக்-159), எண்ணுப்பெயர் ஆகுபெயராகாததன் காரணம் (பக்.161).

## *விளிமரபு :*

'அவ்வே' என்ற சுட்டுப்பெயரின் விளக்கம் (பக்-163, 4) அன், அண்மைச் சொல்லிற்கு அகரமுமாகும் என்பது (பக்-169) அம்மவிளி யேற்றல் பற்றிய விளக்கம் (பக்-178)

## *பெயரியல்*

பொருண்மை தெரிதல் சொன்மை தெரிதல் என்ற சொல் லிலக்கண நிலை (பக்-181) அவற்றுவழி மருங்கிற்றோன்றும் — என்பதன் விளக்கம் (பக்-183) அவன் இவன் உவன் முதலிய வற்றைச் சுட்டு முதலாகிய னகரம் என்றாற் போலக் குறிப்பிடாததன் காரணம் (பக்-185) சுட்டு முதலாகிய அன் ஆன் விளக்கம் (பக்-187) உயர்திணை ஒருமைக்குரிய அன்னமரபின் வினை (பக்-199) — இயற்பெயர் ஏன்பதன் விளக்கம் (பக்-200) விரவுப்பெயர் பற்றிய விளக்கம் (பக்-202-4) பன்மை சுட்டியபெயர் பற்றிய விளக்கம் (பக்-206) இறைச்சி பற்றிய விரவுப்பெயர் அஃறிணையையே சுட்டும் என்பதற்கு விளக்கம் (பக்-215)

## *வினையியல்*

வினைச்சொல் பற்றிய விளக்கம் (பக்-217) பெயர்ப் பயனிலைக்கும் குறிப்பு வினைமுற்றிற்கும் வேறுபாடு (பக்-231) முன்னிலை பற்றிய விளக்கம் (பக்-240) வியங்கோள் யாண்டும் படர்க்கைச் சொல்லே எனல் (பக்-245) வினையெச்சம் பெயரெச்சம்பற்றிய குறிப்பு (பக்-252-53) பின் முன்...... என முடியும் வினையெச்சம் பற்றிய குறிப்பு (பக்-254) மிக்க தன் மருங்கின் என்ற நூற்பா உரை (பக்-269) ''இது செயல் வேண்டும்'' என்னும் நூற்பா உரை (பக்-271)

*இடையியல்*

இடைச்சொல் பெயர் விளக்கம் (பக்-274) எற்று, மற்றை, எல், தஞ்சம், பொருள்விளக்கம் (பக்-295-87) பிரிவில் அசை நிலை (பக்-292) எச்ச உம்மையும் எதிர்மறை உம்மையும் மயங்கா என்பதன் விளக்கம் (பக்-294) ஏ கூற்றுவயின் ஓரளபாதல் உரைநடை வழக்கிற்கே எனல் (பக்-296) எனா, என்றா என்பன எண்ணுப்பொருளில் வருதற்குக் காரணம் (பக்-297)

*உரியியல்*

உரிச்சொல் பற்றிய விளக்கம் (பக்-303-7) வெளிப்படவாரா உரிச்சொல் என்பதன் கருத்து (பக்-310) எழுத்துப் பிரிந் திசைத்தல் (பக்-337-8) பொருட்குறைகூட்ட நிரம்புதல் (பக்-339). உரியியல் விளக்கம் யாவும் புதிய கோணத்தில் சிறப்பாக அமைந்துள்ளன.

*எச்சவியல்*

இயர்சொல் திரிசொல் திசைச்சொல், வடசொல் என்பவற்றின் விளக்கம் (பக்கம் - 341-8) வடசொற்கிளவி — சிதைந்தன பற்றிய இவர் கருத்து (பக்-349-50) சுண்ணம் பற்றிய எடுத்துக்காட்டு (பக்-355) பொருள்தெரி-அடிமறியான-விளக்கமும் எடுத்துக்காட்டும் (பக்-357) பலசொல் தொடர் மொழி-தொகைமொழி வேறுபாடு (பக்-36) தொகை என்ற சொற்பொரு ளாராய்ச்சி (பக்-362-5) உம்மைத் தொகையை விரித்துக் காணும் திறன் (பக்-377) வெள்ளாடை முதலியன அன்மொழித் தொகையும் ஆகுபெயருமாதல் (பக்-379) உவமந் தொக்க பெயர்பற்றியும், வினை தொகவரூஉம் கிளவி பற்றியும் அன்மொழியும் ஆகுபெயரும் அமைதல் (பக்-380) ‘இறப்பின் நிகழ்வின், முதலிய மூன்று நூற்பாக்களும் இருக்கவேண்டிய இடன்பற்றிய குறிப்பு (பக்-390) முற்று-எச்சம் பொருள்விளக்கம்-(பக்-393) இசையெச்சம் குறிப்பெச்சம் இவை எனல் (பக்-401-2) எதிரதுதழீஇய எச்சம்மை என்பதொன்று இன்று-(பக்-399) பெயர்நிலைக் கிளவி - திசைநிலைக் கிளவி - மந்திரப்பொருள் வயின்ஆகுந விளக்கம் (பக் - 406, 408) இடைச்சொல் லெல்லாம் வேற்றுமைச் சொல்லே’ விளக்கம் (பக்-412-13).

மேற்குறிப்பிட்ட செய்திகள் இந்நூலிற் காணப்படுவனவாய்த் தொல்காப்பியச் சொற்படலத்தின் ஏனையார் உரைகளில் பெரும் பாலும் காணப்படாத செய்திகளே. இவையாவும் தமிழ்ச்

சான்றோர் எல்லோருக்கும் உடன்பாடான செய்திகளாக இருத்தல் வேண்டும் என்பது வற்புறுத்தப்படவில்லை.

இவையேயன்றி இவ்வுரைகாரர் ஒருசில நூற்பாக்களில் சில திருத்தங்கள் செய்துள்ளார். சில நூற்பாக்கள் விடுபட்டிருக்கலாம் என்றும் கருதுகிறார். அவற்றை நிரலே காண்போம்.

சூ. 18:- இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்கா றல்லாச் செய்யுளாறே.

சூ. 38:- சுட்டுப்பெயர்க்கிளவி முற்படக்கிளவா
இயற்பெயர் வழிய என்மனார் புலவர்

சூ. 44:- ஒருமை எண்ணின் பொதுப்பிரி பாற்சொல்
ஒருமைக்கல்லது எண்ணுமுறை நில்லாது

சூ. 132:- அண்மைச் சொல்லிற்கு அகரமும் ஆகும்

சூ 183:- பன்மை சுட்டிய எல்லாப்பெயரும்
ஒன்றேபலவே ஒருவர் என்னும்
அன்றிப்பாற்கும் ஓரன்னவ்வே.

சூ. 408 :- அடிமறிச் செய்தி அடிநிலை திரியாது
சீர்நிலை திரிந்து தடுமாறும்மே

சூ. 409 :- பொருள்தெரி மருங்கின் ஈற்றடி இருசீர்
எருத்துவயின் திரியும் தோற்றமும் வரையார்
(தெய்வச்சிலையார் பாடமும் அன்று)

சூ. 425 :- உரைசொல்லடுக்கே மூன்று வரம்பாகும்

சூ. 221 :- ஆகிய, 'இன்றில உடைய' என்பதனையடுத்துப் பொருளும் இடமும் செய்கையும் பற்றி அஃறிணை வினைக்குறிப்பு வரும் என்னும் பொருள்பட அமைந்த நூற்பா ஒன்று இருந்து மறைந்திருத்தல் வேண்டும் (பக்-259)

236ஆம் நூற்பாவையடுத்து; ''பன்முறையானும் பெயரெஞ்சு கிளவி சொன்முறை முடியாது அடுக்குநவரினும் முன்னது முடிய முடியுமன் பொருளே'' என்றொரு நூற்பா இருந்து மறைந் திருத்தல் வேண்டும். (ப-237)

இவையேயன்றித் தெய்வச் சிலையாரைப் பின்பற்றி 'வாரா மரபின' (சூ. 422) என்ற நூற்பாவையடுத்து ''இசைநிறை அசைநிலை...... அடுக்கே'' என்ற நூற்பாவை அமைத்துள்ளார்,

வன்புற வரூஉம் வினாவுடைவினைச் சொல்
எதிர்மறுத் துணர்த்தற் குரிமையு முடைத்தே (சூ-245)

செயப்படு பொருளைச் செய்ததுபோலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியல் மரபே (சூ-247)

என்ற இருநூற்பாக்களும் கால மயக்க அதிகாரத்தில் இயைபின்றி வினையியலில் இடம் பெற்றுள்ளன எனவும், அவை எச்சவியலில் உரிய இடத்தில் இருத்தல் வேண்டும் எனவும் சுட்டுகின்றார். இங்ஙனமே எச்சவியலிலுள்ள 'இறப்பின் நிகழ்வின்......முற்றியல் மொழியே' எவ்வயின்வினையும் அவ்வியல் நிலையும்' அவை தாம், தத்தங்கிளவி......முடிபினவே. (சூ-428-30) என்பன வினையியலில் 'செய்தென் எச்சத்து' (சூ-240) என்பதனை அடுத்திருத்தல் வேண்டும் என்று குறிப்பிடுகின்றார். நூற்பாக்களுக்கு இவர் கருதும் இடமாற்றங்கள் மிகப் பொருத்தமானவையே. நூற்பா இரண்டு மறைந்திருத்தல் வேண்டும் என்பதும் நேரிய செய்தியே யாம்.

இனி, திருத்தம்பெற்ற நூற்பாக்களை நோக்குவோம்:-

சூ.18. பண்புகொள் பெயர்க்கொடை வழக்கா நல்ல எனின், பெயர்க்கொடை என்ற ஒருமைப் பெயருக்கு அல்ல என்ற பன்மை வினை ஒவ்வாமையின் 'வழக்காறல்லாச் செய்யுள்ளாறே' என்ற பாடங்கொள்ளப்பட்டது. 'அல்லா' என்பது பெயரெச்ச மறையாய் ஒருமைப்பன்மை மயக்கத்திற்கு இடந்தாராமல் அமைகிறது என்பார் உரைகாரர்.

ஈரளபிசைக்கும் இறுதியில் உயிரே ... உளவென மொழிப பொருள் வேறுபடுதல் (சூ-288) வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா வெளிப்பட வாரா உரிச்சொல்மேன (சூ-299) என்ற நூற்பாக்களில் ஒருமை எழுவாய்ப் பன்மை வினையொடு முடிதலைக் காண்கிறோம். எனவே, வழக்காறு அன்று என்னாது அல்ல என்றமையின் இனச்சுட்டில்லாத் திசை சினை, தொழில் போன்ற அடைகளும் கொள்ளப்படும் என்ற குறிப்பு வரைந்து பழைய பாடத்தையே கோடல் சாலும்.*

---

* ஆய்வுரைதவிர்ந்த நூற்பாக்களின் உரை-விளக்கம் யாவும் காண்டிகையாகச் சுருங்க வரையப்பட்டுள்ளமையின்-'தெற்றென விளங்காதன, ஐயப்பாடுடையன' என ஐயரவர்கள் குறிப்பிட்டுள்ளவை. எனது தமிழியற் கோட்பாடுகள் என்னும் கட்டுரை நூலில் தெளிவாகும். ஈண்டு மாணாக்கர் முட்டுப்பாடுறாவண்ணம் சில வற்றிற்குக்குறிப்புத்தந்துள்ளேன்-சில திருத்திக் கொள்ளத் தக்கவையே.

சூ-38 சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக்கிளவார் - இயற்பெயர் வழிய என்மனார் புலவர் என்பதே நூற்பா அமைப்பாதலானும். இயற்பெயர்க் கிளவி முற்படக்கிளவார் (ஆ-41) எனப் பிறாண்டும் வருதலானும், பயனிலை செய்யுள் விகாரத்தால் தொகுதலை இவ்வுரையாளரும் 68 ஆம் நூற்பா உரையுள் இசைந்துள்ளமையானும்: இந்நூற்பா உரையுள் கிளவா என்பதற்குக் கிளக்கப்படா என்றும், அடுத்த நூற்பா உரையுள் கிளத்தல் என்பதற்குக் குறிப்பிடுதல் என்றும், படுசொல் புணர்த்தும், புணர்க்காமலும் உரை செய்ய வேண்டியுள்ளமையானும் பழைய பாடமே கோடவிற் பிழையின்று.[1]

சூ. 44 : 'ஒருமை எண்ணின் .. நில்லாது' பொதுப்பிரிபாற் சொல் ஒருவன் ஒருத்தி என்ற இரண்டாகலான் நில்லா என்ற பாடமே சிறக்கும்.

சூ. 132 : அகரமும் என்ற பாடம் சிறப்பாக உள்ளது.

சூ. 183 : பன்மை சுட்டிய எல்லாப் பெயரும் ஒன்றே பலவே ஒருவர் என்னும் என்றிப்பாற்கும் ஓரன்னவ்வே'' என்னும் - என்று - இப்பாற்கும் என்ற தொடரில் 'என்று' என்ற சொல் பொருளிலதுமொழிதல் என்ற சிதைவுக்கு எடுத்துக் காட்டாகக் கூடியது. ஆதலின் ஒருவர் என்னும் அவ்விரு பாற்கும் என்ற பொருள்தரும்''ஒருவர் என்னும் அன்றிப்பாற்கும்'' என்ற பாடத்தை உளரயாளர் கொண்டுள்ளார். உரையாளர் கொண்ட பாடத்தில் சிதைவின்மையும் பொருட்டெளிவும் உள்ளன. ஆனால் அகரச்சுட்டு அன்றி எனத்திரிதல் அன்றியனைத்தும் என்றே ஒரே தொடரிலேயே அமையுமாறு தொ-எ-144, 210, 224, — சொ-66, 138, 166, 426, 427, 450 என்ற நூற்பாக்களான் போதருதலின் பிற சொற்களொடு புணர்தற்கண் அகரம் அன்றி என்று ஆகுமா என்பது ஆராயத்தக்கது.[2]

சூ. 408 ''அடிமறிச் செய்தி அடிநிலை திரியாது—சீர் நிலை திரிந்து தருமாறும்மே'' என்ற பாடமே அடிமறிமாற்றுப்பொருள் கோளுக்கு ஏற்றது என்று உரையாளர் கொண்டுள்ளார் அடுத்த நூற்பா இருசீர் எழுத்துவயின் திரியும் தோற்றமும் என்று வருதலின் 'அடிநிலை திரிந்து சீர்நிலை திரியாது' என்ற பாடமே சிறக்கும் போலும்.

---

1. சூ 14, 18, 38. ஏடெழுதினோர் குறையாகலாம் எனக்கருதி ஒரெழுத்தளவில் பாடம் திருத்திக் கொள்ளப்பட்டன. 'நில்லாது' என்பதை மறுக்கவில்லை.

2. இதன் கண்ணும் அன்றி என்னும் சுடடு 'பாற்கும்' என்பதனைச் சார்ந்தே வந்துள்ளமையானும், பிறிதாறின்மையானும் ஏற்கும்.

சொற்பொருளாராய்ச்சியில் மிக்க பழக்கமுடைய இவ்வுரையாளர் பல சொற்களைப் பகுத்து அவற்றின் பொருளமைப்பையும், அவற்றின் தொல்லுருவங்களையும் இவ்வுரையில் பல இடங்களிலும் குறிப்பிட்டுச் செல்லுகிறுர். சொல்லின் தொல்லுருவங்களை ஆராய்வாருக்கு அவை பெரிதும் பயன் தருவனவாம். அவற்றுள் சில வருமாறு :-

சொல் (ப-23) கிளவி (ப-24) ஆக்கம் (24) என்மனார் (26) திணை (26) கிளவி (78) வியங்கோள் (78) ஐ (102) ஒடு (110) கு (114) இன் (118) கண் (125) அனல் முதலியன (115) நமரங்காள் (174) பெயர் (180) வினை (216) காலம் 218) வியம் (240) எல் (256) உறு முதலியன (339) இவை யாவும் ஏனையோர் உரையில் காணக்கிட்டாதனவாம்.

இனி இவ்வுரையாளர் வரைந்துள்ள இப்பெருநூலில் தெளிவாக அறிந்துகொள்ள இயலாமல் ஐயமும் மருட்கையும் விளைக்கும் செய்திகளும் நம்மனோர்க்குத் தெற்றெனப் புலனாகாத வகையில் சில அமைந்துள்ளன. அவற்றை நிரலே நோக்குவோம்.

சூ 5-9. பின் உவமவியலுள் கூறப்பெறும் உவமத் தொகையை உளங்கொண்டு" உவமத்தொகையே உவமவியல" என எச்சவியலுள் குறிப்பிட்டாற்போலப் பின் பெயரியலுள் விரிவாக விளக்கும் பெயரிற்றோன்றும் பாலறிகிளவியைக் கிளவியாக்கத்தில் சுட்டினார் என்பதனால் குறைவின்மையானும் இயைபுபற்றி னஃகான் ஒற்றே" முதலிய நூற்பாக்கள் சுட்டப்படக்கூடியன பெயர்களுள் ஒருசிலவேயாகலானும் னஃகான் ஒற்றே முதலிய நூற்பாக்களின் உரையில் ஈறுபற்றிப் பால் தெரிவிக்கும் பெயர்களைச் சுட்டவேண்டியது இன்றியமையாததாகத் தோன்றவில்லை. மேலும் தெய்வச்சிலையார் குறிப்பிட்டுள்ளமைபேலே ஐம் பால்பற்றிய பெயர்கள் எல்லாவற்றையும் சுட்டாது ஆண் பெண் பலர்பால் என்பவற்றுக்குரிய பெயர்களையே சுட்டியமைதல் குன்றக் கூறுவதாய் முடியும் (பக். 35-37).[3]

---

3. தந்தைமார், தாய்மார், அண்ணன்மார் என்றாற்போல்வன பெயரியலுள் பெறப்படாமை கருதி அதனைச்சுட்டி அதனொடுஏனையவும் காட்டப் பட்டன. அஃறிணை ஈறுகள் தெரிநிலையும் குறிப்புமாகிய வினைகட்கு ஈறாய் வந்து பெயரா வதன்றி உயர்திணை ஈறுகள் போல ஆக்கம் பெறுதலரிது. ஆதலின் காட்டப் படவில்லை.

சூ. 10 : சுட்டுப்பெயர் வினாம்பெயர்கள் - அவன் யாவன் போல்வன சுட்டிடைச் சொற்களும் வினா இடைச் சொல்லும் பால்காட்டும் ஈற்றெழுத்தொடு புணர்ந்த பின்னரே சுட்டுப்பெயர் வினாப்பெயர் என்பன ஆகும். ஆதலின் ஈற்றினின்றிசைக்கும் எழுத்துக்கள் சுட்டுப்பெயர் வினாப்பெயர்களோடு தோன்றும் எனல் பொருந்தாது. சுட்டுவினா இடைச்சொற்களொடு பாலறிய நிற்கும் எனலே ஏற்றது. (பக்-39) [4]

சூ. 6 : உயர்திணைக்கண் பெண்மையடுத்த இகர இறுதிப் பெயர்களாக 164ஆம் நூற்பா உரையுள் அடக்கப்பட்ட தலைவி தோழி செவிலி என்பன 6ஆம் நூற்பா உரையுள் விரவுப் பெயராகச் சுட்டப்பட்டுள்ளன (ப-36)[5]

சூ. 18 : தகுதியும் வழக்கும் என்னும் நூற்பா உரையுள் சுட்டப்பட்ட எடுத்துக்காட்டுக்கள் யாவும் செய்யுள் வழக்குப் பற்றியவே. இவை பற்றிய செய்தி ''முதலும் சினையும் என்று ஆயிரு பெயர்க்கும் நுதலிய மரபின் உரியவை உரிய'' என்ற உவமவியல் 6ஆம் நூற்பாவில் குறிப்பிடப்படும் அதனை ஈண்டுக் கூறுதல் மிகைபட்டக் கூறலாம் (பக்-46)[6]

பெயர்நிலைக் கிளவியின் ஆகுந என்ற தொடர் மங்கல வழக்கைக் குறிக்கும் எனவும், குழூஉக் குறியைத் திசை நிலைக் கிளவியின் ஆகுந எனவும் கூறுதல் பற்றிய பொருத்தம் ஆராயத்தக்கது. (பக்-406).

சூ. 19 : நிலம் வலிது வளி உளரும்—ஒருசர் வேற்றுமையை யும் காலத்தையும் காட்டி நிற்றலின் பொருந்தாவாம் (பக்-49) ஐந்தாம் வேற்றுமைப் பொருளில் வரும் இற்று என்பதற்குத் தந்துள்ள எடுத்துக்காட்டுக்கள், இனியது வெய்யது என்றாற் போன்ற சொற்களே. அவை இத்தன்மைத்து என்ற பொருளைத் தருவனவே. எனவே நிலம் வலிது என்பது நிலம் வலிய தன்மைந்து என்னும் பொருளதே.

இயற்கைப் பொருள் முக்காலத்தும் திரிபின்றி நிற்பது எனவே அதனை முக்காலத்துக்கும் உரிய செய்யும் என்னும்

---

4. சுட்டுப் பெயர் வினாப்பெயர்கள் நிறுத்த சொல்லும் குறித்துவருகிளவியு மாக வைத்துப் புணர்த்தல் கூடாமையின். அவை ஒருமொழியாக ஆக்கம் பெற்றவை என விளக்க வேண்டிற்று.

5. அவை விரவும் பெயராதற்கும் ஏற்கும் என்பது கருதிக் கூறப்பட்டது.

6. உவமவியலுள் கூறுவது விதி (இலக்கணம்) ஈண்டுத் 'தகுதியும் வழக்கும்' என்னும் நூற்பா 'செப்பினும் வினாவினும்' என்பதற்குகுப் புறனடை என்பது எனது கருத்து.

வாய்பாட்டு வினைமுற்றால் குறிப்பதும் பொருத்தமானதே (பக் - 117, 268)[7]

சூ. 20 : 'கல்விகற்றமையின் அறிவு பெருகுதல் ஆயிற்று' இத்தொடரில் வினையெச்சம் பெருகலீ என்ற தொழிற்பெயரைக் கொண்டு முடிகிறது ஆயிற்று என்பது ஆக்கச் சொல். வினையெச்சத்தை முடிக்கும் சொல் சிறுபான்மை ஆக்கச்சொல் தொக்க தொழிற் பெயராயிருக்கும் (பக்-14) அருந்திமகிழ்தல் என்றாற் போலத் தொழிற்பெயரின்பின் ஆக்கச்சொல் குன்றிநிற்கும் (பக். 396) என்று பின்னும் முன்னும் குறிப்பிடுவதால், அறிவு பெருகலாயிற்று என்று ஆக்கச் சொல் புணர்த்ததன் காரணம் புலப்படவில்லை. [8]

சூ. 31, 32, யாது என்பது அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றினும் அறிந்த பொருள் வயின் ஐயந்தீர்த் தற்குத் தோன்றினும் அஃது ஒன்றறி கிளவியே என்பது தேற்றம். அங்ஙனமாக 'யாது' என்பது அறியாப் பொருள் வயின் வருமிடத்து ஒருமை பன்மைதெற்றெனத் தோன்றாத பொருள்வயின் வரும் என்பதன் பொருத்தம் புலப்படவில்லை. இப்பேழையில் உள்ள பொருள்கள் யாது என்று கூறலாமா ? ஆண் மகனோ பெண்டாட்டியோ என்ற ஐயம் நிகழ்வுழிப் பலர் பாற்சொல்லால் சுட்டி வினாதல் மரபு. அதுபோன்றதா யாது என்ற சொல்?.[9]

சூ 26, "செவிசெஞ்சேவலும் பொகுவலும் வெருவர-வாய்வன்காக்கையும் கூகையும் கூடி" செஞ்செவிச்சேவல், வல் வாய்க் காக்கை எனச் சுண்ணம் என்னும் பொருள் கோள் வகையில் மாற்றிக்கொள்ளப்படும் என்றார் (பக்-55) சுண்ணமொழி மாற்று நூற்பா உரையுள் ஓரடிக்குள் ஏற்படும் மொழி மாற்றம் சுண்ணமாகாது எனவும் பட்டாங்கமைந்த நாற் சீரடி இரண்டன்கண் முதலடியில் உள்ள சொல் அடுத்த அடியில் உள்ள சொல்லொடு சேர்ந்தே சுண்ணமொழி மாற்றினை அமைத்தல் வேண்டும் எனவும் குறிப்பிட்டுள்ளார். மேலும் 'வரையணைப' என்ற முதலடிச் சீரோடு சேர்ந்த இரண்டாமடியுள்ள 'யானைக்கு' என்பது நிலை என்ற

---

7. எடுத்துக்காட்டுகள் மயக்கமின்றி அமைதல் நலம் என்பது கருதி மறுத்துக் கூறப்பட்டது.

8. கோட்பாட்டுக் கட்டுரையில் விளக்கப்படும்.

9. ஒருமை, பன்மையீறுகளின்றி வினாவு மிடத்து யாது என்பது பொதுச் சொல்லாக வருமென்பது எனது கருத்து.

சொல்லொடு சேர்ந்து வரையனைய யானைக்கு நிலை என்று பொருள் படுவதைச் சுண்ணமொழி மாற்றாக ஏற்க மறுக்கிறார். தாவீது யோசேப்பு வாத்தியார் 1893ல் இயற்றிப் பதிப்பித்த தமிழ் இலக்கணத் தெளிவு என்ற நூலில் அவரே இயற்றிப் புணர்த்த "கரையாடக் கெண்டை கயத்தாட மஞ்ஞை" என்ற அடியை மறைந்து போன முதலடியாகக் கொள்கிறார் (பக்-355) இச்செய்திகள் மயக்கத்திற்குரியன. [10]

சூ. 28. "தரவினும் ...... அந்நாற் சொல்லும்" இந் நூற்பாவில் தரல் வரல் கொடை செலவு என்ற நான்குசொற்களே சுட்டப்பட்டுள்ளன அந்நாற் சொல்லும் என அவை சொல் பற்றியன்றிப் பொருள் பற்றி ஓதப்பெறவில்லை. முதனிலைவகை யால் இடமுணர்த்தும் ஆற்றலுடையன அவையே அங்ஙனமாக அவை பொருள் பற்றி ஓதப்பட்டனவாகக் கொண்டு போதல் நீங்குதல் இரிதல் முதலியவற்றை அவற்றுள் அடக்கியதன் பொருத்தம் போதரவில்லை. [11]

சூ. 32 ; இந்நூற்பா உரையுள் யாது...... அறியாப் பொருள்வயின் ஐயந்தீர்த்தற்கு வருதலேயன்றி அறியப்பட்ட பொருள்வயின் ஐயந்தீர்த்தற்குந் தேர்ந்து கொள்ளப்பட்ட சொல்லாதலும் உண்டு என்று குறிப்பிடுகின்றார். அறியான் வினாவும் ஐய வினாவும் அறிவுறாஉ வினாவும் என வினா மூவகைப்படும் (பக் 44) என்று குறிப்பிடும் உரையாளர் அறியாப் பொருள்வயின் ஐயந்தீர்த்தற்கு வரும் எனல் பொருந்துவதாக இல்லை. எகரம் வினாப்பொருளில் வருதல் இடைக்கால வழக்கு என்பவர் (ப. 59) இடையியல் புறனடைச் சூத்திரவுரையில் (297) எக்கடல் எவ்வீடு எந்நூல் என்னுமிடத்து எகரம் வினாப் பொருள் குறித்து நிற்றல் சான்றோர் வழக்கினுள் வருவதாகக் குறிப்பிடுதல் பொருந்துவதாக இல்லை (பக் 302) [12]

சூ. 43. தன்மைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் விரவி வருதலை வழா நிலையாகக் கொள்பவர் (பக்-68) அஃறிணையை உளப்படுத்தும் தன்மைப் பன்மை வினையை வழூவமைதி என்று கூறுவதன் பொருத்தம் ஆராய்தற்குரியது.

---

10. சுண்ணம் என்பது பிழையே - மொழிமாற்று எனத் திருத்திக் கொள்க இது நன்னூலுணர்வினால் நேர்ந்த சோர்வாகும்.

11. பொருள் பற்றி ஓதப்பட்டதாகக் கொள்ளலாம் என்பது என் கருத்து

12. 'அறியாப்பொருள் வயின் ஐயந்தீர்த்தற்கு வருதலேயன்றி' என்னும் தொடரில் 'ஐயந்தீர்த்தற்கு' என்றபகுதி நீக்கப்படல் வேண்டியதே.

சூ. 45 : இனமானவற்றையே எண்ணுதல் வேண்டும் என்னும் விதியின்று என்கின்றார். எண் என்றா உறழென்றா ஆயிரண்டும் இனன் ஒன்றல் வேண்டும் என்ற விதியினைச் சான்றோர் பின்பற்றுதல் வெளிப்படை. இவ்வுரையாளர் காட்டியுள்ள எடுத்துக்காட்டும் இனமாயவற்றை எண்ணிய எடுத்துக் காட்டே.[13]

சூ. 50 : தொடி சிலம்பு மகளிர்க்குரியன தோள்வளை ஆடவர்க்குரியது. இஃதவர் ஏந்தியவாள். அஃது அவர் படைத்தடுத்த கிடுகு. இவர் துணங்கை யாடினார்-ஆடவரைச் சுட்டி நின்றது என்கின்றார்.

குறுந்தொடி கழிந்தகை சாபம் பற்றி-கழல் தொடித் தடக்கை கலிமான் நள்ளி திருநிலைச் சேவடிச் சிலம்பு வாய்புலம்பவும்-எனத்தொடியும் சிலம்பும் ஆடவர் அணிந்தவை. தூமணித் தோள்வளை தோளுக் கணிந்து-மாதவி அணிந்தது. பேய் மகள் நிணந்தின் வாயள் துணங்கை தூங்க-கேடகம் வாளொடு ஏந்தி...... மாடத்து உச்சி நின்ற மலைமகள் என இவை மகளிர்க்கு வந்துள்ளன. எனவே இந்த எடுத்துக்காட்டுக்களின் பொருத்தம் ஆராய்தற்குரியது.[14]

சூ. 53 : வேறுபடுதல் தன்வினை-வேறுபடூஉதல் பிற வினை.எழுதல்-எழூஉதல் போல.வேறுபடுத்தற்குரிய வினையை வேறுபடூஉ வினை என்று குறிப்பிடலாம் என்று தோன்றுகின்றது (பக்-76)

சூ. 55 : ''குறித்தோன் கூற்றம்'' இந்நூற்பாவின் கருத்து 'வினைவேறுபடூஉம்' என்றவினை 'வினைவேறுபடாஅ' என்ற நூற்பாக்களில் அடங்கியிருத்தலின் இதற்குத் தெய்வச்சிலையார் உரைக்கும் உரை பொருத்தமாகத் தோன்றுகிறது.[15]

சூ. 56 : காதலுக்குரிய எடுத்துக்காட்டுக்கள் மயக்கந் தருவனவாக உள்ளன. 'பாவை-யானை' ஒப்புமை கருதாது

---

13. இனமே என்னும் யாப்புறவு இல்லை இமைல்லாதனவும் எண்ணப் படலாம் என்பதே கருத்து.

14. தெய்வத்திற்கும்-தெய்வமொப்பக் கருதப்படும் அரசர்க்கும் விதி விலக்குண்டு. பெரும்பான்மை உலக வழக்குப்பற்றி இவ் எடுத்துக்காட்டுக்கள் தரப்பெற்றன.

15. இந்நூற்பா மரபியலுட் கூறும் மரபுப்பெயர்களை நோக்கியது என்பது எனது கருத்து.

காதல்பற்றி வந்தன என்பது வடிவு ஒப்புமையையே உட்கொள்ளாது சிறப்பும் நலனும் இல்வழியும் தான் தன் மகளிடத்தும் மகனிடத்தும் கொண்டுள்ள பாசமே அடிப்படையாக இட்டுரைக்கும் இடுபெயராகும் என்பதே உரையாளர்களின் கருத்தாதலின் அவற்றைக் காதல் பற்றிய சொற்களுக்கு எடுத்துக்காட்டாகத் தருதலிற் சிதைவு ஏதுமில்லை எனலாம். யானை என்பது இடுபெயராதல் இவ்வுரையாளருக்கும் உடன்பாடே. (பக். 206)

சூ. 57 : காலம் உலகம் முதலிய சொற்கள் தெய்வம் சுட்டினும் பால்காட்டும் ஈற்றிடைச்சொல் பெறாமையின் சொல்லால் அஃறிணையாய் அஃறிணைமுடிபே கொள்ளும் என்பதே நூற்பாவின் கருத்து என்னும் உரைகாரர், தெய்வம்சுட்டிய பெயர் பால்காட்டும் ஈற்றிடைச்சொல் பெற்றாலன்றி உயர்திணை மருங்கின் இசையா என்று விளக்கம் கூற நூற்பாவில் இடமில்லை. அஃது அடுத்த இரு நூற்பாக்களின் செய்தியாகும் என்பது கருதப்படுகின்றது (பக். 82)

சூ. 59. உலகினை நிலமகள் எனவும் சொல்லினை நாமகள் எனவும் முழுதுந்திரிந்த உயர்திணையாகக் கொள்பவர் உயிரினை உயிர்க்கிழவன் எனவும் உடம்பினை உடம்பார் அழியின் உயிரார் அழிவர் எனவும் ஞாயிற்றைப் பருதியஞ் செல்வன் எனவும் திங்களைத் திங்களஞ் செல்வன் எனவும் திரிந்த உயர்திணைப் பெயராகக் கொள்ளலாம் என்று குறிப்பிடாததன் காரணம் புலப்படவில்லை.[16]

சூ. 61. கண் தோள் முலை போல்வன கள் என்னும் இறுதிநிலை பெறாதவழி ஒருமை வினையாற் கூறுதல் வழாநிலையே என்பது உரையாளர் கருத்து (ப. 85) சங்க இலக்கியத்தில் கள் ஈற்றைப் புணர்த்துப் பன்மை கூறும் மரபு இன்று. கள் முதலியவை யாண்டும் பன்மைச் சொல்லாகவே கொள்ளப்பட்டுப் பன்மை வினையையே கொண்டுமுடிகின்றன. கேட்பினும் கேளாத்தகையவே...... செவி (குற-418) அமிழ்தின் இயன்றன தோள். பேதைக்கமர்த்தனகண்', எனக் கள்ளொடு சிவணாது கண், தோள், செவி முதலியன பன்மை வினையே

16. 56, 57, 59 இவற்றின் உரை முன்னையோர் கருத்துக்களினின்று வேறுபட்டவை-விளக்கம் சாலாது போலும். சில முறை நோக்கின் தெளிவாகலாம்.

கோடலின் தம் வினைக்கு இயலும் எழுத்து - கள் என்பது பொருந்துமாறில்லை. (பக்.19)[17]

சூ. 64. ஈற்ற என்றது வகைய 'என்றவாறு. இரு ஈற்றும் உரித்தே (தூ-24) என்பதனால் ஈறு-வகை என்னும் பொருட்டாதலை அறிக என்கின்றார் இரு ஈற்றும் என்பது பொருத்தாப் பிரிப்பு. அஃது ஈரிற்றும் என்றே புணரும் இருவீற்றும் என்பதே நேரிய சொற்றொடர். "விளியென்னும் வீற்ற" எனப்பாடங்கோடலே தக்கது எனத் தோன்றுகின்றது.

இயற்கைப்பொருளைச் செயற்கைப் பொருளாகக் கூறுதல் தமிழ் மரபன்று (பக்-91) "நின்றசொல் முன் இயல்பாகும்மே" "பன்னீருயிரும் மொழிதலாகும்" இயற்கை நிலையை இயல்பு ஆகும் என்பதும் இயல்பாக மொழி முதற்கண்வரும் எழுத்தை மொழிமுதலாகும் என்பதும், தமிழிலும் இயற்கைப் பொருளைச் செயற்கையாகக் கூறும் மரபுண்மையைப் புலப்படுத்தும். "இசையா ஒருபொருள் இல்லென்றல் யார்க்கும் வசையன்று வையத்தியற்கை" என்பது செயற்கையை இயற்கையாகக் கூறும் செய்திக்கு எடுத்துக்காட்டு. (சூ. 67, 69, 74. கொள்க)

இன், ஆன், ஏது—இன்னும் ஆனும் ஆகிய மாற்றுருபு ஏற்று ஏதுப்பொருளில் வருவன என்பது இவர்கருத்து இதனைப் பல இடங்களிலும் எடுத்துக் கூறிவற்புறுத்தல் இவ்வாசிரியர் மதம் என்று கோடும்.

இன் உருபு ஐந்தன் உருபு அதனைப் போன்ற 'இன் என்பதனை மூன்றன் மாற்றுருபாகக் கோடல் மயங்கக் கூறலாகாதா? அதனின் இயறல் முதலிய தொடர்களில் 'இன்' சாரியையாக ஆன் என்ற உருபு தொக்கதாகக் கோடல் பொருந்துமா என்பதை நோக்குதல் வேண்டும் அதனினான் என்பதே அதனின் என உருபு தொக்குவந்ததாகலாம். அதனினியறல் முதலியவற்றை விரிக்குமிடத்து அதனான் இயறல் அதனான் ஆதல் என்றே உரையாளர்கள் குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது.

---

17. "கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே" என்பதனானும், "தம் வினைக்கியலும் எழுத்து என்பதனானும் இங்ஙனம் உரைகொள்ளப்பட்டது. தூமலர்க்கண்கள் அமைந்தன [பரி 7-52] பொன்மெலியும் மேனியாள், பூஞ்சுணங்கு மென் முலைகள் [திணைமாலை - 21] கள்ளீறுபெற்று வருதல் சான்றோர் வழக்கிலுண்டு.

தமிழோடு ஒத்த இடங்களில் வடமொழி மரபை ஏற்றுக் கோடலிற் குறை ஒன்றும் இல்லை. இவ்வுரையாளரும் வடமொழி மரபை ஒட்டியமைந்த இரண்டாம் வேற்றுமை பகுப்புக்களாகிய நிவர்த்தியம், விகாரியம், பிராப்பியம் என்பனவற்றின் மொழி பெயர்ப்பாகிய, இயற்றப்படுதல், வேறுபடுத்தப்படுதல், எய்தப் படுதல் என்பனவற்றை ஏற்றுச் சுட்டியுள்ளார்.[18]

சூ. 73 : ஒரே அடியில் உள்ள முதல் என்ற இரு சொற் களில் ஒன்று அடிப்படை என்ற பொருளையும் மற்றது காரணம் என்ற பொருளையும் குறிப்பிடுமாறு ஆசிரியர் மயங்கவைப்பாரா என்பது ஐயமே. 'வினை நிகழ்தற்கு அடிப்படை கருவி யாகிய அந்தக் காரணத்தை உடையது' என்ற புத்துரை ஆராய்தற்குரியது. தானே எழுவாயாக வரும் முதல் வேற்றுமைக் கருத்தாவிற்கும் செயப்படு பொருள் எழுவாயாக வரும்போது மூன்றன் உருபுபுணர்ந்து வரும் மூன்றாம் வேற்றுமைக் கருத்தாவிற்கும் வேறுபாடு உண்டு. ஆதலின் கருத்தாப் பொருள் இருவேற்றுமைக்கண் மயங்குதலின்று.

கோயில் தச்சனால் கட்டப்பட்டது-துணைக்கருவி. கோயில் அரசனால் கட்டப்பட்டது-நிமித்த கருவி என்கிறார் இவர். 'கருவியாவது வினை முதல் தொழிற்பயனைச் செயப்படு பொருட்கண் உய்ப்பது' இவ் இலக்கணம் இவற்றிற்கு இன்மை உணரத்தக்கது. வடமொழியாளர் "கர்த்ரு கரணயோ த்ருதீயா" என்று கூறுவதைப்போலத் தொல்காப்பியனார் "வினைமுதற் கருவி அனைமுதற்று" என்று குறிப்பிடுவதை வலிந்து மாற்றுவ தன்கண் சிறப்பில்லை.

சூ. 74 : "இன்னான் ஏது ஈங்கென வரூஉம்" இன்னவன் என்று உறுப்புப்பற்றி வருவது, இன்னான் என்பது. காரணப் பொருளில்வருவது, ஏது என்பது. இப்படியே என்னும் பொருளில் வருவது ஈங்கு என்பது. இம்மூன்று பொருள்பற்றியும் மூன்றாவது வரும் என்பதே நேரிய பொருள். ஈங்கு என்பது இப்படியே என்ற பொருளில் வருதல், "முழவுத்தோளான் முறுவலித்து ஈங்கே இரு என்று (சிந்-1593) பேதை நெஞ்சம் கவலை கவற்ற ஈங்கு ஆகின்றால் (நற்-144) முதலியவற்றான் அறியப்படும்.

---

18. சூ. 63, 64, 73, 74, முதலிய சூத்திரக் கொள்கைகள் தமிழியத் கோட்டுபாட்டு விளக்கத்தில் விளக்கம் பெறும்-ஒரு மொழியின் தனித்தன்மை வேற்றுமை பற்றிய இலக்கணத்தான் அறியப்படும்.

யேநாங்க விகார : அக்ஷ்ணாகாண : இன்னான்-கண்ணாற் கொத்தை. ஹேதௌ — புண்யேநத்ருஷ்டோஹரி — ஏது அறிவாற்பெரியன் இத்தம் பூதலக்ஷ்ணே — ஜடாபிதாபஸ : ஈங்கு சடைமுடியான் முனிவன் (வடமொழியிற் கூறப்படும்) இச்செய்திகள் யாவும் தமிழிற்கும் உரியனவே. வடமொழியில் இருப்பனவற்றைப் பொருந்துமிடத்து ஏற்றலே தக்கது. ஆதலின் இன்னான் ஏது ஈங்கு என்பன மூன்றன் பொருளாகக் கொள்ளப் படுதற்கண் இழுக்கின்று. இன் என்பது மூன்றாவதன் மாற்றுருபு என்பது ஆராய்தற்குரியது. அங்ஙனம் பல நூற்பாக்களுக்கு இவ்வுரையாளர் குறிப்பிடும் உரையும் ஆராய்தற்குரியன.

சூ. 77. 'இதனின் இற்று இது' — இதன் பொருள் மயக்கந்தருவதே. இப்பொருளினின்று இத்தன்மைத்து இப் பொருள். அஃதாவது வேற்றுமை ஏற்ற சொல் ஓர் அளவையாக - எல்லையாக நிற்றல் (பக்-114) இதனின் இற்று இது எனவரும் உறழ்ச்சியாகிய அளவை ஐந்தன் பொருள் (பக்-10) இவ்வாறு அளவை என்ற பெயரான் நீக்கப் பொருளையும் ஒப்புப் பொருளையும் இவ் உரைகாரர் குறிப்பிடுகிறார். தொல்காப்பியனார் விரித்துக் கூறாத எல்லைப் பொருளை எடுத்தோத்தினான் அடக்கினார் என்றார். ஏதுப் பொருளையும் எல்லையுள் அடக்குதற்கண் சிக்கல் ஏதும் இல்லை. கல்வியிற் பெரியன் கம்பன் — கல்வி என்ற ஏதுப் பொருளை எல்லையாகக் கொண்டு கம்பன் பெருமை புலப்படுத்தப்படுகிறது. ஐந்தாவதற்கு நீங்கல், ஒப்பு எல்லைப் பொருள்களை ஓராற்றான் கொள்ளும் உரைகாரர் ஏதுவை ஐந்தாவதற்கு ஏலாது மூன்றன் மாற்றுருபாகிய இன் என்பதன் பொருளாகக் கொண்டதனால் பலநூற்பாக்களுக்கு வேற்று விளக்கந்தரும் நிலை ஏற்பட்டுள்ளது. (சூ. 104-கொள்க)

சூ. 110. இம் மகளுக்குத் தாய் இது — இம்மகளது தாய் இது என அஃறிணைக்கண் முறைக்கொண்டெழுந்த பெயர்நிலைக் கிளவி ஈருருபும் பெறும் என்றும் - உயர்திணைக்கண் இம் மகளுக்குத் தாய் இவள் என்ற நான்கனுருபே பெறும் என்று குறிப்பிடும் உரையாளர் அஃது அஃறிணைப்பால் தோன்ற நிற்றலின் உயர்திணை முறைப்பெயர்க்கண் குகரம் விரித்தார் என்ற கருத்தை (பக்-138) ஒவ்வாததன் காரணம் புலப்படவில்லை.[19]

---

19. உருபு பால்காட்டுமெனக் கோடல் எனக்கு உடன்பாடில்லை.

சூ. 114. திருவாசகம் - திருவாய்மொழி பாக்களை உணர்த்தின் அடையடுத்த ஆகுபெயர், நூல்களை உணர்த்தி நிற்பின் அன்மொழித்தொகை என்றார் (பக்-159) வாசகம் வாய்மொழி அவற்றானாகிய பாக்களை உணர்த்த-அப்பாக்கள் அவற்றான் ஆகியநூலை உணர்த்துதல் இருமடியாகுபெயர் என்று கோடற்கண் தவறு யாது என்பது ஆராயற்பாலது.

சூ. 116. நச்சினார்க்கினியர் தண்டுண் ஆதற்குக் கிடந்தது தண்டுண் எனவும் பாவையினும் அழகியாள் பாவை எனவுமே குறிப்பிட்டுள்ளார் தண்டுண்கிடந்தது-பாவை வந்தாள் என்று உதாரணம் காட்டவில்லை. (பக்-161)

சூ. 69. கூறிய...... என்ப. ஆறு உருபுகளும் தத்தம் தன்மை (வடிவு) திரியாமல் பெயரின்கண் இறுதியாக வந்து புணர்ந்து நிற்கும் இயல்பினவாகும் என்று பொருள் கூறியவர். இயற்கை என்றது அங்ஙனம் உருபுகளை ஏற்றுநிற்கும் இலக்கணத்தை! என உருபின் இலக்கணத்தை பெயரிலக்கண மாக மாற்றிக் கூறுவது பொருந்துமா? (பக்-99)[20]

சூ. 67 : 'பெயரினாகிய தொகை' என்று இவ்வுரைகாரர் குறிப்பிடும் ஒரு பொருள் குறித்த பல பெயர்த் தொகுதிகளுள் உள்ள பெயர்கள் யாவும் பயனிலை கோடற்கு ஏற்ப நிற்குமாறு அறிக என்றார். இந்நிலை சாரைப்பாம்பு தென்னை மரம் முதலிய இருபெயரொட்டுப் பண்புத் தொகைக்கும் உண்டு. எனவே அறுவகைத் தொகையுள் பயனிலை கோடற்குரிய சொல் ஒன்றேயாக நிற்கும் என்ற கருத்து முழுமையாகப் பொருந்துவதன்று.[21]

சூ. 104 : பிறிது ... என்பது உருபுகளின் நிலைபற்றிய தொருபுறனடை என்று உரைகாரர் குறிப்பிட்டு விளக்குகிறார். இதனை ஆசிரியர் கருத்தாகக் கொள்ளவேண்டுமாயின் இது வேற்றுமை மயக்கப் புறனடைக்கு முன்னர் (சூ. 101) அமைந் திருத்தல் வேண்டும். இந்நூற்பாவிற்குத் தெய்வச்சிலையார் உரை பொருத்தமானதே. அவர் கருத்து உருபுகளுக்குக் கூறிய சூத்திரங்களான் பெறப்படும் என்பது ஆராயத்தக்கது.

---

20. ஈண்டுப்பெயர் என்றது எழுவாய் உருபைக் கருதியது.

21. தொகைமொழி - தொகை நிலைத்தொடர் இவை மேலும் விளக்கப்படல் வேண்டும் எனத் தெரிகின்றது.

சூ. 146. மற்றையவர்கள் என்ற சொல் வழாநிலை என்பதை விளக்கப்பெரிதும் முயலும் உரைகாரர் கள்ளிறு அஃறிணைக் கல்லது வாராது என்று கூறி நமர்கள் என்பதனை வழூஉச் சொல் எனல் பொருந்துவதாக இல்லை. நமர்காள் நமரங்காள் போல்வனவற்றிற்கு இவர் கூறியது ஒக்கும்.

சூ. 164. அன்னன் அன்னான் என்பன ஒப்பொடு வரூஉம் கிளவிஆகா. ஒப்பொடுவரின் அன்னவன் இன்னவன் என்றேவரல் வேண்டும் என்பதனை விரிவாக விளக்கிய இவ்வுரைகாரர் (பக்-188) ஒப்புப்பற்றி வருவன பொன்னன்னார் உயிரன்னன் என உவமவாய்பாட்டால் வரும் என்று வரைந்துள்ளமை ஆராய்தற்குரியது. (பக்-231)

சூ. 166 : பல்லோர்க்குறித்த சினைநிலைப்பெயர், செவியர் தலையர், வாயர் எனவரும் என்கின்றார். பெருங்காலர், பெருந்தோளர் கூனர் குருடர் முடவர் என ஏனையார் குறிப்பிடவும் இவர் பண்பு அடாதசினைப்பெயர் கூறுவது உலகில் வழங்கும் மரபுக்கு ஒத்ததாகத் தோன்றவில்லை.[22]

சூ. 169 : பல்ல பலசில உள்ள இல்ல என ஆசிரியர் சொல் பற்றி ஓதவும் இவர் பல்லவை, சில்லவை உள்ளவை என்பனவற்றைச் சேர்த்துக் கொண்டதன் காரணம் புலப்படுத்தப் படவில்லை.

சூ. 194 : நகைக்கும் என்ற சொல்லாட்சி பிற்பட்டது. நகுதல் சமாதி என்ற அணிவகையால் நகுமுல்லை. நகுவன போல் வனமுல்லை, முல்லை முறுவலிக்கும் என்பன போல வருதலைக் காண்கிறோம். சமைக்கும் என்பது உணவு என்னும் சார்பினால் உயர்திணையைச் சுட்டுகின்றது. சாத்தன் பிளிறும், சாத்திகுரைக்கும் என்றாற்போல்வன அஃறிணை வினையாகும். யாழ்எழூஉதலும் சாந்தரைத்தலும் அன்னமரபின் வினையாதற்கண் தடை யாது என்பது விளக்கப்படவில்லை.[23]

சூ. 192. ஒருவர் என்ற சொல் ஒருவுவர் என்ற பொருள்தருமா? ஒருவ, ஒருவர் ஒருவி, ஒருவூஉ என

---

22. விரவுமலர் பொறித்த தோளர் (நற்-144) இரும்பார்கும் காலராய் [நாலடி 122] என்றாற்போல வரலாம்.

23. யாழ் என்னும் சார்பானும்-சுண்ணச் சாந்து எருதுகளான் அரைக்கப் பெறுதலானும் அவை அன்ன மரபின் வினையாகா என்பது கருத்து-சிரிப்பும்-பாகம் (சமையல்) செய்தலும் உயர்திணைக்கே உரியவை என்பது எனது கருத்து.

வினையெச்சங்கள் வருதல்போல ஒருவர் என்ற முற்று வருதலுக்கு எடுத்துக்காட்டு எதுவும் தரப்பெறவில்லை. மேலும் பெயரியலில் வினைமுற்றைப் பற்றிக் குறிப்பிட இடனில்லை.[24]

சூ. 196. கிழவன், பெரியர், கிழவோன், கிழவோர் என்ற ஆட்சி உண்டு. ஆனால் கிழவோள் என்ற ஆட்சி உண்டு கிழவள் என்னும் ஆட்சியில்லை. அதனைக் கொள்வதற்கு அஃது ஆளப்பட்ட இடம் ஒன்றனையாவது சுட்டியிருத்தல் வேண்டும்.[25]

சூ. 197. இறைச்சி என்பதற்கு உள்ளுறை என்று பொருள்கொள்ளப்பட்டமையால் நூற்பா உரையில் எந்தத்தனிச் சிறப்பும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. அடுத்த நூற்பா வினையும் நோக்க இறைச்சி என்பதற்குக் கருப்பொருள் என்பதே நேரிய பொருளாகத் தோன்றுகிறது.[26]

சூ. 203. தலைதடுமாற்றமாகத்தன்மைப் பன்மை வினைமுற் கூறினார். தன்மைவினை உயர்திணைக்கே உரியதென்பது அறிவித்தற்கு (பக்-221) தன்மைப் பன்மைவினை அஃறிணை யையும் உளப்படுத்தல்-"தன்மைச் சொல்லே" "பன்மை யுரைக்கும் தன்மைக்கிளவி" என்ற நூற்பாக்களால் வெளிப்படை எனவே மேலே குறிப்பிட்ட விளக்கம் பொருந்துவதாக இல்லை.[27]

சூ. 204 : உண்டு, வந்து, சென்று. உண்டும் வந்தும் சென்றும் என்பவை இறந்தகாலம் காட்டும் என்பார் பவணந்தியார். அங்ஙனம் வருதல் சான்றோர் செய்யுட்கண் காணப்பெறாமையின் அவை ஆய்வுக்குரியன என்கிறார். (பக்-223, 4) உண்ணாநின்றனம், உண்கின்றனம் முதலியவை (பக்-228) நிகழ்காலம் பற்றி கின்று, நின்ற என்ற கால எழுத்துப் பெற்று வரும் வினைமுற்றுக்கள் சான்றோர் செய்யுட்கண் காணப்பெறுகின்றனவா என்பது ஆய்வுக்குரியது [28]

---

24. ஒருவர் என்னும் பெயர் நிலைக்கிளவி என ஆசிரியர் விதந்தமையான் அங்ஙனம் விளக்கம் கூறப்பட்டது.

25. 'கிழவோள்' என்னும் ஈற்றயல் நீண்ட பெயருக்குரிய அடிப்படை வடிவம் 'கிழவள்' எனச் சுட்டப்பட்டது.

26. இறைச்சி ஐவகை உள்ளுறைகளுள் ஒன்றென்பதும் அதன் இலக்கணமும் பொருளியலுள் விளங்கும்.

27. தன்மை வினை உயர்திணைக்கே உரியதென்பதனை நினைவுபடுத்தல் இதன் நோக்கமாகலாம் என்பது எனது கருத்து.

28. உண்ணா நின்றனம் முதலியவை வழக்கிலாயினும் உள,உண்டு-உண்டும் என்பவை இருவகை வழக்கினும் காணல் அரிதாயுள்ளமையின் அங்ஙனம் சுட்டினாம்.

சூ. 208 : பாடன்மார் எமரே - காணன்மார் எமரே. இவை மாரீற்று வினைமுற்றுக்கள் அல்ல. பாடுவார் - காண்பார் எனவரும் வியங்கோள் முற்றின் எதிர்மறையாகிப் பாடுவாரல்லர் ஆகுக, காண்பாரல்லராகுக என்று பொருள்படும் வியங்கோள் முற்றே என்றும் வியங்கோள் ஆண்டு ஏவற்பொருளில் வந்துள்ளது என்பதுமே சேனாவரையர் கருத்து. இச்செய்தி கணேசையர் வரைந்துள்ள குறிப்புரை யானும் தெளிவுறும் (பக். 227)[29]

சூ. 221 : உண்டு என்பது பொதுவினை என்பது உரையாளர் கருத்து. உண்டு பொதுவினையாயின் "முன்னிலை வியங்கோள்" என்னும் நூற்பாவில் "இன்மை செப்பல், வேறு" என்பனவற்றொடு இணைத்துக் கூறப்பெறாததன் காரணம் என்ன ?[30]

சூ. 223 : வியங்கோள் என்ற சொற்கு ஏவுதல் என்பது பொருளன்று, வெளிப்படுத்தற்கொள்கையை உடையது என்பதே பொருள் என்றார் (பக்-240) ஏவல் வியங்கொண்டு - செலவியங் கொண்மோ - வியங்கொண்டான் என்பவை அவர்காட்டும் எடுத்துக்காட்டுக்கள். இவை ஏவல் என்ற பொருளிலேயே வந்துள்ளமைக்கும் எடுத்துக்காட்டாகின்றன.[31]

சூ. 228 : நிகழுங்காலத்துச் செய்யுமென் கிளவி எனவே செய்யும் என்னும் முற்றின் காலங் கூறியவாறு (பக்-248) உம் என்னும் ஈற்றான் நிகழ்காலம் உணர்த்தி வரும் முற்று வினையாயும் (பக்-241) என்று குறிப்பிடும் உரைகாரர் செய்யும் என்னும் முற்று எதிர்காலத்துக்கும் உரித்தாகலின் (பக்-198) என்று கூறுதலின் பொருத்தம் ஆராய்தற்குரியது.[32]

சூ. 214. பொன்னன் என வந்த குறிப்பு வினையும் வினையாலணையும் பெயராகிப் பொன்னனை அழைக்க எனவரும். அவ்வழி அஃது எடுத்தலோசையாற் கூறப்படும் (பக்-232) உண்ணாய் தின்னாய் எனவரும் முன்னிலை வினைகளே ஈறு குன்றி உண்தின் என முதனிலையாக நின்று

---

29. புற்றாநூற்றுப் பழையவுரை மறைந்து விட்டது. நற்றிணை உரையாசிரியர் மார் ஈற்றினை வியங்கோள் வினை முற்றீறாகவே விளக்குகின்றார்.

30. உரையிற் கோடல் என்னும் உத்தியாற் கொள்ளப்பட்டது.

31. எண்ணத்தை வெளிப்படுத்தல் என்பது சொற்பொருள் ஏவுதல் அதன் சார்பாகவந்த கருத்துப் பொருள் என்பதே ஈண்டு விளக்கப்பட்டது.

32. முதலுரிமை நிகழ்காலம் அடுத்த உரிமை எதிர்காலம் என்பது சூத்திர அமைப்பான் கருதப்பட்டது.

எடுத்தலோசையான் ஏவற்பொருள் உணர்த்தும் (பக்-240) வினைக்கே உரிய எடுத்தலோசையைப் பெயருக்கும் கொண்டமை மயக்கந்தருவதாகும்.[33]

சூ. 229 : ஒரு சாரரர் "செய்யா" என்பதனைத் தனி ஒரு வாய்பாடாகக் கருதினர் அது பொருந்தாது என்பதனை நிகழூஉ நின்ற பலர் வரை கிளவியின் என்பதனான் அறியலாம். இத்தொடர்களின் பொருள் நன்கு புலப்பட்டிலது.[34]

வினை எச்சத்தை ஈறு கெட்டு நிற்கும் தொழிற்பெயர் எனல் திரிபுணர்ச்சியாம் (பக்-250) வரல் வேண்டும் என்பதனை வர வேண்டும் என வழங்குதல் பிழைபட்ட வழக்கு (பக்-271) எனல் என்பதன் அடியாக என என்னும் செயவெனெச்சம் பிறக்கும் (பக்-284) இத்தொடர்களின் பொருத்தம் ஆராய்தற்குரியது.

சூ-243 :- மிக்கது என்பதற்கு ஒன்றன்கண் சிறப்புடைய தாக நிகழும் பாங்கினை உடைய வினைச்சொற்களாகிய ஈதல், ஓதல், கற்றல் ஆற்றல், ஒழுகுதல் முதலிய தொழிற் சொற்கள் என்று பொருள் செய்ததன் பொருத்தம் புலப்படவில்லை. (பக்-269) ஆசிரியர் இங்ஙனம் அகப்படச் சூத்திரம் இயற்றுவாரா என்ற ஐயம் ஏற்படுகின்றது[35].

சூ 271 : ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும் ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும் ஆர் ஈறுபெற்றே அமைதல் வேண்டும் என்பது இந்நூற்பாவாலேயே பெறப்படு கின்றது. இயற்பெயர் என்பது இடுபெயர்களுக்கும் அஃறிணைப் பெயர்களுக்கும் பொதுவான சொல் ஆதலின் அஃறிணை இயற்பெயரும், இடுபெயர்களும் பன்மைக் கிளவி ஆதற்கண் ஆர் என்னும் இடைச்சொல்பெறும் என்பது இந்நூற்பாவின் பயனாகும்.[36]

---

33. எடுத்தலோசை குறிப்பு வினையை நோக்கியே கூறப்படுதலின் மயக்கம்நேர்தற்கில்லை,

34. நிகழூஉ நின்ற என்றது நிகழாநின்ற என்பதன் மாற்று வடிவமாகக் கூறப்படுதலின் செய்யூ என்னும் வினையொச்சவாய் பாட்டின் மாற்று வடிவமே 'செய்யா' என்பது என உணர்தல் வேண்டும் என்பது பொருள்.

35. இதநூற்பாவிற்கு ஒல்லும் வகையான் உரை வரையப்பட்டது இதனினும் செம்பொருள் தோன்றின் ஏற்றுக் கொள்ளலாம்.

36. உயர்திணைப்பெயர்-விரவுப்பெயர்களின் ஒருமையீறு கெடாமல் அதன் மேல் உயர்வுகருதிவரும் ஓர் இடைச்சொல் என்பதே எனது கருத்து.

சூ. 343. ''எய்த்து நீர்ச்சிலம்பின் குரல் மேகலை'' என்ற இடத்து எய்த்தல் அறிதல் என்னும் பொருளில் வந்துள்ளதாக நச்சினார்கினியர் குறிப்பிட்டுள்ளதை ஏலாமையின் காரணம் குறிப்பிடப்பட்டிருத்தல் வேண்டும்.

சூ. 403 : சிதைதல் வேறு - திரிதல் வேறு. வடமொழிச் சிறப்பொலிகள் தமிழொழிக்கேற்பத் திரிந்து வருதலே மரபு, சிதைந்து வருதல் மரபன்று. விபீஷணன் - வீடணன் எனவும் லஷ்மணன் - இலக்குவன் எனவும் வருவனவும் திரியே ஒழியச் சிதைவல்ல. எனவே சமற்கிருதச் சொற்கள் தமிழில் அதன் ஒலிக்கேற்பத்திரிந்து வருதலை ''வடசொற் கிளவி'' என்ற நூற்பாவும், சமற்கிருதச் சிதைவாகிய பாகதத்திலிருந்து தமிழில் திரிந்தும் திரியாது வருவனவற்றைச் 'சிதைந்தன' என்ற நூற்பாவும் குறிப்பிடுகின்றன என்று கொள்வதே பொருத்தம் என்று தோன்றுகின்றது.[37]

சூ. 404 :- ஓதிமுது போத்து என்பதன்கண் ஓந்தி என்பதனை ஓதி என இடைக்கண் குறைத்தலும் நீலமுண் துகிலிகை என்பதனை நீலுண்துகிலிகை எனக் கடைக்குறைத்தலும் இச்செய்யுள் விகாரத்தின் பாற்படுத்துக் கொள்க (பக்-351) ஓந்தி-ஓதி. நீலம்-நீல் என வருதல் குறுக்கும் வழிக்குறுக்கும் செய்யுள் விகாரம் அன்று இவற்றைக் குறைக்குமிடம் அறிந்து குறைக்க (பக்-411) இவ்விரு தொடர்களினிடையே சிறிது பொருத்தமின்மை தோன்றுகிறது. தாமரை—மரை என்ற இரு வழக்கும் ஓந்தி –ஓதி என்ற இரு வழக்கும் நீலம்—நீல் என்ற இரு வழக்கும் உள்ளன. எம்பின்—எம்பி தம்பின் – தம்பி – கரும்புல் – கரும்பு என்ற இருவழக்கும் இல்லை. எம்பி-தம்பி-கரும்பு என்ற ஒரு வழக்கே உள்ளது. இவற்றை ஏனையவற்றோடு சேர்த்துக் கூறுதல் பொருந்துமா (பக். 411)[38]

சூ. 409 : யானஞ்சுவலே என்ற தொடர் நீ வரலாறு என்பதனொடு இணைந்து பொருள் தருவதே பொருட் சிறப்புடையதாகும். வெற்ப வாரல் என்பது வியன்மலையாறே என்பதனொடு இணைதலே சிறப்பே. இரண்டு பாடல்களிலும்

---

37. பாகதம் என்பது செம்மையுறாத பழந்தமிழ் என்பது எனது கருத்து.

38. சொல்லமைப்பாய்வு நோக்கில் எம்பி நும்பி தம்பி என்பவை ஈறுகுறைந்தவை என இயைபுபற்றி எடுத்துக் காட்டப்பெற்றன. ஓதி முதலியவை நேரே குறுக்கும் வழிகுறுக்கல் என்னும் விதிபெறா-அதன் பாற்படும் என்றே சுட்டினாம்,

முதல் இரண்டடிகீள் வரும் வழிக்கு அடைமொழியாக அமைதல் காண்க.

சூ. 413. நிலங்கடந்தான் முதலியன உருபு தொகையாக வரும் தொடர்மொழிகளாகலாம். கடி சூத்திரப் பொன் என்பது. தாலிப் பொன் என்றாற்போல வரும் தொகைச்சொல் அன்றோ பக் - 367.

சூ. 414 : புலிப்பாய்த்துள் அஞ்சத்தக்கது. அவன் செலவு புலிப்பாய்த்துள்.மழை வண்கை புகழ்தரும் பாரியின் பண்பு மழை வண்கையே. என இவற்றைத் தொகை மொழிகளாக்க் கொள்வதன்கண் தவறு என்ன ? (பக். 369).[39]

சூ 419 : வேற்றுமை தொகையே வேற்றுமையில "முதலிய நூற்பாக்களால் தொகைகளின் இலக்கணமே கூறப்பட்டது. மொழிகள் எவ்வாறு பிரிந்து பொருளுணர்த்தும் என்பது ஆசிரியர் நோக்கமன்று. (பக். 370) என்றார். விரிந்து பொருணர்த்து மாற்றை அறியாமல் தொகைகளுள் பொருள் சிறந்து நிற்குமிடங்களை அறிதல் யாங்ஙனம் இயலும்.[40]

சூ. 415 · மாதவி ஆடரங்கிற்கு வந்தாள். மாதவியை ஆடரங்கிற்காண்க மாதவி ஆடரங்கிற்குச் செல்வான் என்புழி வந்தாள், காண்க - செல்வான் என்ற வினைமுற்றுக்களே ஆடரங்கு என்ற வினைத்தொகையில் காலத்தை வெளிப்படுக் கின்றன. நெருநல் அடுகளிறு போன்றவற்றில் காணப்படும் குறை இவ் எடுத்துக்காட்டுக்களிலும் காணப்படுதல் அறிக. (பக். 372)[41]

சூ. 417 : 'உம்மை இடைச்சொல் தொகையொடு முடிதலானும்' என்றார் . உம்மைத்தொகையொடு முடிதல் வேண்டும் என்ற வரையறை இன்மை 288ஆம் நூற்பாவான் உணரப்படும்.[42]

---

39, 413, 414 தொகைமொழி - தொகைநிலைத் தொடர் இவை பொருள் கொள்ளும் கோணத்திற்கு ஏற்பத் தடுமாறி வரும்,

40. விரித்துப்பொருள் காணல் தொகையமைப்பினை அறிந்து கொள்ளவே என்பது அவ்விளக்கத்தின் கருத்தாகும்.

41. ஒரு காலத்தை, வரைந்துணர்தலை விளக்குதற்குத் தந்த எடுத்துக் காட்டுக்கள் மாதவி வந்தாள் முதலியவை. நெருநல் அடுகளிறு முதலியவை அக்கோணத்திற் காட்டப்பட்டவை அல்ல என்பது எனது கருத்து

42. எண்ணும்மையை வரைந்து சுட்டும் என்பதற்கே இவ்விளக்கம் தரப் பட்டது. உம்மையின் இயல்பு பற்றியதன்று,

சூ. 423 : பாம்பு, பாம்பு, என்பது விரைவு பற்றிய அடுக்குக்கு எடுத்துக்காட்டாக உள்ளது. அஃது அச்சம் பற்றியதற்கு எடுத்துக் காட்டாதல் மிகுதியும் பொருந்தும் (பக்-385)

சூ. 449 : "பூணற்குப் ஸான்னாடை கொடு" என்பது தன்னைப் பிறன் போல் கூறும் குறிப்பின் தன்னிடத்தியலுமாறு புலப்படவில்லை (பக்-405)

சூ. 460 : "முன்னத்தின் உணரும்" என்ற நூற்பாவிற்கு நச்சினாக்கினியர் குறிப்பிடும் உரைவிளக்கம் உத்தியின் பாற்படும் என்கிறார். எவ்வுத்தியின் எவ்வாறு அடங்கும் என்று விளக்கியிருப்பின் பெரிதும் பயன்தரும் இன்னோரன்ன இன்னும் பலவுள.[43]

சுருங்கச் சொல்லின் எழுத்துப்படல உரையை ஒப்பவே எழுவகை மதமும் அமையப் பாலசுந்தரனார் இச் சொற்படல ஆராய்ச்சிக் காண்டிகையுரையினையும் வரைந்துள்ளார். ஏனையோர் உரைகளிற் காணப்பெறாமல் இவ்வுரையுள் காணப் பெறும் தேவையான அரிய செய்திகள் பல. வேற்றுமைகள் பற்றி இவர் குறிப்பிடுவன நம் உள்ளத்திற்கு இயையவில்லை எனின் அவற்றை இவருடைய மதம் என்று விடுத்துவிடலாம்.

பாலசுந்தரனாரின் பெரும்புலமையை வியக்கும் மாணாக்கர் பலராகவும் நயந்து உடனிருந்து பயன் கொள்வார் அரியரா யினமையின் அவர் தாமே பிறர் உதவியின்றி எழுதியும் அச்சுப் பிழை திருத்தியும் பதிப்பித்துள்ள இந்நூலில் சில இடங்களில் ஐயம் அகற்றப்படாமலும் அச்சுப்பிழைகள் திருத்தப்படாமலும் இருப்பதைக் காண்கிறோம்.

குற்றங்களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.

திரு. வே.கோபாலையர்,

---

43. எடுத்துக்காட்டுக்கூறி இவை அங்ஙனம் கேட்போர் தகவுகளைப் புலப்படுத்து நிற்கும் என்றதனான் அதுதன் மைமிடத்தை உணர்த்தும் எனக்கருதி விரிக்கப்படவில்லை.

இதுகாறும் பயிலும் மாணாக்கரை உளத்திற்கொண்டு ஐயரவர்கள் சுட்டியுள்ள ஐயம் முதலியவற்றிற்குரிய இன்றியமையாத விளக்கமும் திருத்தமும் அடுத்தபதிப்பிற் சேர்க்கப்படும்.

# நன்றியுரை

ஒருமொழியினது தனித்தன்மையையும் சிறப்பியல்புகளையும் நன்கு தெரிவிப்பவை அம்மொழியின் சொல், சொற்றொடரமைப்புக் கோட்பாடுகளேயாகும். அவற்றுள் பெயர்ப்பொருளின் இயக்கங்களையும் இயல்புகளையும் காட்டும் வினைச்சொல் லிலக்கணமும் அவ்வினைகளான் பெயர்ப்பொருள் அடையும் மாற்றங்களை உணர்த்தும் வேற்றுமையிலக்கணமும் தலையாயவையாகும்.

சமற்கிருதமொழியும் தமிழ்மொழியும் வினையியற் கோட்பாட்டில் பெரிதும் வேறுபட்டவை என்பதை உணர்வோர் வேற்றுமைக்கோட்பாட்டினை ஒற்றுமையுடையதாகக் கருதுவது இரங்கத்தக்கதொன்றாகும். அது காரணமாகவே தொல்காப்பிய வேற்றுமையியல் நூற்பாக்களுக்கு உண்மையான பொருள் காணாமல் உரையாசிரியன்மார் உட்பட யாவரும் பிறழ்ந்து போவாராயினர்.

தொல்காப்பியச் சூத்திரங்களின் அமைப்பினை ஊன்றி நோக்கின் தொல்காப்பியர் தம் நூலைச் செய்த காலத்தில் தமிழிலக்கணக் கோட்பாடுகளைக் கூறும் நூல்கள் பல்கி யிருந்திருத்தல் வேண்டுமென்பது புலனாகும். அவை பழந்தமிழ் (பிராகிருதம்) பற்றியவையாயும் செய்யுள்தமிழ் (செந்தமிழ்) பற்றியவையாயும் அமைந்திருத்தல் வேண்டும். அவற்றை ஆராய்ந்து முறைப்படத் தொகுத்த அரியசெயல் மட்டுமே தொல்காப்பியர்க்கு உரியது.

பாரதப் பொதுமொழியாகப் படைக்கப்பட்ட சமற் கிருதத்திற்கு அமைந்த இலக்கணக் கோட்பாடுகள் மேற்கூறிய இருவகைத் தமிழிலும் அமைந்த கொள்கைகளை அடிப்படை யாகக் கொண்டு முறையாகவும் விரிவாகவும் அமைந்ததாதல் வேண்டும்.பாணினிமுனிவர் இயற்றிய அட்டாத்தியாயியில் சொல் லிலக்கணமும் எழுத்திலக்கணமும் பிறவும் கலந்து அமைந் துள்ளமை இவ்வுண்மையைப் புலப்படுத்தும். சில ஒற்றுமைக் கூறுகள் தவிரப் பெரும்பான்மையான கொள்கைகள் செந் தமிழ்க்கே உரியவையாகும். அந்நோக்குப்பட அறிவியல் அடிப்படையில் ஆராய்ந்து எழுதப்பட்டதே இவ்ஆராய்ச்சிக் காண்டிகையுரை. விரிவான ஆராய்ச்சி தமிழியற் கோட்பாட்டு நூலில் அமையும்.

இளம்பூரணர் முதலாய உரையாசிரியன்மார் தம் உரைகளையும் நன்னூல் முதலாய சின்னூல்களையும் ஏறத்தாழ 1200 ஆண்டுகளாகப் பயின்று அக்கருத்துக்களிலே படிந்துவிட்ட நெஞ்சங்கள் இப்புத்துரையை எளிதாக ஏற்றுக் கொள்ளும் என்று கூற இயலாது. எனினும் ஆராய்ச்சி உலகில் இஃது ஒரு திருப்பத்தை ஏற்படுத்தின் அதுவே பெரியதொரு பயனாகும்.

பேராசிரியர் முனைவர் ச. அகத்தியலிங்கனார் சுட்டியுள்ளமை போன்று மரபிலக்கணப் பயிற்சியும் ஆராய்ச்சியும் மேலும் தேய்ந்து விடாமல் இவ்வுரை புத்தெழுச்சி கொள்ளத் தூண்டுமாயின் அதுவே எனக்குப் பேறாகும்.

எழுத்ததிகாரஉரைக்கு வழங்கியது போன்றே இச்சொல்லதிகார உரைக்கும் அணிந்துரை தந்துள்ள பேராசிரியர் முனைவர் ச. அகத்தியலிங்கனார் அவர்கட்கும் வாழ்த்துரை வழங்கியுள்ள தவத்திருகாத்தையா சுவாமிகள் அவர்கட்கும் சால்பக நிறுவனர் திரு. யு. சுப்ரமணியனார் அவர்கட்கும் இவ்வுரை வெளிவரப் பேருதவி புரிந்து வரும் முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பனார் அவர்கட்கும் (இவர் தம் சிறப்புக்களை எழுத்ததிகார நன்றியுரையுள் கூறியுள்ளேன்) எழுத்ததிகாரத்திற்கு வரைந்தாங்கு இதற்கும் அரியதோர் ஆய்வு முன்னுரை வழங்கியுள்ள திரு வே. கோபாலையர் அவர்கட்கும் இதன் முற்பகுதியை அச்சிட்டு உதவியுள்ள நண்பர் அ. கி. மூர்த்தி அவர்கட்கும் பிற்பகுதியையும் அட்டை முதலாயவற்றையும் அச்சிட்டருளியுள்ள திரு. பூ. நா. இராமச்சந்திரனார் அவர்கட்கும் எனது உளமார்ந்த நன்றியுரியதாகும்.

என்னுடைய பணிக்குத் தோன்றாத் துணையாக இருந்து அருள்புரியும் பரம்பொருளை வந்தித்து வணங்குகிறேன்.

குறிப்பு :-

இந்நூற்குப் பொதுவான முன்னுரை எழுத்ததிகாரத்துள் கூறியுள்ளேன். நூல் முழுமைக்கும் உரிய உரை வரலாறு பின்னர் வரும்.

அன்புள்ள
**ச. பாலசுந்தரம்**

# தொல்காப்பியம்

# சொல்லிலக்கணக் கோட்பாடுகள்

மன்பதையுள் குரல் ஒலியை மொழியாக்கிப் பேசுந்திறன் மக்களினத்திற்கே வாய்த்ததொரு பெரும்பேருகும். மொழி, மக்களாற் படைக்கப்பெற்று அவர்களான் ஆக்கமுற்று வளர்ந்து அவர்கட்கு அறிவாகவும் அறிவுத்துணையாகவும் அமைந்து விளங்கும் ஒப்புயர்வற்றதோர் அருவப் பொருளாகும். அதற்கு உருவும் வடிவும் கற்பித்து எதிர்காலத்திற்குப் பயன்படச் செய்பவரும் மக்களேயாவர்.

அம்மக்கள்தம் காமவெகுளி மயக்கங்களான் காலந்தொறும் மொழிநிலை திரிபுற்றுச் சிதையா வண்ணம் தொல்லோர் வகுத்த இலக்கண மரபுகளை அறிவியல் அடிப்படையில் சுருக்கமாக உணர்த்துவது தொல்காப்பியச் சொல்லதிகாரக் கோட்பாடுகளாகும்.

## மொழியின் தோற்றம் :

காட்சிக்குங் கருத்திற்கும் உரிய பொருளுணர்வு ஐம்புல வாயிலாக உயிர்கட்கு எய்துதலான் ஐம்பொறிகள் உள்ள உயிர்கட்கெல்லாம் பொருளுணர்ச்சி இயற்கையேயாம். அவ்வுணர்வுகளை உடலுறுப்பு அசைவுகளானும், குறிப்பொலிகளானுமன்றி ஓசை ஒலிகளை மொழியாக்கி உணர்த்தும் அறிவையும் அதற்கேற்ற வாயமைப்பினையும் பெற்றுள்ளது மக்களுயிர் மட்டுமேயாகும். அவ்வறிவு ஐம்பொறிகளுக்கும் அப்பால் அவற்றொடு தொடர்புடையதொரு புலனுக்குரியதாகும். தத்துவநூலார் அதனை உட்கருவி (அந்தக் கரணம்) என்பர். ஆறுவது அறிவு எனத் தொல்காப்பியம் கூறும், அதற்குப் பெயர்க்குறியீடு மனம் அல்லது உள்ளம் என்பதாகும்.

மனவுணர்வை வேறு சில உயிரினங்களும் சிறுபான்மை உடையன எனினும் அவற்றிற்கு அவ்வறிவு தம் உணர்வுகளை வாயாற்பேசி வெளிப்படுத்தும் ஆற்றலொடு கூடியமையாமையான்

" மக்கள் தாமே ஆறறிஉயிரே " என்றும்

" பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே " என்றும்

தொல்காப்பியம் விளம்புகின்றது.

அதனுன் உலகப் பொருள்களுள் மொழியொடு தொடர்புடையதாய் அம்மொழியானே நாளும் நாளும் உயர்ந்து வருவதாகிய மக்களினத்தை உயர்திணை என்றும் அங்ஙனம் உயர்தற்கு வாயாத

வற்றை அஃறிணை என்றும் இரு கூறுகப் பிரித்து அவ்வடிப் படையிற் சொல்லிலக்கணத்தை வகுத்தமைத்துள்ளனர் தமிழ்நூலார்.

மக்கள் இருதிணைப் பொருளையும் உணர்ந்து அப்பொருளைப் பிறர்க்குணர்த்தும் ஒலிக்குறியீடுகளாகிய சொல்லை அப்பொருளை இடமாகக்கொண்டு படைத்துப் பின்னர் அச் சொற்கள் கருவியாகப் பொருளை உணர்த்துகின்றனர்.

இதனை,

உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை என்மனார் அவரல பிறவே
ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே (சொ-1)

எனச் சுட்டுகின்றது தொல்காப்பியம்.

ஒருவன் ஒரு பொருளைப்பற்றிக் குறியீடு செய்யுங்கால் அக் குறியீட்டைச்செய்வதற்கு அவனிடத்து அப்பொருள் தோற்றுவிக்கும் உணர்வுகளே காரணமாம். அவ்வுணர்வு ஐம்புலங்களின் வாயிலாகவும் ஆறாவதறிவாகிய மனத்தின் வாயிலாகவும் நிகழும். மனக்குறிப்பிற்குப் பெரிதும் துணைபுரிவன செவியும் விழியுமாகும். ஆதலின் அடிப்படைச் சொற்கள் ( குறை உரிச் சொற்கள் ) இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி (உரி-1) ஆக்கமுறும் என்கின்றது தொல்காப்பியம்.

## சொல்லமைப்பும் பாகுபாடுகளும் :

அங்ஙனம் ஆக்கமுற்று ஒன்றும் பலவுமாக அமைந்து உணர்வுகளையும் கருத்துக்களையும் வெளிப்படுத்தும் சொற்களை ஆராயின் அவை இருதிணைப் பொருளையும் அவற்றின் தன்மை இயல்புகளையும் செயல்களையும் தெரிவிப்பனவாக அமைந்திருக்கும்.

அவற்றுள் பொருளைத் தெரிவிக்கும் சொற்கள் பெயர்ச்சொல் என்றும், செயலைத் தெரிவிக்கும் சொற்கள் வினைச்சொல் என்றும், தமிழ் நூலார் குறியீடு செய்துள்ளார். தன்மை இயல்புகளை உணர்த்தும் சொற்கள் பெயராயும் வினையாயும் இரண்டற்கும் பொதுவாயும் நிற்கும். அதனற் சொற்களை இரண்டு பெரும் பிரிவுகளாக வகுத்தனர் நூலோர் இதனை

'' சொல்லெனப் படுவ பெயரே வினையென்று
ஆயிரண் டென்ப அறிந்திசி னோரே '' (சொல்-4)

எனத் தொல்காப்பியம் புலப்படுத்துகிறது.

ஒரு பொருளைக் கருதி உணர்வதற்கு அப்பொருளையே அடிப்படையாகக் கொண்டு சொற்கள் தோற்றுவிக்கப்படுதலின் பொருளைச்சுட்டாதவெறுமைச்சொல் என்பது ஒன்றில்லை என்பது நூலோர் முடிபு, இதனை "எல்லாச் சொல்லும் பொருள் குறித் தனவே" என்கிறது தொல்காப்பியம். பொருள்களை உயர்திணை, அஃறிணை என வகுத்துக் கொண்டமையான் அவற்றைப் பற்றுக் கோடாகக் கொண்டு தோன்றும் சொற்களும் இரு வகையாக அமைவனவாயின.

மக்கட்சுட்டாகிய உயர்திணைப்பொருளுள் ஆண்பெண் என்னும் இருபிரிவுகள் உள்ளமையான் தனி ஒரு ஆண் மகனையும் பெண் மகளையும் குறிப்பதற்குரிய குறியீடுகளும் அவர்தம் குழுவினைக் குறிப்பதற்குரிய குறியீடும் இன்றியமையாதனவாகலின் அக்குறியீடு காரணமாக உயர்திணை மூன்று பால்களாக விரிகின்றது. இதனைத் தொல்காப்பியம்

ஆடூஉ வறிசொல் மகடூஉ வறிசொல்
பல்லோ ரறியும் சொல்லொடு சிவணி
அம்முப் பாற்சொல் உயர்திணை யவ்வே (சொல்-2)

எனப்பகருகின்றது. அஃறிணையுள் ஒருசில விலங்குகள் பறவைகள் தவிர ஓரறிவுயிர் முதல் ஐயறிவுயிர் ஈருக உள்ள பலவற்றுள் ஆண் பெண் பகுப்பு உணர்த்தற்கரியதாக உள்ளமையானும் நீர்நிலம் முதலாய உயிரில்லாத பருப்பொருள்களுள்ளும் அன்பு அருள் நன்மை தீமை முதலாய அருவப் பொருளுள்ளும் ஆண்மை பெண்மை கோடற்கின்மையானும் அஃறிணையை ஒருமை பன்மை தேர்ந்துணர்தற்குரிய இருபால்களாக அமைத்தனர் தமிழ் நூலார். இதனை

" ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்று
ஆயிரு பாற்சொல் அஃறிணை யவ்வே "

எனப் புலப்படுத்துகின்றது தொல்காப்பியம்.

அங்ஙனம் அமைந்த இருதிணை ஐம்பால்களே ஒருமையும் பன்மையுமாகிய எண்களை உணர்த்தி நிற்றலின் பாலின் வேறாக 'எண்' என்பதொரு பகுப்பைத் தமிழ் நூலார் வகுத்துக் கொண்டாரிலர்.

புல்பூண்டு மரஞ்செடி கொடிகளாகிய ஓரறிவுயிருள்ளும் இரண்டு முதல் ஐந்தறிவுவரையுள்ள புழு பூச்சி முதல் விலங்கீருகவுள்ள உயிர்களுள்ளும் பல்வேறு வகை இனங்கள் (சாதிகள்) உள்ளமை யான் அஃறிணைப் பெயர்கள் பலவாக அமைந்துள்ளன. மக்கட் சாதி ஒன்றே யாகலின் மக்களுள் ஒவ்வொருவரையும் சுட்டி உணரப் பல்வேறு இடுகுறிப்பெயர்கள் அமைவனவாயின.

மக்களுக்கு இடப்படும் பெயர்கள் காரணம் பற்றியும் பற்றாதும் அமையும். அவையாவும் அஃறிணைப் பொருட் பெயரின் அடிப்படையிலேயே தோன்றி நிற்கும். ஒரு பெயரே ஆண் மகனுக்கும் பெண் மகளுக்கும் அமைந்துவிடும். அதனான் அவ்விடு பெயர்களைக் கொண்டு திணையும் பாலும் உணர்தல் அரிதாகும். அவ்வாறே அஃறிணையுள் ஒரு சாதியாக உள்ள பொருள்களைப் பிரித்துணர்த்த வேண்டின் இடுபெயர்களாலேயே உணர்த்தல் இயலும். ஆதலான் இருதிணையுள்ளும் திரிபின்றிப் பாலுணர்த்தும் பெயர்ச் சொற்கள் மிகச் சிறுபான்மை (சுட்டுப்பெயர், வினாப்பெயர் முதலியன) யாக அமைவனவாயின. ஆதலின் பெயர்ச்சொற்களின் அடிப்படையில் திணை பால்களை வரையறை செய்தல் கடை போகாமை உணர்ந்து வினைச் சொற்கள் வாயிலாக அவற்றுள்ளும் படர்க்கை வினைச் சொற்களின் வாயிலாக ஐம்பாற் பொருள்களை வேறுபடுத்துணரும் முறையிற் சொல்லாக்க மரபிற்கு இலக்கணம் வகுத்துச்சென்றனர் தமிழ் நூலார். இதனைத் தொல்காப்பியம்

இருதிணை மருங்கின் ஐம்பா லறிய
ஈற்றினின்றிசைக்கும் பதினோ ரெழுத்தும்
தோற்றந் தாமே வினையொடு வருமே (சொல்-10)

என விளம்புகின்றது. எனினும் பெயருள் பால்வரைந்துணர்த்து வனவும் உளவென்பதை

வினையிற் றோன்றும் பாலறி கிளவியும்
பெயரிற் றோன்றும் பாலறி கிளவியும்
மயங்கல் கூடா தம்மரபினவே (சொல்-11)

என்னும் சூத்திரத்தான் அறிவுறுத்துகின்றார் தொல்காப்பியர்.

இனி உலகத்துப் பொருள்கள் பல்வேறு இனமாக(சாதிகளாகத்) திகழ்கின்றமையான் பெயர்கள் வேறுவேறாக அமைவனவாயின. ஆயினும் அவைபற்றிய வினைகள் பொதுவாக அமைதலின் வினையை உணர்த்தும் முதனிலைச் சொற்கள் ஐம்பாலுக்கும் பொதுவாக உள்ளன. எனவே ஐம்பாற்பொருள்களுள் ஒன்று ஒரு வினையை மேற்கொண்டகாலை அப்பொருள் இன்னபால் என்பதனை உணர்த்த அவ்வினை நிகழ்வு பற்றிய குறிப்போடு ஒரு துணைக்குறியீட்டைச் சேர்த்தாலன்றி உணர்த்த இயலாது. அங்ஙனம் சேர்க்கப்படும் ஒட்டுக்களைத் தமிழ் நூலார் இடைச்சொல் எனக் குறியீடு செய்துவகுத்து அமைத்துக் கொண்டுள்ளனர்.

அங்ஙனம் வினைச் சொல்லின் இறுதிநின்று திணைபால்களை வரையறுத்துணர்த்தும் இடைச் சொற்களே பெரும்பான்மையும் பொருட் பெயர்களின் இறுதியிற் சேர்ந்து திணைபாலுணர்த்தும்

பெயர்ச் சொற்களாகின்றன. அங்ஙனம் தனி ஒரு தொழிற் பெயராகவும் பொருட் பெயராகவும் இருந்த சொல்லை இவ் இடைச் சொற்கள் பாலுணர்த்தும் சொற்களாக வேறுபடுத்து வரையறை செய்தலின்

இடையெனப் படுவ பெயரொடும் வினையொடும்
நடைபெற் றியலும் தமக்கியல் பிலவே (சொல்-250)

இடைச்சொல்லெல்லாம் வேற்றுமைச் சொல்லே
(சொல்-456)

எனக் கூறுகின்றது தொல்காப்பியம்.

தொழிற் சொற்களைக் காலக்குறிப்பொடு பாலுணர்த்தவைக்கும் ஆற்றலுடைமையான் அவ் இடைச்சொற்கள் பெயரைச் சார்ந்து அமையுங்கால் அப்பெயர்ச் சொற்களுக்கு அவை வினைத் தன்மையையும் ஊட்டி விடுகின்றன. அவ்வினைத்தன்மை சூழலை நோக்கி நிற்கும். அதனான் இறுதியில் இடைச்சொற்களைப் பெற்று நிற்கும் பெயர்ச் சொற்களே குறிப்புவினைச் சொற்களாக ஆக்கம் பெறுகின்றன.

தொழிற்சொற்களின் இறுதிக்கண் வரும் இடைச்சொற்களை இருபத்தொன்பதாக வகுத்துக் கூறுகின்றது தொல்காப்பியம் அவற்றுள் னஃகான் ஒற்று முதலாய பதினோரு இடைச் சொற்கள் சிறப்புடையனவாகும்.

வினை என்பது பொருளான் மேற்கொள்ளப்படுவதாகலின் ஒரு பொருள் ஒருவினையை மேற்கொள்ள முற்படும் நிலையில் அப் பொருட்கு அவ்வினை எதிர்கால வினையாகும். மேற்கொண்டு ஆற்றுகின்ற நிலையில் அது நிகழ்கால வினையாகும். அங்ஙனம் ஆற்றுதலை விட்டு நீக்கிய நிலையில் அது இறந்தகால வினை யாகும். அதனுல் தமிழ் நூலார் மூன்று காலங்களையே வகுத்துக் கொண்டனர். வடநூலார் வகுத்த ஏனைக்காலங்கள் இவற்றுள் அடங்கி நிற்றலை அறியலாம். இம்மூன்று காலத்தையும் சொல் லகத்துப் புலப்படுத்து நிற்பதும் இடைச்சொல்லேயாம். காலத்தைப் புலப்படுத்தும் இடைச் சொற்கள் வெளிப்படையாகப் பிரித்துணரு மாறும் நிற்கும்; பிரித்துணர இயலாமல் அச்சொல்லொடு ஒன்றுபட்டு அதனுட் கரந்தும் நிற்கும். ஆதலின் கால இடைச்சொற்கள் இவை எனக்கிளந்து கூறாமல் ''வினைசெயல் மருங்கிற் காலாடு வருநவும்'' (சொல்-251) எனவும், வினைச் சொற்கள் ஒருமொழிப்புணர்ச்சி யாகலின் '' புணரியல் நிலையிடை உணரத்தோன்ரு '' (எழுத்து-482) எனவும் ஆசிரியர் இசைத்துச் சென்ருர். நன்னூல் முதலாய பின்னூல்கள் கடைபோகாவகையிற் பிரித்துக் கூறியுள்ளன. காலக்கிளவி என்பது வினைச் சொற்களிடத்து மெய்ப்பாடு போல அமைந்து நிற்கும் இயல்பினதாகும்.

## சொற்பாகுபாடுகள்

சொல்லாக்கத்திற்கும் சொற்றொடராக்கத்திற்கும் காரணமாக அமையும் ஓரெழுத்தொருமொழி முதலாய மூவகை மொழிகளையும் தொடராக்க அடிப்படையிற் பிரித்துணர இலக்கண நோக்கில் சொற்களைப் பெயர் வினை இடை உரி என்றும், பாட்டுரை நூல் முதலாய எழுவகைச் செய்யுளிடத்தும் அமைந்து பொருள் தரும் நோக்கில் இயற்சொல் திரிசொல் திசைச் சொல் வடசொல் என்றும் தொன்னூலோர் வழிநின்று தொல்காப்பியம் பாகுபாடுசெய்துணர்த்து கின்றது. எழுவாயும் பயனிலையுமாக அமையும் தொடர்மொழி யமைப்பின்கண் சொற்கள் இணைந்து பொருள்பயக்கும் நோக்கில் தொகைச்சொல், தொகைமொழி என இருவகைப்பாகுபாடுகளையும் அறிவிக்கின்றது. இவையெல்லாம், பொருளுணர்த்தும் முறைமை யான் வெளிப்படைச்சொல், குறிப்புச்சொல் என இருகூறுக அடங்கும். அவைபற்றிய இன்றியமையாத குறிப்புக்கள் பின் வருமாறு.

### பெயர்ச் சொல் :

பொருள் பற்றியும், இடம் பற்றியும், குணம்பற்றியும், தொழில் பற்றியும் குறியீடாகவரும் பெயர்ச் சொற்களுள் இருதிணை ஐம்பால் களை வரையறுத்துணர்த்துவன மிகச் சில. ஏனையவை இருதிணை கட்கும் பொதுவாக நிற்கும். அதனுன் பெயர்ச்சொற்களை உயர் திணைப் பெயர் அஃறிணைப் பெயர் இருதிணைப் பொதுப்பெயர் என மூவகையாக வகுத்துக் கொண்டு அவற்றின் இலக்கணத்தை விரித்துணர்த்துகின்றுது தொல்காப்பியம். ஒருசார் பெயர்கள் இருதிணைக்கும் பொதுவாக நிற்கும் என்பதன்றிப் பொதுத்திணை என்று ஒன்றில்லை அதனுல் அப் பொதுப்பெயர்கள் முன்னும் பின்னும் வரும் சிறப்புப்பெயர், சிறப்பு வினைகளான் இருதிணையுள் ஒன்றனுள் அடங்கிவிடும்.

உயர்திணையுள் தன்மைப்பெயர் சுட்டுப்பெயர் வினாப்பெயர் பன்மைப்பெயர் தவிர்ந்த எனைய இடுபெயர்கள் யாவும் விரவுப் பெயராகவே நிற்கும். அஃறிணையுள் இனம் பலவாகவின் அஃறிணைப் பெயர் யாவும் ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் நிற்கும் அவற்றை அஃறிணை இயற்பெயர் என்றார். அவை உயர்திணைக் கண் இறுதி இடைச் சொல்லின்றி இடுபெயராகவும் அமையும். ஆதலின் பொதுப்பெயர் பற்றிய இலக்கண மரபுகளை ஆசிரியர் விரித்துக் கூறுகின்ருர்.

அர் ஆர் மார் என்னும் இறுதி இடைச்சொல்லொடு கூடிய உயர்திணைப் பன்மைப் பெயரும் கள் என்னும் இறுதி இடைச் சொல்லொடு கூடிய அஃறிணைப் பெயரும் அவ்வத்திணைகட்கே

உரியனவாகும். அவை விரவுப் பெயராக வரா, அன், ஆன், அள், ஆள் என்னும் ஆண்மை பெண்மை உணர்த்தும் இறுதி இடைச் சொல்லொடும் பெண்பால் உணர்த்தும் இகர இறுதியொடும் கூடிவரும் பெயர்ச் சொற்களும் கள் விகுதி பெறாமல் வரும் அஃறிணை இயற்பெயர்ச் சொற்களும் முன்னிலைப் பெயர்களும் உறவு முறைப் பெயர்களுமே விரவுப்பெயராக வரும். ஆதலின், ஆண்மை பெண்மை உணர நிற்கும் இறுதி இடைச்சொல்லொடு கூடிய பெயர்களும் முறைப்பெயர்களும் இருதிணையுள்ளும் அவ்வப் பால்களுக்கு உரியவாய் விரவும். ஆண்மை பெண்மை உணர நில்லாத இயற்பெயர்கள் உயர்திணையுள் ஆண்மைப் பொருள் பெண்மைப் பொருள் அஃறிணையுள் ஒருமைப் பொருள் பன்மைப் பொருள் என்னும் நான்கினோடும் விரவும். இவற்றை ஆண்மைப் பொதுப்பெயர் பெண்மைப் பொதுப் பெயர் ஒருமைப் பொதுப்பெயர், பன்மைப் பொதுப்பெயர் எனக் குறியீடு செய்துணர்த்துகின்றார் ஆசிரியர்.

இடம் : யாதானும் ஒன்றைப் பற்றி உரைநிகழ்த்தும் பொருள் தன்மை இடமாகும். அதனை எதிர் நின்று கேட்கும் பொருள் முன்னிலை இடமாகும். எப்பொருள் பற்றிப் பேசப்படுகின்றதோ அப்பொருள் படர்க்கையிடமாகும். அதனான் இடம் மூன்றாக வகுக்கப்பட்டுள்ளது.

நாடாக வழக்குப்பற்றிய கற்பனை வகையால் புலவோர் கொண்டெடுத்துக் கூறுவதல்லது அஃறிணைப் பொருள்கள் பேசுந் திறனுடையன அல்லவாகலின், பேசிப் பொருள்உணர்த்தும் ஆற்றலுடைய உயர்திணைக்கே தன்மைஇடம் உரியதாகத் தொல்காப்பியம் வரையறுத்துக் கூறுகின்றது. இவ் அறிவியல் நுண்மையை இகந்து இடைக்காலத்து இலக்கண நூலார் தன்மையை விரவுத் திணையாகக் கொண்டனர். முன்னிலை இருதிணைக்கும் பொதுவாக நிற்கும் - படர்க்கை இருதிணையுள் ஒன்றை வரையறுத்துணர நிற்கும். அஃறிணைப் பொருட்களுக்குக் கேட்கும் ஆற்றல் உண்டென்பதனால் முன்னிலை இருதிணைப் பொதுவாயிற்றென்க.

### வேற்றுமை :

பெயர்ப்பொருள் தன்னானும் பிறிதானும் கொள்ளும் வினைநிலை காரணமாக எய்தும் வேறுபாடுகளே வேற்றுமையாகும். அவ்வேறு பாடுகளை எட்டு வகையாக அமைத்துக்கொண்டனர் தமிழ் நூலார். இரு திணைகளுள் ஒரு பொருள் வினைநிலை எய்திக் கருத்துக்

களைத் தோற்றுவிக்க அணுக்கமாக நிற்கும் நிலையே பெயர்ப் பொருள் எய்தும் முதல்வேறுபாடாகும். அங்ஙனம் தோன்றி நிற்கும் பெயர்ப் பொருள் எய்தும் வினைகளுக்கு ஏற்பப் பிற வேறுபாடுகளை அடையும். அதனுன் ஒரு பெயர் எழுவாயாகத் தோன்றும் நிலையே முதல் வேற்றுமை என்று கூறுகின்றது தொல்காப்பியம். அங்ஙனம் எழுவாயாய் நிற்கும் பொருள் விகாரமின்றி நிற்றலின் அதனைப் முதல் வேற்றுமை என்பர் நூலோர். முதல் வேற்றுமைக்குரிய குறியீடு ‘ பெயர் ’ என்பதாகும்.

எழுவாயாகத் தோன்றிய பெயர்வேற்றுமையானது காத்தல் ஒத்தல் ஊர்தல் முதலாய ஒருசார் வினைகட்கு உரியதாகும் நிலை இரண்டாம் வேற்றுமையாகும். இஃது ஐகாரவேற்றுமை எனக் குறியீடு பெறும். பொருளான் அதனைச் செயப்படுபொருள் வேற்றுமை என்ப. செயப்படுபொருளாதற்குக் கருவியாக வரும் நிலை மூன்றும் வேற்றுமையாகும். அது பிறிது பொருளைத் தன்பாற் கொள்ளும் நிலை நான்காம் வேற்றுமையாகும். தன்னை அளவையாகவைத்துப் பிறிதொரு பொருளை உறழ்ந்து கூறற் குரித்தாய் நிற்கும் அந்நிலை ஐந்தாம் வேற்றுமையாகும். அஃது ஒருபொருளுக்கு உரிமையாக நிற்கும் நிலை ஆறாம் வேற்றுமை யாகும். அப்பெயர் ஒன்றன் செயல் நிகழ்தற்கு இடமாகக் குறிக்கப் படும் நிலை ஏழாம் வேற்றுமையாகும். படர்க்கைப்பெயர்ப் பொருள் முன்னிலைப் பொருளாக மாறும் நிலை எட்டாம் வேற்றுமையாகும்.

பெயர்ப்பொருள் எய்தும் வேறுபாடுகள் யாவும் இவ் எட்டனுள் அடங்குமாறும் இவற்றுள் ஒன்றனைப் பிறிதொன்றனுள் அடக்க இயலாதவாறும் ஆய்ந்துணர்ந்து கொள்க. இடைக்கால ஆய்வாளர் சிலர் ஐந்தாம் வேற்றுமையை நீக்கிவிடலாம் அதனை ஏழாவதனுள் அடக்கலாம் என்பர். அவரெல்லாரும் வேற்றுமை என்பதன் தத்துவத்தை ஓர்ந்துணர்ந்தாராகக் கருதுதற்கில்லை. மேலும் இவ் எட்டு வேற்றுமைகளும் வடநூலைப் பின்பற்றி அமைத்துகொள்ளப் பெற்றவை என்பார் ஒருசாரார். வடநூலார் கூறும் “விபத்தி” என்னும் கொள்கைக்கும் தமிழ் நூலார் கூறும் வேற்றுமை என்னும் கொள்கைக்கும் உள்ள அடிப்படை வேறுபாடுகளை அவர் கருதிஞரில்லை. இவைபற்றி இந்நூலுரையுள் ஒரு சிறிது விளக்கப் பட்டுள்ளது. விரிவான விளக்கம் தனிக்கட்டுரையுள் கண்டுகொள்க.

இவ்வேற்றுமை மரபுகளை இவ் ஆசிரியர் எண்ணு முறை யானும், உருபுகளின் பெயரானும், பொருளானும் குறியீடு செய்து மூன்று இயல்களான் விளங்க உணர்த்துகின்ருர். ஆரும்வேற்றுமை

ஒழிந்த ஏனையவை வினைகாரணமாக வேறுபடுவன. அதனால் முற்றுவினை இவ்வேற்றுமைப் பொருள்களை அடிப்படையாகக் கொண்டு நிற்கும். இதனை

வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலம் கருவி யென்றா
இன்னதற்கு இதுபய னாக என்னும்
அன்னமரபின் இரண்டொடுந்தொகைஇ
ஆயெட்டென்ப தொழில்முதன் நிலையே

(வேற்றுமை மயங்கியல்-29)

எனத் தொல்காப்பியம் புலப்படுத்துகின்றது.

1) முதல் வேற்றுமை: என்பது எண்ணான் எய்திய பெயர். பெயர் வேற்றுமை என்பது உருபான் எய்திய பெயர். எழுவாய் வேற்றுமை என்பது பொருளான் எய்திய பெயர். இது வினையையும் பெயரையும் பயனிலையாகக் கொண்டு முடியும். இது தனிச் சொல்லாயும் தொகைச் சொல்லாயும் தொகை மொழியாயும் வரும். இப் பெயர்வேற்றுமையே ஏனைய வேற்றுமைகளை எய்தும். எய்துங்கால் அவ்வவ்வுருபுகளை ஏற்கும்.

2) இரண்டாம் வேற்றுமை: என்பது எண்ணான் அமைந்த பெயர். ஐகார வேற்றுமை என்பது உருபானமைந்த பெயர். செயப்படு பொருள் வேற்றுமை என்பது பொருளானமைந்த பெயர். இதனை "எவ்வழிவரினும் வினையே வினைக்குறிப்பு அவ்விரு முதலிற் றோன்றும்" என்பார் ஆசிரியர்.

3) மூன்றாம் வேற்றுமை: என்பது எண்ணான் வருபெயர். ஒடு வேற்றுமை என்பது உருபான்வருபெயர். கருவிவேற்றுமை என்பது பொருளான்வருபெயர். கருவி, காரணம் ஏது என்பவை ஒரு பொருட்கிளவிகள். எனினும் தம்முள்சிறிது வேறுபாடுடையவை யாகும். அதனுன் ஏதுப்பற்றி வரும் மூன்றும் வேற்றுமை இன் ஆன் என்னும் சொல்லுருபுகளை மாற்றுருபாகப் பெற்றுவரும் என்கின்றது தொல்காப்பியம். இதனை "இன் ஆன் ஏது ஈங்கென வருஉம் அன்னபிறவும் அதன் பால" என்று விளக்குகின்றது.

தமிழ் இலக்கணத்திற்கு வடமொழி இலக்கணமே வழிகாட்டி என்றும் மூலம் என்றும் பிழையாக உணர்ந்த இடைகாலத்தாரும் உரையாசிரியன்மாரும் தமிழ்மரபையும் தொல்காப்பிய நெறியையும் நடுவுநிலையொடு நோக்காமல் மூன்றாம் வேற்றுமைக்கு மூன்று பொருள் உண்டு எனக்கூறிச் சென்றனர். ஆசிரியர் அது வினை

நிகழ்தற்குரிய அடிப்படையாகும் கருவி என்னும் ஒரு நிலைமட்டுமே என்பது விளங்க. "வினைமுதற்கருவி அனைமுதற்றதுவே" என்று கூறியதனை ஓராமல் வடமொழியின் தாக்கத்தான் வினைமுதலும் கருவியும் எனப்பிரித்து மயங்கினர். அவ்வாறே மூன்றாம் வேற்றுமைக் கருவியாதற்குரிய பொருள் பலவற்றுள் "அதனொடு இயைந்த ஒரு வினைக்கிளவி" என்னும் காரணத்தை உடனிகழ்ச்சிப் பொருள் என அமைத்துக் கொண்டனர்.

ஒன்றற்கு மேற்பட்ட பொருள்களை ஒரு எண்ணிக்கையாகக் கூறுதலும் ஒரு வேறுபாட்டினை இரண்டு வேற்றுமைகளுக்கு உரிய தாகக் கூறுதலும் அறிவியலுக்கு முரணாவதை அவர் கருதிலர். கருதாமைக்குக் காரணம் தமிழ் இலக்கணம் வடமொழி மரபைப் பின்பற்றியது எனக்கொண்டமையேயாகும்.

அவ்வாறே ஆசிரியர் ஐந்தாம் வேற்றுமைக்குரியதாக "இதனின் இற்றுஇது" என ஒரு பொருளே கூறியிருப்பவும் அதற்கு மாறாக ஏதுப் பொருளையும் 'இன்' என்னும் உவமஉருபுபற்றி வரும் இரண்டாம் வேற்றுமைக்குரிய வினைகளுள் ஒன்றாகிய ஒப்புப் பொருளையும் உறழ்ச்சியுள் ஒருவகையாகிய எல்லையையும் ஐந்தாம் வேற்றுமைப் பொருளாகக் கூறிச் சென்றனர்.

வடமொழிக்கு மாறாக வேறாகத் தமிழிலக்கணம் இருத்தல் இயலாது, இருத்தால் கூடாது என்னும் அழுத்தமான எண்ணம் காரணமாக விளைந்த தடுமாற்றங்களே இவ்வேறுபாடுகளுக்கு ஏது எனலாம். தொல்காப்பிய அமைப்பையும் நெறியையும் நடுவு நிலையோடு நோக்கின் வடமொழியாளர் கூறும் வேற்றுமைக் கொள்கையினின்று தமிழ்மொழியாளர் கொள்கை வேறுபட்ட தென்பது விளங்கும்.

4) நான்காம் வேற்றுமை: என்பது எண்பற்றிய பெயர். குவ்வேற்றுமை என்பது உருபுபற்றிய பெயர். கோடற்பொருள் வேற்றுமை என்பது பொருள்பற்றிய பெயர். இது பெரும் பான்மையும் வினையையும் சிறுபான்மை பெயரையும் கொண்டு முடியும்.

5) ஐந்தாம் வேற்றுமை: என்பது எண்ணான் அமைந்த பெயர். இன் வேற்றுமை என்பது உருபான் அமைந்த பெயர். "இதனின்இற்று இது" எனவரும் உறழ்ச்சியாகிய அளவை இதன் பொருள். இடைக்காலத்தார் இதனை எல்லைப் பொருள் வேற்றுமை என்பர். அவ்வாறு கூறுதல் குன்றக் கூறுதலாமாகலின் தொல்லாசிரியன்மார் வாய்பாடே கூறிச் சென்றனர். இது வினை கொண்டு முடியும் இயல்பினது. எல்லைபற்றி உறழுங்கால் பெயர் கொண்டு முடியும்.

6) ஆறாம் வேற்றுமை : என்பது எண்ணான் எய்திய பெயர். "அது" வேற்றுமை என்பது உருபான் எய்திய பெயர். கிழமைப்பொருள் வேற்றுமை என்பது பொருளான் எய்திய பெயர். இது பெயர்கொண்டு முடியும். ஆறாம் வேற்றுமைத் தொடரை விரிக்குங்கால் அதன் வினைத்தன்மை வெளிப்படுதலன்றி வினை கொண்டு அது முடியாது.

ஆறாம் வேற்றுமைக்கு வடமொழி உணர்வு காரணமாக அகரம் பன்மையுருபு என உரையாசிரியன்மார் வலிந்து கூறுவர். பால் காட்டும் இறுதிஇடைச் சொற்களல்லாத ஏனைய இடைச்சொற்களும் உருபிடைச் சொற்களும் ஒருமைபன்மை காட்டுதல் தமிழ் இலக்கண நெறியன்று. பிறவிளக்கங்களை உரையுள் கண்டுகொள்க.

7) ஏழாம் வேற்றுமை : என்பது எண்பற்றிய பெயர்—கண் வேற்றுமை என்பது உருபுபற்றிய பெயர். இடக்குறிப்பு வேற்றுமை என்பது பொருள்பற்றிய பெயர். இது பெரும்பான்மையும் வினை கொண்டு முடியும். சிறுபான்மை பெயர் கொண்டு முடியும்.

இவ்வேற்றுமைகளுள் பெயர் கொண்டும் முடியும் என்றவை எல்லாம் விரித்துணர்த்துங்கால் வினையொடு கூடிமுடியும்.

8) எட்டாம் வேற்றுமை : என்பது எண்பற்றிய பெயர். இதற்குத் தனி உருபு இல்லை. பெயர்நிலைகளே உருபின் தன்மையைக் காட்டி நிற்கும், விளிவேற்றுமை என்பது பொருள் பற்றிய பெயர். இது பெரும்பான்மையும் வியங்கோள் வினையும் ஏவல்கண்ணியவியங்கோள் வினையும் கொண்டு முடியும்.

எட்டு வேற்றுமைகளுள் தமக்கென உருபுடையவை ஆறே யாதலின் முதல் வேற்றுமையும் எட்டாம் வேற்றுமையும் புணர்ச்சி இலக்கணங் கருதிய தொடர்மொழியமைப்பின்கண் அல்வழியுள் அமையும்.

தமிழ் நூலார் பொருள் வேறுபாட்டினை அடிப்படையாகக் கொண்டு வேற்றுமைகளை வகுத்துக்கொண்டமையின் உருபுகள் தடுமாறிவரின் உருபுகளை நோக்காமல் பொருளை நோக்கியே வேற்றுமை உணரப்படும் என்பர். அதனான் உருபுகள் தடுமாறி வரும் நிலையை உருபுமயக்கம் என்று கூறி அவை எவ்வெவ்வாறு தடுமாறி வரும் என்பதனையும் விளக்கினர். மற்றும் வேற்றுமை நிலையை எய்துவிக்கும் பொருள்களுள்ளும் சில தடுமாறி வரும் சில பொருட்கள் இரண்டு மூன்று வேற்றுமைகளைக் கொள்ளும் நிலையை உடையன. இவற்றையெல்லாம் வேற்றுமை மயங் கியலின்கண் விளக்குகின்றது தொல்காப்பியம். இம்மயக்கத்தின்

நுட்பங்களை ஓராமல் உரையாசிரியன்மார் பல இடங்களில் நெறி தடுமாறி விளக்கங்கூறிச் சென்றுள்ளனர். அவற்றை ஓரளவிற்கு வேற்றுமை மயங்கியலுரையுள் கண்டு கொள்க. எழுவாய் வேற்று மையின் மயக்கமே ஆகுபெயர் என்னும் வகையாகும். ஆதலின் ஆகுபெயர் இலக்கணத்தை இவ்வாசிரியர் வேற்றுமைமயங்கியலுள் விரித்தோதுகின்றார். இதுபற்றிய விளக்கம் பின்னர்க் கூறப்படும்.

**வினைச் சொல் :**

வினைப் பெயர் வேறு, வினைச் சொல் வேறு. வினைப்பெயர் எனினும் தொழிற்பெயர் எனினும் ஒக்கும். தொழிற் பெயர்கள் தொழில் வேறுபாடுகளை உணர்த்தும் குறியீட்டுப் பெயர்களாகும். அவை, தல் அல் கை முதலாய விகுதிபெற்று நிற்குங்கால் ஐயமின்றிப் பெயர் என்பது விளங்க நிற்கும். விகுதியின்றி உண் தின் செல் கேள் பார் என முதனிலையளவில் நிற்குங்கால் அவற்றைப் படுத்த லோசையாற்கூறின் அவை பெயர்களாம். முன்னிலைப் பொருளை நோக்கி எடுத்தலோசையாற்கூறின் வினைச் சொற்களாம்.

வினைச்சொற்கள் எல்லாம் தொழிற்பெயரின் அடிப்படையிலும் ஏனைப் பொருட்பெயர் குணப்பெயர் முதலாயவற்றின் அடிப் படையிலும் தோன்றும், தொழிற்பெயர் அடிப்படையிற்றோன்றும் வினைகள் புடைபெயர்ச்சியுடையனவாகலின் காலந் தெற்றெனப் புலப்பட நிற்கும். அவற்றைத் தெரிநிலை வினை என்பார் உரை யாளர். ஏனைய பெயர்களின் அடிப்படையில் தோன்றுவன வெல்லாம் பொருளின் தன்மை இயல்புகளை விளக்கி நிற்றலின் காலந் தெற்றெனப் புலப்படாமல் குறித்துக்கொள்ளும் நிலையில் நிற்கும். அதனான் அவற்றைக் குறிப்பு வினை என்பர் நூலோர்.

காலம் உணர்த்துதல் வினைச்சொல்லுக்குச் சிறப்பிலக்கண மாதலின் அதனைக் காலக்கிளவி என்னும் பெயரானும் வழங்குவர். வினைச்சொல் பெயர்ப்பொருளை வேற்றுமை செய்யும் கருவி யாதலின், அது வேற்றுமையடையாது, உருபேற்காது. உருபேற்பின் பெயருள் ஒருவகையாகிவிடும். இதனை

> வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
> நினையுங் காலைக் காலமொடு தோன்றும் (வினை-1)
> [என்றும்
>
> பெயர்நிலைக் கிளவி காலந் தோன்றா
> தொழில்நிலை ஒட்டும் ஒன்றலங் கடையே (வேற்—9)

என்றும், ஆசிரியர் விளக்குவர். இவ்வகையை வினையாலணையும் பெயர் என்பர்.

குறிப்புவினைச் சொற்கள் ஒரு பொருளின் பொருளுரிமை இடஉரிமை பற்றியும் நிறம், குணம், முதலிய பண்புபற்றியும் ஒப்பிட்டுக் கூறும் நிலை பற்றியும் தோன்றும். அவை பொன்னன், கண்ணன், மலையன், ஊரன், ஆதிரையான், ஓணன், கரியன், நெடியன். நல்லன், தீயன், அன்னன், இன்னன் எனவரும். இத்தகையன மூன்று காலத்திற்கும் பொதுவாக நின்று கூறுவோனது குறிப்பான் ஒருகாலத்திற்குரியவாய் அடங்கும். இக் குறிப்பு வினைகள் பெயர்நிலைமை எய்தி உருபேற்பின் அவை குறிப்பு வினையாலணையும் பெயர் எனப்படும்.

எனவே, பொன்னன் என்னும் ஒரு சொல் பொருட்பெயராயும் (இடுபெயர்) குறிப்புவினைமுற்றாயும், வினையாலணையும் பெயராயும் வருதற்கு ஒக்குமாகலின் இடமும் காலமும் கூறுவோனது குறிப்பும் நோக்கி அவற்றை வரையறை செய்து கொள்ளல் வேண்டும். குறிப்புவினைமுற்று வினையாலணையும் பெயராதற்கண் காரணப் பெயராகிவிடும்.

தெரிநிலையும் குறிப்புமாக வரும் இவ்வினைச் சொற்களும் உயர்திணைவினை, அஃறிணைவினை இருதிணைக்கும் பொதுவாய் நிற்கும் விரவுவினை, என மூவகையாக அமையும். பொது வினைகள் முன்னும் பின்னும் வரும் சிறப்புப் பெயர் சிறப்பு வினை களான் பொதுமைநீங்கி இருதிணையுள் ஒன்றன்பாற்பட்டு அடங்கும்.

தெளிவாகத் திணைபாலுணர்த்துவன தன்மைவினையும் படர்க்கை வினையுமாம். முன்னிலைவினை வியங்கோள்வினை, வினையெச்சவினை இன்மை உணர்த்தும் வினைச் சொல், வேறு என்னும் வினைச்சொல், செய்ம்மன என்னும் வாய்பாட்டு முற்று வினைச்சொல் செய்யும் செய்த என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சக் கிளவிகள் ஆகிய இவை இருதிணைக்கும் பொதுவாய் வரும். இவற்றுள் முன்னிலைவினை ஒருமைப்பால் பன்மைப்பால் உணர்த்தும்.

வியங்கோள்வினை சொல்லமைப்பான் படர்க்கைச் சொல் லாகவே நின்று இருதிணை ஐம்பாலினும் மூவிடத்தும் வரும், யான் வாழ்க, நீ வாழ்க, அவன் வாழ்க, அவள் வாழ்க, அவர் வாழ்க, அது வாழ்க, அவை வாழ்க என வாழ்க என்பது வடிவு ஒன்றுபட்டுப் படர்க்கைச் சொல்லாயே நிற்கும். தன்மைச் சொல் லாகவும் முன்னிலைச் சொல்லாகவும் திரிந்து நில்லாது. அதனான்

"தன்மை முன்னிலை ஆயீ ரிடத்தொடு
மன்னா தாகும் வியங்கோட் கிளவி"

என ஆசிரியர் அதன் சொல்லமைப்பைத் தெளிவுபடுத்தினார். இச்சூத்திரத்தின் செம்பொருளை ஓர்ந்துணராத உரையாசிரியன்மாரும் அவர் உரைவழி மயங்கிய ஆய்வாளர் பலரும் வியங்கோட் பொருள் தன்மைக்கும் முன்னிலைக்கும் வராதென விபரீதப் பொருள் கொண்டு தம்முள் முரண்பட விளக்கங்கூறிச் சென்றனர்.

வினையெச்சம் பெயரெச்சம் என்பவை முற்றி நில்லாத குறைச் சொற்களாகும். அஃதாவது பாலுணர்த்தும் இறுதி இடைச்சொல் குறைந்து நிற்பனவாம். அவை முறையே பிறிதொரு வினை முற்றொடும் பெயரொடும் சென்று முடிவுறும். வினை எச்சம் என்பது வினைமுற்றின் குறை வடிவம். பெயரெச்சம் என்பது வினையாலணையும் பெயரினது குறைவடிவம்.

வினையெச்சம் காலமுணர்த்தும் நிலைமையானும் காரண காரியமுறைமையானும் செய்து, செய்பு, செய்யூ, செய்தென, செய்யியர், செயின், செய, செயற்கு, என வாய்பாட்டு முறையானும், முன் பின் கால் கடை வழி இடத்து என்னும் இறுதிநிலை இடைச்சொல் முறையானும் வகுத்து ஓதப்படுகின்றது. வினையெச்சத்தை முடிக்கும் சொல் வினைமுற்றாயும் பிறிதொரு எச்ச வினையாயும் இருக்கும். சிறுபான்மை ஆக்கச் சொல்தொக்க தொழிற்பெயராயுமிருக்கும்.

பெயரெச்சம் காலமுணர்த்தும் நிலையான் செய்யும், செய்த என்னும் இருவகை வாய்பாட்டு முறையில் வரும். செய்யும் என்பது நிகழ்வு எதிர்வு என்னும் இருகாலத்திற்கும் உரித்தாகவரும். செய்த என்பது இறந்தகாலமுணர்த்திவரும். செய்யுமென்னும் முற்றும் செய்யுமென்னும் எச்சமும் வேறுவேறாகும். முற்றுச்சொல் தன்மை, முன்னிலை பல்லோர் படர்க்கைக்கண்வாராது. எச்சம் யாண்டும் வரும். பிற விளக்கங்களை உரையுட் கண்டு கொள்க.

விரைவு தெளிவு இயற்கை ஆகிய நிலைபற்றிச் சொல் நிகழ்த்துங்கால் தம் பொருள்திரிபுறாமல் வினைமுற்றுச் சொற்கள் காலம் மயங்கியும் வரும். முற்றுவினைகள் எச்சமாகவும் வரும். வினைஎச்சச்சொல் பல்வேறு குறியினதாகவரும். வினைமுற்றுக்கள் காலமும் இடமும் நோக்கி ஒவ்வொன்றும் ஆறுவகைப்படும்.

வினைச் சொற்கள் யாவும் பெயரைக் கொண்டே முடியும் மாரிற்று வினைமுற்றும் செய்கு என்னும் வாய்பாட்டு வினைமுற்றும் வினையொடும் முடியும்.

**இடைச்சொல் :**

இடைச்சொற்கள் பெயர் வினைகட்கு உறுப்பாயும் அவற்றைச் சார்ந்தும் அவற்றிற்கு அடையாயும் வரும். சில பெயர்ப் போலியாயும் வினைப்போலியாயும் வரும். அன் ஆன் முதலிய இறுதி இடைச் சொற்கள், மலையன், சேரமான், உண்டனன், நடந்தான் எனப்பெயருக்கும் வினைக்கும் பொதுவாயும் உறுப் பாயும் வந்தன. நடந்தனன் என்பதில் அன் சாரியையாக வந்தது. அதன்கண் 'ந்த்' காலஇடைநிலையாக நின்றது. பொன்னனை, பொன்னனொடு என வேற்றுமை உருபாயும் கொன்னூர், வருகதில். அவனே செய்தான் என முன்னும்பின்னும் அடையாகவும் வந்தன. மதிபோலும் முகம், புலியன்ன பாய்ச்சல் என உவம உருபுகளாக வினைப் போலியாக வந்தன. பிறபொருள் பற்றி ஆங்கு அங்ஙனம் எனப்பெயர்ப் போலியாக வந்தன. [ போலி = போன்று ]

இவற்றுள் அடையாகவும் பெயர்ப்போலி வினைப்போலியாகவும் வருவன தனிப்பொருளுடையன, எனினும் அவை பெயர் வினைகளைச் சார்ந்தன்றித் தனித்து வாரா. பெயர்ப் போலிகள் தனித்துவரின் அவை பெயர்ச் சொல்லாக ஆக்கம் பெற்றனவாகும்.

இவ் இடைச்சொற்கள் ஓர் எழுத்தாயும் அசையாயும் சொல்லாயும் வடிவுற்று நிகழும். இடைச் சொற்களை ஆசிரியர் ஏழு வகையாகப்பிரித்து அவற்றின் இயல்புகளைப் புலப்படுத்து கின்றார்.

பெயரும் வினையும் சொல்லாகியும் சொற்றொடராகியும் பொருள் வேறுபாடுகளை உணர்த்துதற்குத் துணைபுரிவன இடைச் சொற்களேயாம். சொற்கள் பல்வேறு நிலையினவாகிக் குறிப்புப் பொருள் உணர்த்துதற்குத் துணைபுரிவனவும் இடைச்சொற்களே ஆகும். அதனான் 'இடைச் சொல்லெல்லாம் வேற்றுமைச் சொல்லே'' என்று விளக்குகின்றது தொல்காப்பியம். பிறவிளக் கங்களை எழுத்ததிகாரப் புணரியலுரையுள்ளும் சொல்லதிகாரத்து வேற்றுமையியல் இடையியல் உரியியல் உரைகளுள்ளும் கண்டு கொள்க.

**உரிச்சொல் :**

குறைச் சொற்களாகிய வேர்ச் சொற்கள் நிரம்பிப் பெயராகவும் வினையாகவும் ஆக்கமுறாமல் பெயர்ப்போலியாயும் வினைப் போலியாயும் உருப்பெற்றுப் பெயர்வினைகட்கு அடையாயும் தனித்தும் வரும். விரிவான விளக்கத்தை உரியியல் உரையுட் கண்டு கொள்க.

### இயற்சொல்—திரிசொல்—திசைச்சொல்—வடசொல்

இவற்றைச் செய்யுளீட்டச்சொல் என்பார் தொல்காப்பியர். உரையும் பாட்டுமாக நிகழும் எழுவகைச் செய்யுளும் எழுத்து மொழி இலக்கியமாக நிகழுங்கால் வட்டார வழக்கும் அயல்மொழி வழக்கும் பற்றிப் பெயர்ச்சொல் முதலாய நால்வகைச் சொல்லையும் வகைப்படுத்தி அறிந்துணர்தற்கும் இலக்கியங்களைப் படைத்தற்கும் உரிய நெறியை விளக்குதலே இப்பாகுபாட்டின் கருத்தாகும்.

இவற்றுள் முதல் மூன்றும் தமிழ் மொழிக்கே உரிய சொற்கள். வடசொல் என்பது தமிழுக்கும் ஆரியத்திற்கும் பொதுவான எழுத்துக்களானமைந்த இருமொழிக்கும் உரிய பொதுச் சொற்களும், சிறுபான்மை ஆரியத்திற்கே உரிய சொல்லைத் தமிழ் எழுத்துக்களால் அமைந்துக் கொள்ளப்பட்ட சொற்களுமாம்.

இங்ஙனம் வட சொற்களையும் இலக்கியத்திற் சேர்த்துக் கொள்ளப்பெற்றமைக்குக் காரணம் அவற்றின் மூலப்பகுதி தமிழாக இருத்தலானும் வானியற்கலையையும், சமய மெய்ப்பொருள் கல்வியையும் இருமொழியாளரும் பொதுவாகக் கொண்டமை யானுமாம். அதனான் இந்நூலுள்ளும் சூத்திரம், அதிகாரம், காண்டிகை, உத்தி, ஆதி, அந்தம் முதலிய சொற்களை ஆசிரியர் வழங்குவாராயினார். நாட்பெயர் திங்கட் பெயர் முதலியனவும் அம்முறைமையான் அமைந்தனவேயாம், பிற விளக்கங்களை எச்சவியலுரையுட் கண்டு கொள்க.

### வெளிப்படைச் சொல்—குறிப்புச் சொல் :

மேற்கூறிய செய்யுளீட்டச் சொல் நான்கும் வெளிப்படை, குறிப்பு என இருநிலைமையவாய்ப் பொருளுணர்த்தும். இதனைத்

" தெரிபு வேறு நிலையலும் குறிப்பிற்றோன்றலும்
இருபாற்றென்ப பொருண்மை நிலையே " (பெய—3)

என விளம்புவார் ஆசிரியர்.

மொழி என்பது மக்கள் தம் கருத்துக்களையும் உணர்வு களையும் வெளிப்படுத்தும் கருவியாகும். சிலகருவிகளைக் கொண்டு பல்வேறு பொருள்களை ஆக்கிக் கொள்ளுதல் போலச் சில சொற்களைக் கொண்டே மக்கள் தம் சிந்தனையைப் புலப்படுத்தும் திறனைப் பெற்றுள்ளனர். அதனான் ஒரு சொல் இடத்திற்கும் சூழ்நிலைக்கும் ஏற்பப் பல்வேறு பொருள்களை உணர்த்தும் மரபினைப் பெற்றுவிடுகின்றது. அம்முறைமையான்

வெளிப்படைச் சொற்களினும் குறிப்புச் சொற்கள் மல்கி நிற்கின்றன. சொற்கள் குறிப்புப் பொருள்தருங்கால் பெரும் பான்மையும் இணைந்தும் தொடர்ந்தும் நின்றே உணர்த்தும். சிறுபான்மை தனித்து நின்றுணர்த்தும். வெளிப்படைப் பொருள் தரும் சொற்களாவன. இருதிணைப்பொருள் பற்றியும் அவற்றின் தொழில் தன்மை இயல்பு முதலாயின பற்றியும் முதற்கண் தோன்றிய நிலையில் பெற்ற அப்பொருளையே பற்றி நிற்பனவாம். குறிப்புப் பொருள் தரும் சொற்களாவன: வெளிப்படைச் சொற்களே மேலும் மேலும் ஒப்புமையாக்கத்தான் விரிந்துவந்தனவும் முன்னும் பின்னும் நிற்கும் சொற்களான் வேறுபடுவனவும் கூறுவேனது குறிப்பான் அமைவனவும் அவ்வாறு வரும் பிறவுமாம்.

சொற்கள் குறிப்புப்பொருள் பயக்கும் முறைகளை ஆசிரியர் சொல்லதிகாரத்தின் கண்ணும் பொருளதிகாரத்தின் கண்ணும் விரிவாக விளக்குகின்றார். சொல்லதிகாரத்துள் கிளவியாக்கம் முதலாய ஒன்பது இயல்களுள்ளும் இலக்கணமுறைமையானும் மரபுநெறியானும் அமைத்துக்கூறுகின்றார்.

அவையாவன: ஒருவரோடொருவர் செப்பும் வினாவுமாக உரை நிகழ்த்துங்கால், செவ்வனிறையாகாமல் இறை பயப்பதாக வருவனவும் ஒருவரையும் ஒன்றனையும் பன்மை வாய்பாட்டான் கூறும் உயர்சொற்கிளவிகளாகவருவனவும் அல்லதில் என்னும் வாய்பாட்டாற் கூறுவனவும் பிறிதுபொருள் கூறி உணர்த்துவனவும், பொருளொடு புணராச் சுட்டுப் பொருள் உணர்த்தி வருவனவும், மற்றும் ஒருசார் பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் சார்பு முதலிய வற்றான் திணையும் பாலும் உணர்த்தி வருதலும், பலபொருளொரு சொற்கள் வேறுபடுவினையானும் இனத்தானும் சார்பானும் பொருள் வரைந்துணர்த்தலும், எடுத்தமொழி இனஞ்சுட்டி வருதலும் பெயரினும் தொழினும் தாமாகப் பிரிந்து பொருள்பயத்தலும் தடுமாறு தொழிற் பெயர்கள் ஒன்றனை வரைந்துணர்த்தலும் தத்தம் பொருள்வயின் தம்மொடுசிவணியும் ஒப்பில்வழியாற் பிறிது பொருள் சுட்டியும் வரும் பல்வேறு ஆகுபெயர்கள் பொருளுணர்த்தி வருதலும் சிறப்புப் பெயர் சிறப்புவினைகளான் அஃறிணை இயற் பெயர் பால்காட்டி நிற்றலும், செய்யும் என்னும் வாய்பாட்டு ஒருசார்வினைமுற்றுக்கள் உயர்திணை உணர்த்தி நிற்றலும் பால்காட்டி நிற்றலும் விரவுப் பெயர்கள் முன்னும் பின்னும் வரும்

சிறப்புப் பெயராகச் சிறப்பு வினைகளாகத் திணைகாட்டி நிற்றலும் பால் காட்டி நிற்றலும் திணையொடு பழகிய அஃறிணை இயற்பெயர் உயர்திணை உணர்த்தி வருதலும் குறிப்பு வினைச் சொற்கள் ஒரு காலத்தை உணரநிற்றலும் விரவு வினைகள் சார்பினான் ஒரு திணைக்குரியவாய்ப் பொருளுணர்த்தி நிற்றலும் விரைவு தெளிவு பற்றிக் காலம் பிறழ்ந்து நிற்பினும் வினைச்சொற்கள் உரிய காலத்தை உணர்த்தி நிற்றலும், மன், தில், கொன் முதலாகத் தத்தம் பொருளவாய் வரும் இடைச் சொற்கள் இடம் நோக்கி வேறு வேறு பொருள் உணரநிற்றலும் பலபொருள் உரிச்சொற்கள் சார்ந்த சொல்லான் ஒருபொருளை வரைந்துணரநிற்றலும், செய்யுள் விகாரமாய் அமைந்த சொற்கள் செம்பொருள் உணர்த்தி நிற்றலும் அன்மொழித்தொகை பொருளை வரைந்துணர்த்துதலும், வாராமரபினவும் என்னாமரபினவும் பொருள் தெரியநிற்றலும், சொல்லெச்சமும் குறிப்பெச்சமும் இசையெச்சமுமாகி வரும் சொல்லும் சொற்றொடரும் வேண்டப்படும் பொருள் பயந்துநிற்றலும் பெயர் நிலைக்கிளவிகளும் திசைநிலைக்கிளவிகளும் தொன்னெறி மொழிவயின் ஆகிவருவனவும் மந்திரப் பொருள்வயின் ஆகிவருவனவும் பிறவும் கூறுவோன் குறித்தபொருளைப் பயந்து நிற்றலும் வினையெச்சம் வடிவு வேறுபட்டு நிற்பினும் உரிய பொருளைக் கொள்ள நிற்றலும் முன்னத்தான் பொருளுணரவரும் சொற்கள் அப்பொருள் பயந்து நிற்றலும், பொருளதிகாரத்துள் அஃறிணைப் பொருள்கள் கேட்குநபோலவும் கிளக்குநபோலவு மாகி வருவனவும், உள்ளுறையும், இறைச்சியுமாக வருவன திணைக்குரிய பொருளை வரைந்துணர்த்தலும் பிறவும் குறிப்பாற் பொருளுணர்த்துவனவேயாம்.

வெளிப்படையாகவும் குறிப்பாகவும் பொருளுணர்த்துவன தனிச் சொல்லாயும், தொகை மொழியாயும் சொற்றொடராயும் அமைந்துநிற்கும். ஆகலின் அவை பற்றிய சிறு குறிப்புகள் பின்வருமாறு.

மொழி—சொல்—கிளவி: எழுத்தை அளவையாகக் கொண்டு வகுக்கப்பெறுவது மொழி. அது ஓரெழுத்தொருமொழி, ஈரெழுத் தொருமொழி இரண்டிறந்திசைக்கும் தொடர்மொழி என எழுத் ததிகாரத்துள் உணர்த்தப்பெற்றது. அம்மொழிகளே நால்வகைச் சொல்லாகவரும். சொல் என்பது பொருள் பயக்கும் இலக்கணத்தை அளவையாகக் கொண்டு வகுக்கப்பெறுவது. அது பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் எனப் பெயரியலுள் ஓதப்பட்டது. இலக்கியநோக்கில் வகுக்கப்பெறுவது இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்னும் பிறிதொருவகை.

இவற்றுள் பெயர்ச்சொல் முதலிய நான்கின் அடிப்படையில் தொகை மொழி—தொகைச்சொல், சொற்றொடர் என்பவை அறிந்துணரப் பெறும்.

கிளவி என்பது பொருள்தரும் நிலையில் கிளக்கப்படுவன யாவுமாம். ஓர் எழுத்தினை மொழிப்படுத்துக்கூறினும் கிளவியாம். தனிச்சொல் முதல் சொற்றொடர்த்தொகுதி இறுதியாகக் கூறினும் கிளவியாம்.

## தொகைச் சொல் :

இரண்டு முதலாயச் சொற்கள் தம்முள் இணைந்துநின்று ஒரு பொருளைக் குறித்து நிற்பவை தொகைச் சொல்லாகும். தொகைச் சொற்கள் தம்முள் ஒன்றனை ஒன்று சிறப்பிக்காமல் (ஒன்றற்கு ஒன்று அடையாகாமல்) யாவும் நோக்குடைய ஒரு பொருளையே சிறப்பித்து வரும். தொகைச் சொல்லுள் தனிச் சொற்களேயன்றித் தொகை மொழிகளும் இணைந்து வரும். வரையறை இல்லை. தனிப்பெயராகவும், பெயரொடு வினைச்சொல் கலந்ததாகவும் வரும்.

## தொகை மொழி :

இரண்டு முதலாய சொற்கள் இணைந்து தொக்கு ஒருமொழி போல வரும். வரையறையுண்டு. உம்மைத்தொகையுள் சொற்கள் இரண்டும் இரண்டற்கு மேலும் அமைந்துவரும். ஏனையவை இரண்டே சொற்களான் வரும். இரண்டற்கு மேற்படின் ஒன்றனொடு ஒன்றைத் தொகுத்து இரண்டாகவே கொள்ளப்பெறும். தொகை மொழிகள் பெயராயே தொக்குவரும். உம்மைதொகை ஒழிந்த ஏனையவை ஒரு பொருளையே உணர்த்தும்.

ஏர் உழவன், நிலங்கடந்தான் இவை தொகைச்சொல். பான்மொழி, பொற்றொடி இவை தொகைமொழி. பிறவிளக்கங் களைப் பெயரியல், எச்சவியல் உரைகளுட் கண்டு கொள்க.

தொகைமொழிகள் வேற்றுமைத்தொகை, உவமத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை என ஆறுவகைப்படும். வடமொழியாளர் கூறும் சமாசன் பற்றிய கோட்பாடு வேறு. தமிழ்நூலோர் கூறும் தொகைமொழி பற்றிய கோட்பாடு வேறு. அதனான் தொகையைச் சமாசனோடு ஒப்பிட்டு மயங்கற்க.

இவற்றுள் அன்மொழித்தொகை தவிர்ந்த ஐந்தும் தாமே விரிந்து, தொக்கு நின்ற பொருளை விளக்கும். அன்மொழித் தொகை தான்விரியாது நின்று ஆற்றலாற் பிறிதுபொருளைத்தந்து நிற்கும். இது பிறபொருளுணர்த்தி நிற்பினும் ஆகுபெயராகாது. ஆகுபெயர் வேறு அன்மொழித்தொகை வேறு.

## ஆகுபெயரும் அன்மொழித் தொகையும் :

ஆகுபெயர் என்பது முதலிற்கூறும் சினையறி கிளவி முதலாகத் தன்னொடு தொடர்புடைய பொருளை ஏற்று ஒரு சொல்லாக வரும். சிறுபான்மை ஆகுபெயர் அடையடுத்தும் இருபெயரொட்டாயும் வரும்.

இருபெயரொட்டாக வருங்கால் ஒருசொல் ஆகுபெயர்க்குரிய இலக்கணத்ததாயும் பிறிதொருசொல் ஆகுபெயர்ச் சொல்லிற்கு அடையாயும் வரும். ஒட்டிநிற்கும் இருபெயர்கள் தொகை மொழியாயும் வரும் தொகைச் சொல்லாயும் வரும். அறுபதம் (வண்டு) வகரக்கிளவி (எழுத்து) என்பவை தொகைச்சொல். மதிமுகம் (தலைமகள்) தாழ்குழல் (தலைவி) என்பவை தொகை மொழி. இவற்றுள் பதம், கிளவி, முகம், குழல் என்பவையே ஆகுபெயராகிப் பொருள் தரும். அவையே ஆகுபெயர்ப் பொருளோடு தொடர்புடையனவாய் நிற்கும்.

அன்மொழித்தொகை யாண்டும் இருசொல்லாயே தொக்குத் தொகைமொழியாய் ஒருசொல் நடைத்தாகிவரும். தொக்க இரு சொல்லின்கண்ணும் பொருள் நில்லாமல் பிறிதொருசொற் பொருளைப்பயந்து நிற்கும். அது, வேற்றுமைத்தொகை, பண்புத் தொகை, உம்மைத்தொகைகளுக்குரிய சொற்களின் அடிப்படையிற் பெரும்பான்மையாயும் ஆகுபெயராதற்கேலாத வினைத்தொகை, உவமத்தொகைக்குரிய சொற்களின் அடிப்படையிற் சிறுபான்மையு மாக அமைந்துவரும். பொற்றொடி வெள்ளாடை தகரஞாழல் எனவும் தேன்மொழி, பெய்வளை எனவும் வருவன அன்மொழித் தொகை யாகும். மதிமுகம் தாழ்குழல் எனவருவன அடையடுத்த ஆகுபெயராகும். காரணம் முகம், குழல் என்பவை சினையாக நின்று உடையாளை உணர்த்துதலின் இவை, சினையிற் கூறும் முதலறி கிளவி என்னும் ஆகுபெயராம்.

இனி "அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ" என்னும் திருக்குறளின் உரையுள் பரிமேலழகர் ஆகுபெயர் எனச் சுட்டியுள்ள கனங்குழை என்னும் தொகைமொழி தொல்காப்பிய நெறிப்படி

ஆகுபெயராதற்கேலாமையான் உரையாசிரியன்மாரும் ஆய்வாளர் பலரும் பெரிதும் தடுமாற்றத்திற்காளாய்த் தத்தமக்குத் தோன்றிய வாறெல்லாம் விளக்கந்தந்து மாணாக்கரை மயக்கத்துள் ஆழ்த்தி யுள்ளனர். நன்கு ஆயுங்கால் பரிமேலழகர் கூறிய உரைக் குறிப்பின்படி பாடம் வேறு.° அப்பாடத்திற்குரிய இலக்கணத்தைப் பிழையான பாடத்திற்கு ஏற்றிக் கூற அரசஞ் சண்முகனார் போன்ற பேரறிஞர் சிலர் முயன்று தொல்காப்பிய நெறியையே சிதைத் துள்ளனர். பரிமேலழகர் கொண்டபாடம்,

" அணங்கு கொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழல்
மாதர் கொல் மாலுமென் நெஞ்சு "

என்பதாகும். குழல் என்பது சினையிற் கூறும் முதலறிகிளவிபற்றி வந்த ஆகுபெயராகும். குழல் பிற உறுப்புப் போலாமையின் மாணாக்கர் ஐயங்கொள்வர் எனக்கருதி "கனங்குழல்" ஆகுபெயர் என்றார். கனங்குழல் என்பது அவர்கொண்ட பாட மென்பதனை அடுத்துவரும் "கணங்குழல் என்று பாடமோதிப் பலவாய் திரண்ட குழல்" என்று உரைப்பாரும் உளர்" என்னும் தொடரால் அறியலாம். இற்றைக்கு உள்ளபாடம் "கணங்குழை என்று பாடமோதிப் பலவாய்த்திரண்ட குழை" என்றே உளது 'குழல்' என்பது ஏடெழுதினோரால் குழை எனப்பிழைபடலாயிற்று என்பதனைப் "பலவாய்த்திரண்ட" என்னும் தொடர்புலப்படுத்தி நிற்றலை அறியலாம். காதணியாகிய குழை பலவாகத்திரளுதற்கு எவ்வாற்றானும் இயையாமையறிக. குழை என்பதே பாடம் எனக் கொள்ளின் குழை என்பதற்குக் கூந்தல் (தலைமயிர்க்கற்றை) எனப்பொருள் கொள்ளல்வேண்டும். காதணி என்னும் பொருள் ஒவ்வாது. பிற விளக்கங்களை இக்குறளுரைபற்றிய தனிக் கட்டுரையுட் கண்டு கொள்க. பரிமேலழகரை மறுத்தற்கஞ்சிய ஒரு சாரார் அன்மொழி மேல்வந்த ஆகுபெயர் என்றும் மற்றொரு சாரார் தொகையான் அன்மொழி என்றும் பெயரான் ஆகுபெய ரென்றும் நூல்நெறிக்கு முரணாக அமைதி கூறிச் சென்றனர்.

சொற்றொடர் :

சொற்றொடர் என்பது இரண்டும் இரண்டற்குமேலும் சொற்கள் பொருள்விளக்கந் தருதற்கேற்பத் தொடர்ந்து எழுவாயும் பயனிலையுமாக நிறைதற் கொத்து நிற்கும் சொற்களின் கூட்டமாம். அங்ஙனம் தொடருங்கால் அவை அல்வழியும் வேற்றுமை வழியு மாகிய பொருள் முறைமையோடு தொடரும்.

எச்சம் : அறிவும் உணர்வுமுடையராகிய மக்கள் தம்முள் கருத்துக்களைப் பரிமாற்றிக் கொள்ளுமிடத்தும் நுண்ணிதாக உணர்த்துமிடத்தும் கூறப்படும் கருத்துக்களை எல்லாம் அவற்றிற் குரிய சொற்களான் விரித்துரையாமற் சில கூறி அவற்றான் எஞ்சிய வற்றை உணருமாறு செய்வர். அங்ஙனம் கூறப்பெறாது உணரு மாறு எஞ்சிநிற்கும் சொல்லும் சொற்களும் எச்சமாகும்.

அவ் எச்சங்களைப் பத்துவகையாகப் பிரித்துணர்த்துகின்றது. தொல்காப்பியம். ஒரு சொல் அல்லது சொற்றொடர் எச்சமாகி நிற்குங்கால் — பிறிது—ஒருசொல்லை — சொற்களை அவாவி நிற்பதும், கருத்துக்களை அவாவிநிற்பதும் என இருதிறத்தான் அவை எஞ்சிநிற்கும். பிரிநிலைஎச்சம், வினையெச்சம், பெயரெச்சம், ஒழியிசை எச்சம் எதிர்மறைஎச்சம், உம்மைஎச்சம், எனவென் எச்சம், சொல் எச்சம் ஆயவை சொற்களை எச்சமாகக் கொண்டு முடிபவை.குறிப்பெச்சமும் இசையெச்சமும் கருத்துக்களை எச்சமாகக் கொண்டுவிளக்குபவை. இவற்றின் இயல்புகளை எச்சவியலுரையுட் கண்டு கொள்க. வேர்ச்சொல் பற்றியும், முதனிலைச் சொல்பற்றியும் உரியியலுரையுள் கண்டுகொள்க.

---

# தொல்காப்பியம்

# சொல்லதிகாரம்—காண்டிகையுரை

## முகவுரை :

தொல்லாசிரியர் நிறுத்தமுறையானே இரண்டாவதாகிய 'சொல்' இலக்கணம் பற்றிய மரபுகளை வரைந்துணர்த்தலின் இவ்வதிகாரம் சொல்லதிகாரம் எனப் பெயர் பெற்றது.

இவ்வதிகாரத்துள் ஓரெழுத்தொருமொழி முதலாகத் தோன்றும் சொற்கள் இருதிணைப்பொருளையும் அவற்றின் இயக்கம் முதலாகிய தன்மைகளையும் சுட்டி அவை பெயர், வினை, இடை, உரி என நால்வகையாக ஆக்கம் பெற்று வருமாறும் அவற்றின் இலக்கணம் ஆமாறும் கூறுகின்றார்.

சொல்லானாகும் தொடர்கள் வழுவின்றி ஆக்கம் பெறுமாறும் பெயர்ச் சொற்கள் வேற்றுமை எய்துமாறும் எண்வகை வேற்றுமைகளின் இயல்பும், நால்வகைச் சொற்களின் இயல்பும் அவை செய்யுட் சொல்லாக அமைந்து நிற்குமாறும் அவைதொகையுற்று வருமாறும், பொருள்கோளும் பத்துவகை எச்சமும், பிற மரபுகளும் இவ்வதிகாரத்துட் கூறப்பெறுதலின் சொல்லிலக்கணத்தைக் கிளவியாக்கம் முதல் எச்சவியல் ஈறாக ஒன்பது இயல்களாகப்பகுத்துக் கூறுகின்றார். சொல்லாவது எழுத்தானியன்று தன்னை யுணர்த்தியும், வெளிப்படையாகவும் குறிப்பாகவும் பிறபொருளை உணர்த்தியும் வரும் என்பதனை மொழிமரபு சூ. 12, பெயரியல் சூ. 1, 2, 3 ஆயவற்றால் உணர்த்தினார்.

'சொல்' என்பதற்கு 'நாவால் ஒலிக்கப்பெறும் தொடரிசை' என்பது பொருள் (ச்=நா. ஒல்=ஒலி. ச்+ஒல்=சொல்) பேச்சு (பெய்+சு) என்பதும் அப்பொருளுடைய தாம். இசை, அசை, ஓசை என்பவற்றுள்ளும் சகரம் நாவின் செயல் குறித்து நிற்றல் காண்க.

மொழி, சொல், கிளவி, என்பவை வெவ்வேறு சிறப்புப் பொருளுடையவை எனினும் யாப்பினுள் ஒரு பொருட் கிளவிபோல ஆளப்பெறும். அதிகாரம் என்பதன் பொருள் எழுத்ததிகாரத்துள் விளக்கப் பெற்றது.

## கிளவியாக்கம் :

கிளவியாக்கம் என்புது மூன்றாம் வேற்றுமைத்தொகை. அஃது கிளவியான் ஆகும் ஆக்கம் எனவிரியும். ஈண்டு அஃது அன்மொழித் தொகையாய் ஆக்கம் பற்றிய மரபுகளைக் கூறும் இயலுக்குப் பெயராயிற்று.

'கிளவி' என்பதற்கு நாவினின்றும் கிளைத்தலை உடையது என்பது பொருள். 'கிள்' என்னும் முதனிலைத் தொழிற்பெயர் ஏவற்பொருளுணர்த்தும் அகரத்தொடுகூடிக் ''கிள'' என்றாகிப் பின்னர் உடைமைப்பொருள் தரும் 'இ' என்னும் இறுதி இடைச் சொல்பெற்றுக் ''கிளவி'' என நின்றது.

இச்சொல். சகரக்கிளவி, வகரக்கிளவி என எழுத்தையும் உரையசைக்கிளவி, மாரைக்கிளவி என அசையையும், பெயர் நிலைக்கிளவி, வினையெஞ்சுகிளவி எனச் சொல்லையும், இரு நான்கு கிளவி, தொல்லோர்கிளவி எனச் சொற்றொடரையும் குறித்து வரும். ஆதலின் ஈண்டு அது தனிமொழி, தொகை மொழி தொடர்மொழிகட்குப் பொதுவாக நின்றது.

ஆக்கம் - ஆக்கிக்கொள்ளுதல். அஃதாவது ஒரு பெயரிலிருந்து ஐம்பாற் சொற்களைப் படைத்துக் கோடல். ''செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்'' (கிளவி-20) என்றதனான் அறிக.

இவ்வியலுள் ''னஃகான் ஒற்றே ஆடூஉவறிசொல்'' என்பது முதலாகச் சொற்களை ஆக்கிக் கொள்ளுமாறும். வினையிற் றோன்றும் பாலறி கிளவி .... மயங்கல் கூடா'' (கிளவி - 11) என்பது முதலாகத் தொடர்களை வழுவின்றி அமைத்துக்கொள்ளு மாறும் கூறலின் இது கிளவியாக்கம் எனப்பெயர் பெற்றது.

இச்சொல் ஆ (ஆதல்) என்னும் முதனிலையடியாகப் பிறந்த 'ஆகு' என்னும் ஏவல்வினை 'ஆக்கு' என்னும் பிறவினை யாகிப் பின்னர்ப் பண்புப்பொருள்தரும் அம் என்னும் இறுதி இடைச் சொல்பெற்று 'ஆக்கம்' என நின்றது.

யாதானும் ஒரு சொல்லை இருதிணை ஐம்பாலுள் ஒன்றற் குரியதாக ஆக்கிக்கொள்ளுதலும், செப்பும் வினாவுமாக வரும் தொடர்மொழிகளை வழுவின்றி ஆக்கிக்கொள்ளுதலும் ஈண்டு ஆக்கமாம். சொற்கள் தொடருங்கால் பயனிலையும், தொகை நிலையும் எண்ணு நிலையுமாகத் தொடரும். அவை இயைபும் தகுதியுமாகத் தொடரின் வழாநிலையாம். இயைபின்றித் தொடரின் வழுவாம். இலக்கணவரையறையிற் சிறிது பிறழ்ந்துவரினும் சான் றோர் வழக்காய்ப் பொருள்உணர்ச்சி திரியாமல் மரபாகவருவன வற்றை வழாநிலையாக மேற்கொள்ளுதலும் ஆக்கமாம்.

இனி, இவற்றிற்குப் பண்டை உரையாசிரியன்மாரும் இக்கால ஆய்வாளரும் கூறியுள்ள விளக்கங்களுள் தமிழ் மரபிற்கும் தொல்காப்பியநெறிக்கும் ஒத்தனவும் ஒவ்வாதனவும்பற்றி விளக்கப் புகின் உரை மிகவிரியுமாகலின் அவை அகல உரையுள் ஆராய்ந்து கூறப்பெறும்.

சொற்கள் பொருள்கள்மேலாமாறு உணர்த்தினமையின் கிளவியாக்கம் எனப்பட்டதென்பார் ஒரு சாரார். பிற இயல்களிற்கூறப் பெறுவனவும் பொருள்மேலாமாறே கூறுதலின் அதுபொருந்தாமை யறிக. வழுக்களைந்து சொற்களை அமைத்துக்கோடல் என்பார் ஒருதிறத்தார். வழுவை நீக்கிக்கொள்ளுதல் இலக்கணமுறைமை யாதலன்றி ஆக்கம் (படைப்பு) ஆகாமையின் அதுவும் ஒவ்வு மாறில்லை என்க.

இயற்கையாகிய 'ஓசை' ஒலிகளைக்கொண்டு செயற்கையாகச் சொற்களையும் தொடர்களையும் மக்கள் ஆக்கிக்கொண்டமையின் மொழி என்பது மக்கள் ஆக்கப்பொருளாம். அங்ஙனம் முன்னோர்கள் ஆக்கி மேற்கொண்ட நிலைமையைச்சுட்டி அம்மரபானே சொற்களை ஆக்கிக்கொள்ள வேண்டிய முறைமையைக் கூறுதலே இவ்வியலின் நோக்கமாம்.

எழுத்தியலைத் தொடங்குங்கால் ஆசிரியர் அதனை எழுத்தாக்கம், எனக் கூறாமல் 'நூன்மரபு' என்றும் சொல் லியலைத் தொடங்குங்கால் சொல்மரபு என்னாமல் 'கிளவியாக்கம்' என்றும் அமைத்துக்கூறிய அறிவியல் நுண்மையை ஓர்ந்துதெளிக.

## நூல்

### க. கிளவியாக்கம்,

**சூத்திரம் 1 :**

உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை என்மனார் அவரல பிறவே
ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே. *[1]*

**கருத்து :** சொல்லின் தோற்றத்திற்குரிய அடிப்படையைச்சுட்டி அவ்வாற்றான் அதுவகைப்பட்டு நிகழுமாறு கூறுகின்றது.

**உரை :—** மக்களாகிய கருத்து நிலைபெறும் பொருளை உயர்திணை என்று கூறுவர் தொல்லாசிரியர்; மக்கட் சுட்டுடை யரல்லாத பொருளையும் பிறபொருளையும் உயர்வல்லாதனவாகிய திணை என்று கூறுவர். அங்ஙனம் அவர்கூறும் அவ்இரு திணைப் பொருள்கள்மேலும் நிலைபேறுடையவாகிய சொற்கள் தோன்றி இசைக்கும்.

'கிளவி' என்பதற்கு நாவினின்றும் கிளைத்தலை உடையது என்பது பொருள். 'கிள்' என்னும் முதனிலைத் தொழிற்பெயர் ஏவற்பொருளுணர்த்தும் அகரத்தொடுகூடிக் "கிள" என்ருகிப் பின்னர் உடைமைப்பொருள் தரும் 'இ' என்னும் இறுதி இடைச் சொல்பெற்றுக் "கிளவி" என நின்றது.

இச்சொல். சகரக்கிளவி, வகரக்கிளவி என எழுத்தையும் உரையசைக்கிளவி, மாரைக்கிளவி என அசையையும், பெயர் நிலைக்கிளவி, வினையெஞ்சுகிளவி எனச் சொல்லையும், இரு நான்கு கிளவி, தொல்லோர்கிளவி எனச் சொற்றொடரையும் குறித்து வரும். ஆதலின் ஈண்டு அது தனிமொழி, தொகை மொழி தொடர்மொழிகட்குப் பொதுவாக நின்றது.

ஆக்கம் - ஆக்கிக்கொள்ளுதல். அஃதாவது ஒரு பெயரிலிருந்து ஐம்பாற் சொற்களைப் படைத்துக் கோடல். "செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்" (கிளவி-20) என்றதனான் அறிக.

இவ்வியலுள் "னஃகான் ஒற்றே ஆடூஉவறிசொல்" என்பது முதலாகச் சொற்களை ஆக்கிக் கொள்ளுமாறும். வினையிற் றோன்றும் பாலறி கிளவி .... மயங்கல் கூடா" (கிளவி - 11) என்பது முதலாகத் தொடர்களை வழுவின்றி அமைத்துக்கொள்ளு மாறும் கூறலின் இது கிளவியாக்கம் எனப்பெயர் பெற்றது.

இச்சொல் ஆ (ஆதல்) என்னும் முதனிலையடியாகப் பிறந்த 'ஆகு' என்னும் ஏவல்வினை 'ஆக்கு' என்னும் பிறவினை யாகிப் பின்னர்ப் பண்புப்பொருள்தரும் அம் என்னும் இறுதி இடைச் சொல்பெற்று 'ஆக்கம்' என நின்றது.

யாதானும் ஒரு சொல்லை இருதிணை ஐம்பாலுள் ஒன்றற் குரியதாக ஆக்கிக்கொள்ளுதலும், செப்பும் வினாவுமாக வரும் தொடர்மொழிகளை வழுவின்றி ஆக்கிக்கொள்ளுதலும் ஈண்டு ஆக்கமாம். சொற்கள் தொடருங்கால் பயனிலையும், தொகை நிலையும் எண்ணு நிலையுமாகத் தொடரும். அவை இயைபும் தகுதியுமாகக் தொடரின் வழாநிலையாம். இயைபின்றித் தொடரின் வழுவாம். இலக்கணவரையறையிற் சிறிது பிறழ்ந்துவரினும் சான் றோர் வழக்காய்ப் பொருள்உணர்ச்சி திரியாமல் மரபாகவருவன வற்றை வழாநிலையாக மேற்கொள்ளுதலும் ஆக்கமாம்.

இனி, இவற்றிற்குப் பண்டை உரையாசிரியன்மாரும் இக்கால ஆய்வாளரும் கூறியுள்ள விளக்கங்களுள் தமிழ் மரபிற்கும் தொல்காப்பியநெறிக்கும் ஒத்தனவும் ஒவ்வாதனவும்பற்றி விளக்கப் புகின் உரை மிகவிரியுமாகலின் அவை அகல உரையுள் ஆராய்ந்து கூறப்பெறும்.

சொற்கள் பொருள்கள்மேலாமாறு உணர்த்தினமையின் கிளவியாக்கம் எனப்பட்டதென்பார் ஒரு சாரார். பிற இயல்களிற்கூறப் பெறுவனவும் பொருள்மேலாமாறே கூறுதலின் அதுபொருந்தாமை யறிக. வழுக்களைந்து சொற்களை அமைத்துக்கோடல் என்பார் ஒருதிறத்தார். வழுவை நீக்கிக்கொள்ளுதல் இலக்கணமுறைமை யாதலன்றி ஆக்கம் (படைப்பு) ஆகாமையின் அதுவும் ஒவ்வு மாறில்லை என்க.

இயற்கையாகிய ' ஓசை ' ஒலிகளைக்கொண்டு செயற்கையாகச் சொற்களையும் தொடர்களையும் மக்கள் ஆக்கிக்கொண்டமையின் மொழி என்பது மக்கள் ஆக்கப்பொருளாம். அங்ஙனம் முன்னோர்கள் ஆக்கி மேற்கொண்ட நிலைமையைச்சுட்டி அம்மரபானே சொற்களை ஆக்கிக்கொள்ள வேண்டிய முறைமையைக் கூறுதலே இவ்வியலின் நோக்கமாம்.

எழுத்தியலைத் தொடங்குங்கால் ஆசிரியர் அதனை எழுத்தாக்கம், எனக் கூறாமல் ' நூன்மரபு ' என்றும் சொல் லியலைத் தொடங்குங்கால் சொல்மரபு என்னாமல் ' கிளவியாக்கம் ' என்றும் அமைத்துக்கூறிய அறிவியல் நுண்மையை ஓர்ந்துதெளிக.

## நூல்

### க. கிளவியாக்கம்,

**சூத்திரம் 1 :**

உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை என்மனார் அவரல பிறவே
ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே. [1]

**கருத்து :** சொல்லின் தோற்றத்திற்குரிய அடிப்படையைச்சுட்டி அவ்வாற்றான் அதுவகைப்பட்டு நிகழுமாறு கூறுகின்றது.

**உரை :—** மக்களாகிய கருத்து நிலைபெறும் பொருளை உயர்திணை என்று கூறுவர் தொல்லாசிரியர் ; மக்கட் சுட்டுடையரல்லாத பொருளையும் பிறபொருளையும் உயர்வல்லாதனவாகிய திணை என்று கூறுவர். அங்ஙனம் அவர்கூறும் அவ்இரு திணைப் பொருள்கள்மேலும் நிலைபேறுடையவாகிய சொற்கள் தோன்றி இசைக்கும்.

எடுத்துக்காட்டு :

நம்பி வந்தான், நங்கைவந்தாள் (மக்கட்சுட்டு) இவை உயர் திணைச் சொற்கள்.

குழந்தை நகைத்தது, மழை பெய்தது, யானை சென்றது [அவரல] காற்று வீசிற்று, உண்மை நன்று, சூர் தீண்டிற்று [பிற] இவை அஃறிணைச்சொற்கள்.

திணை என்னும் பலபொருளொருசொல் ஈண்டு மக்கள் தன்மையாகிய ஒழுக்கத்தை உணர்த்தி நின்றது. ஒழுக்கம் = ஒழுகலாறு.

மக்கட்சுட்டுடையார் தமது நாகரிகமும் பண்பாடும் காலந் தொறும் வளர்தற்கேற்ற விதிமுறைகளை வகுத்து அவற்றுள் செறிவுற்று ஒழுகலின் அவ்வொழுகலாறு திணை எனப்பட்டது. திண்மை என்னும் பண்புரிச்சொல் மையீறு கெட்டு உடைமைப் பொருள்தரும் ஐகாரம் பெற்றுத் 'திணை' என நின்றது. மண்ணும் மணலும் செறிவுற்றுநிற்றலின் நிலம் திணை எனப்பட்டது. பண்புகளான் செறிதலின் நற்குலம் திணை எனப்பட்டது. 'தெறுவ தம்மவித் திணைப்பிறத்தல்லே'. [ குறுந் — 45 ]

மக்கட் சுட்டுடையாரின் அறிவாற்றலும் ஒழுக்கமுறையும் காலந் தொறும் வளர்ந்து வருதல்கண்கூடாதலின் 'உயர்திணை' என்பது வினைத்தொகையாம். அஃறிணை என்பது பண்புத்தொகை.

'என்மனார்' என்பது மரூஉமுடிபு கொண்டதொரு முற்று வினைச்சொல். அஃது, என்னும் + அன்னார்-ஆகியஇருசொற்களின் மரூஉவாம். 'செய்யும்' என்னும் முற்றுச்சொல் பல்லோர் படர்க் கைக்கண் வாராமையின், என்னும் என்பது திரிந்து அன்னர் என்பதனொடு புணர்ந்து ஒருசொல் நீர்மைத்தாக ஆக்கமுற்றது. (என்ம் + அனார் — என்மனார்) மக்கட்சுட்டென்பது மக்களாகிய கருத்து நிலைபெறும் பொருள்மேல் நின்றமையான் இருபெய ரொட்டுப் பண்புத்தொகையடியாகப்பிறந்த அன்மொழித்தொகை. 'மக்கள்' என்றது மக்கட்டன்மையாகிய ஒழுக்கத்தை. சுட்டென்பது கருதி உணரப்படும் உணர்வை. மக்கள் உடம்புபெற்றிருப்பினும் மக்கள் எனக்கருதப்படாதவழி அஃறிணை மருங்காகும். பண்பாடில்லாதாரை மரம் என்றும், விலங்கென்றும், கொடி யாரைப் பேய் என்றும் கூறும் வழக்கினை நோக்குக. மக்களு டம்பினரல்லாத வழியும் மக்கட் சுட்டுடையாராகக்கருதின் உயர் திணையாம். அநுமன் வந்தான், சாம்பவன் வந்தான். அசுவத்தாமன் வந்தான் என்னும் வழக்கினை நோக்குக. இந்நுண்மையை ஓர்ந்துணர்தல் வேண்டித் தொல்லாசிரியர் 'மக்கள்' உயர்திணை என்னாது மக்கட்சுட்டு எனத் தெரிந் தோதினர்.

'அவரலபிற' என்பது உம்மைத்தொகை. அவரல என்பது காட்சிப் பொருளையும், பிற என்பது கருத்துப் பொருளையும் குறிக்குமென்க. மன்சொல்,— 'மன்' என்பது நிலைபேற்றைக் குறித்து நின்றது. தம்மீறு திரிதலும் [ இடை—3 ] என்பதனால், ஈறுதிரிந்து மன என நின்றது. சொல்லானது ஆகாயபூதத்தின் கூறாய் நாதவடிவாய்த் தோன்றி நிகழ்தலின் (நித்தியம்) அழித லில்லை என்க. மன்னுதல்=நிலைபெறுதல், நிலைபேறில்லாத பொருளை மன்னாப் பொருள் [கிளவி—34] என்பார் ஆசிரியர். 'மன்சொல்' என்றது இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயராய் நின்றது.

காலம் புணராத வழி எல்லாச் சொற்களும் பெயர் மருங்காய் நிகழ்தலின் எழுத்ததிகாரத்துள்,

உயர்திணைப் பெயரே அஃறிணைப் பெயரென்று
ஆயிரண் டென்ப பெயர்நிலைச் சுட்டே (எழுத்—117)

எனத்தோற்றுவாய் செய்து அச்சூத்திரத்தான் பொருள் வகை இரண்டே எனப் பெறப்பட வைத்தமையின் ஈண்டு அவற்றை விளக்கினார் என்க. இச்சூத்திரத்தாற் பொருளையும் வரையறுத் தார் எனக்கூறுவது நூல்நெறிக்கு ஏற்குமாறில்லை. இங்ஙனம் சொற்பொருளை விளக்கி இலக்கணங்கூறுதல் மரபு என்பதனை

"மீ என மரீஇய இடம் வரை கிளவி" [எழுத்து—250]
"பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்
ஆண்மைதிரிந்த பெயர்நிலைக் கிளவி" (கிளவி—4)
"அன்பொடுபுணர்ந்த ஐந்திணை" (பொ—கள—1)
"ஏது நுதலிய முதுமொழி" (செய்— 158)
"ஆற்றலொடு புணர்ந்த ஆண்பால்" (மரபியல்—50)
"முந்து மொழிந்ததன் தலைதடு மாற்றம்" (மரபியல்-112)

என வருவனவற்றானறிக.

பொருளையும் வரையறை செய்கின்றது இச்சூத்திரம் என வலிந்து கூறின் இதனை மூன்று சூத்திரமாகக் கொள்ளல்வேண்டும். பொருளின்றேல் சொற்களின் தோற்றமின்று. ஆதலின் சொல் ஆயிருதிணையின்கண் தோன்றி அவற்றை இசைக்கும் என்க. 'ஆயிருதிணையினை' என இரண்டாவது விரிப்பின் பொருளும் சொல்லும் வெவ்வேறாகத் தோன்றும் என்றும், சொற்கள் இடுகுறியாகக் கட்டிய வழக்கு என்றும் பட்டு மொழியியலுக்கும் அறிவியலுக்கும் முரணாகும். 'சொல்' தன்னையுணர்த்திப் பின் பொருளையும் அறிவிக்குமாறுபோல முதற்கண் சொல் பொருளை இடமாகக் கொண்டு தோன்றிப் பின்னர் அப்பொருளை அறிவிப்பது அதன் தன்மையாம்.

'ஆயிருதிணையின் இசைக்கும்' என்றது அவ்விருதிணையின் கண்ணும் தோன்றி இசைக்கும் என்றவாறு, 'தோன்றி' என்பது அவாய்நிலையான் கூட்டப்பட்டது. இசைக்கும் என்பது ஒலிக்கும் எனமுற்ருய் நின்றது. ஒலிக்கும் என்பது நிகழும் என்னும் பொருட்டு.

எனவே, திணையிடமாக நிகழ்வதே சொல் என்பதும், அதனான் அதுவும் இருவகைப்பட்டது என்பதும் பெறப்படும்.

தோன்றும், நிகழும், வரும் என்றாற்போலக் கூறாமல் 'இசைக்கும்' என்றது செவிக்குப் புலனாகிப் பொருளுணர்த்தி நிற்பதே 'சொல்' என உணர்தற்கென்க. வரிவடிவ அடையாளங் களும், மெய்ப்பாடுகளும் பொருள் உணர்த்துவனவேனும் அவை சொல்லாகா என்க.

"எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள்தரின்பதமாம்" என்னும் பவணந்தியார் கூற்றுப் பாராட்டற் பாலதாம்.

இனி, அவர் திணை இலக்கணங் கூறுங்கால், "மக்கள் தேவர் நரகர் உயர்திணை" என்ருர். அஃது உண்மைபோல நின்று மயக்குதலின் அதன் பொருந்தாமையைப் பின்வரும் கருத்துக்களான் ஓர்ந்துகொள்க.

பவணந்திமுனிவர் மொழியிலக்கண மரபுகள் - கோட்பாடுகள், இவற்றினும் தம் சமயக் கோட்பாட்டினையே பெரிதும் மதிப்பவர் என்பதை எழுத்திலக்கணம் பற்றிக்கூறத் தொடங்குங்கால் (செவிப் புலனும்) "அணுத்திரள் ஒலி" எழுத்து என்ருர். அதனுன் அவர் "மெய்தெரிவளியிசையை (தொல் - பிறப் - 20) மட்டும் உடன்பட்டு அகத்தெழுவளியிசையாகிய மந்திர எழுத்தை உடன் படாராயின்மை தெளிவாகும். உரியியலுள் அறிவைப்பற்றிக் கூறுங்கால் "வானவர் மக்கள் நரகர் விலங்குபுள், ஆதி செவி யறிவோடையறிவுயிரே" எனப் புறப்பொறிக்குரிய புலன்களின் அடிப்படையில் மக்களை ஐயறிவுயிர் என்ருர். அவரொடு வானவரையும் கூட்டிக் கூறினார். அதனுன் அகக்கரணங்களான் தோன்றும் ஆறாவதறிவையும் உடையவர் மக்கள் என்பதும் அவ் வறிவே மக்கள் ஒழுகலாற்றிற்கு அடிப்படை என்பதும், அது காரணமாகவே தமிழ்நூலார் மக்களை உயர்திணையாகக் கொண்டார் என்பதும் அவர்க்கு உடப்பாடில்லை என்பது தேற்றமாம். எனவே, அவர்

"உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே"
"மக்கள் தாமே ஆறறி உயிரே"

என்னும் தொல்காப்பிய மரபைப் புறக்கணித்துள்ளமை புலனாகும்.

இனித் தொல்காப்பியர் "தெய்வஞ்சுட்டிய பெயர்நிலைக் கிளவி உயர்திணை மருங்கின் பால்பிரிந் திசைக்கும்" என்றமை யான் வானவரை உயர்திணையுள் அடக்கினார் என மயங்குவர் ஒருசாரார்.

ஆசிரியர் தெய்வஞ்சுட்டிய பெயர்நிலைக் கிளவிகளை உயர் திணைக்குரிய பால்களின் பாற்படுத்துக் கூறியதன்றி உயர்திணைக் கண் அடக்கினாரல்லர். பாலுண்ணும் உரிமை பற்றித் தாயில்லாக் குழவிக்குச் செவிலி தாயாவாளோ? மற்றும் தெய்வம் என்னும் கருத்தும் வானவர் என்னும் கருத்தும் வேறுவேறாம்.

தெய்வம் என்பது உண்மைப் பொருளாகிய தத்துவங்களின், உருவகமாகும். வானவர் என்பது கற்பனை. அஃதாவது இந்நில உலகமும் அதன்கண் வாழும் உயிரினங்களும் போல வானுலகம் என்று ஒன்று இருப்பதாகவும் ஆண்டு வானவர் முதலாகப் பல உயிரினங்கள் இருப்பதாகவும் கருதிக்கொள்வது. நரகருக்கும் இவ் விளக்கம் ஒக்கும்.

இனி ஆசிரியர் தெய்வம் என்னாது தெய்வஞ்சுட்டிய பெயர் நிலைக்கிளவி என்றது 'மக்கட்சுட்டு' என்றது போலத் தெய்வத் தன்மையை ஏற்றிக் கூறிய பொருளைக் குறிப்பதாகும். அத் தன்மையை உருவகப்படுத்தி வழங்கும் குறியீடே பெயர்நிலைக் கிளவியாகும்.

தத்துவ நோக்கினான் தெய்வச்சுட்டுடையவற்றை ஆடூஉ வாகவும் மகடூஉவாகவும் உருவகம் செய்து பெயர் கொடுத்து வழங்குங்கால் அவற்றிற்குப் பால்காட்டும்ஈறு வகுக்கப்பெறாமையின் உயர்திணைப்பாலுக்குரிய ஈறுகளைப் பெற்று இசைக்கும் என்றார். தெய்வச்சுட்டுப் பெறாமல் அத்தத்துவச் சொற்கள் வாளாகூறும் வழி அஃறிணை முடிபே கொள்ளும் என்க. (கிளவி—58) இது பற்றிப் பின்னர்க் கூறப்படும்.

அஃதாவது முருகென்பது அழகின் நிறைவுத்தன்மையைக் குறிக்கும் அஃறிணைச் சொல். அது முருகு நன்று என முடியும். முருகு என்பது நம்மை வயப்படுத்திப் பேருவகையளிப்பது எனத் தத்துவமாக்கி அதற்கு ஆண்மைப்பண்பும் தெய்விகத் தன்மையும் கொடுத்து 'முருகன்' என அமைத்துக் கொள்ளின், முருகன் நன்று எனற்கு இயையாது முருகன் நல்லன் எனமுடியும். இவ்வாறே திருவளர்ந்தது என்பதைத் திருமகளாக்கின் திருமகள் வளர்ந்தாள் என முடியும்.

இங்ஙனமாகும் மொழி இயல்பினை நோக்கித் தெய்வஞ்சுட்டிய பெயர்நிலைக் கிளவியும் இவ்வென அறியும் அந்தந்தமக்கில, 'உயர்திணை மருங்கின் பால்பிரிந்திசைக்கும்' என்றதன்றித் தெய்வம் உயர்திணைக்கண் அடங்கும் என்று கூறினாரல்லர்.

அடுத்து, இருள்சேர்ந்த இன்னா உலகமாகிய தத்துவத்தை நிரயம் என்பது தமிழ்வழக்கு. நரகம் என்பது ஆரியவழக்கு. நரகத்துள் பேயும் பூதமும் அணங்கும் பிறவும் உள என்பார். அவை பேய் விலகிற்று, பூதம் புடைத்தது, அணங்கு அணங்கிற்று என அஃறிணையாக இசைக்கப்படுதல் தமிழ்வழக்கு. எனவே, வானவரும் (தேவர்) நரகரும் உயர்திணை என்பது தமிழ்நெறி வழக்கன்மை தெளியப்படும்.

இனி "மக்கள் தாமே ஆறறிஉயிரே" என்றதன்றிப் 'பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" என்று ஆசிரியர் கூறியுள்ளமையின் வானவர் முதலியோரை உயர்திணையுள் சார்த்திக்கூறுவதற்கு இடமளிக்கின்றது. எனக்கோடும் எனின், "பிறவும் உளவே அக்கிளைப்பிறப்பே" என்றாரேயன்றிப் "பிறரும் உளரே" என ஆசிரியர் கூறாமையான் அங்ஙனம் கோடலாகாமையறிக.

இனி மக்கள் உயிரும் உடம்பும் மக்கட் சுட்டாகிய பண்புகளும் தனித்துக் கூறியவழி உயர்திணைப்பால்களாற் கூறற்கேலா என்பது பின்னர்க் (கிளவி—57) கூறப்படும்.

சூ. 2 : ஆடூஉ வறிசொல் மகடூஉ வறிசொல்
பல்லோ ரறியுஞ் சொல்லொடு சிவணி
அம்முப் பாற்சொல் உயர்திணை யவ்வே [2]

க-து : உயர்திணைச் சொல்லின் பாகுபாடு கூறுகின்றது.

உரை : ஆண்மகனை அறிவிக்கும் சொல்லும் பெண்மகளை அறிவிக்கும் சொல்லும் அவர்தம் தொகுதியாகிய பல்லோரை அறிவிக்கும் சொல்லொடு பொருந்தி அம்மூன்று கூறாய சொற்களும் உயர்திணையினவாகும்.

ஆடூஉவறிசொல் முதலிய மூன்றன் கண்ணும் ஐகார உருபு செய்யுள் விகாரத்தான் தொக்கது. பல்லோரறியும் சொல் எனினும் பலரறி சொல்எனினும் ஒக்கும். அறிசொல் என்பது பிறவினைப் பொருட்டாய்க் கருவிகருத்தாவாகநின்றது. ஆடூஉவறிசொல் மகடூஉ வறிசொல் பல்லோரறியுஞ் சொல்லொடு சிவணி உயர்திணை யவ்வே எனவும் 'அம்முப்பாற்சொல் உயர்திணையவ்வே' எனவும் கூட்டிமுடிக்க. 'பல்லோர்' என்பது ஆடூஉ மகடூஉ ஆகிய தொகுதி யன்றி வேறில்லை என்னும் நுண்மையை உணர்த்தப் பல்லோ ரறியுஞ் சொல்லொடு சிவணி என்றார்.

'உயர்திணைய' என்பது "அதுச் சொல் வேற்றுமை உடைமையாகும்" (வினை - 16) என்பதனடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்று. அஃது ஆடுஉ வறிசொல் மகடுஉவறிசொல் என்பவற்றிற்கும் அம்முப்பாற் சொல் என்பதற்கும் உரியவினை யாய்ப் பொதுப்பட நின்றது. ஏகாரம் ஈற்றசை.

இச் சூத்திரத்தான் விதிக்கப்படுவது உயர்திணைச் சொல்லின் பாகுபாடாதலின் "அம்முப்பாற்சொல் உயர்திணையவ்வே" என்று கூறியிருப்பினும் "உயர்திணைச்சொல் அம்முப்பாலாம்" என்பது கருத்தென அறிக. மேல்வரும் சிறப்புச் சூத்திரங்களான் உயர் திணைச்சொல்லின் பாகுபாடு பெறப்படுமாயினும், மூன்றே என்னும் வரையறை பெறுதற்காக இச்சூத்திரத்தாற் தொகை கூறினார் என உணர்க.

சூ. 3 : ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்று
ஆயிருபாற்சொல் அஃறிணை யவ்வே [3]

கருத்து : அஃறிணைச் சொற்பாகுபாடு கூறுகின்றது.

உரை : ஒன்றனை அறிவிக்கும் சொல்லும் பலவற்றை அறிவிக்கும் சொல்லும் என அவ்விரு கூறாகிய சொற்களும் அஃறிணையவாகும்.

'ஒன்றறிசொல் பலவறிசொல் அஃறிணையவ்வே' என்பவற்றிற்கு மேற்கூறியாங்கு விளக்கம் கொள்க.

அஃறிணையுள் விலங்கு முதலிய ஒருசாரனவற்றிற்கு ஆண், பெண், வேறுபாடு தெளிவாக உளதெனினும், அவை வினை முடிபான் வேறுபடுவதில்லை. கருத்துக்கள் பொருள்களின் இயக்கத்தால் விளைவனவாதலின் வினைமுடிபு நோக்கி அஃறிணையுள் ஒன்று பல என்னும் இருபகுப்பே கொண்டனர் தமிழ்நூலார். அங்ஙனம் கொண்டனரேனும் பெயரளவில் அவற்றின் ஆண் பெண் வேறுபாட்டினை ஓராற்றான் உணரக் களிறு, பிடி, சேவல்,பேடை என இயற்பெயரான் பகுத்துணர்த்தியும், "ஆண் பாலெல்லாம் ஆணெனற்குரிய பெண்பாலெல்லாம் பெண்ணெனற் குரிய காண்ப அவை அவை அப்பாலான [ மரபியல் - 51 ] என அவற்றின் தன்மையுணர்த்தியும், பாலுணரவைத்தனர் என அறிக.

இனி நன்னூல் முதலிய பின்னூல்கள் ஆடுஉவறிசொல் மகடுஉ வறிசொல் என்றாற் போலச் செம்பொருள்தரும் வாய்ப்பட்டாற் பெயற் கூறாமல் ஆண்பால், பெண்பால் எனக் கூறினர். ஆண் - பெண் என்பவை அஃறிணைக்கும் உரியபொதுப் பெயர்களாய் நிற்றலை அவை மறந்தன. இங்ஙனம் கூறுதல் மயங்கவைத்தலும் விழுமியது பயவாமையுமாம்.

சூ. 4 : பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்
ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்
தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்
இவ்வென அறியும் அந்தந் தமக்கிலவே
உயர்திணை மருங்கிற் பால்பிரிந்திசைக்கும். [4]

**க-து :** உயர்திணையுள் பாலுள் அடங்காத ஆண்மை திரிந்த பொருட் பெயர்க்கும் திணையுள் அடங்காத தெய்வஞ்சுட்டிய பெயர்க்கும் ஆவதொரு மரபு கூறுகின்றது.

**உரை :** பெண்மையைச் சுட்டியதும் ஆண்மை திரிந்ததுமாகிய மக்கட் சுட்டுடைய பெயர்நிலைச் சொல்லும் தெய்வத்தன்மையைக் கருதிவரும் பெயர் நிலைச் சொல்லும் இன்னபால் என அறியப்படும் பயனிலை பற்றிய ஈறுகள் அவை தமக்கில. ஆதலின் அவை உயர்திணையிடத்துப் பால் அறிவிக்கும் ஈறுகளொடு பிரிந்து இசைக்கும்.

பொருளை உள்ளடக்கிய சொற்களைப் பற்றியே ஆசிரியர் இலக்கணங் கூறிவருகின்றாராகலின் பொருளின் திரிபைச் சொல் மேலேற்றி " ஆண்மை திரிந்த, பெண்மை சுட்டிய பெயர்நிலைக் கிளவி " என்றார். பயனிலையாகிய முடிவு காட்டுவன சொற்களே யாகலின், இவ்வாறே 'தன்மை திரிபெயர்' என மேலுங் கூறுவார். அந்தம் என்றது ஈற்றினின்றிசைக்கும் இடைச்சொல்லை, 'பிரிந்து' என்றது வகைப்பட்டு என்றவாறு. இசைக்கும் என்றது அறியும்வண்ணம் நிகழும் என்றபடி. 'உயர்திணை மருங்கிற்பால் பிரிந்திசைக்கும்' எனப் பொதுப்படக் கூறினாராயினும்

" ஆண்மை திரிந்த பெயர் நிலைக்கிளவி
ஆண்மையறி சொற்காகிடனின்றே " என்றும்

ஆண்மையும் பெண்மையுமின்றித் திரிந்து நின்றதைத் " தன்மை திரி பெயர் " என்றும் மேற்கூறுகின்றமையின் ஆண்மைதிரிந்து பெண்மை சுட்டிய பெயர் மகடுஉவிற்கும் பல்லோருக்கும் உரிய ஈறுகளானும் தெய்வஞ்சுட்டிய பெயர் ஆடூஉ, மகடூஉ, பல்லோர் ஆகிய மூன்றிற்கும் உரிய ஈறுகளானும் இசைக்குமெனக் கொள்க. தன்மைதிரிபெயர் அஃறிணையாய் இசைக்கும் என மேற்கூறுவார்.

எ. டு. பேடிவந்தாள், பேடியர்வந்தனர் பேடுவந்தாள், பேடர் வந்தனர். பேடி அவர், பேடியர் அவர் என்றும் தேவன்வந்தான். தேவி வந்தாள் தேவர் வந்தனர்-சேயோன் அருளினன், செய்யவள் அருளினாள், புத்தேளிர் வந்தனர் தேவன் அவன், தேவி அவள் தேவர் அவர் என்றும் வரும்.

இனி முருகன், இந்திரன், நாராயணன், மாரி, காளி என்றாற் போல வரும் தெய்வப்பெயர்கள் தெய்வஞ்சுட்டாமல் மக்களுக்கும் அஃறிணைப் பொருள்கட்கும் இடுபெயராக வைக்கப்பட்டு வரு மிடத்து இருதிணைப்பொதுப் பெயராகவும் தெய்வஞ்சுட்டிய வழி உயர்திணை மருங்காயும் இசைக்கும் எனக்கொள்க.

இங்ஙனமன்றித் திருமால், பரமசிவம், பெருமாள், இலக்குமி எனப் பெயர்நிலையான் பால் பிரிந்திசையாவழிப் பயனிலை முடிபான் பாலுணரப்படுமென அறிக. இவ்வகைப் பெயர்கள் தெய்வஞ்சுட்டிய வழி உயர்திணை மருங்காகவும் மக்களைச்சுட்டிய வழி உயர்திணைப் பெயராகவும் இடுபெயராயவழி விரவுத்திணை யாகவும் நிற்கும். அவ்வழி, திணை வேறுபாடு பயனிலைவகை யான் உணரப்படும். எனவே, இருதிணைக்கண்ணும் பெயர்நிலைக் கிளவிகளில் பால் பாகுபாடு பொருட்டன்மையை அடிப்படையாகக் கொண்டதென்பது புலப்படும்.

இனி, உரையாசிரியர் ஆண்மைதிரிந்து பெண்மை சுட்டிய பெயரைப் பேடி என்றாற்போலப் பெண்மை திரிந்து ஆண்மை சுட்டிய பெயரைப் பேடன் எனக்கூறலாமென்று கருதிப் பேடன் வந்தான் என உதாரணம் காட்டினார். இதனை ஒக்கும் எனக் கருதுவாரும் உளர். அது பொருந்தாது. என்னை ?

ஆண்மை பெண்மை என்பவை உடம்பொடு கூடிய உயிர்த் தன்மையாகும். ஆண், பெண் என்பவை உடல்வடிவாகும். ஆண் வடிவத்தில் ஆண்மையும் பெண் வடிவத்திற் பெண்மையும் இருத்தல்வேண்டும். இதற்குமாறாக ஒன்றனுள் ஒன்று சிறிதும் பெரிதுமாகக் கலந்திருத்தலும் இயற்கையாக உளது. இக்கலப்பு வெளிப்படையாக விளங்கும் அளவில் திரிபுபட்டு நிற்பின் செயல் முறைப் பண்புகள் மாறிவிடும். பாலில் நீரைக்கலந்தாலும் நீரிற் பாலைக்கலந்தாலும் அவை திரிபேயாம். அதுபோலப் பெண்மை ஆண்மையைத் திரித்ததாயினும் ஆண்மை பெண்மையைத் திரித்த தாயினும் அத்திரிபுடையது முழுமையான ஆடுஉவாகவோ மகடூஉ வாகவோ நில்லாமையின் அதனை யாதானும் ஒரு பாலில் அடக்குதல்வேண்டும். திரிபினால் எய்தும் வேறுபாட்டினை நன்குணர்ந்த தொல்லாசிரியன்மார் அதனை மகடூஉவின்கண் அடக்கினார்.

மிகுதிபற்றி அடக்குவது ஆசிரியர் கருத்தாயின் உயர்திணை மருங்கின் பால் பிரிந்திசைக்கும் என்பதும், ‘ஆண்மையறி சொற்காகிடனின்றே’ என்பதும் பயனில் கூற்றாம். நன்னூலாரைப்

போலப் பெண்மைவிட்டு ஆண் அவாவும்பேடு ஆண்பால் என்றும் அல்லது அவாவுவது பெண்பால் என்றும் கூறியிருப்பார். இனி உலக வழக்கின்கண் பேடிப்பயல், இவன் ஒரு பேடி என வழங்குதல் வெகுளிபற்றியும் இழித்தல் பற்றியுமாம். அவை ஒருவனை அவன் ஒருமாடு, அவன் மாட்டுப்பயல், நரிப்பயல் என்று வழங்குதல்போல ஒப்புணர்த்திவரும் குறிப்பென உணர்க.

இனி, தெய்வம் சுட்டிய பெயர்கள் ஈற்றிடைச் சொல்லின்றி வாளா வரும்வழி அவை அஃறிணைச் சொல்லாயே நிற்கும் என்பது (கிளவி—52) பின்னர் விளக்கப்படும்.

சூ. 5 : னஃகான் ஒற்றே ஆடூஉ வறிசொல். [5]

கருத்து : ஆடூஉவறிசொல் ஆமாறு கூறுகின்றது.

உரை : னகர ஒற்றினை ஈறாகக் கொண்டிசைப்பதுவே ஆடுஉவை அறிவிக்கும் சொல்லாகும்.

னஃகான் ஒற்றென்றது அன்னும் ஆனுமாகிய ஈற்று இடைச் சொற்களை என்பது வினையியலுள் [சூ. 8] பெறப்படும். இவை இறுதிக்கண் நின்றிசைக்கும் என்பதை இவ்வியல் பத்தாம் சூத்திரத்தாற் கூறுவார். பின்வருவனவற்றிற்கும் இது பொருந்தும்.

எ. டு : உண்டனன், உண்ணாநின்றனன், உண்ணுவன் எனவும் உண்டான், உண்ணாநின்றான், உண்பான் எனவும் காரியன், கரியான், அகத்தன், பொன்னன்னன் எனவும் வரும். இவை தெரிநிலையும் குறிப்புமாக வந்த வினைமுற்றுக்கள்.

இனி, பொன்னன், ஊரன், வேலன் எனப் பெயர் பற்றித் தனித்துவரின் அவை அஃறிணைக்கும் ஏற்ற விரவுப்பெயராகலின் பொன்னன் வந்தான், ஊரன் அவன், வேலன் யாவன் என முடிபு கொடுத்துக் காட்டுதல் வேண்டும். இதனைத்

"தோற்றந்தாமே வினையொடுவருமே" [கிளவி-11]

என்றதனான் உணர்க. அச்சூத்திரத்துள் "தாமே" என்ற மிகையான் உயர்திணைப் பெயரோடு வருதல் கொள்ளப்பட்டது.

இனி உரையாளர் யாவரும் ஆடுஉவறிசொல்லாவது னகர ஒற்றை இறுதியாக உடைய சொல் என உரை கண்டனர். அவ்வுரை ஆடுஉவறிசொல்லின் இலக்கணங் கூறியதாகுமேயன்றி ஆடுஉவறிசொல்லை ஆக்கும் ஆறு இது என்னும் ஆக்க இலக்கணம் கூறுவதாகாதெனஅறிக. இவ்வியலுள் கிளவிகளை ஆக்கிக் கொள்ளும் முறைமை பற்றியே ஆசிரியர் கூறுகின்றாராகலின் அவ்வுரையாவும் குன்றக் கூறலாம்.

இனி அன், ஆன் என்னும் னஃகான் ஒற்றைக்கொண்டு ஆக்கிக் கொள்ளுமாறு யாங்ஙனம் எனின்? உண், செல் முதலாய தொழிற் சொற்களொடு கால இடை நிலைகளின்பின் அன், ஆன் என்பவற்றைக் கூட்டி உண்டனன், உண்டான், சென்றனன், சென்றான் எனவும், மலை, நாடு, அகம், வேனில், கண், கருமை, செம்மை, ஊண் என்றாற் போல வரும் பொருள் முதலாய பெயர்களொடு கூட்டி மலையன், நாடன், அகத்தன், வேனிலான், கண்ணன், கரியன், செய்யன், ஊணன் என ஆடூஉவறிசொல்லாக ஆக்கிக் கொள்ளுதலாம். பின்வரும் ஈறுகளுக்கும் இஃதொக்கும்.

இங்ஙனம் பாலறிகிளவிகளை ஆக்கிக்கொள்ளுதற்கண் திரிபின்றி இருதிணை ஐம்பாலுள் ஒன்றை அறிவிப்பதற்கு ஏற்றது படர்க்கை வினைமுற்றேயாம். பிறவற்றைப் பிற சார்புகள் உணர்த்தும்.

இதற்கு, வினைமுற்றுக்களை மட்டுமே உதாரணமாகக்காட்டின் அன், ஆன் இறுதிகள் பெயர்க்கு ஈறாகா என்பது பட்டு

"வினையிற் றோன்றும் பாலறி கிளவியும்
பெயரிற் றோன்றும் பாலறி கிளவியும்
மயங்கல் கூடா தம்மர பினவே"

என்பதனொடு மாறுபடும் என்க. இனி அன், ஆன் எனக்கூறாமல் னஃகான் ஒற்றே என்று கூறியதற்குக் காரணம், அகர ஆகாரங்கள் ஏனைய அள், ஆள், அர், ஆர் என்பவற்றிற்கும் பொதுப்பட நிற்றலின் என்க. அதனான் ஏகாரம் பிரிநிலையாம். தேற்றம் எனினும் ஒக்கும்.

இனி, கோ, வேள், குரிசில், நம்பி, நங்கை முதலியினவும் ஆடூஉவறிசொல் மகடூஉவறிசொற்களாயினும் அவற்றின் ஈறுகள் பிற முதனிலைகளொடு கூடி ஆடூஉவறிசொல் முதலாயினவற்றை ஆக்காமையின் அவை வழக்கு நோக்கிய மரபாகக் கொள்ளப் பெறும் என்க.

உயர்திணைச்சொற்களின் ஆக்கம்பற்றிய இலக்கணம் அதிகாரமாகலின் னஃகான் ஒற்றே ஆடூஉவறிசொல் என்றாராயினும் ஆடூஉவறிசொல் னஃகான் ஒற்றென்பது கருத்து எனக் கொள்க.

சூ. 6 : ளஃகான் ஒற்றே மகடூஉ வறிசொல். [6]

க-து : மகடூஉவறிசொல் ஆமாறு கூறுகின்றது.

உரை : ளகர ஒற்றினை ஈறாகக் கொண்டிசைப்பதுவே மகடூஉவினை அறிவிக்கும் சொல்லாம்.

ளஃகான் ஒற்றென்பது அள் ஆள், என்னும் இடைச் சொற்களை உணர்த்திநின்றது. மேற் சூத்திரத்துள் கூறிய விளக்கங்களுள் பொருந்துவன இதற்கும் கொள்க.

எ-டு : உண்டனள், உண்கின்றனள்; உண்பள் எனவும்
உண்டாள், உண்ணாநின்றாள், உண்பாள் எனவும்
கரியள், செய்யள், கரியாள், செய்யாள் எனவும் வரும்.

ஆண்டாள் இவள், மலையாள் வந்தாள் எனச் சிறப்புப்பெயரொடும் வினையொடும் கூடிப் பெயர்க்கண் வருதலும் கொள்க.

இனி, கண்ணி, பொன்னி, தோழி, செவிலி, தலைவி எனப் பெண்பாற் பெயர்கள் பெரும்பான்மையும் இகரஈறாகவரும். வருமேனும் அவை இருதிணைக்கும் ஏற்ப விரவுப்பெயராய் நிற்றலானும் தொழிற் சொற்கள் இகரஈற்றான் மகடூஉவறிசொல்லாக ஆக்கம் பெறாமையானும் ளஃகான் ஒற்றே என ளகரத்தையே கூறினார் என்க.

சூ. 7 : ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்
மாரைக் கிளவி உளப்பட மூன்றும்
நேரத் தோன்றும் பலரறி சொல்லே [7]

க-து : பல்லோரறியும் சொல் ஆமாறு கூறுகின்றது.

உரை : ரகர ஒற்றாகிய இறுதியும், பகர உயிர்மெய்யாகிய இறுதியும், மார் என்னும் இடைச்சொல்லிறுதிஉட்பட அம்மூன்றும் பலரறி சொல்லாதற்கு ஒப்பத்தோன்றி இசைக்கும்.

ரஃகான் ஒற்றென்பது அர், ஆர் என்னும் இடைச்சொற்களை உணர்த்திநின்றது. பகரம் என்றது ஈண்டு உயிர்மெய்யெழுத்தினை. அஃது பல்லோரறியும் சொல்லுணர்த்தும் ஈறாயவழி இடைச் சொல்லாம்.

ரகர ஈறு மூன்று காலமும் வினைக்குறிப்பும் பற்றிவரும். பகரம் எதிர்காலம் பற்றி மட்டுமே வரும். மார் எதிர்காலம் பற்றி வரும். மாரீறு வினையொடும் முடியும். அதனால் அம்முறையான் நின்றன. இவ்வேறுபடுடையவேனும் பலரறிசொல்லை உண்டாக்குதற்கு இவை ஒத்த உரிமை உடையன என்பது விளங்க 'நேரத் தோன்றும்' என்றார், நேர்தல்-ஒத்தல்.

எ-டு : உண்டனர், உண்ணாநின்றனர், உண்குவர் எனவும்
உண்டார், உண்ணாநின்றார், உண்ணுவார் எனவும்
கரியர், கரியார் எனவும்
கூறுப, வருப, காண்ப, என்ப எனவும்
காண்மார் (அவர்). கொண்மார் (வந்தார்) எனவும் வரும்.

இவை வினைமுற்றுக்கள். இவை பெயர்ச் சொல்லாக்கத்தின்கண் சேரர், சோழர், பாண்டியர், மன்னர், வேந்தர், பாணர், கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர் எனவும் தாய்மார், தந்தைமார், அண்ணன்மார், ஆசிரியன்மார், நம்பிமார், நங்கைமார் எனவும் வரும்.

பகர உயிர்மெய் பெயர்க்கண் ஆக்கம் பெறுதலில்லை. மாரைக்கிளவியை ரகர ஈற்றுள் அடக்காமைக்குக் காரணம்; ரகர ஈற்றுள் அடக்கின் மகரம் காலம் காட்டும் எழுத்தாகக் கொள்ள வேண்டும், கொள்ளின் தாய்மார், தந்தைமார் என்னும் பெயர்கள் காலமுணர்த்துவனவாக மாறுகொள்ளும். மற்றும் எச்சமாகத் திரியாமல் நின்று வினையொடு முடிதல் ஆர்ஈறறுக்கு ஒவ்வா தாகலின் என்க.

உரையாசிரியன்மார் யாவரும் உயிர்மெய்யை இரண்டெழுத் தாகவே கொண்டனராதலின் அதற்கேற்ப விளக்கங்கூறியுள்ளனர். 'நேரத்தோன்றும்' என்பதனை இனஞ்சுட்டும் அடையாகக் கொண்டு நேரத்தோன்றாதனவும் உள என்று விளக்கங்கூறுவர். அவை எல்லாம் நூல்நெறிக்கு ஒவ்வாமையை ஓர்ந்து கொள்க.

சூ. 8 : ஒன்றறி கிளவி தறட ஊர்ந்த
குன்றிய லுகரத் திறுதி யாகும். [8]

க-து : அஃறிணையுள் ஒன்றறி சொல் ஆமாறு கூறுகின்றது.

உரை : ஒன்றனை அறிவிக்கும் சொல் தறட என்னும் மெய்களை ஊர்ந்துநின்ற குற்றியலுகரத்திறுதியாகும். ஆகும் என்றது ஆகி இசைக்கும் என்றவாறு.

எ-டு : உண்டது, உண்ணாநின்றது, உண்பது எனவும், கரியது எனவும், கூயிற்று தாயிற்று எனவும், கோடின்று, குளம்பின்று எனவும், குண்டுகட்டு, குறுந்தாட்டு எனவும் வரும்.

துவ்வீறு மூன்று காலமும் வினைக்குறிப்பும் பற்றிவரும். றுவ்வீறு இறந்தகாலமும் வினைக்குறிப்பும் பற்றிவரும். டுவ்வீறு வினைக்குறிப்பாகமட்டுமே வரும். அதனான் குற்றியலுகரமென ஒன்றுக்காமல் தறட ஒற்றுக்களை விதந்து ஓதினார். வைப்பு முறையும் அதனானேவிளங்கும்.

இனி றகர டகரங்கள் தகரத்தின் திரிபேயாகலின் அம்முறை பற்றி ஓதினார் எனினும் அமையும். குற்றியலுகரம் எதுகை நோக்கிமெலிந்துநின்றது. அத்துச்சாரியை அல்வழிக்கண்வந்தது. உகரஇறுதி என்பது இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

சூ. 9 : அஆ வஎன வருஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவறி சொல்லே. [9]

க-து : பலவறி சொல்லாமாறு கூறுகின்றது

உரை : அ, ஆ, வ எனச் சொல்லவரும் அக்கூறுபட்ட மூன்று இறுதிகளே பலவறி சொல்லாக இசைக்கும்.
வ என்றது வகர உயிர் மெய்யினையாம்.

எ-டு: உண்டன, உண்ணாநின்றன, உண்பன எனவும் கரியன, கரிய எனவும் உண்ணா, தின்னா, வாரா எனவும் வருவ, செல்வ, உண்குவ, தின்குவ எனவும் வரும்.

அகர ஈறு மூன்றுகாலமும் வினைக்குறிப்பும் பற்றிவரும். ஆகர ஈறு எதிர்மறையாக மட்டுமே வரும். வகரம் எதிர்காலத்து மட்டும்வரும். அகரஈறு உண்டன, கோட்டன என அன் சாரியை பெற்றும் உண்ட, கோட்ட எனச் சாரியை பெறாதும் வரும். உண்ட, கோட்ட என்பன பெயரெச்சமாக நிற்குமிடமும் முற்றாகநிற்குமிடமும் பொருள்நோக்கி உணரப்படும்.

இனி உண்ப, காண்ப என வருபவை கால எழுத்தாகிய பகரத்தை ஊர்ந்து நின்ற அகரஈறு என்ப. அவ்வாறே செல்வ, வருவ என்பவையும் கால எழுத்தாகிய வகரத்தை ஊர்ந்து நின்ற அகரஈறு என்ப. இவ்வழக்கு ஆசிரியர்காலத்து இலக்கண வழக்கன்று.

ஆசிரியர் நூல் செய்த காலத்துப் பகர உயிர்மெய்யீறு உயர் திணைப் பல்லோரறியும் சொல்லையும் வகர உயிர்மெய்யீறு அஃறிணைப் பலவறி சொல்லையுமே உணர்த்தினவாதல் நுணுகி நோக்கின்புலனாம். பகர வகரங்கள் காலங்காட்டும் எழுத்தா தற்கண் உண்பன, செல்வன என்றே வரும்.

உரையாசிரியன்மார் இடைக்காலத்தெழுந்த வழக்கை எண்ணி வகரம் அகரஈற்றுள் அடங்காமைக்கும், உண்ப என்பது உயர் திணையாதற்கண்ணும் அஃறிணையாதற் கண்ணும் அமையும் அமைதிக்கும் விளக்கங்கூறுவராயினர். அவை பயனில் கூற்றாம். தொல்காப்பியர் காலவழக்கினின்றும் பிறழ்ந்தவற்றுள் இவையும்சில.

சூ. 10 : இருதிணை மருங்கின் ஐம்பா லறிய
ஈற்றினின் றிசைக்கும் பதினோ ரெழுத்தும்
தோற்றந் தாமே வினையொடு வருமே. [10]

க-து : இதுகாறும் ஈறுபற்றி இருதிணை ஐம்பாற் சொற்களை ஆக்கிக் கொள்ளும் முறைமை கூறப்பட்டது இச்சூத்திரம் ஐம்பாற் சொற்களைத் திரிபின்றி அறியும் முறைமை கூறுகின்றது.

உரை : மேற்கூறிய இருதிணைகளிடமாக இசைக்கும் ஐம்பாற் சொற்களை இருவகை வழக்கின்கண்ணும் அறிதற்கு அச்சொற் களின் ஈற்றின் நின்று இசைக்குமெனக் கூறப்பெற்ற பதினோ ரெழுத்துக்களும் தோன்றுவது (படர்க்கை) வினைச்சொல்லொடு தோன்றிவரும்.

பதினோரெழுத்தாவன னகர முதல் வகர மீறாகக் கூறப்பெற்ற இடைச் சொற்களாம். எழுத்தென்றது ஆகுபெயர்.

வினை எனப் பொதுப்படக் கூறினாராயினும் திரிபின்றி ஐம் பாலறிய நிற்கும் படர்க்கை வினையே கொள்ளப்படும். ஈண்டு வினை என்றது முதனிலைத் தொழிற் சொற்களை.

வினையின்கண்வரும் என்னாது வினையொடு வருமென் றதனான் பெயர்ச்சொற்கள் படர்க்கை வினையொடு வந்து பாலறிய நிற்கும் என்பது கொள்ளப்படும். இஃது இரட்டுற மொழிதற் குறிப்பு.

எ-டு : உண்டான், உண்டாள், உண்டார், உண்ப, உண்மார், உண்டது, கூயிற்று, குண்டுகட்டு, உண்டன, உண்ணா, உண்குவ எனவரும்.

உண்டான் என்புழி ஆனீறு உண் என்னும் முதனிலை வினையொடு தோன்றிப் பாலறிய நின்றது. சாத்தன் வந்தான் என்புழிச் சாத்தன் என்னும் னகரஈறு வந்தான் என்னும் வினைச் சொல்லொடு தோன்றிப் பாலறிய நின்றது.

இனி 'தாமே' என்றதனான் வினையொடு வருவதலன்றிச் சுட்டுப்பெயர், வினாப் பெயர்களொடும் தோன்றிப் பாலறிய நிற்கும் எனவும் கொள்க.

எடு : சாத்தன் அவன், சாத்தன் யாவன் என வரும்.

அவன், யாவன் என்பவை ஒருமொழிப்புணர்ச்சியாய்ப் பாலறிய நிற்றல் இதனான் உணர்ந்து கொள்க.

மேல் வாளா கூறப்பெற்ற னகரமும் ளகரமும், ரகரமும் மாரைக் கிளவியும் ஈற்றினின்றிசைக்கும் என்பதை இச்சூத்திரத்தாற் பெறப் படவைத்தார். இதனை ஞாபகங்கூறல் என்னும் உத்தி என்ப. இப்பயன் நோக்கி ஏனையவற்றை வழிமொழிந்தார் என்க (வழி மொழிதல்-அநுவாதம்).

திணை இரண்டே பால் ஐந்தே என்னும் வரையறை உணர்த்து தற்காக இருதிணை மருங்கின் ஐம்பாலறிய என வழி மொழிந்து கூறினர்.

இதுகாறும் கூறப்பெற்ற தனிமொழி ஆக்கம்பற்றிய சூத்திரங்கள் இனிவரும் தொடர்மொழியாக்கம் பற்றிய இலக்கணத்திற்குக் கருவி களாகும்.

சூ. 11 : வினையிற் றோன்றும் பாலறி கிளவியும்
பெயரிற் றோன்றும் பாலறி கிள்வியும்
மயங்கல் கூடா தம்மர பினவே [11]

க-து : இருதிணை ஐம்பாலாகத்தோன்றி நிகழும் சொற்கள் தொடர்மொழி யாக ஆக்கம பெறும் முறைமை கூறுகின்றது.

உரை : வினை(ப்பெயர்) இடமாகத் தோன்றும் பாலறி விக்குஞ் சொற்களும் (ஏனைப்பொருட்) பெயரிடமாகத் தோன்றும் பாலறிவிக்கும் சொற்களும் ஒன்றனொடு ஒன்று தொடருங்கால் மயங்குநிலைப் பொருந்தா, தத்தம் இலக்கணத்தனவாகும்.

வினை என்றது தொழிலுணர்த்தும் சொற்களை, அவற்றினிட மாகத் தோன்றும் பாலறிகிளவிகளாவன வினைமுற்றுக்கள். பெயர் என்றது ஏனைய பொருட் பெயாகளின் முதனிலைச் சொற்களை. அவற்றினிடமாகத் தோன்றும் பாலறிகிளவிகளாவன பெயர்ச்சொற்கள்.

வினையாவது பொருளின் இயக்கமாதலின் சொற்கள் பெயர், வினை என இருபகுதியவாயின. வினை எனப் பொதுப்படக் கூறியவதனால் குறிப்புவினைப் பகுதியாகிய தன்மை முதலா யினவும் கொள்ளப்படும்.

திரிபின்றிப் பால் விளக்கும் சிறப்பு நோக்கி வினையிற் றோன்றும் பாலறி கிளவி முற்கூறப்பட்டது.

பாலின் தொகுதியே திணையாகலின் மயங்கல் கூடா என்றவழித் திணையும் அடங்கிற்று. அதனான் அவற்றின் பகுதிய வாகிய இடமும் ஒருமைப்பன்மைப்பாலும் மயங்கல் கூடா என்பதும் தாமே பெறப்படும். பெயர்ச் சொல்லுள் ஒரு சாரன காலமுணர்த் தலின் காலமும் மயங்கல்கூடா என்பது கொள்ளப்படும்.

இனி, பாலறிகிளவி என்னாது தோன்றும் பாலறிகிளவி என்றமையான் ஈண்டுக்கூறிய பதினோரீறுகளேயன்றி வினையி யலுள்ளும் பெயரியலுள்ளும் பாலறிதற்குரியவாகக் கூறப்படும் இடைச் சொற்கள் எல்லாம் கொள்க.

அவையாவன, னஃகான் ஒற்று முதலாய பதினோரீறுகளே யன்றித் தன்மை முன்னிலை வினைகட்குரியவாக வினையியலுள் கூறும் பாலறிகிளவி ஈறுகளும், னஃகான் ஒற்று முதலிய பதினொன்றனுள் பெயர்ப்பாலறிவித்தற்குரிய ன ள ர மார் து அ என்பவையும், "அவன் இவன் உவன் எனவரும் பெயரும்" என்பது முதலாகப் பெயரியலுள் கூறப்பெறும் ஈறுகளுமாம்.

இனி விலங்கும் புள்ளும் முதலாக வரும் பெயர்கள் பாலறி விக்கும் ஈறுகளின்றி வருதலின் அவற்றை உணருமாறு யாங்ஙனம் எனின்? அவையெல்லாம் அஃறிணை இயற்பெயராகலின் வினை யானும் 'கள்' என்னும் ஈற்றானும் வழக்கு நோக்கி உணரப்படும் என்க.

எனவே, மயங்கல் கூடா என்றதனான் திணையும் ஐம்பாலும், இடமும், காலமும், ஒருமைப்பன்மைப்பால்களும் தம்முள் மாறுதல் பொருந்தா என்பதும் மயங்கின் அவை வழுவாம் என்பதும் புலப்படும்.

எ-டு: அவன் வந்தது, அது வந்தான். என்பவை திணை மயங்கிய தொடர்மொழி வழுவாம். அவன் வந்தாள், அது வந்தன—என்பவை பால் மயங்கிய வழுவாம். யான் வந்தான், நீ வந்தேன் என்பவை இடம் மயங்கிய வழுவாம். நாளை வந்தான், நேற்றுவருவான் என்பவை காலம் மயங்கிய வழு யான் வந்தேம், நீ வந்தீர் என்பவை ஒருமைப்பன்மைப் பால்மயங்கிய வழுவாம்.

மற்று, மயங்கல் கூடா என முடிக்காமல் "தம்மரபினவே" என மிகுத்துக் கூறியது என்னை எனின்? பாலறிசொற்கள் தம்முள் தொடருங்கால் எடுத்தோதப் பெற்ற விதிகட்குப் புறனாக மயங்கி வருவனவெல்லாம் இலக்கண வழுவென்று களையப்படா,

சான்றோர் வழக்குப்பற்றி வருவனவும், விதிகட்கு அடங்காதனவாய் வருவனவும் சிறுபான்மை, மொழி வழக்கிற்குரிய இயற்கையாகலின் அங்ஙனம் வருதலும் மரபினவாம் என்பது அறிவித்தற்கென்க.

அங்ஙனம் மரபுபற்றி வருவனவற்றைத் தொகுத்து அவை ஆக்கம் பெறுமாறும் அவற்றை ஆக்கிக்கொள்ளுமாறும் இவ்வியலுள் இனிவரும் சூத்திரங்களான் கூறுவர்.

இனி உரையாசிரியன்மார் தம்மரபினவே என்பதற்கு மரபு பிறழாமற்காக்க, என்று உரை கூறி யானைமேய்ப்பானைப் பாகன் என்றும் யாடு மேய்ப்பானை இடையன் என்றும் வருவன மரபு, இன்னோரன்னவற்றைப் பிறழாமற் காக்க என்பார்.

இம் மரபுகளை ஆசிரியர் மரபியலின்கண் குழவிப்பெயர் முதலாக எடுத்து ஓதுகின்றமையானும், "பெயரினும் தொழிலினும்பிரிபவை எல்லாம் மயங்கல் கூடா வழக்கு வழிப்பட்டன" என்னும் தொடக்கத்தனவாய் இவ்வியலுட் பின்னர் ஓதலானும் எல்லா மரபும் பற்றிக் கூறலே இவ்வியலின் நோக்கமாதலாலும். அவர் உரை குன்றக்கூறலாகும் என்க.

நூற்கருத்தையும் தமிழ் மரபையும் நுட்பமாக உணராமல் தோன்றிய இடைக்காலத்து உரைகளையே மெய்யெனக் கொண்டு நன்னூல் முதலாக இடைக்காலத்தெழுந்த நூல்கள் யாவும் இவை வழுவென்றும் இவை வழுவமைதியென்றும் தோன்றியவாறெல்லாம் இலக்கணம் எழுதிச் சென்றன. அவற்றை விரிக்கின் பெருகு மாகலின் இன்றியமையாதனமட்டும் இவ்வுரையுள் ஆங்காங்குச் சுட்டப்பெறும்.

சூ. 12 : ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி
ஆண்மை அறிசொற் காகிட னின்றே [12]

க—து : உயர்திணை மருங்கின்பால்பிரிந்திசைக்கு மென்றபெண்மை சுட்டிய பெயர், பாலறி கிளவியாய் ஆக்கம் பெறுமாறு கூறுகின்றது.

உரை : பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின் ஆண்மை திரிந்த பெயர் நிலைக்கிளவி வினையொடு முடியுங்கால் ஆடூஉவறி சொற்குரிய னஃகான் ஒற்றொடுவருதற்கு ஆகும் இடனின்று.

வினையொடுமுடியுங்கால் என்பது அவாய் நிலையான் வந்தது. ஆண்மையறிசொற் காகிடனின்று எனவே ஏனைய இருபாற் சொற்கும் ஆகும் என்றவாறாம்.

எ-டு: பேடி வந்தாள், பேடியர் வந்தனர் எனவரும்.

"இச்சூத்திரத்தைப் பெண்மை சுட்டிய (சூ-4) என்பதன்பின் வையாமல் ஈண்டுவைத்தார் வழுவற்க என்பதனான்", என்பார் சேனாவரையர். அற்றன்று; அச்சூத்திரம் ஆண்மைதிரிந்த பெயர் நிலைக்கிளவி உயர்திணைமருங்கின் பால்பிரிந்திசைக்கும் எனப் பாலுள் அடங்குமீாறு கூறிற்று. இச்சூத்திரம் பாலறி கிளவியாய்த் தொடர் மொழிக்கண் மயக்கமின்றி ஆக்கம் பெறுமாறு கூறிற்று என்க.

**சூ. 13 :** செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல் [13]

**க-து :** மொழிவழி நிகழும் மக்களின் கருத்துக்கள் யாவும் செப்பும் வினாவுமாகவே வெளிப்படுதலின் அவற்றைப் பேணுக என்கின்றது.

**உரை :** செப்புதலையும் வினாவுதலையும் வழுவாமற்போற்றுக.

அல்லீறு வியங்கோட் பொருட்டாய் நின்றது. வழாஅலோம்பல் என்றது "தம்மரபினவே" என்றவாறு. செப்பாவது : யாதேனும் ஒரு பயன்விளைவைக்கருதிக் கருத்தை வெளிப்படுத்தலும், வினா வியவழி அதற்கு விடையாகக் கூறுதலுமாம். செப்பு, விடை, இறை, மாற்றம் என்பவை ஒத்த பொருளுடையவை. வினாவாவது: யாதானும் ஒன்றை அறிந்து கொள்ளும் விருப்பினைப் புலப்படுத்து வதாகும். வினா எனினும் கடா எனினும் ஒக்கும்.

எ-டு : "மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்" பசிநலிகின்றது சோறிடுக. என்றாற் போல்வன ஒருபயன் கருதிக் கருத்தை வெளிப்படுத்த செப்பாம்.

"அந்தணர் என்போர் அறவோர்" மங்கலம் என்ப மனைமாட்சி என்றாற் போல்வன, வினாவை உள்ளடக்கி வெளிப்படுத்த செப்பாம். வாய்மையாவது "யாதொன்றும் தீமையிலாத சொலல்" என்றாற்போல வருவன வினாவிற்குவிடையாக வரும் செப்பாம். பேதைமை என்பதுயாது? வெண்மை எனப்படுவது யாது? என்றாற் போல வருவன வினாவாம்.

வினாவிற்கு விடையாக வரும் செப்பு இருவகைப்படும், ஒன்று செவ்வன் இறை. பிறிதொன்று இறைபயப்பது. சாத்தா உண்பையோ? என்று வினாயவழி உண்பேன் அல்லது உண்ணேன் எனக்கூறல் செவ்வனிறை. உண்ணேனோ? நெய் யொடு கூட்டி இடுக, இலையிடுக, பசித்துள்ளேன், பழமாயின் நலம், என்றாற் போல வருவன உண்பேன் என்னும் கருத்தையும்; உண்பேனோ? நீ உண், பசியின்று, வயிறு நொந்துள்ளேன், மருந் தினேன், நோன்பினேன் என்றாற்போலவருவன உண்ணேன்

என்னும் கருத்தையும் பயந்துநிற்றலின் இறைபயத்தலாம். உண்பையோ ? என்றவழிக் கண்நோகவில்லை எனக்கூறுதல் செப்புவழுவாம்.

இனி-வினா, அறியாமைவினா, ஐயவினா, அறிவுறூஉ வினா என மூவகைப்படும், அவை வருமாறு :-

இச்சூத்திரத்தின் பொருள் யாது ? உயிர் எத்தன்மைத்து ? எனவருவன அறியாமைவினா. ஆண்டுப்பாய்ந்து ஓடுவது புலியோ புல்வாயோ ? குற்றியோ மகனோ ஆண்டுத் தோன்றாநிற்கும் உரு? என வருவன ஐய வினா. பாலைக்கலியைப் பாடியவர் யார் ? பறம்பினை ஆண்ட வள்ளல் யார் ? என வருவன அறிவுறூஉ வினா மாணவன் வினாவாயின் அறியாமைவினாவுள் அடங்கும்.

ஒருவிரல் காட்டிக் குறிதோ நெடிதோ ! எனவும் இவன்தாய் மலடியோ ? எனவும் ஆண்டுத் தோன்றுவது குற்றியோ மகனோ எனவும் வினாவுதல் வினா வழுவாம்.

இனி உரையாசிரியர் கூறிய அறிவொப்புக்காண்டல் என்பது ஐயவினாவுள்ளும் அவனறிவுதான் கோடல் என்பது அறியாமை வினாவுள்ளும் மெய்யவற்குக் காட்டல் என்பது அறிவுறூஉ வினாவுள்ளும் அடங்கும் என்க. அவர்தாம் பலவகையாகப் பிரித்தோதிய செப்புக்கள் யாவும் மேற்கூறிய இரண்டனுள் அடங்கும் என்க.

தொடர்மொழி ஆக்கத்தின்கண் மயங்கல் கூடா எனவிதித்த திணை முதலிய ஐந்தும் செப்பியனும் வினாவினும் வழுவாமற் போற்றுக என்பதும் இச்சூத்திரத்தின் கருத்தென ஓராமல் செப்பிற்கும் வினாவிற்கும் இலக்கணம் கூறியுதாக உரையாசிரியன் மார் விளக்கங்கூறிச் சென்றனர்.

சூ. 14 : வினாவும் செப்பே வினாஎதிர் வரினே [14]

க - து : செப்புப்பற்றியதொரு புறனடை கூறுகின்றது.

உரை : வினாவியஇடத்து அதற்கு மறுதலையாக அவ்வாய் பாட்டானே எதிர்வரும் வினாவும் செப்பேயாகும்.

எ-டு : சாத்தா உண்பையோ ? என்று வினாயவழி, உண்ணேனோ ? உண்பேனோ ? என்னும் வினா வாய்பாட்டான் வருபவை, உண்பேன், உண்ணேன் என்னும் பொருள் பயந்து நின்றவாறு காண்க. இறை பயப்பனவாக மேற்கூறிய பிற செப்புக்கள் ஒன்றற்குரிய செப்பு பிறிதொன்றற்காகி வந்தமை

யல்லது அவை செப்பாதலிற்றிரிந்தன அல்ல. இஃது அங்ஙனமின்றி வினாவே செப்பாகி நிற்றலின் விதந்து கூறப்பட்டது என்க.

சூ. 15 : செப்பே வழீஇயினும் வரைநிலை யின்றே
அப்பொருள் புணர்ந்த கிளவி யான. [15]

க – து : இறைபயப்பதாகிய செப்பு வழாநிலை ஆமாறு கூறுகின்றது.

உரை : செவ்வன் இறையாகாமல் செப்பு வழுவினும் செவ்வனிறைக்குரிய பொருள் புணர்ந்த சொல்லாக வருமிடத்து வழுவென்று நீக்கும் நிலையில்லை.

தெரிபுவேறு நிலையலும் குறிப்பிற்றோன்றலும் ஆகிய இருவகைப் பொருண்மை நிலையுள் இவ்வகைச் செப்பு குறிப்பிற்றோன்றலாய் அடங்கலின் வழாநிலையாகக் கொள்ளப்படும் என்பது கருத்து.

எ-டு : சாத்தா உண்பையோ ? என்றவழி, வயிறுகுத்திற்று என வரும். வயிறு குத்திற்று என்னும் செப்பு வயிறு நன்றோ என்னும் வினாவிற்குரிய செப்பாயினும் உண்ணேன் என்னும் பொருள்புணர்ந்து நிற்றலின் வரைநிலையின்றாயிற்று. பிறவும் அன்ன.

சூ. 16 : செப்பினும் வினாவினும் சினை முதற் கிளவிக்கு
அப்பொருளாகும் உறழ்துணைப் பொருளே. [16]

க — து : சினைக்கிளவி, முதற்கிளவி, ஆகியவைபற்றிவரும் செப்பு வினாக்களுக்கு ஆவதொருமரபு கூறுகின்றது

உரை :- சிறப்பும் உயர்வும் கருதி ஒன்றனொடொன்றை உறழ்ந்து கூறுமிடத்தும் வினை பயன் மெய் உரு முதலியவற்றான் ஒன்றனொடு ஒன்றை உவமித்துக்கூறுமிடத்தும் செப்பின்கண்ணும் வினாவின் கண்ணும் ஆக்கமுறும் தொடர்கள் சினைப் பொருளுக்குச் சினைப் பொருளும் முதற் பொருளுக்கு முதற்பொருளுமாகவேவரும்.

'' உறழ்துணைப் பொருள் '' என்பதன்கண் உம்மைகள் எஞ்சிநின்றன. உறழ்பொருளும் துணைப் பொருளும் எனவிரியும், சினைமுதற் கிளவிக்கு என்பதும் இவ்வாறே விரியும். ஏகாரம் ஈற்றசை. உறழ்தலாவது : விஞ்சவும் எஞ்சவும் கூறுதல், துணையாவது : ஒப்பித்துக் கூறுதல்.

எ-டு : இவள் கண்ணினும் அவள் கண் பெரிது. இது செப்பு, பெரிதோ? இது வினா. இவள் கண்ணினும் செவி அழகிது.

அழகிதோ? தாமரை மலரினும் முல்லை மலர் நறிது. நறிதோ? இவை சினைக்குச் சினையே வந்த உறழ்ச்சிப் பொருள்.

சாத்தனின் கொற்றன் வலியன்—வலியனோ? ஆவூர் யானையினும் கோவூர் யானை கொடிது — கொடிதோ? இவன் வேலினும் அவன் வாள் மாண்டது—மாண்டதோ? இவை முதலுக்குமுதலே வந்த உறழ்ச்சிப் பொருள். இவ்வாறின்றி இவள் கண்ணினும் அவள் மேனி அழகு—அழகோ? என்றும் சாத்தனின் கொன்றன் தோள் வலிது—வலிதோ? என்றும் முதலும்சினையும் மயங்கி வருதல் வழுவாம்.

இவள் விழியொக்கும் அவள் விழி—ஒக்குமோ? தாமரை மலரொக்கும் இவள் முகம்—ஒக்குமோ? இவை சினைக்குச் சினையே வந்த துணைப்பொருள். சாத்தன் ஒப்பான் கொற்றன்—ஒப்பனோ? இவன் செங்கோல் ஒக்கும் அவன் செங்கோல்—ஒக்குமோ? இவை முதலுக்கு முதலே வந்த துணைப்பொருள். இனி மயங்கிவருமாறும் அவை வழாநிலை ஆமாறும் வரும் சூத்திரத்தாற் கூறுவார்.

சூ. 17 : தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்
பகுதிக் கிளவி வரைநிலை யின்றே. [17]

க-து : மேற்கூறிய சினை முதல்கிளவிகள் மயங்கிவருமாறு கூறுகின்றது.

உரை : உறழ்ச்சியாகவும் ஒப்பாகவும் செப்பும் வினாவும் பற்றி வரும் தொடராக்கத்தின்கண் சினைப் பொருளும் முதற் பொருளும் தகுதியினையும் வழக்கினையும் தழுவியனவாய் மயங்கி நிகழும் ஒரு கூற்றுச் சொற்கள் நீக்கப்படும் நிலையிலவாகும்.

அவை தகுதிபற்றியும் வழக்குப்பற்றியும் வருதலின் வழா நிலையாக ஆக்கம் பெறும் என்றவாறு.

எ. டு : கூற்றினும் கொடிதவள் கூர்விழி-கொடிதோ? அவன் கோலினும் தண்ணிய தடமென்றோளே - தண்ணியவோ?

இவை தகுதிபற்றி முதலும் சினையும் மயங்கிவந்து ஆக்கம் பெற்றன. இவை உறழ்ச்சிப் பொருள், கயலொக்கும் இவள் கண்-ஒக்குமோ? மதியொக்கும் இவள் முகம்-ஒக்குமோ? கார்புரையும் இவள் கூந்தல், புரையுமோ? துளிதலைத் தலைஇய தளிரன்னோளே - அன்னளோ?

இவை வழக்குப்பற்றி முதலும் சினையும் மயங்கி வந்து ஆக்கம் பெற்றன. இவை துணைப்பொருள்.

தகுதியாவது : பயன் விளைத்தற்கண் ஒப்பநிகழ்வது.

வழக்காவது: வினை பயன் மெய் உரு முதலிய உவமை நிலைக்களன்களாகச் சான்றோர் வழங்கும் வழக்கு.

இனி இச்சூத்திரத்திற்கு உரையாசிரியர் கூறும் உரையும் அவர் உரைபற்றி எழுந்த நன்னூல் இலக்கண விதிகளும் இந்நூல் நெறிக்கு ஒவ்வாமையை விளக்கப்புகின் விரியும். பிற உரையாளர்களின் முரண்பட்ட உரைகளையும் நோக்கி உண்மை தெளிக.

சூ. 18: இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்கா றல்லாச் செய்யு ளாறே. [18]

க-து: ஒருசார் பண்புகொள் பெயர்பற்றிய மரபு கூறுகின்றது.

உரை: இனஞ்சுட்டும் பிரிவுஇல்லாத பொருள்கட்குப் பண்பு கொள் பெயர் கொடுத்தல் வழக்கு நெறியல்லாத செய்யுள் நெறியாம். ஏகாரம்தேற்றம்.

என்றது: இந்நெறியைத் தொடர் மொழி ஆக்கத்தின்கண் போற்றுக என்றவாறு. இனமுள்ள பொருட் பெயருக்கு அடை கொடுப்பது அதனைப் பொதுவினின்றும் பிரித்துணர்த்தற்கேயாம். தாமரைக்குச் செந்தாமரை என அடைகொடுப்பது வெண்டாமரை யினின்று பிரிப்பதற்காம். இஃது இனஞ்சுட்டும் பண்புகொள் பெயராகும்.

அங்ஙனம் இனமில்லாத ஞாயிறு திங்கள் போன்றவற்றிற்குப் பண்புகொள் பெயர்கொடுத்தலும் உண்டு. அதனை இனச் சுட்டில்லாப் பண்புகொள் பெயர் என்பர்.

இவ்விரண்டனுள் முன்னையது இருவகை வழக்கிற்கும் ஆகும். பின்னையது உலகவழக்கிற்கு ஆகாது. செய்யுள் வழக்கிற்குமட்டுமே ஆகும் என்பது இச்சூத்திரத்தான் வலியுறுத்தப் பெறுகிறது.

எ. டு: 'செஞ்ஞாயிற்றுள் நிலவு வேண்டினும் வெண்டிங் களுள் வெயில் வேண்டினும் ...' எனவும் 'செவ்வழல்கொளிஇ' எனவும் வரும். இவை இனத்தைச் சுட்டி வேறுபடுத்தாமையான் இவ்அடைகளாற் பயன் என்னை எனின், அப்பொருளை அணிநயத் தொடு சிறப்பித்து நிற்றலாம். அதனான் இஃது செய்யுளுக்கே உரியதென நூலோர் விதித்தனர்.

அங்ஙனமாயின் 'செய்யுளாறே' எனக்கூற அமையும் "வழக்கா றல்லாத" என்பது மிகையன்றோ எனின், அன்று. என்னை? இந்நூலுள் கூறப்பெறும் இலக்கண விதிகள் பெரும்பான்மையும் இருவகை வழக்கிற்கும் ஏற்கும். ஒருசில உலக வழக்கிற்கும் ஒருசில செய்யுட்கும் உரியவாய் நிகழும். அவற்றை விதந்து கூறல்

நூலோர் நெறி. விதந்து கூறப்பெறுபவை அவ்வவ்வழக்கிற்கு உரியவை என்பதன்றி ஒன்று மற்றொன்றின்கண் வாராது என்பது அன்று. வரின் ஏற்கப்படும்.

அவற்றுள் ஒருசில மாறி வருதல் கூடாதென்று விலக்கப்படும். அங்ஙனமே கூடாதவற்றுள் இதுவும் ஒன்றாதலின் வழக்காறல்லாச் செய்யுளாறே என எதிர்மறுத்தும் தேற்றேகாரம் கொடுத்தும் கூறப்பட்டதென்க.

இங்ஙனமே உயிரளபெடை இருவகை வழக்கினும் வர ஒற்றளபெடை செய்யுட்கே வருமாறு காண்க.

இச்சூத்திரத்து இரண்டாவது அடியில் "வழக்காறல்லா" என்பது 'வழக்காறல்ல' என ஏடெழுதுவோரால் பிழையாக எழுதப்பட்ட பாடத்தை ஓராமல், கிடந்தவாறே உரை கூறிச் சென்றனர் உரையாளர் யாவரும்.

வழக்காறு அல்ல என்னும் பன்மை பெயர்க்கொடை என்னும் ஒருமையொடு இயையாமை காண்க.

இனிப் பண்புகொள்பெயர் எனக் கூறியிருப்பினும், வடவேங்கடம், தென்குமரி, எனத்திசையும், முட்டாழை எனச் சினையும், கோட் சுறா எனத் தொழிலும் அடையாகப் பெற்று வருதலை ஒன்றென முடித்தலாற் கொள்க.

குறுஞ்சூலி - குறுந்தடி என்பவை ஞாயிறு திங்கள் என்பன போலச் சூலி, தடி எனப் பிரிந்துநில்லாமையின் அடை எடுத்தவையல்ல என்க.

இனி, இராம இலக்குவரை முறையே பெரியசாமி சின்னசாமி என வழங்குதல் மரபு. அப்பெயர்களை மக்கட்கு இட்டு வழங்கின் அவை முழுமையாக இடுபெயர்களேயாம். பெருங்கொற்றன், பெருஞ்சாத்தன், பெருஞ்சித்திரன் என்பவை அம்முறைபற்றி இட்ட பெயராயின் அவை இடுபெயர்களாகும். குறுங்கொற்றன், குறுஞ்சாத்தன் என்பவற்றை நோக்கியதாயின் இனச்சுட்டுடைய பெயர்களாம். அதனான் அவை ஈண்டு அடங்கா என அறிக.

சூ. 19 : இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல் (19)

க—து : பொருள்கள் யாவும் இயற்கை செயற்கை என்னும் இருவகையுள் அடங்குதலின் அவைபற்றிய மரபுகளை நான்கு சூத்திரங்களான் கூறுகின்றார். இச்சூத்திரம் இயற்கைப் பொருளைக் கிளக்குமாறு கூறுகின்றது

உரை : பிறிதொன்றால் திரிக்கப்படாமல் தத்தம் இயல்பொடு நிற்கும் பொருளைக் கிளந்து கூறுங்கால் இத்தன்மைத்து என்னும் வாய்ப்பாடுபடக் கூறுக.

எ. டு : நிலம் வலியதன்மைத்து. நீர் ஒழுகும் தன்மைத்து. தீ அழலுந்தன்மைத்து, காற்று உலவுந்தன்மைத்து. உயிர் உணருந் தன்மைத்து. உடம்பு இயங்குந்தன்மைத்து என வரும்.

இனி, நிலம் வலிது, வளி உலரும் எனக் கூறின் அவை ஒருசார் வேற்றுமையையும் காலத்தையும் காட்டிநிற்றலின் பொருந்தாவாம்.

ஆசிரியர் " இற்று " எனக்கிளத்தல் என ஓதியநுட்பம் அறிக.

சூ. 20 : செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல். (20)

க-து : செயற்கைப் பொருளைக் கிளக்குமாறு கூறுகின்றது.

உரை : பிறிதொன்றாற்றிரிபுற்றுச் செயற்கை எய்திநின்ற பொருளை ஆக்கச் சொல்லொடு கூட்டிக் கூறுக.

'ஆக்கம்' என்றது பொருள்பற்றிய சொல்லையாதலின் ஆன, ஆய, ஆயின, ஆகிய என அதன் திரிபாக வருவன வெல்லாம் கொள்க.

எ-டு : மருந்து உண்டமையான் உடம்பு நலமாயிற்று. களை கட்டமையான் பயிர் செழிப்பாயிற்று. கல்வி கற்றமையான் அறிவு பெருகலாயிற்று. தீச்சார்ந்தமையான் நீர் வெய்தாயிற்று. நீர்கலந் தமையான் நிலம் மெலிதாயிற்று எனவரும்.

சூ. 21 : ஆக்கந் தானே காரண முதற்றே. (21)

க-து : அவ்வாக்கம் காரணத்தை அடிப்படையாகக் கொள்ளும் என்கிறது.

உரை : இயற்கைப்பொருள் செயற்கைப் பொருளாக ஆகும் அவ்ஆக்கம் காரணத்தை அடிப்படையாகஉடையதாகும். எனவே, அக்காரணத்தைக் கூறி ஆக்கம் கூறுக என்றவாறு.

எ-டு : மேற்காட்டப்பெற்றன.

செயற்கைப் பொருளை ஆக்கமும் காரணமும் கொடுத்துக் கூறுக என ஒருங்கு விதியாது பிரித்தோதினார். வழக்கின்கண் காரணத்தைத் தொகுத்துக் கூறினும் இழுக்கின்று என உணர்தற் பொருட்டு, என்னை? மருத்துவரிடம் மருந்துண்டு வருவான் ஒருவனை அறிந்தான் உடம்பு நலமா என வினாய வழி

நலமாயிற்று எனக்கூறும்; அவ்வழி அவன் காரணத்தைத் தொகுத்து கூறினும் கேட்பான் அதனை உணர்ந்திருத்தலின் என்க. இதனை அடுத்த சூத்திரத்தான் ஆசிரியர் விதிக்குமாறு காண்க.

இனி, பிறகாரணங்களான் திரிபுறாமல் அந்நலம் இயற்கையாக அமைந்ததாயின் உடம்பு நன்று, பயிர் நன்று என ஆக்கக்கிளவி இன்றிவரும். மற்றுக் காரணத்தான் நலமுற்றதெனினும் அதன் பண்டைநிலையறியாதான் ஒருவன் உடம்புநன்று, பயிர்நன்று எனக்கூறின் இழுக்கின்று. அதனை அறிந்த ஒருவன் ஆக்கமும் காரணமும் கொடாது கூறின் அது வழுவாம் என்க.

சூ. 22: ஆக்கக் கிளவி காரண மின்றியும்
போக்கின் றென்ப வழக்கி னுள்ளே (22)

க-து: செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறுதற்கண் ஆவதோர்புறனடை கூறுகின்றது:

உரை: செயற்கைப் பொருட்கண் காரணமுதற்றாய் வருதல் மரபெனக்கூறப்பெற்ற ஆக்கச்சொல் வழக்கின்கண் காரணக்கிளவி யின்றியும் வருதல் குற்றமின்று எனக் கூறுவர் புலவர்.

எனவே, செய்யுட்கண் காரணக்கிளவியொடு வருதல் யாப் புடைத் தென்றவாறாம்.

ஈண்டு வழக்கென்றது பேச்சு வழக்கினையாம். அவ்வழக்கின் கண் வினாவுவானும் செப்புவானும் காரணத்தை உணர்ந்திருத் தலின் காரணக்கிளவியை வெளிப்படக் கூறாவிடினும் குற்றமின்று என்றார்.

எ-டு: உடம்பு நலமாயிற்று, நிலம் மெலிதாயிற்று, எனவரும். செய்யுள் வழக்கின் கண் காரணக்கிளவி தோன்றவரும்.

எ-டு: சாப நோன்ஞாண் வடுக்கொள வழங்கவும் பரிசிலர்க் கருங்கலம் நல்கவும் குரிசில் வலிய வாகும்நின் தாள்தோய் தடக்கை (புறம்-14) எனவரும். இனி, "நல்வை எல்லாம் தீயவாம் தீயவும் நல்லவாம் செல்வம் செயற்கு" என செய்யுட்கண் காரணமின்றிக் கூறப்பட்டதால் எனின், அன்று; ஊழ் அதிகார மாதலின் முறையே தீயூழ், நல்லூழ் என்பவை காரணமாதல் புலப்படுமென்க.

இனி, தெரிகணை எஃகம் திறந்தவா யெல்லாம்
குருதிபடிந்துண்ட காகம் - உருவிழந்து
குக்கிற் புறந்த சிரல்வாய செங்கண்மால்
தப்பியா ரட்ட களத்து என்பதன்கண்

குக்கிற்புறத்த, சீரல்வாய, என்பவை ஆக்கமின்றி வந்தன வாலெனின், ஆண்டு அவை செய்யுள் விகாரத்தான் தொக்கன என்க.

இந்நான்கு நூற்பாவானும் இயற்கைப் பொருள் செயற்கைப் பொருள்பற்றி வரும் தொடர்களைச் செப்பின் கண்ணும் வினாவின் கண்ணும் ஆக்கிக்கொள்ளுமாறு கூறப்பட்டது. இம்மரபு மயங்கல் கூடாமையின் என்க.

சூ. 23 : பால்மயக் குற்ற ஐயக் கிளவி
தானறி பொருள்வயின் பன்மை கூறல் [23]

க - து : திணையும் பாலும் ஐயத்திற்கிடனாய வழிச் செப்பும் வினவும் நிகழ்த்தும் மரபு கூறத்தொடங்கி இச்சூத்திரத்தான் திணை துணிந்து பால் துணியாவழிச்சொல் நிகழ்த்துமாறு கூறுகின்றார்.

உரை : திணை தெரிந்து பால் தெரியாமல் மயங்குதலுற்ற விடத்து ஐயக்கிளவியைத் தானறிந்த திணைப் பொருளிடத்துள்ள பன்மைப் பாலாற்கூறுக. 'பால்' எனமேல் நின்றமையின் பொருள் என்றது திணையையாம். "தானறிபொருள்" என்றதனான் திணை துணிந்தமை பெறப்படும்.

எ - டு : ஆண்மகன் கொல்லோ பெண்மகள் கொல்லோ ஆண்டுத் தோன்றா நின்றார்? எனவும், ஒன்று கொல்லோ பலகொல்லோ இச்செய்புக்கன? எனவும் வரும். 'பால்' எனப் பொதுப்படக் கூறினமையின் ஆடூஉ அல்லது மகடூஉ எனத் துணிந்து ஒருமை பன்மை துணியாதவழியும் பன்மை கூறுதீலாகும்.

எ - டு : ஒருவன் கொல்லோ பலர் கொல்லோ ஆவினைக் கவர்ந்த கள்வர். ஒருத்தி கொல்லோ பலர் கொல்லோ இக்காவின் மலர் கொய்த மகளிர் எனவரும்.

ஆண்மகன் கொல்லோ பெண்மகள் கொல்லோ என்பது காட்சிக்கண் நிகழும் ஐயமாயின் நிகழ்காலச் சொல்லானும் காணா வழியாயின் இறந்தகாலச் சொல்லானும் கூறுக. ஒருமைப் பன்மை ஐயம் காணா வழியே நிகழும் என்க.

ஒருவர் என்றோ ஒன்று என்றோ துணிந்தவழி ஒருமையைப் பன்மையாற் கூறியது வழுப்பட்டதாயினும் ஐயப் புலத்தின்கண் சொல் நிகழ்த்தற்கு வேறு வழியின்மையின் அதுவே மரபாய் வழா நிலையாயிற்றென்க.

" மயங்கல் கூடா ( கிளவி — 11 ) என்றதற்கு மாறாக ஐயக் கிளவிகள் மயங்கியே நிற்குமென்னும் மரபு உணர்த்தியவாறு.

இதனை வழுவமைதி என்பார் உரையாசிரியன்மார் வழா நிலையாக ஒன்று இருப்பினன்றோ இது வழுவாவது? எனக்கூறி விடுக்க.

சூ. 24 : உருவென மொழியினும்அஃறிணைப் பிரிப்பினும்
இருவீற்றும் உரித்தே சுட்டுங் காலை [24]

க - து : திணை ஐயத்தின் கண்ணும் அஃறிணைப் பாலையத்தின் கண்ணும் சொல் நிகழ்த்துமாறு கூறுகின்றது.

உரை : தொடராக்க மரபினைக் கருதுமிடத்து, உரு எனவரும் சொல்லிடத்தும் அஃறிணை இயற்பெயரிடத்தும் என அவ்இரு பிரிவின் கண்ணும் ஐயக்கிளவி கூறற்கு உரியதாகும்.

'உரு' வென மொழியினும் என்றது சொல்லை. அதனான் அப்பொருள் படவரும் உருபு, பிழம்பு, வடிவு முதலாயினவும் கொள்ளப்படும். வினை முடிவு நோக்கி ஒன்றறி சொல்லா யும், பலவறிசொல்லாயும் பிரிந்து சேறலின் அஃறிணை இயற் பெயரை அஃறிணைப் பிரிப்பு என்றார். ஐயக்கிளவி என்பது அதிகாரத்தான் வந்தது.

'உரு' என்பது இரு திணைக்கும் பொதுவாய் வழங்கலின் "உருவென மொழியினும்" என்றது திணை மயக்கத்தின்கண் என்பது உய்த்துணரப்பட்டது. அதனை விதந்து கூறாமையான் இருதிணைக்கண்ணும் வரும் பால் ஐயத்திற்கும் அஃது உரித் தெனக் கொள்க.

எ-டு : குற்றியோ மகனோ ஆண்டுத்தோன்றாநின்ற உரு? இது திணை ஐயம். ஆண்மகனோ பெண்மகளோ ஆண்டுத் தோன்றா நின்ற உரு? இது உயர்த்திணைப்பால் ஐயம். ஒன்றோ பலவோ இச்செய்புக்க உருபு? இது அஃறிணைப்பால் ஐயம். ஒன்றோ பலவோ இச்செய்புக்க பெற்றம்? ஒன்றோ பலவோ இக் குடம்பையுளிருக்கும் குரீஇ? இவை அஃறிணை பிரிப்பு. 'உரு' என்பது உயர்திணை ஒருமைப் பன்மைப்பால் ஐயத்தின்கண் வாரா தென்பதும் இவ் இருவகைச் சொற்களும் செப்பின்கண் வருதற்கும் உரிய என்பதும் கருதி உணரச், சுட்டுங்காலை என்றார் என அறிக. இரண்டு சூத்திரத்தானும் வினா பற்றிய மரபு கூறப்பட்டது.

சூ. 25 : தன்மை சுட்டலும் உரித்தென மொழிப
அன்மைக் கிளவி வேறிடத் தான [25]

க - து : ஐயப்புலத்தின்கண் செப்பு நிகழுமாறு கூறுகின்றது.

உரை : அன்மைத்தன்மையைச்சுட்டிச்செப்பு நிகழ்த்துங்காலை மறுதலையாய பொருளிடத்து அன்மைத் தன்மையைச் சுட்டிக் கூறலும் உரித்தென்று கூறுவர் புலவர்.

உம்மை எதிர்மறை ஆகலின் துணிந்து தேறப்பட்ட பொருளிடத்து அன்மைத் தன்மையைச் சுட்டிக் கூறுதலே பெரும்பான்மை என்பது பெறப்படும்.

அஃதாவது; குற்றியோ மகனோ? என்றத் தொடக்கத்து ஐயுற்று வினாவியவழி மகன் எனத் தெரிந்தான் ஒருவன் அன்மைத் தன்மையை உணர்த்தும் சொல்லாற் செப்பு நிகழ்த்துங்கால் குற்றி என்பதன்கண் அன்மைத் தன்மைச் சொல்லை வைத்துக் கூறுதலும் உண்டு என்றவாறு. துணியப்பட்ட பொருள் மகன் என்றால் அது, தன்னிடம்; குற்றி வேறிடம் என்று கொள்க.

எனவே, மகன் என்று துணிந்த வழி அன்மைத் தன்மையைக் குற்றியொடு கூட்டி இவ்வுருக் குற்றியன்று எனக்கூறுதலாம். கூறிய வழி மகன் என்பது அவாய் நிலையால் பெறப்பட்டு இவ்வுரு மகன் என்று முடியும். இனி எதிர்மறை உம்மையான் துணியப்பட்ட பொருளொடு அன்மைத் தன்மையைக் கூட்டிக்கூறல் பெரும்பான்மை என்றலின் மகனுக்குரிய அன்மைச்சொல்லாகிய அல்லன் என்பதைக் கூட்டி இவ்வுருக்குற்றியல்லன் எனக் கூறுதலாம்.

எ-டு : வேறிடத்தான அன்மைத் தன்மை சுட்டி வருங்கால் துணியப்பட்ட பொருள் ஆண்மகனாயின் ஆண்டுத் தோன்றுமவன் பெண்மகள் அல்லள் ஆண்மகன் எனவும், ஆண்டுத் தோன்றும் உருக்குற்றியன்று ஆண்மகன் எனவும், பெண்மகளாயின் ஆண்டுத் தோன்றுமவள் ஆண்மகன் அல்லன் பெண்மகள் எனவும், ஆண்டுத் தோன்றும் உருக்குற்றியன்று பெண் மகள் எனவும் துணியப்பட்ட பொருள்குற்றியாயின் : ஆண்டுத் தோன்றும் உரு மகனல்லன் குற்றி எனவும், மகளல்லள்குற்றி எனவும் துணியப்பட்ட பொருள், ஒன்றாயின் இச்செய்புக்க உருபு பல அல்ல ஒன்று எனவும், இச் செய்புக்க பெற்றம் பல அல்ல ஒன்று என்றும், பலவாயின் இச்செய் புக்க உருபு ஒன்றன்று பல எனவும் இச்செய்புக்கபெற்றம் ஒன்றன்று பல எனவும் வரும்.

இனித் துணிந்து கொள்ளப்பட்ட பொருளாகிய தன்னிடத்து அன்மைத்தன்மை சுட்டிவருமாறு : மகன் அல்லது மகள் என்று துணிந்தவழி ஆண்டுத்தோன்றுமவன் பெண் மகளல்லன் எனவும், ஆண்டுத்தோன்றும் உருக் குற்றியல்லன் எனவும், குற்றியல்லள் எனவும், துணியப்பட்ட பொருள் குற்றியாயின் மகனன்று-மகளன்று

எனவும், துணியப்பட்ட பொருள் ஒன்றாயின் இச்செய்புக்கஉருபு பலவன்று. செய்புக்கபெற்றம் பல அன்று எனவும், பலவாயின் ஒன்றல்ல எனவும் வரும்.

இவ்விருவகை மரபுகளுள் மறுக்கப்பட்ட பொருள்மேல் அன்மை தன்மையைக் கூட்டிக் கூறுங்கால், ஆண்டுத்தோன்றுமவன் குற்றி யன்று ஆண்மகன் எனத் தொடர் இரண்டாக நின்று பொருள் விளக்கம் செய்யும். துணியப்பட்ட பொருள்மேல் அன்மைத் தன்மையைக் கூட்டிக் கூறுங்கால் அவன் குற்றியல்லன் எனத் தொடர் ஒன்றாக நின்று பொருள் விளக்கம் செய்யும். ஆதலின் வேறிடத்து அன்மைத் தன்மை சுட்டுதல் அத்துணைச் சிறப்பன்று என்பது விளங்க எதிர்மறை உம்மையை இழிவு சிறப்புத் தோன்றக் கூறினார் என்க.

இனிச் சாத்தன் சோற்றை உண்ணான் என்னும் தொடருள் சோறு செயப்படு பொருளாய் நின்று உண்ணான் என்பதனொடு முடிந்தாற்போல அவன் குற்றியல்லன் என்னும் தொடருள் குற்றி என்பது மறுக்கப்படும் (நீக்கற்) பொருளாய் நின்று அல்லன் என்பத னொடு முடிந்ததெனக் கொள்க. பிறவும் அன்ன.

**சூ-26:** அடைசினை முதல்என முறைமூன்றும் மயங்காமை
நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல். [26]

**க - து :** மயங்கல்கூடா மரபினவற்றுள் வண்ணச்சினைச்சொல் வரும் மரபு ஆமாறு கூறுகின்றது.

**உரை :** வண்ணச்சினைச் சொல்லின் உறுப்பு மூன்றும் அடை சினை முதல் என்னும் முறைமை மயங்காமல் வழக்குப் பெற்று இயலும். வண்ணச் சினைச் சொல் என்பது அதன் இலக்கணந் தோன்ற நின்றது.

**எ-டு :** செங் கால் நாரை, பெருந் தலைச் சாத்தன், செங்கண் மறவர், செஞ் சொற் றொடர் என வரும்.

வண்ணம் என்பது நிறமாயினும் "அடை" எனப் பொதுப் படக் கூறினமையின் வன்கைக் கொல்லன், நெட்டிலை வாழை எனப் பிறபண்படுத்து வருதலும் ஆமெனக் கொள்க.

இனிச் ‘செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவர
வாய்வன் காக்கையும் கூகையும்கூடி’ என்று செய்யுளுள் மயங்கி வந்தனவால் எனின், செய்யுள் பொருள் கோளுக்குரியதாகலின் அவை ‘சுண்ணம்’ என்னும் பொருள்கோள் வகையால் மாற்றிக் கொள்ளப்படும் என்க.

பெருந்தோள் சிறுநுசுப்பின் பேரமர்க்கட்பேதை என்புழிப்பெருந் தோட்பேதை, சிறுநுசுப்பிற் பேதை, பேரமர்க்கட்பேதை, எனக் கூட்டப்படுதலின் மயங்கி வந்தன அல்ல என்க. தொடர்மொழி ஆக்கத்தின்கண் அடை சினை முதல் என்னும் மூன்றும் ஒருங்கு வரின் அவை அமையுமாறு பற்றிய மரபு கூறுதல் இச்சூத்திரத்தின் கருத்தாகலின் இளம்பெருஞ்சாத்தான் சிறுபைந்தூவி, பெரும்பலாக் கோடு என்றாற் போல்வன வேண்டியாங்கு வருமெனக் கொள்க.

‘நடைபெற்றியலும்’ என்பதற்கு வழக்குப் பெற்றியலும் எனப் பொருள் கூறிச் செய்யுளுள் மயங்கி வருமென்பார் உரையாசிரியன் மார். “வண்ணச்சினைச் சொல்” என்னும் தொடரே செய்யுள் ஆதலை ஓர்க.

சூ-27 : ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்
ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கி னாகிய உயர்சொற் கிளவி
இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல. [27]

க - து : பாலறி கிளவிகள் மயங்கல்கூடா என்றதற்கு மாறாக வழக்கின்கண் உயர்வு பற்றிச் சில மயங்கி வருமென்கின்றது.

உரை : ஒருவனையும் ஒருத்தியையும் பற்றிக் கூறுமிடத்து வரும் பன்மைச் சொல்லும் ஒன்றனைப் பற்றிக் கூறுமிடத்து வரும் பன்மைச் சொல்லும் உயர்த்துச் சொல்லும் சான்றோர் வழக்கினான் ஆகிய சொல்லாகும். அவை இலக்கண நெறியாற் சொல்லும் முறைமையின அல்ல. என்றது, இத்தகையன சான்றோர் வழக்குப் பற்றிப் பயின்றுவருதலின் அவை இலக்கணத்தை நோக்கி வழு வென்று களையப்படா ‘தம்மரபினவே’ எனக் கொள்ளப்படும் என்றவாறு.

எ-டு : ஒருவன் அல்லது ஒருத்தி; தன்னை, யாம்வந்தேம். எனவும் ஒருவன் அல்லது ஒருத்தியை, நீயிர் வந்தீர். எனவும் அவர் வந்தார். எனவும் அவர் பெரியவர், அவர் நல்லர் எனவும் ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவி வரும்,

நாலடி பற்றிவரும் நூலை நாலடியார் என்வும், பாக்களைக் கோவை செய்த நூலைக் கோவையார் எனவும், காக்கை, குருவி கிளி முதலியவற்றைக் காக்கையார், குருவியார், கிளியார் எனவும் ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவி வரும்.

அஃறிணை யியற்பெயர் அஃறிணைப் பன்மைச் சொல்லான் வருதல் இலக்கண நெறியே ஆதலின் ஈண்டுப் பன்மைக் கிளவி என்றது உயர்திணைப் பன்மைச் சொல்லை என்று அறிக.

இனி ஒப்பு, உருவகம், காதல், சிறப்பு, வெகுளி முதலாயின பற்றி வருவன செய்யுள் மரபு பற்றியனவாதலின் அவற்றை ஈண்டுக் காட்டுதலும், வழுவமைதி என்றலும் தொல்காப்பிய நெறிக்கு ஒத்தவையல்ல.

இனி, இவர் மிகப் பெரியவர், நீவிர் பெரிதும் அறிதிர்! என இழித்தற்கண்ணும் வருமால் எனின், அவை சொல்லுவான் இழித்தற்குறிப்புத் தோன்ற சொல்லப்பட்டவையன்றி உயர்சொல் லாதலினின்று திரிந்தவையல்ல என்க.

சூ-28 : செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்
நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ விடத்தும் உரிய என்ப. [28]

க - து : ஈற்றுஇடைச்சொற்களானன்றிமரபுவகையான்தாமேஇடமுணர்த்தும் ஒருசார் வினைப்பெயர்கள் வருமாறு கூறுகின்றது.

உரை : செல்லுதல் வருதல் தருதல் கொடுத்தல் என்னும் தொழிற்றன்மை நிலைபெறத் தோன்றும் அந்நால்வகைச் சொற்களும், ஈற்றானன்றித் தாமே தன்மை முன்னிலை படர்க்கை என வகைப்படும் அம்மூவிடத்தின்கண்ணும் தோன்றிவரற்குரியவை என்று கூறுவர் புலவர்.

செலவு முதலாய சொற்கள் பொருள் பற்றி ஓதப்பட்டமையான் போதல் நீங்குதல் இரிதல் முதலியன செலவின்கண்ணும், புகுதல் அடைதல் முதலியன வரவின் கண்னும், ஈதல் வீசுதல் முதலியன கொடையின்கண்ணும் மரபிற்கேற்ப அடக்கப்பெறும்.

அவ்வாறே இடம் பற்றி வரும் ஈங்கு ஈண்டை முதலியன தன்மைக்கண்ணும் ஆங்கு ஆண்டை முதலியன படர்க்கைக் கண்ணும் அடங்கும்.

சூ-29 : அவற்றுள்,
தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை ஆயி ரிடத்தே. (29)

க-து : தன்மை முன்னிலைக்குரியவை ஆமாறு கூறுகின்றது.

உரை : மேற்கூறியவற்றுள் தருதல் வருதல் பற்றி வரும் அவ்விருசொற்களும். தன்மை, முன்னிலை என்னும் அவ்விரண் டிடத்திற்கும் உரியவாம்.

எ-டு : எனக்குத்தந்தான், நினக்குத்தந்தான் எனவும் என்பால் வந்தான், நின்னுழைவந்தான் எனவும் ஈங்குவந்தான் எனவும் வரும்.

'அம்மூவிடத்தும் உரிய' என்றதனான் சிறுபான்மை பெருவிறல் அமரர்க்கு வென்றிதந்த' எனவும் 'தூண்டில் வேட்டுவன் வாங்கவாராது' எனவும் படர்க்கைக் கண்ணும்வரும். வரின் வழுவென்று களையப்படா என்க.

சூ. 30 : ஏனை இரண்டும் ஏனை இடத்த (30)

க-து : படர்க்கைக்குரியவை இவைஎன்கின்றது.

உரை : தரவும் வரவும் அல்லாத ஏனைச் செலவுச் சொல்லும் கொடைச் சொல்லும் ஆகிய இருவகைச் சொற்களும் படர்க்கை இடத்திற்கு உரியவாம்.

எ-டு : அவன்கட் சென்றான், ஆங்குச் சென்றான் எனவும் அவற்குக் கொடுத்தான் எனவும் வரும்.

எனக்குக் கொடுத்தான், நினக்குக்கொடுத்தான் எனச்சிறு பான்மை வருதலை 'அம்முவிடத்தும் உரிய' என்பதனாற் கொள்க. "கொடுவென் கிளவி" (எச்-49) என்றும் சூத்திரவிதி ஏவல் வினை பற்றிய சிறப்புவிதியாகலின் ஈண்டைக் கெய்தாதென்க.

சூ. 31 : யாது எவன் என்னும் ஆயிரு கிளவியும்
அறியாப் பொருள்வயின் செறியத்தொன்றும்(31)

க-து : அறியான் வினாவிற்குரிய சொற்கள் ஆமாறு கூறுகின்றது.

உரை : யாது, எவன் என்றும் அவ்விருசொற்களும் அறியாத பொருளை வினாவுமிடத்து யாப்புறத் தோன்றும் (செறிவு-நிறைவு)

எ-டு: இச்சூத்திரத்திற்குப் பொருள் யாது? இச்சூத்திரத்திற்குப் பொருள் எவன்? இப்பேழையுள் உள்ள பொருள் யாது? எவன்? எனவரும்.

"எவன்" என்பது 'என்' எனவும் 'என்னை' எனவும் வரும். என்ன என்பது இழிவழக்காம். யா, யாவை, யாவன், யாவள், யாவர், என்னும் வினாச்சொற்கள் திணைபால் இடங்களைச் சுட்டி நிற்றலின் அவை அறிந்தபொருள்வயின் ஐயந்தீர்த்தற்கே வரும் என்பது உய்த்துணரப்படும்.

இனி "யாவன்" என்பதும் அஃறிணை ஒன்றறி சொல்லைக் குறித்து நின்றதன்றோ எனின்? தெரிந்து கூறும் வழியே அஃது சிறப்புச் சொல்லாம் அல்லாதவழிப் பொதுச்சொல்லாம் என்பது வருஞ்சூத்திரத்தாற் கூறுப.

சூ. 32: அவற்றுள்
யாதென வருஉம் வினாவின் கிளவி
அறிந்த பொருள்வயின் ஐயந் தீர்த்தற்குத்
தெரிந்த கிளவி யாதலும் உரித்தே (32)

இ-ரு: யாது என்னும் வினாச்சொற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

உரை: மேற்கூறிய இரண்டனுள் யாது எனச் சொல்லவரும் வினாப்பொருளையுடைய சொல் அறியாப் பொருள்வயின் ஐயந் தீர்த்தற்கு வருதலேயன்றி ஓராற்றான் அறியப்பட்ட பொருள் வயின் ஐயந்தீர்தற்குத் தேர்ந்து கொள்ளப்பட்ட சொல்லாதலும் உரித்து.

தெரிதலாவது அஃறிணை ஒருமைப்படர்க்கை எனத்தெரிதல். எனவே, 'எவன்' என்பது அறியாப் பொருள்வயின் மட்டுமே வரும் என்பதாயிற்று. யாதென்பது அறியாப் பொருள்வயின் வருமிடத்து ஒருமை பன்மை தெற்றெனத் தோன்றாத பொருள்பற்றியே வருமென்பது இதனால் உய்த்துணரவைத்தமை காண்க.

எ-டு: இம்மரங்களுள் கருங்காலியாது. நம் எருதுகளுள் கெட்ட எருது யாது. எனவரும்.

இனி "கடிசொல்லில்லை" என்பதனான் நமருள், எவன் போயினான் எனவும் அவற்றுள் எவ்எருது கெட்டது எனவும் வருதல் கொள்க. என்பார் நச்சினார்க்கினியர். யாவன் போயினான் என்பதே தொல்காப்பியமரபு. எகரம் வினாப் பொருளில் வருவது இடைக்காலவழக்கு, எந்த என்பது இழிவழக்கு என அறிக.

கு. 33 : இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படுதொகுதியின்உம்மைவேண்டும் (33)

க-து : செப்பின் கண் வரையறைப்பட்ட பொருள் பற்றியதொரு மரபு கூறுகின்றது.

உரை : இஃது இவ்வளவினது என வரையறைப்பட்ட சினைப் பொருளையும் முதற்பொருளையும் உணர்த்தும் சொற் களுக்கு அவை பயனிலை கொள்ளும் தொகுதிக்கண் உம்மை கொடுத்தல் வேண்டும்.

எ-டு : கண்ணிரண்டும் சிவந்தன. தமிழ்வேந்தர் மூவரும் வந்தனர். மறை நான்கும் பயின்றவன் எனவரும். இவை வினைப்பயனிலை கொண்டன. கண்இரண்டும் குருடு. மரம் நான்கும் தேக்கு. எனவரும், இவை பெயர்ப் பயனிலை கொண்டன.

இனிப் பன்னிருகையும் பாற்பட வியற்றி ( முருகு— ) தமிழ் நாட்டு மூவேந்தரும் வந்தார். என உம்மை தொகுதிப் பெயரொடு கூடாமல் வந்தனவால் எனின், பன்னிரண்டும், மூன்றும் முறையே கைகளையும் வேந்தரையும் பற்றிநிற்றலான் இயற்றுதலும் வருதலும் அவற்றிற்கு உரியவையாகி வந்தனவேயாம். உம்மை தொகுதிப் பெயரொடு மட்டுமே வருமென்னும் யாப்புறவில்லை என்க.

வினைப்படு தொகுதியன்றேல் முருகற்குக் கை பன்னிரண்டு தமிழ்நாட்டு வேந்தர் மூவர் என உம்மையின்றி வருமென்க. இனி ஐந்தலை நாகம் உடன்றது. நான்மறை முதல்வர் வந்தார் என்பனவற்றுள் தொகுதிப்பெயர் வினையொடுபடாமையின் உம்மை பெறாவாயின என அறிக.

அறிந்த சினை முதற்கிளவி எனவே அறியாதான் உம்மை கொடாதுகூறின் வழுவன்றென்க. அஃதாவது நான்குகிளைகள் உள்ள ஒருமரம் வெட்டபட்டுக்கிடக்கும் நிலைமையின்கண் அம்மரத்தை முன்பு அறியாதான் நான்கு கிளைகள் வெட்டப் பட்டுள்ளன எனின் வழுவாகாது என்பது. இனிச் சுவை ஆறும் உடைத்திவ் வடிசில், கதிஐந்தும் உடைத்து இக்குதிரை என்றாற் போல வருவனவற்றுள் சுவை, கதி என்பவை சினையாகக் கருதிக் கொள்ளப்படும்.

இனி 'இருதோள் தோழர்பற்ற' என்றாற்போல் செய்யுட்கண் உம்மையின்றி வருவன தொகுத்தல் என்னும் செய்யுள் விகாரமென அறிக. இவ்உம்மை முற்றும்மை.

சூ. 34 : மன்னாப் பொருளும் அன்ன இயற்றே (34)

க-து : நிலைபெறாப் பொருள்பற்றிய தொரு மரபு கூறுகின்றது.

உரை : நிலைபேறில்லாத பொருளும் வினைப்படுதொகுதி போன்ற இயல்பிற்றாகும். என்றது. இனைத்தென அறிந்த சினையும் முதலும் வினைப்படு தொகுதிக்கண் உம்மைபெறுதல் போல மன்னாப்பொருட்கண் யாதானும் ஒருபொருளைப்பற்றி உம்மைவரும் என்றவாறு. அதனான் அவ்வியற்றென்னாது அன்னவியற்று என்றார்.

எ-டு : புவிமன்னன் இளமையும் நில்லாது. பெருவணிகன் செல்வமும் நிலையாது. மாமருத்துவன் யாக்கையும் நிலையாது. எனவரும் ''மன்னாப் பொருளும்'' என்னும் உம்மையான் இல்லாப் பொருளும் இடமுதலாயவற்றொடு கூட்டிச் சொல்லுங்கால் உம்மை பெற்று வருதல் கொள்க.

எ-டு ; குருடுகாண்டல் பகலும் இல்லை. உறற்பாலநீக்கல் உறுவர்க்கும் ஆகா, பவளக்கோட்டு நீலயானை சாதவாகனன் கோயிலுள்ளும் இல்லை எனவரும். இவை ஒன்றனொடு சாராது தனித்துவரின் இளமைநிலையாது—குருடுகாண்டல் இல்லை – என உம்மையின்றி வருமாறு காண்க.

இவைமுறையே சிறப்பும்மையும், எச்சஉம்மையுமாம். இரண்டும் எச்சஉம்மை எனினும் ஆம். உம்மை பெறுதல் ஒப்புமை யான் மேலதனொடு மாட்டெறிந்தார்.

சூ. 35 : எப்பொரு ளாயினும் அல்லதில் எனின்
அப்பொரு ளல்லாப் பிறிதுபொருள் கூறல். (35)

க-து : செப்பின்கண் நிகழ்வதொரு வாய்ப்பாடு பற்றிய மரபு கூறுகின்றது.

உரை : 'அல்லதில்' என்னும் வாய்பாட்டான் ஒருவன் செப்பு நிகழ்த்தலுறின், எவ்வகைப் பட்ட பொருளாயினும் வினாவப்பட்ட பொருளல்லாத பிறிதாகிய பொருட்கண் வைத்துக் கூறுக.

எ - டு : பயறுளவோ ? எனவினாவினாற்கு பயறு இல்லை யாயின் உழுந்தல்லதில் கொள்ளல்லதில் எனச் செப்புக. 'அல்லதில்' என்பது வாய்பாடாதலின். அல்லதில்லை, அன்றியில், அலாதில் அலாலில் என்றாற்போல அப்பொருள் பற்றிவரும் சொற்களெல்லாம் கொள்க.

பிறிது பொருள் என்பது பெரும்பான்மையும் இனப்பொளைப் பற்றியதாகும். சிறுபான்மை இனப்பொருளின்றியும் வரும். பயறும் பாம்புணிக்கருங்கல்லும் விற்பானொருவனுழைச் சென்று பயறுளவோ ? என்றவழிப் பாம்புணிக்கருங்கலல்லதில்' என்னு மன்றே ? அதனான் இனப்பொருள் என்னாமல் எப்பொருளாயினும் என்றார் என்க.

இனி, நூறுவிற்கும் பட்டாடையுளதோ ? என வினாவினாற்கு ஐம்பதுவிற்கும் பட்டாடை அல்லதில் எனக்கூறினும், விலையால் வேறுபட்டமையின் அதுவும் பிறிது பொருளேயாம்.

இனி நக்சினார்கினியார் அல்லது என்பது அஃறிணை ஒருமைப்பாற்குஉரியதெனினும் மற்றையபாற்கண்ணும் மயங்கிவரும் என வழுமைத்தார் என்றுகூறி "நாணும் நட்பும் இல்லோர்த்தேரின் யானலதில்லை இவ்வுலகத்தானே" (அகம். 268) என எடுத்துக் காட்டியுள்ளார். ஆண்டு "அல்லது" என்பது வினை எச்சப் பொருளில் வந்துள்ளமையை அவர் ஓராராயினார். உரையாசிரியர் விளக்கங்களுள் பல மிகையாகஉள.

சூ. 36 : அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல் (36)

க-து : மேற்கூறிய வாய்பாடுபற்றிய பிறிதொரு மரபு கூறுகின்றது. மேலதற் கொரு புறனடையெனினுமாம்.

உரை : அல்லதில் எனச் செப்புவோன் பிறிதாகிய பொருளொடு கூறாமல் வினாவப்பட்ட பொருட்கண் வைத்து அவ்வாய்பாட்டாற் கூறலுறின் சுட்டிக்கூறுக.

எ-டு : பயறுளவோ? என்று வினாவியவழிப் பசும்பயறல்லதில், பெரும் பயறல்லதில்—கலம்பத்துவிற்கும் பயறலல்லதில் என அப்பொருட்டன்மையைச் சுட்டிக்கூறுக என்றவாறு. சுட்டுதல் — கருதுதல். "சுட்டிக்கூறல்" எனப் பொதுப்படக் கூறியவதனான் முற்கிடந்ததனைக் காட்டி இப்பயறல்லதில் எனக்கூறினும், இதுவல்லதில் எனக்கூறினும் ஒக்குமென்க.

சூ. 37 : பொருளொடு புணராச் சுட்டுப்பெய ராயினும்
பொருள்வேறு படாஅ தொன்றா கும்மே. (37)

க-து : சுட்டுப்பெயராற்கூறுதல் வழாநிலையேயாம் என்கின்றது.

உரை : வறையறை பெறப் பொருளொடு புணர்ந்துவரும் சுட்டல்லாமல் பொருளொடு புணராத சுட்டுப்பெயராயினும் செப்பினாற்கூறும் வழிப் பொருள் வேறுபடாது பொருந்திநிற்கும்.

பொருளொடு புணர்ந்த சுட்டாவன : அப்பொருள், அவ்வீடு, இப்பொருள், இவ்வீடு, இம்மலர், இப்பயறு என வருவன. பொருளொடு புணராச்சுட்டாவன அது இது அவை இவை எனப் பொதுவாய் வருவன.

"இதுவல்லதில்" எனச் செப்பியவழி அச்சுட்டுப்பெயர் முன்கிடந்த பொருளைக் கண் கூடாகச் சுட்டி நிற்றலின் வினாவியோன் தெற்றென வுணருமாதலின் வேறுபடாது ஒன்றாகும் என்றார். சுட்டுப் பெயரான் விடைகூறுதல் வினாயபொருட்கும் பிறிது பொருட்கும் ஒக்கும் என்க. அதனால் இம்மரபை எடுத்துக் கூறினார்.

இனி, வேறுபடாது என்றொழியாது "ஒன்றாகும்" என விதந்து கூறியவதனான். முன்கிடந்த பொருளேயன்றி அப்பொருட் கூறுகளையும், அடையாளங்களையும் சுட்டிக்கூறினும் அமையுமெனக் கொள்க.

எ-டு : போர்க்களத்துக்கிடந்த கோட்டினைக்காட்டி இஃது அரசன் யானை எனவும் அதன் அடிச்சுவடுகளைக்காட்டி இஃது அரசயானை எனவும் கூறினும் பொருள்வேறுபடாது ஒன்றாகும் என்க. இம்மரபு 'அல்லதில்' என்னும் வாய்ப்பாடுபற்றியதன்றா கலின் மிகையாற் கொள்ளப்பட்டதென உணர்க.

சூ. 38 : இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப்பெயர்க் கிளவியும்
வினைக்கொருங் கியலும் காலந் தோன்றின்
சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவா
இயற்பெயர் வழிய என்மனார்புலவர்.

க-து : தொடர்மொழி ஆக்கத்தின்கண் இயற்பெயரும் சுட்டுப்பெயரும் ஒருங் கியலுமவழி அவை நிற்கும் மரபு கூறுகின்றது.

உரை : இயற்பெயராகிய சொல்லும் சுட்டுப் பெயராகிய சொல்லும் பயனிலை கோடற்கு ஒரு பொருளின் கண்ணவாய் நடைபெறுங்காலந்தோன்றின், அத்தொடரின்கண் சுட்டுப்பெயர்கள் முற்படக்கிளக்கப்படா இயற்பெயரின் வழியினவாம் எனக்கூறுவர் புலவர்.

ஈண்டு இயற்பெயரென்றது விரவுப்பெயரன்று. பொருளை உணரநிற்கும் குறியீடாகிய எல்லாப் பெயர்களையுமாம். அவற்றுள் சுட்டுப்பெயரை விதந்தமையின் அவை தவிர்ந்த ஏனை எல்லாப் பெயரும் கொள்ளப்படும். வினைக்கு ஒருங்கியலும் என்றதனான் அப்பெயர் வினை முதலாயும் ஏனை வேற்றுமையுற்றும் நிற்பன வெல்லாம் கொள்க.

எ-டு : சாத்தனவன் வந்தான். சாத்தனவன் பெரியன். சாத்தனவன் கொடை எனவரும். இவை இயற்பெயரும் சுட்டுப் பெயரும் வினைமுதலாய் ஒருங்கியன்று ஒருபயனிலை கொண்டன.

சாத்தன் வந்தான் அவன் உண்ணுவான். நம்பி வந்தான் அவன் பேசுவான். நங்கை வந்தாள் அவள் பாடுவாள். வீரர் வந்தனர் அவர் போரிடுவார். குதிரைவந்தது அஃது உணவுண்ணும் நாரைவந்தன அவை மீனருந்தும். எனவரும். இவை,இயற்பெயரும் சுட்டுப்பெயரும் ஒருபொருளைச் சுட்டி வெவ்வேறு பயனிலை கொண்டன,

சாத்தன் வந்தான் அவன்இனியன். பாண்டியன் வந்தான் அவன் வேந்தன். இவையும் அவ்வாறே வந்து வினைக் குறிப்பையும் பெயரையும் பயனிலையாகக் கொண்டன. சாத்தன் எழுந்தான் அவனை அழைத்திடுக. சாத்தனை எழுப்புக அவனுக்கு சோறிடுக. நம்பியைப் போற்றுக அவன் அறிஞன். நங்கையை அழைக்க அவளுக்குப் பூவழங்குக. கொற்றனாற் செய்யத்தகும் அவன் அறிவுடையான். தேவருக்குப் பலிதருக அவர் மகிழ்வார். கொற்றனைக் கேட்க அவன்கண் இருக்கும். ஆசிரியரறவுரை அவரால் விளக்கப்பெறும். அரசர்கட்சார்ந்தால் அவர் புரப்பார் எனவரும் இவை ஏனை வேற்றுமைகளை ஏற்ற பெயர்களாய் ஒருங்கியன்று பயனிலை கொண்டன.

இவ்வாறன்றிச் சுட்டுப்பெயர் முற்கிளக்கின் பொருள் ஒன்றாகாமல் வேறுபடும் என்க.

உரையாசிரியரின்மார் யாவரும் " முற்படக்கிளவார் " எனப் பாடங்கொண்டுள்ளனர். அஃது இயற்பெயர் வழிய என்பதனொடு இயையாமையும், 'கிளவார்', என்மனார் என்பவை பிறன் கோட்கூறல் போலநின்று மிகைப்படுதலையும் ஓர்க. அதனால் 'கிளவா' என்பதே நேரிய பாடமாதல் அறியலாம்.

இனி இச்சூத்திரவிதியான் பின்வரும் சுட்டுப்பெயர்களான் முன்னின்ற இயற்பெயர்கள் பொதுமை நீங்கி ஒரு திணைக்கு உரித்தாவதை ஓராமல் இயற்பெயராவது விரவுப் பெயரை என்று பொருள் கொள்வதும், இயற்பெயர் வழிய' என்னும் இன்றியமையாத தொடரின் செம்பொருள் காணாமல் அதனை மிகையாகக்கொண்டு அதனால் உயர்திணைப்பெயர் அஃறிணைப் பெயர்களை அடக்குதலும் சூத்திர நெறிக்கும் ஆசிரியர் கருத்துக்கும் ஒவ்வாஎன்பதனை ஓர்ந்துணர்க.

சூ - 39 : முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே [39]

க - து : மேலதற்கொரு புறனடை கூறுகின்றது

உரை : இயற்பெயரும் சுட்டுப்பெயரும் வினைக்கொருங்கு இயலுமிடத்துச் சுட்டுப் பெயரை முற்படக்கிளத்தல் செய்யுள் வழக்கிற்குரியதாகும்.

எ - டு : அவன் அணங்கு நோய்செய்தான் ஆயிழாய். வேலன் விறன் மிகுதார்ச் சேந்தன், பேர்வாழ்த்தி — முகனமர்ந்து அன்னை அலர்கடப்பந் தாரணியின் என்னைகொல் பின்னையதன்கண் விளைவு. எனவரும்,

(சேந்தன் அவின் நோய் செய்தான். அன்னை வேலன் பேர் வாழ்த்தி அணியின் என்னைகொல் விளைவு எனக்கூட்டுக. (சேந்தன் — இயற்பெயர்)

ஆக்கமும் கேடும் அதனான் வருதலாற்
காத்தோம்பல் சொல்லிக்கட் சோர்வு. எனவும் வரும்.

சூ. 40 : சுட்டு முதலாகிய காரணக் கிளவியும்
சுட்டுப்பெய ரியற்கையிற் செறியத் தோன்றும்

க - து : காரணத்தை உணர்த்தும் சுட்டுச்சொல் காரணப் பொருட்குப்பின் வருமென்கின்றது

உரை: சுட்டெழுத்தினை முதலாக உடையதாய்க் காரணத்தை உணர்த்தும் சொல்லும் மேற்கூறிய சுட்டுப்பெயர்போலச் சுட்டப் படும் பொருளுக்குப் பின்னே வரும்.

எ - டு : சாத்தன் கையெழுதுமாறு வல்லன் அதனான் தந்தை உவக்கும். கொற்றன் வெற்றி பெற்றான் அதனான் அரசன் உவக்கும் எனவரும்.

சுட்டு முதலாகிய காரணக்கிளவி என்றது அதனான், இதனான் என்வரும் இடைச் சொற்களை 'அதனால்' என்னும் சொல்லைச் சுட்டு முதலாகிய காரணக்கிளவி என்பார் உரையாளர். காரணப் பொருட்டாக வரும் வேற்றுமையை உணர்த்தும் வழி "இன் ஆன் ஏது" என னகர ஈற்றுச் சொல்லையே ஆசிரியர் கூறினமை யானும். லகரஈறு வழாஅல் ஓம்பல், என, எதிர்மறை எச்சத்தின் கண்ணும் வியங்கோளின் கண்ணும் உண்பல் காண்பல் எனப் பாலுணர வருதற்கண்ணும் தரல் வரல் எனத் தொழிற் பெயர்க் கண்ணும் வருதலன்றிக் காரணப் பொருட்டாய சொல்லின்கண் வாராமையானும் 'அதனால்' எனக்கொள்ளுதல் பொருந்தாது. அதனான் இதனான் என னகர ஈறாகக் கொள்ளுதலே நேரி தென்க. இதனான் என்பது பயின்று வாராது.

நால்வகைப்படையும் ஆற்றலுடையன, ஒற்றரும் நிலை யறிந்து கூறினர், குறுநில மன்னரும் துணைநின்றனர். அதனான் வேந்தன் எளிதின் வென்றான். என ஒன்றும் பலவுமாகிய

தொடர்மொழிக்கருத்துக்களைச் சுட்டி வருதலின். 'அதனான்' என்பது மூன்றனுருபேற்ற சுட்டுப்பெயர் அன்று என்பது விளங்கச் "சுட்டு முதலாகிய காரணக்கிளவி" என்றார். அதனான் என்பது உருபேற்ற சுட்டுப்பெயராயின், அஃது ஒருமையைச் சுட்டுதலின்றி இங்ஙனம் பலவற்றைச் சுட்டுதற்கு ஏலாதென்க.

இனி, சாத்தன் வந்தான் அஃது அரசற்குத்துப்பாயிற்று கிழவன் பிரிந்தான் அதனைக்கிழத்தி உணர்ந்திலள். எனக் காரணமல்லாத பிற தொடர் மொழிப் பொருளைச் சுட்டி வருவன சுட்டுப்பெராகலின் அவை சுட்டப்படும் பொருட்குப்பின் வருதலைத் "தன்னினம் முடித்தல்" என்னும் உத்தியாற் கொள்க. சுட்டுப் பெயர்கள் மரபு பிறழ வருதற்கு ஏலாமையின் எடுத்தோதிற்றிலர்.

சூ. 41 : சிறப்பி னாகிய பெயர்நிலைக் கிளவிக்கும்
இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார். (41)

க-து : தொடர்மொழிக்கண் சிறப்புப் பெயரும் இயற்பெயரும் நிற்கும் முறைமை கூறுகின்றது.

உரை : வினைக்கொருங்கு இயலுமிடத்துச் சிறப்பினான் ஒருவற்கு ஆகிய பெயர்ச் சொற்கும் பிறவகையான் எய்திய பெயர்ச் சொற்கும் முற்பட இயற்பெயர்ச் சொல்லைக் கிளவார் புலவர். பிற்படக்கிளப்பார் என்றவாறு. சிறப்பினாகிய பெயர் அரசர் முதலானோரான் தரப்படுவது. கல்வி, தவம் முதலிய பிறவகை யான் வரும் பெயர் எய்தப்படுவது. பிறவகையான் வரும் பெயர் என்பது உம்மையாற் கொள்ளப்பட்டது.

எ-டு: ஏனாதி நல்லுதடன் வந்தான். காவிதிகண்ணந்தை வந்தான் எனவரும் இவை சிறப்புப் பெயர். ஒருவினை கொள்ளாத வழி உம்மைத் தொகையாதற்கும் ஏற்றலின் வினைக்கொருங்கி யலுதல் தந்துரைக்கப்பட்டதென்க. முனிவன் அகத்தியன் வந்தான். ஆசிரியன் பேரூர்க்கிழான் வந்தான் சோழன் நலங்கிள்ளி வென்றான். கொல்லன் மருதன் சென்றான் எனவரும் இவை பிறவகையான் எய்திய பெயர்களாம்.

இவை, அகத்திய முனிவன், பேரூர்க்கிழான் ஆசிரியன், நலங்கிள்ளிச் சோழன் எனப்பிற் கிளக்கப்படினும் இழுக்கின்மை நோக்கி உம்மையான் தழுவிக் கொண்டார் என உணர்க,

இனி, திருவீரவாசிரியன், மாந்தக்கொங்கேனாதி எனவருவன, 'பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி' என்றாற்போலப் பல சொல்தொக்கு ஒருபொருள் மேல்வந்த இயற்பெயர்எனக் கொள்க.

சூ. 42 : ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி
தொழில்வேறு கிளப்பின் ஒன்றிடனிலவே. [42]

க - து : ஒருபொருளைச் சுட்டிநிற்கும் பல்பெயர்த்தொகைப் பெயர் வினை முடிவு கொள்ளுமாறு கூறுகின்றது.

உரை : ஒருபொருளைக் குறித்து நிற்கும் பலபெயர் சொற்கள் சொல் தொறும் வேறுவேறு தொழில் முடிபாகக் கூறின் அவை ஒருபொருளாய் ஒன்றுதல் இல.

எனவே அவற்றைத் தொகுத்துக்கூறினும் பிரித்துக்கூறினும் ஒரு தொழிலாற் கிளக்க என்றவாறாம்.

எ-டு : ஆசிரியன் பேரூர்க்கிழான் இளங்கண்ணன் சாத்தன் வந்தான் எனவரும். இது வேறு பெயர்க்கிளவிகள் தொக்கு ஒரு வினை முடிபு கொண்டது. ஆசிரியன் வந்தான் பேரூர்க்கிழான் வந்தான் இளங்கண்ணன் சாத்தன் வந்தான், இவை பிரிந்து ஒரு வினையே முடிபாகக் கொண்டன. இங்ஙனமின்றி ஆசிரியன் வந்தான் பேரூர்க்கிழான் உண்டான் எனத் தொழில் வேறு கிளப்பின் பொருள் ஒன்றென உணர்தற்கு அரிதாகும் என்க.

"ஒரு பொருள்" எனப் பொதுப்படக் கூறியிருப்பினும் பெயரிட்டு வழங்கப்படுவார் உயர்திணைக்குரிய மக்களே யாதலின் மக்கட் பெயரும், உயர்திணை மருங்கின் பால்பிரித்திசைக்கும் தெய்வஞ்சுட்டிய பெயருமே கொள்ளப்படுமென்க.

பல பெயர்க்கிளவி என்னாது வேறு பெயர்க்கிளவி என்றதனான், இருபெயர் முதலாக வருவனவும் பலசொற்களான் ஆகிய தொடர் மொழிப் பெயர்களாக வருவனவுமெல்லாம் மரபு நோக்கிக் கொள்ளப்படும்.

எ-டு: மருதன் இளநாகன் வந்தான். அதியமான் நெடுமான் அஞ்சி வந்தான் எனவும் எந்தை வருக எம்மான் வருக மைந்தன் வருக மயிலோன் வருக எனவும் மண்ணகம் புரக்கும்

மாறன் வாழ்க, பைந்தமிழ்ச்சங்கம் புரப்போன் வாழ்க. பற்றார்த் தேய்த்த பாண்டியன் வாழ்க. எனவும் வரும். இஃது இருவகை வழக்கிற்கும் உரியதாய்ச் செப்பின்பாற்படுவதொருமரபென்க.

சூ. 43: தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவியென்று
எண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார். (43)

க-து: உயர்திணைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் எண்ணுதற்கண் விரவி ஒருமுடிபு கொள்ளுமாறு கூறுகின்றது.

உரை: தன்மைப் பெயர்ச்சொல்லும் அஃறிணைப்பெயர்ச் சொல்லும் எண்ணப்படுமிடத்தின்கண் விரவிவருதலை நீக்கார் ஆசிரியர். விரவுதல் என்றது விரவி ஒருமுடிபு கொள்ளுதலையாம்.

எ-டு: யானும் என் எஃகமும் சாறும் (சால்தும்) யானும் என் கிள்ளையும் உண்கும் (உண்பேம்) யாமும் எம் படையும் வெல்வேம் யாமும் எம்யானையும் வலியேம் எனவரும்.

இங்ஙனம் திணைவிராய் எண்ணுதற்கண் ஒன்றற்கு ஒன்று திணைவேறுபட்டுமயங்குமாயினும் எண்ணப்படுதற்கண் பிறிதாறு இன்மையின் இம்முடிபு வழாநிலையாய் மரபாயிற்றென்க.

பின்னர்ப் "பலவயினானும் எண்ணுத்திணைவிரவுப் பெயர் அஃறிணை முடிபின" (கிள—51 ) என்பார் ஆதலின் ஈண்டு இவை உயர்திணை முடிபு கொள்ளும் என்பது உய்த்துணரப்படும். தன்மைச் சொல்என்றமையானும் விரவும் என்றதனானும் தன்மைப் பன்மைவினை என்பதும் கூறியவாறாம்.

இனி இச்சூத்திர உரைவிளக்கத்துள் "பன்மை உரைக்கும் தன்மைக்கிளவி, எண்ணியல் மருங்கின் திரிபவை உளவே" (வினை-12) என்பதனான் விராய்வந்து உயர்திணை முடிபு கோடலும் பெறப்படுதலின் இச்சூத்திரம் வேண்டா, எனின்? உய்த் துணர்ந்து இடர்ப்படுவது எடுத்தோத்து இல்வழி என மறுக்க" என்பார் சேனாவரையர். அது பொருந்தாவிளக்கமாம், என்னை? தன்மைப் பன்மை என்பது உளப்பாட்டுப்பன்மையேயாம். அங்ஙனம் உளப்படும் முன்னிலைப் பொருளும் படர்க்கைப் பொருளும் உயர்திணையாகவும் அமையும் அஃறிணையாகவும் அமையும், அஃதாவது யானும்நீயும் அவன் குதிரையும் செல்வேம்,

யானும் என்குதிரையும் அவனும் சாறும், எனவருமிடத்து உயர்திணைக்கே உரிய தன்மைப் பன்மை வினை அஃறிணையை உளப்படுத்தி அதற்கும் முடிபாதலை நோக்கி வினைபற்றிய வழுவமைப்பாராய்த் "திரிபவை உள" என்றார். அச்சூத்திரம் வினைச்சொல் லைப்பற்றிய் விதியாகும். ஈண்டு இருதிணைப் பெயர்கள் விராய்வந்து இவ்வாறு முடியும் என்றது பெயர் பற்றியவிதியாம். அன்றியும் ஈண்டு முடிக்கும் சொல் தெரிநிலை வினையாகவோ குறிப்பு வினையாகவோ அமையலாமாதலின் அச்சூத்திரத்தான் இவ்விதி உய்த்துணர்தற்காகாமையறிக.

சூ. 44: ஒருமை எண்ணின் பொதுப்பிரி பாற்சொல்
ஒருமைக் கல்லது எண்ணுமுறை நில்லா. (44)

க-து: எண்ணான் வருபெயர்பற்றிய தொரு மரபு கூறுகின்றது.

உரை: உயர்திணை ஒருமை சுட்டிவரும் எண்ணுப்பெயர் மூன்றனுள் இருபாற்கும் பொதுவாகாமல் ஒருபாலுக்குரியதாய்ப் பிரிந்துவரும் ஒருவன் ஒருத்தி என்னும் சொற்கள் ஒருமைக்கு அல்லது இருமை முதலிய எண்ணுமுறைக்கள் நில்லா.

நில்லாது எனப்பாடங்கொண்டு பொதுப்பிரிபாற் சொல் என்னும் ஒற்றுமையான் "நில்லாது" என ஒருமையாற் கூறினார் என்ப உரையாசிரியன்மார். பாற் சொல்என்றது பாலுணர்த்தும் ஈறுகளை.

எ-டு: ஒருவன்—ஒருத்தி எனவரும். இருவன் மூவன் இருத்தி முத்தி எனவாரா.

"பொதுப்பிரிபாற் சொல் எண்ணுமுறை நில்லா" என்றதனாற் பொதுப்பிரியாத ஒருவர் என்னும்சொல் இருவர், மூவர், நால்வர் எனவருதல் பெறப்படும்.

"மகன், மகள் என்னும் பொதுப்பிரி பாற்சொற்களை நீக்குதற்கு ஒருமை எண்ணின் என்றும் ஒருவர் ஒன்று என்னும் எண்ணுப் பெயர்களை நீக்குதற்குப் பொதுப்பிரி பாற்சொல்என்றும் கூறினார்." என்னும் சேருவரையர் உரையநயம் போற்றற்பாலது.

அவ்வாராயின் பவணந்தியாரைப் போல "ஒருவன் ஒருத்தி பெயர் மேல் எண்ணில" எனச்சுருங்கக் கூறியிருக்கலாமே எனின்?

அங்ஙனம் கூறியிருப்பின் இவ்விதி ஒருவன் ஒருத்தி என்னும் படர்க்கைச் சொற்களுக்கு மட்டுமே செல்லும். ஒருவேன், ஒருவை என்னும் தன்மை, முன்னிலை எண்ணுப் பெயரும் அடங்க இவ்வாறு ஓதினார் என்க.

**சூ. 45 : வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவுவரையார்.**

**க - து : வியங்கோளின்கண் திணை விரவி வருமென்கின்றது,**

உரை : வியங்கோள் முடிபின்கண் எண்ணப்படும் பெயர்கள் திணைவிரவி வருதலை நீக்கார் ஆசிரியர்.

எ - டு : வீரரும் யானையும் வெல்க! ஆவும் ஆயனும் செல்க!, யாமும் எந்நாடும் உயர்க! தமிழும் தமிழரும் வாழ்க! கயவரும் தீமையும் ஒழிக! எனவரும்.

வியங்கோள் வினை இருதிணைக்கும் பொதுவாயினும் விரவு மிடத்து ஒருதிணைப்பொருளை நோக்கின் மற்றொன்றுக்கு அதுபிறி தாகலின் மயங்கிற்றாம். இம்மயக்கம் தம்மரபினவாதலானும் பிறி தாறின்மையானும் வழாநிலையாகக் கொள்ளப்படும் என்க.

இனனல்லன உடன் எண்ணுப்படுதலின் வழுவாயிற்றென இளம்பூரணரும், அஃறிணை ஏவற்றொழிலைமுற்ற முடியாமையின் வழுவாயிற்றென்று நச்சினார்க்கினியரும் கூறினர். இனமான வற்றையே எண்ணுதல் வேண்டும் என்னும் விதியின்மையானும், ஏவலுக்கும் வியங்கோளுக்கும் வேற்றுமையுள்ளமையானும் அவர் கூற்றுப் பொருந்தாமை வெளிப்படை.

வியங்கோள்வினை தன்மை முன்னிலைக்கண் தனக்குரிய இலக்கணத்திற்றிரியாமல் வரும் என்பதனை. அவற்றுள், "தன்மை முன்னிலை ஆயிரிடத்தொடும். மன்னாதாகும் வியங்கோட்கிளவி" என்னும் சூத்திர உரையுள் கூறுதும். முன்னிலை வினைக்கண் ணும் திணை விரவுதல் சொல்லாற் புலப்படா ஆதலின் அவற்றை நீக்கிப் படர்க்கைச் சொல்லாகிய வியங்கோள் வினையைச் சுட்டிக் கூறினார்.

இனி, 'ஆவும் ஆனியற்பார்ப்பன மாக்களும் பெண்டிரும் பிணி யுடையிரும் எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின்' எனப் படர்க் கைச்சொல்லும் முன்னிலைச் சொல்லும் விரவி முன்னிலை ஏவல் வினையான்முடிதல் செய்யுள் முடிபாதலின் இன்னோரன்ன இவ் வதிகாரப் புறனடையாற் கொள்ளப்படும்.

சூ. 46 : வேறுவினைப் பொதுச்சொல் ஒருவினை கிளவார் [46]

கு - து : பலவினைகளுக்குப் பொதுவாகிய சொல்லைக் கிளக்குமாறு கூறுகின்றது.

உரை : வேறுபட்ட வினையை உடைய பொருள்கட்குப் பொதுவாகி வரும் சொல்லை அவற்றுள் ஒன்றற்குரிய வினையாற் கிளந்து கூறார் புலவர். சொல் என்றது பொருளை. எனவே பொதுவினையாற் கிளப்பர் என்றவாறு, பொதுப் பொருளாவன : அடிசில் (உணவு) அணி, இயம், படை முதலாயவை.

அடிசில் என்பது தின்னுவன, பருகுவன, நக்குவன உரிஞ்சு வனவற்றிற்குப்பொது. ஆதலின் அவற்றுள் ஒன்றாற் கூறாமல் அடிசில் கைதொட்டார், அடிசில் உண்டார் எனவும், அணி என்பது கவிப்பன, கட்டுவன, செறிப்பன, தின்பனவற்றிற்குப் பொது ஆதலின் அணியை அணிந்தார், மெய்ப்படுத்தார் எனவும், எழுப்புவன, கொட்டுவன, ஊதுவனவற்றிற்குப் பொதுவாகிய இயத்தை, இயம் இயம்பினார், இசைத்தார் எனவும் எய்வன, எறிவன, வெட்டுவன, குத்துவனவற்றிற்குப் பொதுவாகிய படையை, படைவழங்கினார், தொட்டார் எனவும் பொதுவினையாற் கிளக்க என்றவாறாம்.

சூ. 47 : எண்ணுங் காலும் அதுவதன் மரபே. (47)

கு-து : வேறுவினைச் சொற்களை எண்ணி முடிக்குமாறு கூறுகின்றது.

உரை : வெவ்வேறுவினைக்குரிய சொற்களை எண்ணுங் காலும் மேற்கூறியாங்கு அதன் அதன் பொதுச் சொல்லுக்கு ஓதிய இலக்கணமேயாம். என்றது; பொதுவினையான் முடிபுகூறுக என்றவாறு.

எ-டு : சோறும் கறியும் நீரும் உண்டார், எனவும் முடியும் மாலையும் கழலும் அணிந்தார் எனவும் யாழும் குழலும் முழவும் இசைத்தார் எனவும் வாளும் வேலும் கணையும் வழங்கினார் எனவும் வரும்.

சூ. 48 : இரட்டைக் கிளவி இரட்டிற்பிரிந் திசையா (48)

கு-து : இரட்டைக்கிளவிகட் காவதோர் இலக்கணங் கூறுகின்றது,

உரை : இரட்டையாகத் தோன்றிப் பொருளுணர்த்துஞ் சொற்கள் தாம் இரட்டுதலின்று பிரிந்திசைக்கமாட்டா.

எ-டு : கருகருத்தது, மொடுமொடுத்தது, கலகலத்தது, கொறுகொறுத்தார் முணுமுணுத்தார் எனவரும்.

ஒரு காம்பின் கண் பிளவுபட்டுக் கிளைத்த இலையிரட்டைப் பூவிரட்டைகளைப்போலச் சொல்லால் இரட்டையாயினும் பொருளால் ஒன்றே என்பது தோன்ற இரட்டைக்கிளவி என்றார்.

இவை பெரும்பான்மையும் இசை, குறிப்பு, பண்பு ஆகிய குறிப்புப் பொருள் பற்றி வருதலின் உரிச்சொல் பற்றிய மரபு வழுக் காத்ததாக நச்சினார்க்கினியர் கூறுவர்.

வரிவரியாக எழுதினாள். படிப்படியாக முன்னேறினான் என்றாற்போலப் வினையடிகளும் வழங்கப்படுதலின் வரையறுத்தல் ஒவ்வாதென்க.

சூ. 49 : ஒருபெயர்ப் பொதுச் சொல் உள்பொருளொழியத்
தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்
உயர்திணை மருங்கிலும் அஃறிணை மருங்கிலும் (49)

க-து : ‘பலபொருட்குப் பொதுவாகிய ஒன்றனை ஒருபெயரிட்டு வழங்கும் முறைமை கூறுகின்றது.

உரை : உயர்திணையிடத்தும் அஃறிணையிடத்தும் ஒரு பெயர் படுத்துச் சொல்லும் பல்பொருட்குப் பொதுவாகிய சொல்லை அவற்றுள் தலைமையும் பன்மையும் தெரிந்து பிற உள்பொருள் நீங்க ஒரு பெயரான் வேறு படுத்துக் கூறுக. பொதுச் சொல்லாவன. நாடு, சேரி, தோட்டம், காடு முதலியன.

எ-டு : பிறரும் வாழ்வாரேனும் பார்ப்பனச் சேரி என்பது தலைமை பற்றி ஒரு பெயர் கொண்டது. எயினர் நாடு என்பது பன்மை பற்றி ஒரு பெயர் கொண்டது. இவை உயர்திணைப் பொருள். பிறபுல்லும் மரனும் இருப்பினும் கமுகத்தோட்டம் என்பது தலைமை பற்றி ஒரு பெயர் கொண்டது. வாழைத் தோட்டம் என்பது பன்மை பற்றி ஒரு பெயர் கொண்டது. இவை அஃறிணைப் பொருள். தலைமை பற்றிக் கூறப்பெற்ற பொருளே பலவாக இருப்பின் அதுபன்மை பற்றியதாகும். பிறவும் அவ்

வாறே. இனி ஒன்றெென முடித்தல் என்னும் உத்திவகையான் பல்பொருட்டொகுதியன்றிப் பல்பொருட்கு உரியவாய் வரும் பொதுச் சொற்கும் இம்மரபு கொள்க.

எ-டு: பிறரும் செல்வாரேனும் அரசர் பெருந்தெரு புலவோர் அவை என வருவன தலைமை பற்றியும் பன்மைபற்றியும் உயர் திணைக்கண் வருவனவாம். ஆனதர், ஆதீண்டுகுற்றி, எருத்தில் என்பன தலைமையும் பன்மையும் பற்றி அஃறிணைக்கண் வருவன வாம். யாதானும் ஒரு பொருளான் பெயர்சுட்டவேண்டுதலின் இது தம்மரபினவாய் வந்த வழாநிலையாம் என்க.

சூ. 50: பெயரினும் தொழிலினும் பிரிபவையெல்லாம்
மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன. (50)

க-து: பாலறி கிளவியாகாமல் ஒருபாற்குரியவாய் மரபுபற்றி வரும் ஒருசார் பெயர்ச் சொல்லும் தொழிற்சொல்லும் தொடர் மொழியாக்கத்தின்கண் மயங்கல்கூடா என்கின்றது.

உரை: பெயரின் கண்ணும் தொழிலின் கண்ணும் ஒன்றற் குரியவாய்ப் பிரிந்துவரும் ஒருசார் சொற்கள்எல்லாம் வழக்குவழிப் பட்டனவாகலின் அவை மயங்கல்கூடா.

அஃதாவது வினையிற்றோன்றும் பாலறிகிளவியும் பெயரிற் றோன்றும் பாலறி கிளவியும் மயங்கல் கூடாமை போல, பாலறி விக்கும் ஈற்று இடைச்சொல் பெறாமல் செஞ்சொல்லாய், இவை ஆடூஉவிற்குரியன, இவை மகடூஉவிற்குரியன என வழக்குப் பற்றி வரும் சொற்கள் தொடர் மொழியாக்கத்தின்கண் மயங்கல் கூடா என்றவாறாம்.

'அணி' என்பது இருபாற்கும் பொதுவாயினும் தொடி மேகலை சிலம்பு முதலாயவை மகளிர்க்கே உரியவாயும் கழல், முடி, தோள் வளை (வாகை வளையம்) முதலியவை ஆடவர்க்கே உரியவாயும் வருதல் வழக்கு வழிப்பட்டவையாம்.

அங்ஙனமே தொழிலின்கண்ணும் வருமாறு:- மணந்து கோடல்வினை இருபாற்கும் பொதுவாயினும், வரைதல் ஆடவர்க் குரிய செயலாகவும் வாழ்க்கைப்படுதல் என்பது மகளிர்க்குரிய செயலாகவும் கூறுதல் வழக்கு வழிப்பட்டவையாம். எனவே, இம்மகளிர் தொடி செறித்தனர் எனவும் இவ்வீரர் கழல்யாத்தனர் எனவும் வருதல் வேண்டும். அன்றி

இவ்வீரர் தொடி செறித்தனர், இம்மகளிர் கழல்யாத்னர் என வருதல் மரபு மயக்கமாம்.

இனி, பெயரினும் தொழிலினும் பால்காட்டிப் பிரிந்து நிற்குமாறு; இவர்தம் மெல்லடி மேலன சிலம்பே, மௌவல் நாறும் கூந்தலார் இவர் குரவை பாடினர், இவர் யாவரும் தைந்நீராடினர், இவர் கோல மிட்டனர். என்பவை பெயரின் பிரிந்து மகளிரைச் சுட்டி நின்றன. இவர் விருந்து கண்டு சமைத்தார் என்பது தொழிலிற் பிரிந்து மகளிரைச் சுட்டி நின்றது.

இஃதவர் ஏந்தியவாள், அஃதவர் பகை தடுத்தகிடுகு, இன்றிவர் முடி கவித்தார், இவர் துணங்கையாடினார், இந்நால்வரும் மறை ஓதினர் என்பவை பெயரிற் பிரிந்து ஆடவரைச் சுட்டி நின்றன. இவர் பகையஞ்சப் போர்மேற் சென்றார் என்பது தொழிலிற் பிரிந்து ஆடவரைச் சுட்டி நின்றது.

ஏனையவும் இவ்வாறே மரபு பற்றி வருவன வெல்லாம் வழக்கு நோக்கி அறிந்து கொள்க.

இனி 'மொழிந்த பொருளோடொன்ற மொழியாததனையும் முட்டின்றி முடித்தல்' என்னும் உத்தி வகையான் அஃறிணைக்கண் இப்பொதுவன் நூறு எருமையுடையன் என்பதில் எருமை பெண்பால் என உணர நிற்பதும் இவ்வரசன் நூறு யானையுடையான் என்பதில் யானை ஆண்பால் உணர நிற்பதும் கொள்க. இனி இந் நூற்பாவிற்கு உரையாசிரியன்மார் கூறிய பெயரும் தொழிலுமாகிய சொற்கள் தாமே பிரிந்து நிற்றற்கேற்பன ஆதலை அறிக. அவர் கூறிய ஆணொழி மிகுசொல்லும் பெண்ணொழி மிகுசொல்லும் வேறுபடுவினையினும் இனத்தினும் சார்பினும் (கிள — 53) என்பதனானும், தெரிபு வேறுநிலையலும் குறிப்பிற்றோன்றலும் (பெய–4) என்பதனானும் பெறப்படுவனவாம். அஃதாவது "வடுக அரசர் ஆயிரவர் மக்களை உடையார்" என்பதில் அரசர் ஆயிரவர் என்னும் சார்பானும் குறிப்பானும் மக்கள் என்றது வீரரை என உரணநின்றதன்றி 'மக்கள்' என்னும் சொல் அக்குறிப்பினை உணர்த்தாமையறிக. பிறவும் இவ்வாறே ஓர்ந்தறிக. தொடி, குரவை, கழல், துணங்கை, சமைத்தல் உடலுதல் என்னும் சொற்களே மரபு வகையான் ஒரு பாலை ஒழித்து நிற்கும். இத்தகு தமிழ்மொழியமைப்பு நுட்பத்தை வெளிப்படுத்தும் இன்றியமையாத இச்சூத்திரத்திற்கு மற்றொன்று விரித்து மயங்கவைத்தனர் அவர்.

சூ. 51 : பலவயி னானும் எண்ணுத்திணை விரவுப் பெயர்
அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே [51]

க - து ; இருதிணைப்பெயர்களும் விரவிஒன்றனான் முடியுமாறு கூறுகின்றது

உரை : எண்ணுதற்கண் திணை விரவிவரும் பெயர்கள் பல இடத்தினும் செய்யுட்கண் அஃறிணை முடிபினவாம்.

எ - டு : வடுகர் அருவாளர் வான்கரு நாடர் சுடுகாடு பேய் எருமை என்றிவை ஆறும் குறுகார் அறிவுடையார் எனவரும்.

'பலவயினானும் அஃறிணை முடிபின' என்றதனான் சிலவயினான் உயர்திணை முடிபின என்றவாறாம்.

'பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார் மூத்தார் இளையார் பசுப்பெண்டிர் என்றிவர்கட்கு ஆற்ற வழிவிலங்கினாரே பிறப்பிடைப் போற்றி எனப்படு வார்' எனவும் பார்ப்பார் அறவோர் பசுப் பத்தினிப்பெண்டிர் மூத்தோர் குழவி எனுமிவரைக் கைவிட்டு எனவும் வரும். செய்யுளுள் அஃறிணை முடிபின எனவே வழக்கினுள் இருமுடிபும் கொள்ளப்படும்.

எ-டு : அரசனும் யானையும் வீரரும் களம்புக்கனர். எனவும் இவ்வூர் மக்களும் சோலையும் நீரும் யாவும் இனிய. எனவும் வரும்.

எண்ணப்படுதற்கண் யாவும் பொருட்பகுதியாய் அடங்கலின் அஃறிணை முடிபின எனக் கொண்ட தொல்லோர்மரபினை ஆசிரியர் செய்யுள்முடிபாகக் கூறினார் என்க.

சூ. 52 : வினைவேறுபடூஉம் பலபொரு ளொருசொல்
வினைவேறுபடாப் பலபொருளொருசொல் என்று
ஆயிரு வகைய பலபொரு ளொருசொல். [52]

க-து : பலபொருளொருசொல்லின் தன்மையும் அதனான் அஃது எய்தும் வகையும் கூறுகின்றது.

உரை : (சிறப்பு) வினையான் வேறுபடும் பலபொருளொரு சொற்கள் (பொது) வினையான் வேறுபடாத பலபொருளொரு சொற்கள் என அவ் இருவகையவாம் பலபொருளொரு சொற்கள்.

வேறுபடுவினை என்றது வேறுபடுத்துவதற்குரிய சிறப்புவினைகளை. வேறுபடாவினை என்றது வேறுபடுத்துவதற்கியலாத பொது வினைகளை. இவ்விருவகைவினைகளான் எய்தும் நிலைமையைப் பலபொருளொரு சொற்களின் மேல் ஏற்றி இருவகை என்றார். பின்னர் இலக்கணங்கூறுதற்கு அவற்றைக்குறியீடுசெய்து கொண்டார் என்க.

அஃதாவது 'கொடி' என்பது நிலத்து முளைத்துவரும் பொருளுக்கும், அடையாளமிட்டு எழுதப் பெற்ற சீலைக்கும் பிறவற்றிற்கும்

பொதுச்சொல். கொடி படர்ந்தது எனின் முல்லை முதலிய பூக்கொடிகளையும், கொடி பறந்தது எனின் புலிக்கொடி, கயற் கொடி முதலிய அரச அடையாளக் கொடிகளையும் படர்ந்தது, பறந்தது என்னும் வினைகள் உணர்த்தின. ஆதலின் அவை வேறு படுத்தும் சிறப்பு வினையாயின. கொடி அசைந்தது எனின் அசைதல் முல்லைக் கொடிக்கும், புலிக் கொடிக்கும் ஒக்குமாதலின் அது வேறுபடுத்தாத பொதுவினை ஆயிற்று. இங்ஙனம் வினை யான் வேறுபட்டும், வேறு படாதும் நிற்கும் நிலையை இருவகைய என்றார்.

எ-டு: திரை பரவிற்று (நீரலை) திரை அவிழ்ந்தது, (திரைச் சீலை) இவை வேறுபடுவினை,—திரை எழுந்தது, வேறுபடா வினை. மா பூத்தது (மரம்) மா ஓடிற்று (விலங்கு) இவை வேறுபடு வினை, மா வீழ்ந்தது வேறுபடா வினை. பிறவும் இவ்வாறே காண்க. பலபொருளொருசொல் இனத்தானும் சார்பானும் குறிப் பானும் வேறுபடுமாயினும் வேறுபடுத்தற்கண் வினைசிறப் புடைமையின் அதனாற் பெயர் கொடுத்தார் என்க.

வினை எனக் கூறினாரேனும் இம்மாவாயிரம், இம்மாவெளிறு, இம்மா ஏறு, இம்மாபெட்டை என வேறுபடுத்தும் பெயரும், மாஒன்று மாபல என பேறுபடுத்தாப்பெயரும் பயனிலை வகையான்வருதலும் கொள்ளப்படும்.

இனி, கடிமலர், கடிகா, கடிநுனைப்பகழி என்றாற் போலப் பலபொருள் பற்றி வரும் 'கடி' என்னும் உரிச்சொல் போல் வருவனவற்றை வினைவேறுபடாப் பலபொருளொருசொல் எனக் கொள்ளலாமோ எனின்? உரிச்சொற்கள் பெயர் வினைகட்கு அடையாக வந்து அவற்றின் பொருளை வேறுபடுப்பதன்றித் தனித்து நின்று அவை தாமே பொருள் தாராமையின் ஆகாதென்க.

சூ. 53 : அவற்றுள்
வினைவேறு படூஉம் பலபொரு ளொருசொல்
வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும்
தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே [53]

க - து : வினைவேறுபடூஉம் பல பொருளொருசொல் பொருள் உணர்த்து மாறு கூறுகின்றது.

உரை : மேற்கூறிய இரண்டனுள் வினையான் வேறுபடும் பல பொரு ளொருசொல் அவ்வப் பொருளை வேறுபடுத்தற்குரிய வினை யானும் இனத்தானும் சார்பானும் பொருள் தெரியும் நிலைமைக்கண் இதுவாவது இது எனத் தெரியுமாறு புலப்பட நிற்கும்.

எ - டு : மா பூத்தது. வினையான் மரமென்பது புலப்பட்டது மாவும் மருதும் ஓங்கின. இனத்தான் மரபென்பது புலப்பட்டது. வேனில் பிறந்தது இனி மாவிற்குக் காவல் வேண்டும். என்பது சார்பால் மரம் என்பது புலப்பட்டது. அக்காலத்து அது பயன் தருமாகலின். மா பாய்ந்தது (விலங்கு வினை) மாவும் யானையும் தேரும். (இனம்) கவசம் பூண்டு வந்தான் மாவைக் கொணர்க என்புழிச் சார்பு. இனமாவது இயற்கையானும் செயற்கையானும் ஒரு குழுவாய் அமைதற்கு இயைபுடைய பொருள். சார்பாவது நிகழ்ச்சியானும் சூழலானும் ஒருவாற்றான் இயைபுடைய பொருள்.

இனி ஒன்றென முடித்தலான் பாற் பொதுவாக நிற்கும் அஃறிணை இயற்பெயர்களும் உயர்திணைப் பன்மைப் பெயர்களும் வேறுபடுவினை முதலியவற்றான் ஒருபாலை வரைந்து சுட்டுதல் கொள்க.

எ - டு : இப் பெற்றம் உழுதது (ஆண்) இப்பெற்றம் கறக்கும் (பெண்). இவ்யானை மதங்கொண்டது (ஆண்) இவ்யானை வயாவுற்றது (பெண்) இம்மக்கள் வேட்டையாடினர் (ஆண்) இம் மக்கள் கிள்ளை ஓப்பினர் (பெண்) என வரும்.

சூ. 54 : ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்
வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொல்
நினையுங் காலைக் கிளந்தாங் கியலும் [54]

க-து : வினைவேறுபடாப் பலபொருளொருசொல் பொருளுணர்த்துமாறு கூறுகின்றது.

உரை : ஒன்றுபடும் வினைப்பகுதியான் பலவற்றொடும் பொருந்தி வரும் வினையான் வேறுபடாத பலபொருளொருசொல் ஆராயுங்கால் இதுவாவது இது என்று ஆங்குக் கிளக்கப்பட்டு வரும்.

"ஒன்று வினை மருங்கின் ஒன்றித் தோன்றும்" என்பது வினை வேறுபடாப் பலபொரு ளொருசொற்கு அடையாய் அதனை விளக்கி நின்றது. இதனைத் தனிச் சூத்திரமாகக் கொள்ளின் அஃது மாறுபடக்கூறலாய் முடியுமென்க. ஒன்றுவினை = பொது வினை. அவையாவன : வளர்ந்தது, வீழ்ந்தது, இனிது, பெரிது என்றாற்போல வருவன. கிளந்து கூறலாவது இன்னது என எடுத்து விளங்கக்கூறல்.

எ-டு : மரமா வளர்ந்தது, பரிமா வளர்ந்தது, முல்லைக்கொடி அசைந்தது மீன்கொடி அசைந்தது. எனவரும். இனிப் பரவாக்

கொக்கு, பாயா வேங்கை பூவா வேங்கை எனச் சிறப்பு வினையை மறுத்துக்கூறுதலும் கிளந்து கூறுதலாய் அடங்கு மென்க.

**சூ. 55 :** குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி [55]

**க-து :** பலபொருட் பொதுச்சொல்லைக் கிளக்குமாறு கூறுகின்றது.

**உரை :** சில பொருட்குப் பொதுவாகிய சொல்லினை ஒரு பொருளைக் குறித்துக் கூறுவோன் அக்கூற்றினை இன்னது எனத் தெரிவிக்கும் மொழியோடு கூறுக.

'நோக்கு' 'நோக்கம்' என நின்றாங்குக் கூற்று, கூற்றம் என நின்றது. கிள என்னும் முதனிலைத் தொழிற்பெயர் ஏவற்பொருள் தரும் இகரவிகுதிபெற்று வருதி—பெயர்தி என்றாற்போல ஏவல் கண்ணியவியங்கோளாய்க் கிளத்துக என்னும் பொருள்பட நின்றது. [ இள + வ் + இ = கிளவி ] குறித்துக் கூறுவோன் (குறித்தோன்) என்றதனான் அஃது பலபொருட்குரிய பொதுச்சொல் என்பது பெறப்பட்டது. அவையாவன : பார்ப்பு, பறழ், முதலாய இளமைப் பெயர்களும் ஏறு ஏற்றை முதலிய ஆண்பாற் பெயர்களும் பேடை, பெட்டை, முதலாய பெண்பாற்பெயர்களும் புள், விலங்கு, புல், மரம் முதலியவற்றின் சாதிப் பெயர்களும் பிறவுமாம்.

**எ-டு :** 'கன்று' என்பது யானை, ஆன், மரம், புல் முதலிய வற்றின் இளமைப் பெயர் ஆதலின் கன்றினைப் போற்றுக, கன்றிற்கு நீருட்டுக எனப் பொதுவில் கூறாமல், ஆன்கன்று மாங்கன்று எனவும், ஏறு வந்து எனப் பொதுவிற் கூறாமல் ஆனேறு வந்தது, அரியேறு வந்தது எனவும், சேவல் என்பது பறவைகட் குரிய ஆண்பாற் பொதுப் பெயராகலின் சேவலைக் கொணா எனப் பொதுவிற் கூறாமல் கோழிச் சேவல் குயிற்சேவல், அன்னச் சேவல் எனவும் இவ்வாறே கோழிப் பெடை மயிற்பெடை எனவும் தெரித்து மொழியாற் கிளக்கப்பட்டு வரும்.

இனி, குறிப்பானும் முன்னும் பின்னும் வரும் நிகழ்வுகளானும் கேட்போர்க்குத் தான் குறித்த பொருள் திரிபின்றி விளங்கிநிற்கு மாயின் வாளா கூறப் பெறுமென்க.

**எ-டு :** கன்று குணிலாக் கனியுகுத்த மாயவன் (சிலம்பு) கன் றாற்றுப்படுத்த புன்றலைச்சிறார் (குறு-24) சேவலங்கொடியோன் காப்ப (குறு-1) நிவந்தோங் குயர்கொடிச் சேவலோயே (பரி-3) என வரும்

ஒருபெயர்ப்பொதுச்சொல், வேறுவினைப்பொதுச்சொல், பல பொருள் ஒருசொல், விரவுப் பெயர்கள், விரவு வினைச் சொற்கள், மரபுப்பெயர்கள் ஆகியவை ஒரு பொருளை வரைந்துணர்த்தாமல் பொதுவாக வருவனவாகும். அவற்றுள் முன்னின்ற மூவகையும் மேல் எடுத்தோதப் பெற்றன. விரவுப் பெயரும் விரவு வினையும் பின்னர் அவ்வவ்வியலுட் கூறப்பெறும். எஞ்சிய மரபுப்பெயர் தொடர்மொழிக்கண் ஆக்கம் பெறுமிடத்து அவை பொருளை வரைந்துணர்த்துமாறு இச்சூத்திரத்தான் கூறப்பட்டது என்க.

பல பொருள் ஒரு சொல் அதிகாரப்பட்டமையின் பல் பொருட் பொதுப் பெயரின் இயல்பினையும் முறையானே ஓதினார் என உணர்க.

இச்சூத்திரத்தின் பயனை ஓராமல் உரையாசிரியன்மார் வடமொழி மரபை உட்கொண்டு பொருள் கூறியுள்ளனர். அவர் கூறிய பொருண்மை "செப்பும் வினாவும் வழால் ஓம்பல்" என்னும் பொது விதியானும், "ஆக்கந்தானே காரண முதற்றே" என்னும் சூத்திரத்தானும் பெறப்படும்.

சூ. 56 : குடிமை ஆண்மை இளமை மூப்பே
அடிமை வன்மை விருந்தே குழுவே
பெண்மை அரசே மகவே குழவி
தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி
காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொல் என்று
ஆவறு மூன்றும் உளப்படத் தொகைஇ
அன்ன பிறவும் அவற்றொடு சிவணி
முன்னத்தின் உணரும் கிளவியெல்லாம்
உயர்திணை மருங்கின் நிலையின வாயினும்
அஃறிணை மருங்கிற் கிளந்தாங்கியலும் (56)

க-து : உயர்திணைப் பாங்கினவாய்வரும் ஒருசார் சொற்களைப் பற்றிய ஐயமகற்றுகின்றது. இஃது 'உயர்திணை என்மனார் மக்கட்சுட்டே' என்னும் சூத்திரத்திற்குப் புறனடை.

உரை : குடிமை முதலாக விறற் சொல் ஈறாகக் கூறப்பெற்ற அப்பதினெண் சொற்களும் உளப்பட அவை போல்வனபிறவும் அவற்றொடுபொருந்தித் தொக்குச் சொல்லுவோன் குறிப்பினான் உயர்திணைப் பாங்கினவாய் நிலைபெற்றனவாயினும் அவை

அஃறிணையிடத்தவாய்க் கிளக்கப் பெற்று அஃறிணையாக நடை பெறும். என்றது: குடிமை முதலாயவை பொருளான் உயர் திணைப் பாங்கின எனினும் சொல்முடிபான் அஃறிணையாயே நிகழும் என்றவாறு.

இவற்றுள் குடிமை, விருந்து, அரசு, தன்மைதிரிபெயர், செறற் சொல், விறச்சொல் ஆகியவை உயர்திணைப் பொருட்குரிய பண் பாகலின் "உயர்திணை மருங்கின் நிலையின வாயினும்" என்றார்.

ஆண்மை, இளமை, மூப்பு, வன்மை, குழு, பெண்மை, மக, குழவி, உறுப்பின் கிளவி, காதல், சிறப்பு, ஆகியவை இரு திணைக்கும் பொதுவாயினும் சொல்லுவோன் குறிப்பினான், உயர் திணை மருங்கின் நிலை பெறுமாயின் அவற்றை உயர்திணைப் பண்பாக அறிதல் வேண்டுமென்பார் "முன்னத்தின் உணரும் கிளவி" என்றார்.

குடிமையாவது சால்பு, இதனை மடிமை குடிமைக்கட் டங்கின் (குற - 608) என்பதனான் அறிக. ஆண்மையாவது ஆளுந்தன்மை இதனைப் பிறப்பே குடிமை ஆண்டொடு (மெய் – 22) என்பதனான் அறிக. இளமை இளையாரையும்,முதுமை முதியாரை யும் கருதிவருதலை இளமைக்கு உலகியல் தெரியாது. மூப்பில்லா அவையில் முறையிட்டுப் பயனில்லை எனவரும் வழக்கியலானறிக.

அடிமை என்பது, அடிமைக்கு அரசாளும் உரிமையில்லை என வழங்குதலானறிக. இவ்வன்மைக்கு எதிர்நிற்பார் யார்? என வழங்கு தலானறிக. விருந்து என்பதும் உயர்திணைப் பண்பேயாம். அதனை விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை(சிலம்பு 2-6-73) 'விருந்து புறத்ததாத்தானுண்டல்' (குறள் - 82) என்பவற்றா னறிக.

குழுவென்பது குழுவினரை உணர்த்தலை ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும் என்பவற்றான் அறிக. பெண்மையாவது சாயல் (பெண்மைத் தன்மை) அஃது அதனை உடையாளைக் கருதி வருதலை "மடலேறாப் பெண்ணிற் பெருந்தக்கதில்" (குற-1137) என்னபதனானறிக. அரசு என்பது அரசனை உணர்துவதை "மறனிழுக்கா மானமுடையதரசு" (குற - 384) என்பதனா னறிக. மகவு குழவி என்பவை உயர்திணைக் காதலை "குழவியும் மகவும் ஆயிரண்டல்லவை கிழவவல்லமக்கட் கண்ணே" (மரபி- 23) என்பதனானறிக. தன்மைதிரிபெயர் என்றது ஆண் தன்மையும் பெண் தன்மையும் இல்லாத அலி. பொருளைப்பெயர் என்றார், முடிவு அதன் கண்ணதாகலின் உறுப்பின்கிளவி என்பது உறுப் பினைப் பற்றிய பண்பினை 'ஊமை வந்தது, செவிடு வந்தது'

என வரும். குருடு, முடம் என்று காட்டுவர் உரையாளர், அவை அஃறிணைக்கும் ஏற்றலின் உயர்திணை மருங்கின் நிலை பெறுவன அல்ல. காதல் என்பது காதலரை உணர்த்துவதனை அவன் தன் காதல் துணையாகக் கடஞ்சென்றான் என்றும், அவள் தன்காதலை எதிர்நோக்கி ஆற்றியிருக்கிறாள் எனவும் வழங்கும் வழக்கான் அறிக சிறப்பாவது: தலைமை, அஃது அவைத்தலைமை எங்குற்றது என்றாற் போலவரும், செறற்சொல்: வெறுப்பினைப் புலப்படுத்தும் சொல். அது பொறியறை, போக்கிலி என்றாற் போலவரும். விறற் சொல்: வெற்றியைக் கருதி வரும் சொல், பெருவிறல் புரிந்த போர். அருந்திறல் செய்த செயல் என்றாற்போல வரும்.

அன்னபிறவும் என்றதனான் வேந்து, குரிசில், ஏந்தல், ஆயம், அமைச்சு, தூது, ஒற்று முதலாயின கொள்க.

இச்சூத்திரம் "உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே" என்றமையான் இவை மக்கட் பண்பாகலின் உயர்திணை முடிபு கொள்ளுங்கொல்: என நின்றதோர் ஐயங்களைந்தது, இவை உயர்திணைப் பால் காட்டுதற்குரிய ஈற்றிடைச் சொற்களொடு கூடாதவழி, சொல் நிலையான் அஃறிணைச்சொல்லேயாம் என்றும் அதனான் அஃறிணை முடிபே கொள்ளும் என்றும் தொடர் மொழி யாக்கம் பற்றிக் கூறிற்றென்க.

சூ. 57: காலம் உலகம் உயிரே உடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூதம்
ஞாயிறு திங்கள் சொல் என வரூஉம்
ஆயீ ரைந்தொடு பிறவும் அன்ன
ஆவயின் வரூஉம் கிளவி யெல்லாம்
பால்பிரிந் திசையா உயர்திணை மேன. [57]

க-து: உயர்திணை மருங்கின் பால் பிரித்திசைக்கும் எனக்கூறிய தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவிகள் பற்றிய ஐயமகற்றுகின்றது. இஃது 'பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்' (கிள—4) என்னும் சூத்திரத்திற்குப் புறனடையாகும்.

உரை: காலம் முதலாகச் சொல் ஈறாகக் கூறப்பெற்ற அப் பத்துச் சொற்களொடு அத்தன்மையனவாகிய பிறவுமாய்த் தெய்வஞ்சுட்டிய பெயராக அவ்விடத்து வரும் சொற்கள் எல்லாம் உயர்திணை மருங்கினவாய்ப் பால் பிரித்திசைக்க மாட்டா. அஃறிணையாயே முடியும்.

காலம் என்றது காலக் கடவுளை (இயமன், கூற்றுவன் காலன்) உலகம் என்றது நிலத்தெய்வத்தை (புவிமகள், நிலமகள், மண்மகள்) உயிர் என்றது உயிர்க்கிழவனை (சீவன், ஆன்மா, மன்உயிர்) உடம்பு என்றது தெய்வப்படிமத்தை (மூர்த்தி, கல்நின்றவீரர், அருச்சனைமூர்த்தி) பால்வரை தெய்வம் என்றது கந்தழியை (இலிங்கம், நடுதறி) அஃது "அவன் அவள் அது" எனப்பாற் பொதுமையாக நிற்றலின் கந்தழி பால்வரை தெய்வம் எனப் பட்டது. வினை என்றது நல்லூழும் அல்லூழுமாகிய ஊழினை (விதி—ஊழ்) பூதம் என்றது தெய்வப்படையினை (பூத கணங்கள்) ஞாயிறு—கதிரவன், திங்கள்—நிலாமண்டிலம், சொல்—நாம களாகிய தெய்வம்.

அன்னபிற என்றதனான், கனலி, காற்று, நீர், ஆகாயம் முதலிய பூதங்களும் செவ்வாய், புதன் முதலிய கோள்களும், அருந்ததி முதலாய விண்மீன்களும் அணங்கு முதலாய தெய்வக் கூறுகளும் கொள்க. இவை அஃறிணையான் முடியுமாறு :

இவரைக் காலம் கவர்ந்தது—நிலத்தெய்வம் வியந்தது—உயிர் வீடுற்றது. உடம்பு ஒளி பூத்தது—நடுதறி அருளிற்று—நல்வினை வாய்த்தது—பூதம் புடைத்தது — ஞாயிறு எழுந்தது—திங்கள் நிலவிற்று — சொல் விளங்கிற்று — கனலி ஓங்கிற்று. அணங்கு அணங்கிற்று எவரும்.

இச்சூத்திரம், தெய்வம் சுட்டிய பெயர் நிலைக்கிளவியும் இவ்வென அறியும் அந்தந் தமக்கில உயர்திணை மருங்கிற்பால் பிரிந்திசைக்கும்" என்றமையான் இத்தெய்வஞ் சுட்டிய பெயர்கள் உயர்திணை முடிபு கொள்ளும் கொல்? எனவரும் ஐயத்தை நீக்கி அவை பால்காட்டும் ஈற்றிடைச் சொல் பெற்றாலன்றி உயர்திணை மருங்கின் இசையா எனக்கூறிற்று என்க.

இவை தத்துவப் பொருளாய் உருவகம் பெறாத தெய்வப் பெயர்களே எனினும், சொல்லான் அஃறிணையே ஆதலின் உயர் திணை மருங்கின்பால் பிரிந்திசையா என்க.

இவ்விரு நூற்பாக்களும் "உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே" தெய்வஞ்சுட்டிய பெயர்நிலைக் கிளவி" என்பவற்றிகுப் புறனடையாய்ப் பாலறிகிளவி மயங்கல் கூடா எனத் தொடர்மொழியாக்கத்திற்குரிய மரபு கூற எழுந்தன என்பதை ஊன்றிநோக்காமல் உரையாசியன்மார் தத்தமக்குத் தோன்றிய வாறு கூறிச்சென்றனர்.

உரையாளர் 'இவற்குக் குடிமை நன்று' எனக் காட்டிக் குடிமை அஃறிணை முடிபு கொண்டது என்ப. ஆண்டு எழுவாயும் அஃறிணையே யாதலறிக. 'பாவை, யானை' என்பவை ஒப்புமை கருதாது காதல் பற்றி வந்தன என்ப. உவமை நிலைக்களனாக ஆசிரியர் 'சிறப்பே நலனே காதல் வலியொடு அந்நாற்பண்பும் நிலைக்களன் என்ப' (உவவ—4) எனக் கூறியிருத்தலின் ஒப்புமை கருதாது எவ்வாறு வரும்? உயிரும் உடம்பும் மக்களுடையவை எனச் சேனாவரையர் வலிந்துவிளக்கம் கூறுவார், கூறி உயிர்நீத்து ஒருமகன் கிடந்தான், அறஞ்செய்து சுவர்க்கம் புக்கான் என எடுத்துக் காட்டுவார். இவை உயர்திணைச் சொல்லாய் உயர்திணை முடிபு கொண்டனவேயாம். இங்ஙனம் கூறியவர் உயர்திணைப் பொருளாளாய் அஃறிணை முடிபு கொண்டன வற்றைக் காட்டவேண்டாவோ? இவ்வாறே ஏனைஉரையாளர் கருத்துக்களையும் ஆய்ந்துநோக்கி உண்மை உணர்க.

சூ. 58 : நின்றாங் கிசைத்தல் இவண் இயல்பின்றே [58]

க-து : மேற்கூறிய சொற்கள் பற்றிய மரபினை வலியுறுத்துகின்றது.

உரை : அஃறிணை மருங்கிற் கிளந்தாங்கியலும் எனப்பட்ட சொற்களும் பால் பிரிந்திசையா உயர்திணை மேன. எனப்பட்ட கிளவிகளும் கூறப்பட்ட இவ்வடிவான் நிற்குமிடத்து உயர்திணையாக இசைத்தல் இலக்கணமாதல் இல்லை. அஃறிணையாயே இசைக்கும்.

வரும் நூற்பாவின்கண். வேறிடத்தான என்பதனான் ஈண்டு இவண் என்றது இடத்தை உணர்த்திநின்றது. இடமாவது குடிமை முதலிய பண்புப் பொருளையும் காலம் முதலிய தெய்வப் பொருளையும் இடமாகக் கொண்டு நிற்கும் நிலையாகும். நின்றாங் கிசைத்தல் இயல்பின்று என்றதனான் நிலைவேறுபடின் இசைக்கும் என்பது கருத்தாகலின், கூறியதுகூறலாகாமை உணர்க. எடுத்துக்காட்டு மேற்காட்டப்பெற்றன.

சூ. 59 : இசைத்தலும் உரிய வேறிடத் தான [59]

க-து : மேற்கூறிய சொற்களுக்கும் கிளவிகளுக்கும் ஆவதொருமரபு கூறுகின்றது.

உரை : மேற்கூறிய சொற்களும் கிளவிகளும் வேறு நிலைமைக்கண் உயர்திணையாய் இசைத்தற்கும் உரியவாம்.

உம்மை எதிர்மறை. இடம் என்றது நிலையை. வேறு நிலையாவது ஈறுதிரிந்து வேறுபடுதலும் முழுதுந்திரிந்து வேறு படுதலுமாம்.

எ-டு : குடிமையன் வந்தான். பெருந்திறலோன் வென்றான் எனவரும். இவை ஈறுதிரிந்து உயர்திணையாயிசைத்தன. நிலமகள் (உலகம்) செழித்தாள். நாமகள் (சொல்) அருளினாள். எனவரும் இவை முழுதும்திரிந்து உயர்திணையாய் இசைத்தன.

அவற்றுள் ஈறுதிரிதற்கேலாத குழவி, தன்மைதிரிபெயர், உயிர், உடம்பு, ஞாயிறு, திங்கள் போல்வனவற்றை நீக்குதற் பொருட்டு "நின்றாங்கிசையா வேறுபட்டிசைக்கும்" என ஒருங்கு ஒரு சூத்திரமாகக் கூறாமல் பிரித்துக் கூறினார் என்க.

சூ. 60 : எடுத்த மொழிஇனஞ் செப்பலும் உரித்தே [60]

க-து : இனம் உள்வழிச்செப்பு நிகழ்த்தும் மரபாமாறு கூறுகின்றது.

உரை : ஒரு பொருளைப்பற்றிச் செப்பாக மொழிந்த சொல் அதற்கு இனமான பொருளை ஒருங்கு உணர்த்தற்கும் உரித்தாகும்.

உம்மையான் இனம் செப்பாமைக்கும் உரித்தாகும் என்க. இனப்பொருட்கருத்து உள்ள இடத்தன்றி இப்பொருட்பேறு நிகழாதாதலின் பிறபொருள் என்னாது, இனம் செப்பலும் என்றார்.

எ-டு: ஈகை புகழைத்தரும், கல்வி அறிவைப் பெருக்கும், அளவறிந்துண்பான் இன்புறும். என்றவழி கூறுவோனுக்கு இனக் கருத்தை உணர்த்துதலும் கருத்தாயின், ஈயாமை இகழைத்தரும். கல்லாமை அறிவைச் சுருக்கும் கழிபேரிரையான் துன்புறும் என்னும் பொருள் உடன்தோன்றி நிற்கும்.

அரசு வாழ்க, அந்தணர் வாழ்க, தமிழ்வளர்க, என்ற வழி அரசல்லார் வீழ்க அந்தணரல்லார் வீழ்க தமிழ் அல்லவை சுருங்க என்னும் கருத்துத் தோன்றாவாகலின் இவைபோல்வன இனஞ் செப்பாவாம்.

இனி, தென்சேரிக் கோழி வென்றது என்புழி வடசேரிக்கோழி தோற்றது எனவருதல் இனஞ் செப்புதலாகாது. என்னை? ஒன்று தோற்றாலன்றி ஒன்றற்கு வெற்றிகிட்டாது ஆகலின் இவை போல்வன பொருளாற்றலாற் பெறப்படுவனவாம். ஆவாழ்க அந்தணர் வாழ்க என்போன் பிறவும் பிறரும் வீழ்க என்னும்

கருத்தினனாயின் அவை இனஞ்செப்பினவாகாவோ? எனின், அக்கருத்தினனாயின் ஆக்களே வாழ்க, அந்தணரே வாழ்க என விதந்து கூறுதலன்றி இங்ஙனம் கூறுதல் மரபன்று என்க. அவ்வழி ஏகாரம் பிறவற்றைப் பிரித்தல் காண்க.

இனி, ஒன்றென முடித்தல் என்னும் உத்தியான் சோறுண்டான் என்றவழிக் கறியும், துவையும், நீரும் உடன் உணப்பட்டமை உணர்த்தலும், பறைமுழங்கிற்று என்றவழிக் கொம்பு முதலியவை உடன் இசைக்கப்பட்டமை உணர்த்தலும், நஞ்சுண்டாம் சாம் என்றவழி ஏனைப்பாலும் உடன் உணர்த்தலும் பரதவர் சென்ற படகு கவிழ்ந்தது என்புழிப் பரதவரும் கவிழ்ந்தார் என உணர்த்தலும், குடத்தைச் சுமந்து சென்றவன் வீழ்ந்தான் என்புழிக்குடமும் வீழ்ந்தது என உணர்த்தலும் இவை போல்வன பிறவும் இனஞ் செப்புதலாகக் கொள்க.

சூ. 61 : கண்ணும் தோளும் முலையும் பிறவும்
பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி
பன்மை கூறும் கடப்பா டிலவே
தம்வினைக் கியலும் எழுத்தலங்கடையே [61]

க - து : பன்மையாகவே உள்ள சினைக் கிளவிகள் பயனிலை கொண்டு முடியும் மரபாமாறு கூறுகின்றது.

உரை : கண்முதலாயினவும் அவைபோல்வன பிறவுமாக இரு திணையிடத்தும் பன்மைப் பொருளாயே வரும் உறுப்புப்பூற்றிய பெயர்ச்சொற்கள், தமக்கொத்த பன்மை வினையொடு முடிதற்குரிய எழுத்துப் பெறுதல் அல்லாத இடத்துப் பன்மை வினையொடு கூறும் யாப்புறவு உடையன அல்ல.

என்றது: அவை'கள்' என்னும் இறுதிநிலை பெறாதவழி ஒருமை வினையான் கூறுதல் வழாநிலையே என்றவாறாம். பன்மை கூறலாவது: பன்மை வினைமுடிபாகக் கூறுதல். தம்வினைக் குரிய எழுக்தாவது: கள் என்னும் ஈற்றிடைச் சொல். கண் முதலாயவை பன்மையாகவே தோன்றும் பொருளாகலின் அவை ஒருமைக்கும் பன்மைக்கும் உரிய அஃறிணை இயற்பெயரா காமையின் அவை பற்றிய மரபினை விதந்து கூறினார் என்க.

எ-டு : கண் நன்று, தோள் நன்று, கண் பெரிது; தோள் வலிது எனவரும். தம்வினைக்குரிய எழுத்தாகிய கள் என்பதனொடு கூடிவரின் கண்கள் நொந்தன—முலைகள் எழுந்தன—தோள்கள் வலியன எனவரும்.

பிற என்றதனான் காது புருவம் முதலாய பன்மை உறுப்புக்கள் யாவும் கொள்க. "கடப்பாடிலவே" என்றதனான் சிறுபான்மை கண்நல்ல, தோள்வலிய. "அவன் கோலினும் தண்ணிய தட மென்றோளே" எனப்பன்மை வினைக்கண்ணும் ஒருமைச் சொல் லாகவருதலும் கொள்க. 'தம்வினைக்கியலும் எழுத்தலங் கடையே' என்றதனான் தம் முதல்வினைக்குரிய எழுத்தான் நடக்குமிடத்து முதல் ஒன்றாயின் ஒருமையாகவும் முதல் பலவாயின் பன்மையாகவும் முடியும் என்று கூறி உரையாசிரியன்மார் கண் நல்லன், தோள் நல்லள், கண் நல்லர், தோள் நல்லர் என எடுத்துக் காட்டுவார். அவர்கூறும் நல்லன், நல்லர் என்பவை இவன், இவள், இவர் என மறைந்து நிற்கும் எழுவாய்குரிய முடிபாதல் அன்றிச் சினைக்குரிய முடிபாகாமை அறிக. பன்மைச் சினை நிலைக்கிளவிகள் எழுவாயாய வழிமுடியும் முடிபுபற்றிய ஆராய்ச் சியே இச்சூத்திரத்தாற் பேசப்படுதலின் அவ்வுரை பொருந்தாமை புலப்படும்.

கிளவியாக்கம் முற்றியது.

---

## 2. வேற்றுமையியல்

கிளவியாக்கத்துள் பாலறி கிளவிகளும், தம்மரபினவாகவருப வைகளும், செப்பாகவும் வினாவாகவும் தம்முள் தொடருங்கால் அவை மயங்கல் கூடா எனத்தொடராக்க மரபுகளைப் பற்றிக் கூறிய அத்தொடர்களுள் வரும் சொற்கள் அல்வழியாகவும் வேற்றுமை வழியாகவும் புணருமாதலின் அவை தொகையாகவும் தொடராகவும் வேற்றுமைப் பொருள்படப் புணர்ந்து தொடருங்கால் அவற்றை வேறுபடுத்திக் காட்டும் உருபுகள் ஆறு என்பதும், அவை விரிந்தும் மறைந்தும் புணர்ந்து வரும் தொடர்கள் வேற்றுமைத்தொடர் களாகும் என்பதும், வேற்றுமை உருபுகளான் வேறுபடாத தொடர் களெல்லாம் அல்வழித்தொடர்களாகும் என்பதும் எழுத்ததிகாரத்துப் புலப்படுத்தினார். (சூ - 113)

அங்ஙனம் ஐம்முதலாகக் கண் ஈறாகக் கூறப்பெற்ற உருபுகளின் அடிப்படையில் வேறுபடும் அமைப்புப் பற்றியும், உருபுகளான் வேறுபடாத தொடரமைப்புப் பற்றியும் ஈண்டு உணர்த்துவாராய் அவற்றை மூன்று இயல்களாக வகுத்துக் கூறத்தொடங்கி முதற்கண் வேற்றுமை உருபுகள் விரிந்துவரும் தொடர்களுள் வேற்றுமை

நிலைகளைப்பற்றி இவ்வியலுட் கூறுகின்றார். வேற்றுமையாவது யாதானும் ஒரு நிலையை இயல்பாகக் கொண்டு அந்நிலையினின்று திரிபுறுதலாகும். ஒரு தொடரின்கண் அமைந்துள்ள சொற்பொருள் வேறுபடாத நிலை இதுவென்றும், அதுவேறுபடும் முறைமை இது வென்றும், வேறுபடுத்துவது இதுவென்றும் விளக்குதலின் இவ்வியல் வேற்றுமையில் எனப்பட்டது.

ஈண்டு இயல்புநிலை என்பது எழுவாய் வேற்றுமைப்பொருளாகும். அது செயப்படுபொருள் முதலாக வேற்றுமைப்படுதலே வேற்றுமைத் தொடராகும். எழுவாய் வேற்றுமை திரிபுறாதது எனின் அதனை முதல் வேற்றுமை என்பது முரணாம் எனின், ஆகாது என்னை? பொருளைச் சுட்டும் சொற்கள் யாவும் பெயர் என்பதும் அப்பொருளின் இயல்பினையும் புடை பெயர்ச்சியையும் சுட்டும் சொற்கள் யாவும் வினை என்பதும் தமிழிலக்கணமாகும். அங்ஙனம் ஒருபொருளைச் சுட்டி அதுபற்றிச்செப்பும் வினாவும் நிகழ்த்துங்கால் பன்னூறு வகையான பொருள்களிநின்று அப் பொருள் பிரிக்கப்பட்டுத் தலைமை பெறுதலின் அஃது எழுவாயாக ஆகின்றது. அங்ஙனம் பிரித்தலால் தனிமைப்படும் நிலைமையே அஃது எய்தும் வேறுபாடாகும். அவ்வேறுபாடு அடிப்படையாதலின் அங்ஙனம் பெயர்தோன்றி நிற்கும் நிலையை முதல் வேற்றுமை எனத் தொல்லாசிரியர் வகுத்தனர். அஃது உருபினான் வேறு படாமை நோக்கி அல்வழியுள் அடக்கினர். விளி வேற்றுமையும் படர்க்கைநிலை மாறி முன்னிலையாகப் பொருள் வேறுபடுதலின் அதனை எட்டாம் வேற்றுமை என்றனர். அஃது உருபினான் திரிபுறாமையின் அதுவும் அல்வழியுள் அடக்கப்பட்டது.

ஐ முதலிய ஆறு உறுபுகளை ஏற்று வேற்றுமையடைவது பெயர் (பொருள்) ஆதலின் வேற்றுமை இலக்கணத்தைப் பெயர் இலக்கணத்தொடு கூறாமல் பிரித்துக் கூறியது என்னை எனின்? வேறுபடுவது பெயர் (பொருள்) ஆயினும், அவ்வேறுபாட்டினைச் செய்வது வினைச் சொல்லாகலானும், அவ்வேறுபாட்டினைப் புலப் படுத்துவது உருபாகிய இடைச்சொல்லாகலானும், பெயர், வினை இடை என்னும் மூன்றற்கும் உரிமையுடையதனை ஒன்றனுள் அடக்குதல் நெறியாகாமையான் பிரித்துக்கூறப்பட்டது. அன்றியும்

பெயர் முதலிய நான்கு இயல்களிற் கூறப்பெறும் இலக்கணம் அவ்வவற்றின் இயல்பும் மரபும்பற்றிய தனிச்சொற்களின் இலக்கண மாகலின் தொடர்மொழிகளாற் புலப்படுவதாகிய இதனை அவற் றொடு கூறலாகாமையின் கிளவியாக்கத்தையடுத்துப் பெயரி யலுக்கு முன் வைக்கப்பட்டதென்க. பெயர்ப்பொருள் வினையான்

வேற்றுமை எய்தும் என்பதனை வேற்றுமையங்கியல் 29-ஆம் நூற்பாவானும், வேற்றுமை இலக்கணத்தைத் தொடர்மொழிக்கண் காணல் வேண்டுமென்பதனை 22-ஆம் நூற்பாவானும் அறிக.

இனி எழுவாய் வேற்றுமையாகிய பெயர் செயப்படுபொருள் முதலாக வேறுபடும் நிலையும், அவற்றின் பொருள் வகையும் அவற்றின் பெயரும் பிறவும் பற்றி வரையரை கூறும் பகுதியை வேற்றுமையியல் என்றும், அப்பொருள்களும் உருபுகளும் கூறிய முறையினின்று மாறித் தம்மரபினவாய் மயங்கிவரும் நிலையையும் வேற்றுமை பற்றிய பிறமரபுகளையும் கூறும் பகுதியை வேற்றுமை மயங்கியலென்றும், எல்லாப் பெயர்களும் விளிகொள்ளாமை பற்றியும், கொள்ளும் பெயர் இவை என்பது பற்றியும் தனக்கென உருபுநிலை இல்லையேனும் ஈறுதிரிதல் முதலான வேறுபாடுறுதல் பற்றியும் எட்டாம் வேற்றுமையது மரபு கூறும் பகுதியை விளிமரபு என்றும் பெயரிட்டு மூன்றியலாக வகுத்துக் கூறுகின்றார்.

இனி, உரையாசிரியன்மார் கிளவியாக்கத்தையடுத்து வேற்றுமையியலை வைத்ததற்குக் காரணம், இதுவும் பெயரிலக்கணமாதல் பற்றிப் பெயரியலொடு வைக்கப்பட்டதென்றும், பெயரும் இடைச்சொல்லுமாக வருதலின் பொதுவிலக்கணமாதல் கருதிக் கிளவியாக்கத்தின் பின் வைக்கப்பட்டதென்றும் கூறுவர். மேலும் பெயரிலக்கணமாகிய உருபேற்றலும் காலங்காட்டாமையும் இயைபு பட்டமையான் ஈண்டு ஓதப்பட்டன எனச் சேனாவரையர் கூறுவார். அவ்வுரைகள் நூலாசிரியர் கருத்திற்கும் சூத்திர அமைப்பிற்கும் ஒவ்வா என்பது பின்வரும் சூத்திர உரைவிளக்கங்களான் தெளிவாகும்.

இனி, இலக்கண ஆசிரியன்மாரும், உரையாசிரின்மாரும் வேற்றுமை என்னும் சொற்பொருள் பற்றி மயங்கவைத்துள்ளமை மையான் வேற்றுமை என்பது உருபா, உருபேற்ற பெயரா, உருபு நோக்கிவரும் சொல்லா, வேற்றுமைப் படும் பொருளா, வேறு பாட்டினைச் சுட்டும் தன்மையா? எது என்பது பின்வரும் விளக்கத்தாற் புலனாகும்.

'மரம் வளர்ந்தது' என்பது எழுவாய் வேற்றுமைத் தொடராகும். 'சாத்தன் மரத்தை வெட்டினான்' என்பது இரண்டாம் வேற்றுமைத் தொடராகும். இதன் கண் ஐ என்பது உருபு. மரத்தை என்பது உருப்பேற்ற பெயர். வெட்டினான் என்னும் கருத்தா வேற்றுமையைச் செய்த பொருள். வேறுபாட்டினை எய்தியது மரம், வேறுபாடு வெட்டப்பட்ட நிலை. ஈண்டு மரம்,

வெட்டப்பட்ட செயற்பாடு கொண்டநிலையைக் கருதியே அதனைச் செயப்படுபொருள் என்கின்றோம். எனவே பெயர்ப் பொருள் எய்தும் வேறுபாட்டினையே தொல்லாசிரியன்மார் வேற்று மையாகக் கொண்டமை புலனாகும்.

இதனை எழுவாய் வேற்றுமை பெயர் தோன்றும் நிலை, இரண்டாவது வினையே வினைக்குறிப்பு அவ்விருமுதலிற்றேன்றும், மூன்றாவது வினைமுதல்கருவி அனைமுதற்று, நான்காவது எப்பொருளாயினும் கொள்ளும், ஐந்தாவது இதனின் இற்று இது. ஆறாவது இதனது இது, ஏழாவது வினைசெய்யிடத்தின் நிலத்தின் காலத்தின் அனைவகைக் குறிப்பு, எட்டாவது விளி, என ஆசிரியர் அதன் வேறுபடு நிலையையே வேற்றுமையாகக் கூறுமாற்றான் தெளியலாம்.

இனி, இவ்வேற்றுமை பற்றிய இலக்கணங்களைக் கூறுமிடத்து ஆசிரியர் வேற்றுமைப் பட்டதனை காணற்குத் துணையாக நிற்கும் உருபுகளையும், உருபேற்ற சொற்களையும் வேறுபாட்டினைப் புலப்படுத்தும் பொருள்களையும் ஒற்றுமைநயத்தான் வேற்றுமை எனக்கூறுவார். அவர் ஆட்சினோக்கி மயங்காமல் பெயர்ப் பொருள் வேற்றுமை எய்தும் நிலையே வேற்றுமையாம் என்பதனைக் கடைபிடித்தல் வேண்டும் என்க.

**சூ. 62 :** வேற்றுமை தாமே ஏழென மொழிப [1]

**க-து :** சிறப்புடைய வேற்றுமை இத்துணை என்கின்றது.

**உரை :** பெயர்ப்பொருள் எய்தும் வேற்றுமை ஏழென்று கூறுவர் ஆசிரியர். அவையாவன; பெயர்எழுவாயாகி அஃது இடம் ஈறாக எய்தும் வேறுபாடுகளாம். தாம் ஏ என்னும் இடைச்சொற்கள், அடிநிரப்ப வந்த அசையாம்.

**சூ. 63 :** விளிகொள் வதன்கண் விளியொடு எட்டே [2]

**க-து :** சிறப்பில்லாத வேற்றுமை இதுவென்றும் அதனொடு கூடி வேற்றுமையின் தொகை எட்டாம் என்றும் வலியுறுத்துகின்றது.

**உரை :** விளிகொள்வதாகிய பெயர்க்கண் தோன்றும் விளி வேற்றுமையொடு (அவ் ஏழும் கூட) வேற்றுமை எட்டாகும்.

இருதிணைப் பெயர்களுள் விளி ஏலாதனவும் உளவாகலின் கொள்ளும் பெயரொடு தெளியத் தோன்றுவது இதன் இலக்கண மாதலின் "விளி கொள்வதன்கண் விளி" என்றார், கொள்வது என்பது வினையால்ணையும் பெயர், 'விளி' என்றது இயல்பும் ஈறு திரிபுமாக வரும் அதன் இயல்பினை.

விளி சிலபெயர்களொடு வாராது என்பதன்றி அது வேற்றுமை எய்தும் தன்மையிற் குறைபாடுடைய தன்றாகலின் ஏனைய வற்றோடு ஒக்கும் என்பது தோன்ற "எட்டே" எனத் தேற்றே காரம் கொடுத்தோதினார். எல்லாப் பெயர்களொடும் வந்து வேற்றுமை செய்யும் எழுவாய் முதலியவற்றொடு ஒருங்கு கூறாமல் அதன் சிறப்பின்மை தோன்றப் பிரித்துக்கூறினார் ஆசிரியர்.

உரையாளர் முன் சூத்திரத்தைப் பிறர்மதங் கூறியதென்றும் இச்சூத்திரம்தன்துணிபு உரைத்தது என்றும் கூறுவர். பிறர்மதங் கூற ஈண்டு யாதும் இயைபின்மையின் அது பொருந்தாது என்க.

மற்று; யான், யாம்—நீ, நீயிர் போல்வனவாகிய சில பெயர்கள் வேற்றுமைகளை எய்தாமையின் விளிவேற்றுமையை மட்டும் இவ்வாறு பிரித்துக் கூறியது, பொருந்துமோ? எனின், யான், யாம், முதலியவை என், எம் முதலியவையாகத்திரிந்து வேற்றுமைகளை எய்தும். விளிவேற்றுமை கொள்ளாத பெயர்கள் எவ்வாற்றானும் விளி எய்தாமையின் பொருந்துமென்க. "விளி கொள்வதன் விளி" என்பதற்குப் பிறிதோரிடைச் சொல்லை ஏலாது தானே திரிந்தும் இயல்பாயும் நிற்கும் பெயரிறுதி என்பது பெற்றாம்" என்பார் நச்சினார்க்கினியர். "ஓவும் உவ்வும் ஏயொடு சிவணும்" (விளி-5) "தொழிற்பெயராயின் ஏகாரம் வருதலும்" (விளி-22) எனவரும் ஆசிரியர் கூற்றான் அஃது ஒவ்வாமையறிக. அழைக்கப்படுதல் விளியின் வேறுபடு பொருள் நிலையாம். முன்னிலையாதல் அதன் வேறுபடு செயல்நிலையாகும்

சூ. 64 : அவைதாம்,
பெயர் ஐ ஒடு கு
இன் அது கண் விளி என்னும் ஈற்ற [3]

க - து : வேற்றுமைகளின் குறியீடும், நிரல்முறையும் கூறுகின்றது.

உரை : மேல் எட்டே எனக் கூறப்பட்ட வேற்றுமைகள் தாம் பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண் விளியென்னும் ஈற்றனவாம்.

ஈற்ற என்றது 'வகைய' என்றவாறு. உருபென மொழியினும் அஃறிணைப் பிரிப்பனும் இரு ஈற்றும் உரித்தே சுட்டுங்காலை [கிளவி - 24] என்பதனான் 'ஈறு' வகையென்னும் பொருட்டா தலை அறிக,

எனவே இப்பெயரானே இவ் எட்டு வேற்றுமைகளும் சுட்டி வழங்கப்பெறும். இதனை, அன்றியனைத்தும் பெயர்ப்பயனிலையே, (வே – 5) ஐயெனப்பெயரிய, ஒடுவெனப் பெயரிய— என ஆசிரியர் ஆளுமாற்றான் அறிக. ஈண்டு நிறுத்த முறையானே பின்னர் எண்ணுப் பெயரான் இவற்றை வழங்குதற்பொருட்டு இங்ஙனம் நிரல் செய்யப்பெற்றன. இவற்றுள் தமக்கென உருபுகளில்லாத முதல் வேற்றுமையும் எட்டாம் வேற்றுமையும் பொருளானும், ஏனைய வேற்றுமைகள் உருபானும் பெயர் பெற்றன.

இனி, முதல் வேற்றுமைக்கு ஆனவன், ஆகின்றவன், என்றாற் போல்வன சொல்லுருபென்று கருதுவர் ஒரு சாரார், அவர் வட மொழியைக் கருத்திற்கொண்டு அவ்வாறு கூறினவர் ஆவார். ஆனவன், ஆகின்றவன் என்றாற் போல்வன 'ஆதல்' என்னும் ஆக்கச் சொல்லடியாகப் பிறந்தவையாகும். ஆக்கந்தானே காரண முதற்றாகலின், இயற்கைப் பொருளைச் செயற்கைப் பொருளாகக் கூறுதல் தமிழ் மரபு அன்றென்க.

பால்காட்டும் இறுதி இடைச்சொற்களை முதல்வேற்றுமை உருபாகக் கூறுதலும் முதனிலப் பெயர்கள் 'சு' என்னும் உருபு புணர்ந்து கெட்டதாகக் கூறுதலும் வடமொழி இலக்கணக் கோட் பாடாகும்.

''இனி இல்வாழ்வான் என்பான்'' என்பது எழுவாயை விளக்க வந்த சிறப்பு அடை உருபு அன்று என அறிக.

இனி, எட்டாம் வேற்றுமைப்பெயர் எய்தும் ஈறுதிரிதல், ஈற்றயல் நீடல், குன்றல், பிறிது வந்தடைதல் என்பவை ஒரு நிகரன அன்மையின் அவற்றை உருபாகக் கொண்டிலர் தமிழாசிரியர்.

உரையாசிரியன்மார் இச்சூத்திரத்துட் கூறிய பெயர், ஐ, ஒடு முதலியவற்றை உருபாக எண்ணி மயங்கி விளக்கினார். உருபுகள் ஆறே என்பதை ஆசிரியர் எழுத்ததிகாரத்துள் விளங்க ஓதி, ஈண்டுக் கொள்ளவைத்தமையானும், வேற்றுமை நிலை எட்டென்றதேயன்றி வேற்றுமை உருபுகள் எட்டு என ஆசிரியர் யாண்டும் ஓதாமை யானும் உரையாளர் கருத்துக்கள் பொருத்தாமையறிக.

வேற்றுமைப் புணர்ச்சிக்கும் வேற்றுமைத்தொடருக்கும் உள்ள வேறுபாட்டினைக்கருதாமல் எழுவாயையும் விளியையும் வேற்றுமை யல்ல எனக் கருதி மயங்குவாரும் உளர்.

இனி, இவ்வேற்றுமைகளை இங்ஙனம் முறைபடுத்தியதற்குக் காரணம் ; வினைமுதல்இன்றி யாதொரு செயலும் பிறத்தற்கேலா மையான் எழுவாய் (பெயர்) முன் வைக்கப்பட்டது. வினைமுதலின் செயல் சென்று உறுதலின் செயப்படுபொருள் இரண்டாவதாகவும், யாதொரு செயலும் கருவி (காரணம்) இன்றி நிகழாததாலின் கருவி மூன்றாவதாகவும், கொள்ளுதல் என்பது அச்செயலின் பயன் ஏற்ப தாகலின் அதனை, அதன் பின்னும், ஒன்றினின்று ஒன்றைக் கோடல் நிகழ்தலின் இதனின் இற்றிது என்னும் அதனை அதன் பின்னும், பெற்றபின் அதற்கு அஃது உடைமையாகலின் கிழமை ஆறாவதாகவும் எல்லாவற்றிற்கும் நிலமும் காலமும் அடிப்படை (ஆதாரம்) யாகலின் சிறப்புடைப் பொருளைப் பிற்படக்கிளத்தல் என்பதானன் இடம் ஏழாவதாகவும் சிறப்பில்லாத விளியை எட்டாவ தாகவும் வைத்தனர் என்க.

உரையாசிரின்மார் சிறப்புடைப் பொருளைத் தானினிது கிளத்தல் என்பதனான் ஒடுவும், அதுவும், ஓதினாரேனும், மூன்றா வதற்கு ஆனும் (ஆலும், ஓடும்) ஆறாவதற்கு அவ்வும் (ஆதுவும்) கொள்க என்பார். இடைக்கால நூலாசிரியர் மேலும் சிலவற்றைக் கூட்டி உருபாகக் கூறுவர். பிறவேற்றுமைகட்கும் இவ்வாறே வேறு சில உருபுகளைச் சேர்த்துக் கூறுவர். அவையெல்லாம் தமிழ் மரபும் தொல்காப்பிய நெறியும் ஆகாமை அவ்வச்சூத்திரவுரையுள் கூறுதும்.

**சூ. 65 :** அவற்றுள்,
எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே

**க-து :** முதல் வேற்றுமையின் வேற்றுமை இயல்பாமாறு கூறுகின்றது.

**உரை :** மேற்கூறிய எட்டனுள் முதல் வேற்றுமையாவது பெயர்ப்பொருள்தான் தனித்துத் தோன்றி நிற்கும் நிலைமைத் தாகும்.

தனித்துத் தோன்றுதலாவது பொருட்பெயர்க் குழுவினின்று பிரிந்து வினைமுதலாய் நிற்றல். நிற்கும் நிலைமையாவது அறுவகைப் பயனிலை கோடற்கும் பிறவேற்றுமை உருபுகளை ஏற்று வேறுபாடுறுதற்கும் உரியதாக நிற்றலாம். ஒருபெயர் முதல் வேற்றுமையாய்ப் பயனிலை கொள்ளுங்கால் தன்வடிவுதிரியாமலும் ஏனைய உருபுகளை ஏற்குங்கால் வடிவு திரிந்தும் நிற்கும்.

எ-டு : நம்பி—சாத்தன்—மக்கள்—நிலம் எனவரும். இவை பெயர் தோன்றிய நிலையாய் நிற்றலாம். நம்பிவந்தான், சாத்தன் நல்லன், மக்கள் வாழ்வார், நிலம்வலிது, இவை பயனிலை கொண்டு நிற்றல். நம்பியைக் கண்டேன், சாத்தனைப் பார்த் தான், இவை வடிவு திரிந்து நிற்றல். நம்பியை, நம்பியோடு, நம்பிக்கு, நம்பியின் நம்பியது, நம்பிகண் நம்பீ, எனப்பிற உருபு களொடும் கூட்டிக் கண்டு கொள்க. எழுவாய் எனினும் வினை முதல் எனினும் பெயர் வேற்றுமை எனினும் முதல் வேற்றுமை எனினும் ஒக்கும்.

வினை முதல் என்பது ஒரு தொழிலை நிகழ்த்தும் கருத்தாவை யும் அத்தொழில் நிகழ்தற்குச் சார்பாக அமையும் பொருள்களையும் சுட்டும் இலக்கணக் குறியீடாகும். எழுவாய் என்னும் பெயர் வேற்றுமை, அறுவகைப் பயனிலைகளைக் கொண்டு முடியுங்கால் கருத்தாவாகவும் ஐ முதலிய உருபுகளை ஏற்றுச் செயப்படுபொருள் முதலியவாக வேறுபடுங்கால்சார்புப்பொருளாகவும் அமைந்துநிற்கும் அஃதாவது சாத்தன் நூலைக் கற்றான் என்பழிச் சாத்தன் கற்றல் தொழிலை நிகழ்த்தும் வினைமுதல், அவ்வினை நூலின்றி நிகழ்தற்கு ஆகாமையின் நூல்சார்புவினைமுதல், இவ்வாறே கருவி முதலியவை சார்புவினை முதலாதலை ஓர்ந்துகொள்க.

இச்சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள் கோடலே ஆசிரியர் கருத்தென்பதை அவர் பிறவேற்றுமைகளின் இலக்கணங்கூறுங் கால் "இரண்டாகுவதே ஐயெனப் பெரிய" என்றும் "அவ்விரு முதலிற்றோன்றும்" என்றும் எண்ணுப் பெயரையும் உருபுப் பெய ரையும் அதன் வேற்றுமை நிலையையும் ஒருங்கு கூறுமாற்றான் அறிக. இச்சூத்திரத்துள் எழுவாய் என்பது எண் குறித்து நின்றது. பெயர் என்பது உருபு குறித்து நின்றது. தோன்றும் நிலை என்பது அதன் வேற்றுமை நிலை குறித்து நின்றது. பொருட்பெயர் முதலாய எல்லாப் பெயர்களும் எழுவாயாகவரும். வினாச்சொல் வாராது. அவை, சாத்தன் வந்தான், வேனில் பிறந்தது கண் பெரிது கருமை பரவிற்று ஈதல் புகழ் தரும் அவன் வந்தான் எனவரும்.

இம் முதல்வேற்றுமையாகிய பெயர் பிறவேற்றுமைப் பொருளை ஏற்று வடிவுதிரியாமல் நிற்றலும் உண்டு.

எ-டு: சோறு குழைந்தது எனவரும். சோறு தானே குழை யாதாகலின் செய்படுபொருள் எழுவாயின் தன்மைத்தாய் நின்றது. இதன் அகநிலைத் தொடர் நங்கை சோற்றைக் குழைத்தாள். நங்கையான் சோறு குழைக்கப்பட்டது என்பனவாதலைக் கண்டு

கொள்க. காற்றுக் கிளையை முரித்தது, கண்காணும் என்பவை முறையே காற்றான் கிளை முரிந்தது, கண்ணாற் கண்டேன் என்னும் கருத்துடையவையாதலையும் கண்டுகொள்க. இவற்றை முறையே கருகருமத்தா, கருவி கருத்தா என்பர். எழுவாய் வேற்றுமைக் கருத்தா இன்னும் பிறவாறும் வரும். அவற்றை ஓர்ந்தறிந்து கொள்க. அவை வருமாறு: மாடம் செய்யப்பட்டது. அரசன் கட்டிய கோயில், வானம் திங்களைப் பெற்றுள்ளது. இரப்பவர் என்பெறினும் கொள்வர் எனவும் பிறவாறும் வரும்.

சூ. 66 : பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினைநிலை உரைத்தல் வினாவிற் கேற்றல்
பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்று
அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே [5]

க - து : எழுவாய் வேற்றுமை ஏற்கும் பயனிலை இவை என்கின்றது

உரை : பொருண்மை சுட்டல் ... ... ... பெயர் கொளவருதல் ஆகிய அவ்அனைத்தும் பெயர் வேற்றுமை கொள்ளும் பயனிலை களாம். பெயர் என்றது மேலைச் சூத்திரத்துக் கூறிய எழுவாயினை. பயனிலை என்றது முடிக்குஞ் சொல்லை, என்று 'என்பது' எண்ணிடைச்சொல்.

1. பொருண்மை சுட்டல் என்பது எழுவாயாக நிற்கும் பெயர்ப் பொருளின் பண்பு செயல் முதலியவற்றைச் சுட்டாமல் அதன் உண்மைத்தன்மையை மட்டும் சுட்டி நிற்றலாம். உண்மைத் தன்மையாவது சாதித் தன்மை. எ - டு : ஆவுண்டு, மலைஉண்டு குடம்உண்டு எனவரும். காணப்படும் ஆவும், மலையும், குடமும் ஆகிய பொருள் அழியினும் அவற்றின் தன்மை அழியாது நிற்றலின் பொருள் என்னாது பொருண்மை என்றார்.

2. வியங்கொள வருதல் என்பது ஏவலைக் கருதாது அப் பொருண்மைத்தாகக் கூறலவருதல். எ-டு : ஆவாழ்க, சாத்தன் வாழ்க, வேந்தன் வெல்க இறைவன் அருள்க; எனவரும். இவை ஏவல் கண்ணியவாயின் எட்டாம்வேற்றுமை ஆதலன்றி முதல் வேற்றுமையாகா என அறிக. நீ-நீயிர் என்னும் முன்னிலைப் பெயர்க்கண் நீ செல்க-நீயிர் வருக, எனவரின் அவ்வியங்கோள் ஏவல் கண்ணியதாம். அவை எழுவாயாகாமையும், ஆண்டுச் சாத்தா சாத்திர் என்னும் விளிப்பெயர் மறைந்து நிற்கின்றமையும் அறிக.

3. வினைநிலை உரைத்தல் என்பது காலம் வெளிப்படத் தோன்றும் புடைபெயர்ச்சி வினையான்வருதல். எ-டு: ஆகிடந்தது, சாத்தன், வந்தான் நீ உண்டாய், யான் வருவேன், என வரும்.

4. வினாவிற்கேற்றல் என்பது ஏற்புடைய வினாப்பெயரான் வருதல். எ-டு: ஆயாது? சாத்தன் யாவன்? எனவும், ஆ யாது? அஃது எவன்? எனவும் வரும்.

5. பண்புகொளவருதல் என்பது: பண்பினைச்சுட்டி வினைக் குறிப்பாக வருதல். எ-டு: ஆகரிது — சாத்தன் இனியன், கொற்றன் நெடியன் எனவரும். குணப்பண்பல்லாத உள, இல முதலாகிய வினைக்குறிப்பான் வருதல் அதன்பாற்படும். எ-டு: ஆ உளது, சாத்தன் உளன், ஆ இல்லை, சாத்தன் இலன், என வரும். இவற்றை வினை நிலை உரைத்தலின் பாற்படுப்பினும் இழுக்காதென்க.

6. பெயர் கொள வருதல் என்பது பிறிதொரு பெயர்ச் சொல்லைப் பயனிலையாகக் கொண்டு வருதல். எ-டு: ஆபல, சாத்தன் அவன், எனவரும்.

வியங்கொளவருதல் வினை நிலை உரைத்தற் கண்ணும், வினாவிற்கேற்றல் பெயர் கொளவருதற்கண்ணும் அடங்கா என்ப தற்குச் சேனாவரையர், “வினையும் பண்பும் பெயரும் முடிக்குஞ் சொல்லாதலேயன்றி முடிக்கப்படும் சொல்லாயும் வரும், வியங் கோளும் வினாவும் முடிக்குஞ் சொல்லாயல்லது முடிக்கப்படும் சொல்லாகவாரா என்பது அறிவித்தற்கு வேறுபடுத்துக்கூறினார்” என்பார். அவர் விளக்கம் போற்றிக் கொள்ளற்பாலதாம்.

வாழ்க அற்தணர், யாவன் அவன். என்றாற்போல எழுவாய் பின்னிற்பினும் அமையும் என்பது விளங்க முடிக்கும் சொல் என்னாது “பயனிலை” என்றார்.

இனி இச்சூத்திர விளக்கவுரையுள் தெய்வச்சிலையாரும், நச்சினார்க்கினியரும், சாத்தன் தலைவனாயினான், ஆயன் சாத்தன் வந்தான், சாத்தன் கண் நல்லன் முதலாய தொடர்களைக் காட்டி மேலைச் சூத்திரத்துள் “தோன்றும்நிலை” என்பதனான் முடித்துக் கொள்க என்பார். இத்தொடர்கள் பற்றி அவர் கூறும் விளக்கங்களும் கருத்துக்களும் இந்நூல் நெறிக்கு ஒவ்வாதனவாம். பிறரும் பிறவாறு கூறுவனவும் அவ்வாறேயாம். அவற்றை ஓர்ந் தறிந்து கொள்க,

சூ. 67 : பெயரி னாகிய தொகையுமா ருளவே
அவ்வும் உரிய அப்பா லான [6]

க-து : எழுவாயாகவரும் பெயர்கள் தனித்து வருதலேயன்றித் தொகைப் பெயராயும் வருமெனக்கின்றது,

உரை : ஒருபொருளைச் சுட்டிவரும் பெயர்களானாகிய தொகைச்சொற்களும் உள. அவையும் முதல்வேற்றுமைப் பாலன வாய் நின்று பயனிலை கோடற்கு உரியவாம்.

தொகை மொழி என்னாது பெயரின் ஆகிய தொகை என்ற தனான். அஃது ஒருபொருள் குறித்துவரும் பல சொற்களான் ஆன தொகைச்சொல் என்பது பெறப்படும். வேற்றுமைத் தொகை முதலிய அறுவகைத் தொகைகளையே தொகை மொழி எனல் தொல்லாசிரியர் மரபு. ஆசிரியர் எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய ” (எச் 24) என்பதனால் அவை ஒரு சொல் நீர்மையவாய் நின்று எழுவாயாகியும் பிற உருபுகளை ஏற்றும் பயனிலை கோடல் பெறப்படுதலின் ஈண்டுப் பெயரினாகிய தொகை என்றது அவை யல்லாமல் பிறிதோராற்றான் வரும் தொகைச் சொல் என்பது புலனாம்.

அவைவருமாறு: பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, ஆசிரியன் பேரூர்கிழான் இளங்கண்ணன் சாத்தன், விழிக்கட் பேதைப் பெருங்கண்ணனார். என்னாற் போலப் பல பெயர்கள் தொக்கு ஒரு பொருள் சுட்டி நிற்பனவாம். இவை ஓர் எழுவா யாய்ப் பயனிலை கொள்ளுமாறு : பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வாழ்க, வந்நான், யாவன், நெடியான், வள்ளல், எனவரும்.

பெயரினாகிய தொகையும் என்னும் உம்மையான் பெயரொடு வினை விராய்த்தொக்கனவும் அப்பாலன என்று கொள்க. அவை வருமாறு : கடலுன் மாய்ந்த இளம்பெரும்வழுதி — நிலங்கடந்த நெடிமுடியன்னல், தலையாலங்காலத்துச் செருவன்ற பாண்டியன் நெடுஞ்செழியன், என ஒருபொருள் சுட்டி நிற்பனவாம். அவையும் அவ்வாறே எழுவாயாய்ப் பயனிலை கொள்ளும் என்க.

இங்ஙனம் அறுவகைத் தொகைமொழியுள் அடங்கமாமல் பல பெயர்கள் தொடர்ந்து ஒருங்குதொக்கு ஒரு பொருள் சுட்டிநிற்கும் தொகை மொழிகளும் எழுவாகியாப் பயனிலை கெள்ளும் என விதிக் கும் இச்சூத்திரத்தின் இன்றியமையாத பயனை ஓராராய் உரையர சின்மார் தத்தமக்குத் தோன்றியவாறு விளக்கம் கூறிச் சென்றனர்,

சேனாவரையர் அறுவகைத்தொகை மொழிகளையும் பொருளாகக்கொண்டு, உம்மையான் பெயரொடு வினை தொக்கத் தொகையும் உண்டு எனக்கூறி நிலங்கடந்தான், மாக்கொணர்ந்தான் என எடுத்துக்காட்டுக் கூறுவர். அவை எழுவாய் தோன்றாது நின்ற இரண்டாம் வேற்றுமைதொக்கு நின்ற தொடர்மொழிகளாவதல்லது தொகை மொழியாகா என்க. அன்றி நிலங்கடந்தான் வந்தான் என்புழித்தொகை மொழியாமே எனின்? அங்ஙனந் தொகைமொழி யாயவிடத்துக் 'கடந்தான்' என்பது வினையாலணையும் பெயராவதல்லது வினையாகாமையறிக.

தெய்வச்சிலையார் பலபொருள் குறித்த சொற்களைப் பெயரினாகிய தொகை எனக்கொண்டு "யானை குதிரைஉள" என உதாரணம் காட்டி இரண்டு பெயரும், ஒரு பயனிலை கொண்டன என்பார். யானை குதிரை என்பவை செவ்வெண்ணாகத் தொடர்ந்தனவன்றித் தொகையாகாமை தேற்றம். தொகையெனக் கருதின் உம்மைத் தொகையுள் அடங்குமாறறிக.

இனி வேற்றுமைத்தொகை முதலாய அறுவகைத்தொகை மொழிகளுள் உம்மைத்தொகை ஒழிந்த ஏனையவை பயனிலை கொள்ளுங்கால் பயனிலை கோடற்குரிய சொல் ஒன்றேயாக நிற்கும். அன்மொழித்தொகை அதுவுமாகாமல் நிற்கும். அஃதாவது யானைக்கோடு கிடந்தது என்புழிப் பயனிலை ஏற்றற்குரியது கோடுமட்டுமேயாம். யானை அதற்குரிய அடையாகும். செந்தாமரை பூத்தது கொல்யானை வந்தது, மதிமுகம் வியர்த்தது, என ஏனையவும் அன்ன. பொற்றொடி வந்தாள் என்புழி 'மகடூஉ' எனப்பிறிதொன்றனை நோக்கிநின்றது. அங்ஙனமன்றி முதுகுடுமிப் பெருவழுதி, கரிகாற்பெருவளத்தான் எனவரும் பெயரினாகிய தொகைகளுள் யாவும் பயனிலை கோடற்கு ஏற்பநிற்குமாறறிக. இத்தொகைப் பெயர்களை ஒருபொருள் குறித்த வேறுபெயர்க்கிளவி (கிளவி—42) எனக்கிளவியக்கத்துள் விதந்து கூறியயமையானும் அறிக.

இனி, "பெயரினாகியதொகையும் ... ... உரிய" என்னாது "உளவே, அவ்வும் உரிய" என்றதனான் தொகைப்படாமல், நீலமணியின் நிறம் நன்று. சோழமன்னன் குதிரை நடைசிறந்தது என்றாற்போல எழுவாய் அடையடுத்து வருவனவற்றைத் தொகைச் சொல் நீர்மையவாகக் கொள்க.

சூ. 68 : எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி
அவ்வியல் நிலையல் செவ்வி தென்ப. [7]

க-து : எழுவாய் வேற்றுமைக்குரியதொரு புறனடை கூறுகின்றது.

உரை : மூவிடத்துப் பெயர்களும் புலனாகத் தோன்றி மேற் கூறிய இலக்கணத்தான் நிற்றல் சிறப்புடையது என்று கூறுவர் ஆசிரியர். புலனாகத் தோன்றுதலாவது ஒலிவடிவு செவிக்கும் வரிவடிவு விழிக்கும் வெளிப்பட நிற்றலாம்.

''அவ்வியல்'' என்றது அப்பெயர்கள் தனித்தும் தொகை யாயும் தோன்றி எழுவாயாப் பயனிலை கொள்ளும் இலக்கணத்தை யாம். வெளிப்படநிற்றல் செவ்விது, எனவே வெளிப்படாது நிற்றலும் அதற்கியல்பு என்பது உய்த்துணரப்படும். அது சிறப் புடையதன்று என்றவாறு. இதனைத் தோன்றா எழுவாய் என்ப. இதனான் எழுவாய் வேற்றுமைத் தொகையும் உண்டு என்பதொரு நயந்தோற்றுவித்தார்.

எ-டு : எழுத்தெனப்படுவ......என்ப எனவும், ''உயர்திணை என்மனார்கக்கட்சுட்டே'' எனவும் வரும். சாத்தன் உண்பானோ என்றவழி, உண்பான் என வழக்கின்கண் எழுவாய் குன்றிவருதல் கண்டுகொள்க.

பலதிறப்பட்டுவரும் படர்க்கைப்பெயர் போல்வனவன்றித், தன்மைப் பெயர் முன்னிலைப்பெயர்கள் வரையறைப்பட்டு வினை முற்றுக்களான் தெற்றெனப் புலப்படுதலின் வெளிப்படாது நிற்பினும் ஒக்குமெனக் கருதற்க. அவையும் வெளிப்பட நிற்றலே தொடர் மொழியாக்கத்திற்குச் சிறப்புடைத்து என அறிவித்ததற்கு 'எவ்வயிற் பெயரும்' என்றார். (வயின்—இடம்)

எழுவாயை விதந்து கூறியாங்குப் பயனிலைபற்றிக் கூறாமை யான் பயனிலை வெளிப்பட்டே நிற்றல் வேண்டும் என்பது புலப் படும். ''விழுமம் சீர்மையும் சிறப்பும் இடும்பையும்'' (உரி–59) எனப் பயனிலை தொக்கதால்எனின்? அவ்வாறு நிற்பன செய்யுள் விகாரம் என அறிக.

சூ. 69 : கூறிய முறையின் உருபுநிலை திரியாது
ஈறுபெயர்க் காகும் இயற்கைய என்ப [8]

க-து : பெயர்வேற்றுமை ஏனை உருபுகளை ஏற்குமாறு கூறுகின்றது.

உரை: "அவ்வாறென்ப வேற்றுமை உருபே" (புணரியல் 11.) எனப்புணரியலுள் முறைமையோடு கூறப்பெற்ற ஐ முதலிய ஆறு உருபுகளும் தத்தம் தன்மை (வடிவு) திரியாமல், பெயரின் கண் இறுதியாக வந்துபுணர்ந்து நிற்கும் இயல்பினவாகு மெனக் கூறுவர் ஆசிரியர்.

'இயற்கை' என்றது அங்ஙனம் உருபுகளை ஏற்றுநிற்கும் இலக் கணத்தை. பெயர் என்றது தனித்தும் தொகையாயும் தோன்றி நிற்கும் எழுவாய் வேற்றுமையையாம். வேற்றுமைப்படுவன யாவும் பெயர்ப் பொருளேயாகலின் அவற்றின் வேறுபாடுகளைப் புலப்படுத்தவரும் உருபுகளை ஏற்பவையும் அவையேயாம்.

பெயர் என்றது பெயர்ச்சொற்களை என்றால் என்னை எனின்? இவ்வோத்து வேற்றுமையியல் ஆகலானும் அதிகரித்து நிற்பது எழுவாய் வேற்றுமையது இலக்கணமாகலானும் — "பெயர் தோன்றும் நிலையே" "பெயர்ப்பயனிலையே" "பெயரினாகிய தொகையும்" என ஆசிரியர் எழுவாய் வேற்றுமையை திலக்கணமே கூறிவருதலானும் ஒவ்வாதென்க.

மற்றுப் பெயர்ச்சொல்லாவது உயர்திணைப்பெயர், அஃறிணைப் பெயர், விரவுப்பெயர் என எண்ணுமளவில் நிற்பதன்றிப், புடை பெயர்ச்சிக் கருத்துடைய தன்றாகலானும். அவற்றுள் ஒன்றைக் சுட்டி வாங்கிய அளவில் அப்பெயர்தானே எழுவாய் வேற்றுமை யாய் வேறுபட்டுவிடுமாகலானும். பெயர் என்றது, முதல்வேற்று மையையே என்பது தெளியப்படும்.

பெயர்ச்சொற்களின் பின் உருபு வரும் என்பதை உணர்த்துதல் ஆசிரியர் கருத்தாயின் இதனைப் பெயர் ஐ, ஒடு, கு, இன் என்னும் சூத்திரத்தைச் சாரவைத்துப் பெயர் ஒழிந்த ஏனை உருபுகள் பெயர்ச்சொற்களின் பின்வரும் எனக் கூறியிருத்தல்வேண்டும்.

இனி உரையாசிரியன்மார் "கூறிய முறையின் உருபு" என்பதற்குப் "பெயர் ஐ ஒடு கு" என்னும் சூத்திரத்துக்கூறிய முறை என்றும், பெயர்க்கு ஆகும் என்பதற்குத் தெய்வச்சிலையார் ஒழிந்த ஏனையோர் பெயர்ச்சொல்லுக்கு என்றும் பொருள்கூறினர். அவர்கருத்துத் தொல்காப்பிய மரபாகாதென்க.

சூ. 70 : பெயர்நிலைக் கிளவி காலந் தோன்றா
தொழில் நிலை ஒட்டும் ஒன்றலங்கடையே [9]

க - து : எழுவாய் வேற்றுமையாய பெயர்க்காவதோரியல்பு கூறுகின்றது.

உரை : எழுவாய் வேற்றுமையாய் நிலைபெறுதலையுடைய சொற்கள் காலந்தோன்றநில்லா. அங்ஙனமாதல் வினையினது நிலையைப் பொருந்தும் ஒரு கூற்றுச்சொல் அல்லாதவிடத்து.

வினை நிலையாவது காலம்புணர்ந்து நிற்றல். ஒட்டுதல் = பொருத்துதல். அஃதாவது வடிவான் ஒன்றுபட்டுப் பொருளான் வேறாதல். இதனை வினையாலணையும் பெயர் என்றும் வினைப் பெயர் என்றும் கூறுவர்.

அவையாவன : உண்டான், உண்கின்றான், உண்பான் என்னும் தொடக்கத்தன. அவை உண்டவன் தின்றவன் எனப் பெயர் வடிவுற்றும் நிற்கும். கொல்லன், தச்சன் என்பவை தொழில் பற்றிவரும் இனப்பெயராகலின் ஈண்டைக்கு ஏலா. அவை தொழில் காரணமாக வந்த இயற்பெயர்களேயாம். அவை, உண்டான்வாழ்க, உண்டான்வந்தான், உண்டானைக்கண்டேன், உண்டானாற் செய்யத்தகும், உண்டாற்குவழங்கினான் உண்டா னின் வலியன், உண்டானது உடை, உண்டான்கண் அயர்வு, உண்டானே! வருக. என எழுவாயாயும் பிறவேற்றுமைகளை ஏற்றும் வரும்.

இதன்பயன், தொழில்நிலை ஒட்டும் ஒரு கூறல்லாத ஏனைய பொருட்பெயர் முதலாயவற்றுள் குறிப்பு வினையாதற்குரியனவும் குறிப்பு வினைப் பெயர்களும், முடிக்குஞ் சொல்லாதற்கண் காலந் தோன்ற நிற்கும். அவை எழுவாயாக நிற்குமிடத்துக் காலக் குறிப்புத் தோன்றா என உணர்த்துதலாம்.

அஃதாவது சாத்தன், பொன்னன், குழையன் என்னும் சொற்கள், சாத்தன் வந்தான், பொன்னன் வந்தான், குழையன் வந்தான் என்னுமிடத்து எழுவாயாக நிற்றலின் அவற்றுள் காலக் குறிப்புத் தோன்றா. அவையே இவன் சாத்தன், இவன் பொன்னன் அவன் குழையன் என முடிக்குஞ் சொல்வாய் வருமிடத்து, வாணிகத்தை (சாத்து) உடையான். பொன்னை யுடையான், குழையை உடையான் எனக் காலந்தோன்றநிற்கும் என்றவாறு. எனவே, குறிப்புவினையாதற்கேற்ற சொற்களும் பிறவும் எழுவாயாக நிற்றற்கண் எய்தும் இச்சிறப்பியல்பு நோக்கி இவ்விதி கூறப்பட்டதென்க.

இதனைப் பெயர்ச்சொற்குரிய இலக்கணங்கூறுவதாக உரை யாசிரியன்மார் யாவரும் மயங்கி அதற்கேற்ப விளக்கங்கூறிச் சென்றனர். அவ்வுரைகளான் மேற்கூறிய இன்றியமையாத எழுவாய் வேற்றுமையதிலக்கணம் பெறப்படாது போதலை உணர்க.

பெயர்ச் சொற்கள் எழுவாய் என்னும் நிலையை எய்தினாலன்றிப் பயனிலை கோடல் முதலிய மூன்றும் அவற்றிற்கு உரியவாய்ச் செல்லா என்க. இம்மொழியியல் நுட்பங்களைக் கருதாத உரையாசிரியன்மார் உரைக்கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டெழுந்த நன்னூல், சின்னூல் தொன்னூல் முதலிய யாவும் தொல்காப்பிய நெறியினின்று பிறழ்ந்தனவ என்பதும் அறிவியல் நோக்கற்றவை என்பது புலனாகும்.

சூ. 57 : இரண்டாகுவதே
ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
எவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்பென்று
அவ்விரு முதலிற் றோன்றும் அதுவே [10]

க-து : இரண்டாம் வேற்றுமையாமாறு கூறுகின்றது.

உரை : ஐயெனப் பெயர் பெற்ற வேற்றுமைச் சொல் யாதொரு பெயரிடத்து வரினும் அஃது இரண்டாம் வேற்றுமையாம். அஃது வினையும் வினைக்குறிப்புமாகிய அவ் இரண்டனது அடிப்படைப் பொருளின்கண் தோன்றிவரும்.

எ-டு : சாத்தன் அறிவைப் பெற்றான்—குடத்தை வனைந்தான் நடத்தலைச் செய்தான் எனவும், குழையை உடையன் (ஆயினான்) பொருளை இலன் (ஆயினான்) எனவும் வரும்.

இவற்றுள் பெறுதல், வனைதல், செய்தல், என்பவை தெரிநிலை வினையடிகள். உடைமையும் இன்மையும் முறையே இன்பத்தையும் துன்பத்தையும் மனத்தின்கண் நிகழ்த்துவன வாதலான் அவை புடை பெயர்ச்சி இயல்பினவாய் வினைத் தன்மையுற்ற குறிப்புவினையடிகளாகும். குறிப்புவினை பற்றிய வரலாறும் இயல்பும் வினையியலுள் விளங்கக் கூறப்பெறும் ஆண்டுக் காண்க.

வேற்றுமைக் கிளவியாவது வேற்றுமையைப் புலப்படுத்தும் கிளவி. கிளவி என்றது ஈண்டு உருபாகிய இடைச் சொல்லை என்க. இதனை வேற்றுமைப் பொருள்வயின் உருபாகுநவும் (இடை-2) என்பதனான் அறிக. முதல் = அடிப்படை. ஈண்டு அது வினை நிகழ்தற்கு அடிப்படையான பொருளை உணர்த்தி நின்றது. இதனை "அம்முதற்பொருள என்ன கிளவியும் அதன் பால" (வே-11) என்பதனான் அறிக. பொருள் என்றது காட்சிப் பொருள் கருத்துப் பொருள் அனைத்தையுமாம்.

அஃதாவது உண்டான் என்றவழி, "உணவு" என்னும் பொருள் இன்றேல் அத்தொழில் நிகழாதன்றே? ஆகலின் உணவு அத்தொழில் நிகழ்தற்கு அடிப்படை ஆயிற்று. எனவே வினை முதல் நிகழ்த்தும் செயல் சென்றுபடும் பொருள் எய்தும் வேறுபாடு இரண்டாம் வேற்றுமை என்பது பெறப்படும். செயற்படுபொருள் என்பது செயப்படுபொருள் எனத் திரிந்து இலக்கணக் குறியீடா யமைந்தது. இதனைச் செய்யப்படும் பொருள் எனக்கொள்ளின் அஃது எல்லா வினைகட்கும் எய்தாமையின் குன்றக் கூறலாகும் என்க.

இனி இரண்டாவதன் உருபாகிய 'ஐ' என்பது ஏய என்னும் வினையெச்சச் சொல்லின் மரூஉவாய் இடைச் சொல்லாயிற்று என்க. ஏய்தல்-ஒத்தல் இதன் கிளைப் பொருள் ஒக்க, உற, பொருந்த, அமைய முதலியவாகும். பேச்சுவழக்கினுள் இவ்வுருபு மரத்தெ வெட்டினான், கனியெத்தின்றான் என எகரவடிவாயும் யானையப் பார்த்தான், வாயப்பிளந்தான் என அகரவடிவாயும் நிகழ்தற்கு காரணம் இதன் அடிப்படை வடிவாகிய 'ஏய' என்பதே யாம். செய்யுள் வழக்கினுள் "காவலோனக் களிறஞ்சும்மே" என ஐயுருபு அகரமாகவும் வருமென இலக்கண நூலார் கொண்டதற்கும் ஆசிரியர் அத்திரிபினை வேற்றுமை மயங்கியலுள் கூறுதற்கும் காரணம் அவ் அடிப்படை வடிவமேயாம், இவ்வுருபுபற்றிக் கால்டு வெல் முதலானோர் கூறும் விளக்கங்கள் தமிழ் மரபிற்கு ஒவ்வா என்பதை மேற்கூறியவற்றானும் பின்வருவனவற்றானும் தெளிக.

இனி உரையாசிரியன்மார், முதல் என்பதற்கு "ஆயெட்டென்ப தொழின் முதனிலையே" என்னும் சூத்திரத்துக் கூறப்பெறும் எட்டு என்றும், ஏற்புழிக்கோடலான் அவற்றுள் செயப்படுபொருளே கொள்ளப்படும் என்றும் கூறினர். அச்சூத்திரத்து அவர் உதாரணங் காட்டுமிடத்து 'வனைந்தான்' என்புழி வனையப்பட்ட குடம் செயப்படுபொருள் என விளக்குதலான் இயற்றப்படுதல் மட்டுமே செயப்படுபொருள் என்பது பட்டு அவர்தம் விளக்கம் குன்றக் கூறலாய் மயக்கஞ்செய்யுமாறறிக.

எனவே இந்நூற்பாவான் இரண்டாம் வேற்றுமையைக் காட்டும் உருபு ஐ என்பதும் அதனை ஏற்று நிற்பது இரண்டாம் வேற்றுமைப் பெயர் என்பதும் அதனை வேற்றுமையுறச் செய்பவை வினையும் வினைக் குறிப்பும் என்பதும் அஃது எய்துவது செயப்படுபொருள் ஆகும் வேறுபாடு என்பதும் அதனான் அது செயப்படுபொருள் வேற்றுமை எனப்படும் என்பதும் புலனாகும்.

சூ. 72 : காப்பின் ஒப்பின் ஊர்தியின் இழையின்
ஓப்பின் புகழின் பழியின் என்றா
பெறலின் இழவின் காதலின் வெகுளியின்
செறலின் உவத்தலின் கற்பின் என்றா
அறுத்தலின் குறைத்தலின் தொகுத்தலின் பிரித்தலின்
நிறுத்தலின் அளவின் எண்ணின் என்றா
ஆக்கலின் சார்தலின் செலவின் கன்றலின்
நோக்கலின் அஞ்சலின் சிதைப்பின் என்றா
அன்ன பிறவும் அம்முதற் பொருள
என்ன கிளவியும் அதன்பால என்மனார் [11]

க - து : வினையே வினைக்குறிப்பு என்றவற்றை விளக்குமுகத்தான் வினைக்குறிப்புக்கள் பெயரடியாகப் பிறத்தலின் அவற்றை வினையியலுட் பெறுமாறு உய்த்துணர வைத்துத் தொழிலடியாகப் பிறக்கும் சொற்களுள் இன்றியமையாதனவற்றைத் தொகுத்து வாய்பாட்டு முறையாற் கூறுகின்றது. இவற்றை வினையியல் நோக்கிக் கொள்ளவையாது விதந்து கூறினார் பின்னர் வேற்றுமை மயங்கியலுள் ஒருசார் வினைமயங்குதல் பற்றி ஓதுதற் பொருட்டென்க. இரண்டாம் வேற்றுமைக்குரிய வினைகள் யாவும் இயற்றலும் திரித்தலும் எய்தலுமாகிய மூன்றனுள் அடங்குமாறு அறிந்துகொள்க.

உரை : காப்பு முதலாகச் சிதைப்பு ஈறாக உள்ள இவ்இருபத்தெட்டும் அவை போல்வன பிறவுமாகியவற்றின் அடிப்படைப் பொருளவாகிய எத்தகைய சொற்களும் இரண்டாம் வேற்றுமைப் பாலவாகும். என்றா என்பன எண்இடைச் சொற்கள்—இன் யாவும் அசைநிலைப்பொருளாய் நின்றன. 'அம்முதற் பொருள என்ன கிளவியும்' என்றது காப்பு முதலாயசெயல் நிகழ்தற்கு அடிப்படையான் பொருள்களின் பெயர்கள் என்றவாறு.

வேற்றுமை எய்துதல் பொருளாயினும் இவ்வதிகாரத்துக் கூறப் பெறும் இலக்கணம் எல்லாம் சொல் (வடிவின்) அடிப்படையிற் கூறப்படுதலான் ஒற்றுமைநயத்தான் சொல் மேலேற்றி என்ன கிளவியும், அதன் பால" என்றார். உருபு நிற்றல் சொல்லின் கண்ணேயாகலின். இவ்விளக்கம் மேல்வருவனவற்றிற்கெல்லாம் ஒக்கும்.

எடுத்துக் காட்டு : மன்னன்தன் ஊரைக்காக்கும், சாத்தன் தன் தந்தையை ஒப்பான், தேரை ஊரும் இகலை இழக்கும் மரத்தை அறுக்கும் எயிலை இழைக்கும் தலைவியைக் காதலிக்கும் நோயைக் குறைக்கும் கிள்ளையை ஒப்பும் பகைவரை வெகுளும் படையைத் தொடுக்கும் அரசனைப்புகழும் தீயாரைச்செறும் வேலியைப்

பிரிக்கும் தீமையைப்பழிக்கும் நட்பினை உவக்கும் பொன்னை நிறுக்கும் மக்களைப்பெறும் கலையைக் கற்கும் நெல்லை அளக்கும் மணியை எண்ணும் உணவை ஆக்கும் மலையைச் சாரும் நெறியைச் செல்லும் சூதினைக்கன்றும் அழகை நோக்கும் கள்வனை அஞ்சும் காட்டைச் சிதைக்கும் எனவரும். இவற்றிற்கு ஏற்ற எழுவாய் கூட்டிக் கண்டு கொள்க. காத்தல், பேணல், புரத்தல் என்பவை ஒத்த பொருளின ஆதலின் காப்பு வாய்ப்பாடு ஆயிற்று; ஏனையவும் அன்ன.

அன்னபிறவும் என்றதனான், பணிதல், பணித்தல், அடைதல் எழுதுதல் பாடுதல் அடுதல் (சமைத்தல்) முதலாயினவும், புகழை உடையான், அறிவை உடையான் மாசினை இலன்—கூற்றத்தை அனையன் என வினைக்குறிப்பாக வருவனவும் பிறவும் கொள்க.

உடைமை ஆறாவதன் பொருளன்றோ எனின்? 'அரசனது புகழ்' என உடைமைப் பொருள் தலைமை பெற்று நின்றவழி ஆறாவதாம். அரசன் புகழை உடையான் எனத் தலைமைப் பொருள் வேறாய் உடைமைச் சொல். வினைக்குறிப்பாய வழி இரண்டாவதாம். ஆறாவது பெயர்கொண்டு முடிதலும் இரண்டாவது வினைகொண்டு முடிதலும் அவற்றின் வேறுபாடாகும்.

சூ. 73: மூன்றாகுவதே
ஒடுவெனப் பெரிய வேற்றுமைக்கிளவி
வினைமுதற் கருவி அனைமுதற்றதுவே. [12]

க-து: மூன்றாம் வேற்றுமையாமாறு கூறுகின்றது.

உரை: ஒடுவெனப் பெயர் பெற்ற வேற்றுமைச் சொல் யாதொரு பெயரிடத்துவரினும் அது மூன்றாம் வேற்றுமையாம். அது வினை நிகழ்தற்கு அடிப்படைக் கருவியாகிய அத்தகைய காரணத்தை உடையதாய்வரும்.

"எவ்வழிவரினும்" என்பது மேலைச் சூத்திரத்தினின்று அதிகரித்தது. கருவியாக நிற்கும் சொல்லை அவ்வுருபு ஊர்ந்து அவ்வேற்றுமையைப் புலப்படுத்தும். இரண்டாம் வேற்றுமை வினை நிகழ்தற்குரிய பொருளிடத்தும் மூன்றாம் வேற்றுமை அவ்வினை நிகழ்தற்குரிய கருவியிடத்தும் தோன்றி நிற்கும் என்றவாறு.

ஈண்டு வினைமுதல் என்றது வினையின் அடிப்படையை, மேல் அவ்விருமுதல் என்றாற் போல "வினைமுதல்" என்றா ரெனக் கொள்க. எனவே "வினைமுதல்கருவி" என்றது வினை நிகழ்தற்கு அடிப்படையான கருவி என்றவாறாம். கருவி என்பது அகக்கருவி. புறக்கருவி, முதற்கருவி துணைக்கருவி சார்புக் கருவி ஒற்றுமைக் கருவி, வேற்றுமைக் கருவி முதலியவாகப் பல்வகைப்படுதலின் "அனைமுதற்று" என்றார். நோக்கும் முறைமையாற் கருவியே காரணமாகவும் நிற்றலின் "வினை முதற்கருவி அனைமுதற்றென்றார்" 1. முதல் = அடிப்படை, 2. முதல் = காரணம்.

எ-டு : கொடியொடு துவக்குண்டான் — 'ஊசியொடுகுயின்ற தூசும்பட்டும்' 'மனத்தொடுவாய்மை மொழியின்' எனவரும். இவை முறையே முதற்கருவி, துணைக்கருவி, அகக்கருவி எனப்படும். கோயில் கற்களாற் கட்டப்பட்டது, முதற்கருவி. கோயில் தச்சனாற் கட்டப்பட்டது, துணைக்கருவி, கோயில் அரசனாற் கட்டப்பட்டது, நிமித்தகருவி. கண்ணாற் கண்டான் ஒற்றுமைக்கருவி. வாளான் வெட்டினான் வேற்றுமைக்கருவி.

இனி உரையாசிரியன்மாரும் பிற ஆய்வாளரும் வினைமுதற் கருவி என்பதனை வினை முதலும் கருவியும் எனப்பிரித்து இவ் விரண்டும் இம்மூன்றாம் வேற்றுமைக்குப் பொருளாகும் எனக் கொண்டனர். பெயர்ப்பொருள் எய்தும் ஒவ்வொரு வேறு பாட்டினையும், தனித்தனியாக எண்ணித் தொல்லாசிரியன்மார் தொகை கொடுத்துள்ளமையை 'எட்டே வேற்றுமை' என ஆசிரியர் புலப்படுத்தினார். ஈண்டு வினைமுதலும் கருவியும் எனின் அவற்றை இரண்டாக எண்ணுவதல்லது ஒன்றாக எண்ணுவது நூல்நெறிக்கும் தருக்கவியலுக்கும் பொருந்தாமை யறிக. அன்றியும் வினைமுதல் என்பது எழுவாயாய் முதல் வேற்றுமையாவதல்லது எவ்வாறு மூன்றாம் வேற்றுமையாகும்? "ஆயெட்டென்பதொழின்முதனிலையே" என்னும் சூத்திரத்துள் கருவியை மூன்றாவதற்கும் "செய்வது" என வினைமுதலை (எழுவாயை) முதலாவதற்கும் உரியவாகக் கூறுதலைக் காண்க.

கருவி, காரணம், ஏது என்பவற்றைக் 'கருவி' என்னும் பொருள்படக் கொள்ளுதல்வேண்டும் என்பது ஆசிரியர் கருத்தாதலைப் பின்வரும் சூத்திரத்தான் அறியலாம். 'ஒடு' என்னும் இவ்வுருபு பற்றிய விளக்கமும்-இன், ஆன் என்னும் துணையுருபுகளின் வரலாறும் பிறவும் ஆண்டு விளக்கப்பெறும்.

சூ. 74 : அதனின் இயறல் அதற்றகு கிளவி
அதன்வினைப் படுதல் அதனின் ஆதல்
அதனிற் கோடல் அதனொடு மயங்கல்
அதனொ டியைந்த ஒருவினைக் கிளவி
அதனொ டியைந்த வேறுவினைக் கிளவி
அதனொ டியைந்த ஒப்பல் ஒப்புரை
இன்னான் ஏது ஈங்கென வருஉம்
அன்ன பிறவும் அதன்பால என்மனார் [13]

க-து : மேற்கூறிய கருவி' பொருள் நிலையான் இவ்வாறு வகைப்பட்டு வரும் என்கின்றது. பிறவிளக்கங்கள் ''காப்பின் ஒப்பின்'' என்புழிக் கூறியவாறு கொள்க.

பொருள் : அதனின் இயறல்...... இன் ஆன் ஏது, என ஈங்குச் சொல்லப்பட்டனவாய் வருவனவும் அவை போல்வன பிறவும் மூன்றாம் வேற்றுமையின் பாலன என்று கூறுவர் ஆசிரியர்.

'இன்னான் ஏது' என்றது இன்னும் ஆனுமாகிய துணையுருபுகளை ஏற்று வரும் ஏதுப்பொருள் என்றவாறு. இதனான் ஒடு உருபேயன்றி மூன்றாம் வேற்றுமைக்கு இன்-ஆன் என்பவை ஏதுப்பொருட்கண் மாற்று உருபுகளாக வருதல் பெறப்பட்டது. இதனை, ஓம்படைக் கிளவிக்கு ஐயும் ஆனும் (வே-ம-14) என ஆசிரியர் ஆளுதலானும் அதனின் இயறல் என உடம்பொடு புணர்த்து ஓதுதலானும் அறியலாம். ஈங்கு என்றது இவ்விடத்துக் கூறப்பெற்ற கருவிப் பொருள் என்றவாறு. என ஈங்குவருஉம் அன்னபிறவும் எனக் கூட்டுக.

எ-டு. 1) அதனினியறல் : மண்ணின் இயன்ற குடம், அறிவின் அமைந்த சான்றோர் எனவரும். மண்ணே குடமாகவும் அறிவே சால்பாகவும் நிற்றலின் அதனின் இயல்தலாயிற்று. இதனை முதற்காரணம் என்ப. இவை, இக்குடம் மண்ணானியன்றது. சாத்தன் மண்ணாற் குடத்தைச் செய்தான். இஃது அறவினாகிய சால்பு. இவர் அறவினாற் சால்புற்றார். எனவும் தொடர் அமைப்பு வேறுபட்டு வரும். கருவிகளுள் இஃதொருவகை.

2) அதற்றகுகிளவி : வாயான் தக்கது வாய்ச்சி எனவரும். வாய்ச்சி என்பது அதன்வாய் காரணமாக அமைந்த குறியாதலின் அது தகவாயிற்று. இது, வாய்ச்சி வாயான் தகவுடையதாயிற்று எனத் தொடர் வேறுபட்டும் வரும். இது கருவிகளுள் பிறிதொரு வகை.

3) அதன் வினைப்படுதல் : கொற்றன் நாயாற் கௌவப் பட்டான் எனவரும். கௌவுதல்வினை சாத்தன் கண் உறுதலின் வினைப்படுதலாயிற்று. இக் கருவி முன்னையவற்றின் வேறுபட்டது.

4) அதனின் ஆதல் : வாணிகத்தின் ஆயினான், என வரும். ஆதலாவது ஆக்கமுறுதல். அஃதாவது ஒரு பொருளின் நிலைமாற்றம். முன்னர் வறியனாக இருந்த ஒருவன் அந்நிலை நீங்கிச் செல்வனாயினான் என்பது கருத்தாயின் அஃது ஐந்தாம் வேற்றுமைக்குரிய ஆக்கமாம்.

ஈண்டு ஆக்கம் சாத்தன் வாணிகம் செய்தமையான் செல்வனாயினன் எனக் காரணப் பொருட்டாய் நின்றது. வினையின்றி ஆக்கம் நிகழாதாதலின் செய்தல் வினையாயிற்று. வாணிகம் செய்தமையான் என்பது வாணிகத்தின் என நின்றது. இஃது ஒருவகைக் கருவி ஆயிற்று. சாத்தன் வாணிகம் செய்தான் அதனாற் செல்வனாயினான், என்னும் இரு தொடர்களை 'இன்' உருபு ஒரு தொடராக்கியவாறும் அஃது ஏதுக்கிளவியாயினவாறும் காண்க.

5) அதனிற்கோடல் : காணத்தாற் கொண்ட அரிசி எனவரும் (கொள்ளப்பட்ட என்பது கருத்து) அரிசி பணத்தாற் கொள்ளப்பட்டது. சாத்தன் பணத்தான் அரிசியைக் கொண்டான் என அது கோடற்குக் காரணமாயினமையின், இஃதொரு கருவி வேறுபாடு அயிற்று. பணத்தைக் கொண்டு அரிசியை வாங்கினான் என்பது இதன் புறநிலைத் தொடர். கொண்டு என்பது சொல்லுருபாக வரும்.

6) அதனொடு மயங்கல் : பாலொடு தேன் மயங்கிற்று எனவரும். ஈண்டுத் தேன் தன் தன்மை திரிந்து வேறுபட்டமை கொள்க. மயக்கமாவது ஒன்றுபடுவது. கலப்பு என்பது பின்னர்ப் பிரித்தற்கு ஏற்பக் குழுமுவது. "விசும்பொடைந்தும் கலந்த மயக்கம்" (மரபியல் 91) என்பது காண்க, தேன் மயங்கற்குப்பால் கருவியாக நின்றது : இதுவும் ஒருவகைக் கருவி வேறுபடாயிற்று. பாலொடு தேனைக் கலந்தான் என்பது உருபு மயக்கமாய் ஏழாவதன் பொருளாம். அதனான் எண்ணொடு (எள்ளொடு) விராய அரிசி எனக் காட்டுதல் நிரம்பாமையறிக.

7) அதனொடு இயைந்த ஒருவினைக்கிளவி : அரசனொடு இளையர் வந்தார் (இளையர் - பணியாளர்) கணவனொடு மனைவி வந்தாள் எனவரும். இளையரும் மனைவியும்

வருவுதற்குக் காரணம் அரசனும் கணவனுமாம். வருதல் வினை அரசற்கும் கணவற்கும் அமைதலின் ஒருவினை ஒடு எனப்பட்டது. கருவியுள் இஃதொருவகை.

8) அதனொடு இயைந்த வேறுவினைக்கிளவி :- காவொடு அறக்குளந் தொட்டான் எனவரும். குளந்தொடுதற்குக் காரணம் காவளர்த்தற்காகலின் கா, கருவியாயிற்று. தொடுதல் குளத்திற் கன்றி காவிற்குச் சேராமையின் வேறுவினை ஒடுவாயிற்று. இஃதொருவகைக் கருவி.

மலையொடுபொருத மால்யானை என்பதனைக் காட்டி மலையொடுபொருதல் யானைக்கல்லது மலைக்கின்மையின் வேறுவினைஒடு என்பார் உரையாளர். ஆசிரியர்க்கு அது கருத்தாயின் அதனொடு இயையாத்தனி வினைக்கிளவி என்பர். இத்தகையன அன்னபிறவும் என்பதனுள் அடங்குமென்க. பொருதல் வினைக்கு மலை இடமாகவும் - ஏதுவாகவும் அமைதலின் மூன்றாவதற்குரியதாகக் கொள்ளப்படும்.

9) அதனொடு இயைந்த ஒப்பல் ஒப்புரை : பொன்னொடு இரும்பனையர் நின்னொடுபிறரே - எனவும் விலங்கொடு மக்களனையர் இலங்குநூல் கற்றாரொடேனையவர் எனவும் வரும்.

பொன்னும் இரும்பும் தம்முள் ஒத்தன அல்ல ஆதலின் ஒப்பல்லாத எனவும் அவை இணைந்து பிறிதோர் இணைக்கு உவமமாக வருதலின் ஒப்புரை என்றும் கூறினார். அவற்றின் இயைபு உவமை கூறற்குக் காரணமாக அமைதலின் இஃது ஒரு வகைக் கருவி ஆயிற்று.

இன் ஆன் ஏது = இன்னும் ஆனும் ஆகிய மாற்று உருபுகளை ஏற்று ஏதுப்பொருளில் வருவன. அவை : கல்வியிற் பெரியன் கம்பன், பனியின்மையின் குளிரில்லை. எனவும் அறிவாற் சிறந்தான் அகத்தியன், புகை உண்மையான் நெருப்புண்மை பெற்றாம் எனவும், பிறவாறும் வரும். "இன்" உருபு ஐந்தாவதற் குரியதாக ஓதப்பட்டமையின் மூன்றாம் வேற்றுமைக்குரிய ஏதுப்பொருளின் கண் அருகியல்லது பயின்றுவாராதென அறிக. ஆனுருபு பயின்று வரும்.

உரையாசிரியன் மார் இன்னும் ஆனும் ஒருதொடரின்கண் வருமெனக் கொண்டு, முயற்சியிற் பிறத்தலான் ஒலி நிலையாது என உதாரணம் காட்டுவர். அவரும் ஏதுப்பொருட்டாய் வரும் என்பதினின்று வேறுபட்டார் அல்லர். "இன்னான்"

என்பதனை ஒரு சொல்லாகக் கொண்டு கண்ணாற் கொத்தை காலான் முடவன் எனக்காட்டுவர் இளம் பூரணர். அவர் கருத்துச் சூத்திர நோக்கிற்கு ஒவ்வாமை வெளிப்படை.

அன்னபிறவும் என்றதனான் கண்ணாற் குருடன், காலான் முடவன் என இன்மை நிலை கருவியாக வருவனவும், "வேலோடு நின்றான் இடுவென்றது போலும்" வேரோடு மரஞ் சாய்ந்தது. எனவருவனவும் கொள்க. வேல் அச்சுறுத்தற்கும் வேர் மரஞ்சாய்ந்ததற்கும் காரணமாக நிற்றலை நுணுகிக்காண்க. பிறவும் இவ்வாறு காரணப்பொருட்டாய் வருவனயாவும் மூன்றாம் வேற்றுமை கருவியின்பாற்படுத்துக் கொள்க.

கருவி, காரணம், ஏது என்பவை தம்முள் நுணுகிய வேறு பாடுடையவேனும் மூன்றாம் வேற்றுமையை உணர்த்துதற்கண் ஒத்த பொருளினவாய் வழங்குமென்க. ஏதுவை வடநூலார் பல் வகைப்படுத்துக் கூறுவர். அவற்றையெல்லாம் தமிழ் நூலார் கருவி என அடக்கி ஓதினர் என்க. இன் (இதனான்) ஆன் (அதனான்) என்பவற்றுள் ஏதுப்பொருள் அனைத்தும் அடங்கு மென்க. ஆசிரியர் காலத்து இவை வழக்குப் பயிற்சி பெற்று வருவனவாயின என்பதனை "யாதன் உருபிற் கூறிற்றாயினும்" எனவும் ஓம்படைக் கிளவிக்கு ஐயும் ஆனும் எனவும் "ஐ ஆன் கு எனவரூஉம் இறுதி" எனவும் ஆசிரியர் பெருக வழங்குதலான் அறிக.

இனி "அதனொடு இயைந்த ஒரு வினைக்கிளவி" என்பதற்கு ஒரு வினைநிலை என்பது பொருளாக நிற்றலைக் கருதாமல் அதனை உடனிகழ்ச்சிப் பொருள் என மாறாகக் கொண்டு கருவி கருத்தா உடனிகழ்வு அதன் பொருள் என்றார் பவணந்தியார். இடைக்கால நூலார் உடனிகழ்ச்சி ஒரு வேற்றுமையாகுமா ? எனக் கருதாமல் வேற்றுமைப் பகுதியாகவே கொண்டனர். உடனிகழ்ச்சி என்பது வினையன்றோ ? அஃது எங்ஙனம் வேற்றுமைப்படும்? வினை காரணமாகப் பெயர்ப் பொருள் எய்தும் நிலையே வேற்றுமையாகும். அங்ஙனமிருக்க வினையையே வேற்றுமை எனல் மாறு கொளக்கூறலாகும் என்க. மேலும் அவர் 'ஒடு' உருபை உடனிகழ்ச்சிக்கே உரியதாகவும் புலப்படுத்தினார். அதன் நீட்சியாகிய ஓடு என்பதையும் தனி ஒரு உருபாகக் கூறினார். ஆன் என்பதன் பிறழ் பிரிப்பாகிய ஆல் என்பதனையும் உருபாக ஓதினார். ஆல் என்பதே ஆன் ஆயிற்று என்பாரும் உளர். உரிச்சொல் மூலம் ஆல் ஆதற்கியையாமையை ஓர்ந்தறிக. மற்றும் இடையீடின்மை, ஒருங்கு, இயைபு எனப் பொருள்தரும் 'உடன்' என்னும் இடைச்சொல்லையும் உருபாக ஓதிமயக்கினார். இவ்வெல்லாம் காலத்தான் நேர்ந்த குறை.

'கொண்டு' என்னும் வினையெச்சச் சொல் இடுங்கி மருவி ஒடு என நின்றது. (கொண்டு-கொடு-ஒடு) அதனையே இலக்கணக் குறியீடாகக் கொண்டனர் தொன்னூலார் என்க.

இனிக் 'கொண்டு' என்னும் வினையெச்சவினையும் கொடு-ஒடு எனத்திரிந்து நிற்கும். 'உடன்' என்னும் இடைச் சொல்லும் உடன் ஒடன் ஓடும் ஒடு என மருவி நிற்கும் (விரைவுக் குறிப்புணர்த்தும் உடன் என்னும் உரிச்சொல் வேறு இது வேறு என அறிக) எனவே, ஒடு என்பது உருபாக நிற்குமிடமும்-வினை ஒழிபாக நிற்குமிடமும் உடன் என்னும் பொருள்பட நிற்குமிடமும் தொடர்மொழிப் பொருளை நோக்கி உணர்தல் வேண்டும்.

வாளொடு வெட்டினான் 'ஒடு' உருபு. வாளொடு (கொண்டு) வந்தான் ஒடு வினையொழிபு. வாளொடு கிடந்தான் - ஒடு உடனிகழ் விடைச்சொல்.

இவற்றுள் பின் இரண்டையும் உருபாகக் கருதி மயங்குதலொடு அதனை உடனிகழ்ச்சி என்னும் வேற்றுமையாக கொண்டு பெரும்பாலோர் மயங்குவர். இனி ஆசிரியர் ஒடு என்னும் சொல்லை வழங்குமிடங்களுள் சில காட்டுதும்.

''முதலாகெழுத்து ஙகர மொடு தோன்றும்'' (எழுத்-29) உம்மைப்பொருட்டு. ''இசையொடு சிவணியநரம்பின் மறைய'' (எழுத்-33) உடனாதற்பொருட்டு. 'மேல் முப்பெயரொடும் வேறு பாடிலவே' (எழுத்-உரு-20) அளவைப்பொருட்டு. 'பொருளொடு புணராச்சுட்டுப்பெயர்' (கிளவி-37) இடப்பொருட்டு. ஆயீரைந் தொடு பிறவும் அன்ன' (கிளவி-58) உம்மைப்பொருட்டு 'ஒப்பொடு வருஉம் கிளவியொடு தொகைஇ' (பெய-9) வினை யடை (ஆக) 'ஆயென் கிளவியும் அவற்றொடு கொள்ளும்' (வினை-15) ஒப்புப் பொருட்டு. 'தன்னொடு சிவணிய ஏனோர் சேறலும்'' (அகத்-29) ஐ வேற்றுமைப் பொருட்டு. 'ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப' (புறத்-25) உடனாதற் பொருட்டு. 'நிம்பிரி கொடுமை வியப்பொடு புறமொழி' (மெய்-26) 'நிலந்தீநீர்வளி விசும்பொடு ஐந்தும்' (மரபி-91) எண்ணுப் பொருட்டு. என, இங்ஙனம் ஆசிரியர் ஒடு என்னும் இடைச் சொல்லைப் பல்வேறு பொருள்பட ஆளுதலைக் காண்க.

எனவே, மூன்றாம் வேற்றுமைக்குரிய வேறுபாடு கருவியாக நிற்கும் நிலை ஒன்றே என்பதும் அதற்கு ஒடு என்னும் அடிப்படை உருபும் இன் ஆன் என்னும் ஏதுப்பொருள் விளக்கும் சொல்லுருபுகளும் உரிய என்பதும் உடனிகழ்ச்சி

என்பதொரு வேற்றுமை நிலையை ஆசிரியர் கூறவில்லை என்பதும் அஃதொரு வேற்றுமையாதற்கு இயலாதென்பதும் ஒடு என்னும் உருபிடைச் சொல் வேறு இணைப்பு முதலிய பொருள் பற்றிவரும் ஓடு என்னும் இடைச்சொல் வேறு என்பதும் பிறவும் இதனான் தெளிவாகும்.

சூ. 75 : நான்காகுவதே
குவ்வெனப் பெயரிய வேற்றுமைக்கிளவி
எப்பொரு ளாயினும் கொள்ளும் அதுவே [14]

க-து : நான்காம் வேற்றுமை ஆமாறு கூறுகின்றது.

உரை : கு எனப் பெயர் பெற்ற வேற்றுமைச்சொல் யாதொரு பெயரிடத்து வரினும் அது நான்காம் வேற்றுமையாம். அஃது எத்தகைய பொருளாயினும் ஏற்கும் நிலையினதாகும்.

எ-டு : அரசன் பாணர்க்குப் பரிசளித்தான். வேந்தன் புலவர்க்கு வரிசை தந்தான் எனவரும்.

இயற்கையாகத் தான் கொண்டுள்ளதும் பிறிதொன்றாற் கொண்டதும், கொள்வதும் ஆகிய எல்லாம் அடங்கும் என்பதறி வித்தற்குக் கோடற்பொருள் எனத் தொழிற் பெயராற் கூறாது செய்யும் என்னும் வாய்பாட்டதாகிய கொள்ளும் என்னும் வாய்ப் பாட்டாற் கூறினார். கொள்ளல், ஏற்றல், பெறல், உறல், படுதல், அடைதல் என்பவை இதன்கண் ஒத்த பொருளிவனாய் வரும்.

நான்காம் வேற்றுமைக்குரிய 'கு' உருபு விரிந்து நிற்குங் காலும் ஏனைய வேற்றுமைக்குரிய பொருளொடு மயங்கிவரும் இயல்புடையதாகலின் இதற்குரிய கோடற்பொருளை மிகவும் நுணுகி உணர்தல் வேண்டி 'எப்பொருளாயிலும்' என இதனை விளங்க ஓதினார்.

ஆசிரியன் மாணாக்கற்கு அறிவு கொடுத்தான் எனக் கொடுப்போன் பொருளை இழவாமல் கொள்வோன் பெறும் பொருளும். தலைவன் தலைவிக்கு இன்பமளித்தான் எனக் கொடைப்பொருளின்றி ஆண்டுத் தோன்றும் பொருளும். "அருமறை சோரும் அறிவிலான் செய்யும் பெருமிறைதானே தனக்கு" எனக் கொடுப்போரின்றித்தானே ஆக்கிக்கொள்ளும் பொருளும் போல்வன வெல்லாம் அடங்க "எப்பொருளாயினும் கொள்ளும்" என்றார்.

இதற்கு இது எனல் பொருள், என்பார் பவணந்தியார் "இதற்கு இது" என்னும் வாய்பாடு எச்சப்பட்டு, நின்றுவற்றுதல் காண்க.

சூ. 76 : அதற்கு வினை உடைமையின் அதற்குடம்படுதலின்
அதற்குப் படுபொருளின் அதுவாகு கிளவியின்
அதற்கு யாப்புடைமையின் அதன் பொருட்டாதலின்
நட்பின் பகையின் காதலின் சிறப்பின் என்று
அப்பொருட் கிளவியும் அதன் பால என்மனார் [15]

க-து : கோடற்பொருள் வகைப்படுமாறு கூறுகின்றது. பிற விளக்கங்கள் "காப்பின் ஒப்பின்" என்பதற்குக் கூறியாங்குக் கொள்க.

உரை : அதற்கு வினையுடைமை முதல் சிறப்பு ஈறாகச் சொல்லப்பட்டனவும் கோடற் பொருளுக்கு உரியவாய் வரும் பிற கிளவிகளும் நான்காம் வேற்றுமைப்பாலவாம். கிளவி என்றது பொருளை. இன் யாவும் அசைநிலைப் பொருட்டாம்.

எ-டு. : 1) அதற்கு வினையுடைமை :- நெல்லுக்கு உழுதான்-கரும்பிற்கு உழுதான் எனவரும். (நெல் விதைப்பதற்கு உழுதான் என்பது பொருள்) உழுதலின் பயனை நெல்லும் கரும்பும் கோடலின் இவை கொள்ளும் பொருளாயினவாறும் வினை அவற்றிற்கு உடைமையாயினவாறும் காண்க. நெல்லைப் பெறுதற்கு உழுதான் என்பது பொருளாயின் 'அதன் பொருட்டு' என்பதனுள் அடங்கும்.

இனி சேனாவரையர் வினையாவது உபகாரம் என்று கூறிக் கரும்பிற்கு வேலி என உதாரணம் காட்டுவார். வேலி என்பது வினையாகாமையின் பொருந்தாமை யறிக. வேலி யமைத்தான் எனின் பொருந்தும்.

2) அதற்கு உடம்படுதல் :- சாத்தன் மணத்திற்கு உடம்பட்டான். அரசன் போருக்கு உடம்பட்டான் எனவரும் உடம்பாட்டினை ஏற்பது மனமும் போருமாதலைக் காண்க. உடம்படுதல் - ஒப்புதல். சான்றோர் கொலைக்கு உடம்பட்டார் என்பதும் அது.

உரையாளர் சாத்தற்கு மகளுடம்பட்டார் எனக் காட்டுவர். உடம்பாடு உருபேற்ற சொல்லிற்கியையாமையின் அது பொருந்தாமையறிக. இவ்வாறு வருவன அன்னபிற என்பதனான் முடியும்.

3) அதற்குப்படுபொருள் : ஒரு வண்ண ஓவியன் . தான் வரைந்த மலர்களைச் சுட்டி இதற்கு நிறம் மஞ்சள், இதற்கு நிறம் நீலம் என்றாற் போலக் கூறுதல் இதன் பொருளாம். படுதல்- ஒத்துரிமையாதல். படுபொருள் வினைத்தொகை. நெல்லுக்கு உமியுண்டு - நீர்க்குநுரையுண்டு என வருவன இதன்கண் அடங்கும். நெல்லும் நீரும் முறையே உமியையும் - நுரையையும் இயற்கையாகவே கொண்டுள்ளவை ஆதலின், பட்டபொருளாயின. அம்முறையான் அவை கோடற் பொருள் பயந்து நின்றன.

இதற்குச் சாத்தற்குக் கூறு கொற்றன் என உதாரணம் காட்டுவர் உரையாளர். சாத்தன் உருவாவதற்குக் கொற்றன் ஒரு கூறாக அமையின் நான்காவதாம். இன்றேல் சாத்தனது ஒரு கூறு கொற்றன், சாந்தன் கண் ஒரு கூறு கொற்றன் என ஆறாவதும், ஏழாவதுமாய் மயக்கந்தருமென்க.

4) அதுவாகு கிளவி : ஏற்கும்பொருளும் ஏற்கப்படும் பொருளும் ஒன்றாகி விடுதல் இதன் பொருளாம். தாலிக்குப் பொன் கொடுத்தான், ஆடைக்கு நூல் தந்தான் எனவரும். பொன்னே தாலியாகவும் நூலே ஆடையாகவும் திரிதலின் அதுவாகுகிளவி என்றார். கிளவி என்றது ஈண்டுப் பொருளை.

5) அதற்கு யாப்புடைமை : யாப்புடைமையாவது இன்றியமையாமை, பொருந்தலுமாம். பிணிக்கு மருந்துண்டான்- பாடற்கு இசைகூட்டினான் எனவும் கைக்குக் கடகமிட்டான், செவிக்குக் குழைபூட்டினான் எனவும் வரும்.

6) அதன் பொருட்டாதல் : பொருட்டு = நிமித்தம்: மழைக்குக் குடைபிடித்தான், பசிக்கு உணவளித்தான், கூழிற்கு வேலை செய்தான், உணவுக்கு அரிசி கொடுத்தான் எனவரும். மழை முதலாயவை ஓராற்றான் குடை முதலாயவற்றை ஏற்று நிற்றலின் கோடற் பொருளாயினவாறு காண்க. பசிக்கு உண்டான் எனவரின் அஃது மூன்றாவதன் மயக்கமென அறிக.

7) நட்பு : நெருப்புக்கு நெய்வார்த்தான் எனவும், கபிலர்க்கு நட்பினன் பாரி எனவும் வரும்.

8) பகை : நெருப்புக்கு நீர்விட்டான் எனவும், பாம்பிற்குப் பகை மயில் எனவும் வரும்.

9) காதல் : தலைவன் தலைவிக்குப் பூச்சூட்டினான் எனவும், நட்டார்க்குக் காதலன் எனவும்வரும்.

10) சிறப்பு : மனைக்கு விளக்கம் மடவார் எனவும் கல்விக்குச் சிறந்தது செவி எனவும் வரும்.

11) அப்பொருள் என்றது அன்னபொருள் என்றவாறு. அதனான் போர்க்குப்புணைமன்,மனைக்குப்பாழ் வாணுதலின்மை உற்றாற்குரியர் பொற்றொடிமகளிர், அவற்குச்சோறு உண்டு, இவற்குப்போக்குண்டு. அடியார்க்கு அன்பு செய்தான், என்றாற் போல வருவனவும் - கோடற்பொருளாய் வந்தன. பிறவாறு வருவனவும் அறிந்து கொள்க.

'கு' என்னும் இவ்உருவு ஏற்கும் என்னும்முற்றுச்சொல் திரிந்து வந்த மரூஉவாய் (ஏற்கும்-ஏற்கு, இக்கு-க்கு-கு) இலக்கணக்குறியீடாய் இடைச் சொல்லாயிற்றென்க.

சூ 77 : ஐந்தாகுவதே
இன் எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
இதனி னிற்றிது என்னும் அதுவே (16)

க-து : ஐந்தாம் வேற்றுமை ஆமாறு கூறுகின்றது.

உரை : இன் எனப் பெயர்பெற்ற வேற்றுமைச்சொல் யாதொருபெயரிடத்து வரினும் அது ஐந்தாம்வேற்றுமையாம் இப்பொருளினின்று இத்தன்மைத்துஇப்பொருள் என உணர்த்தும், அஃதாவது வேற்றுமை ஏற்ற சொல் ஓர்அளவையாக-எல்லையாக நிற்றல் இதன் வேற்றுமை நிலையாகும்.

எ-டு : ஓதலிற் சிறந்தன்று ஒழுக்கமுடைமை. தஞ்சையின் மேற்கு உறையூர். உறையூரின் முக்காவதம் கருவூர் - பழியின் நீங்கினான் பாண்டியன் எனவரும். பின்வரும் சூத்திரத்து உறழ்ச்சிக்கும் நீக்கத்திற்கும் உரிய பொருளை விதந்து கூறுதலின் எல்லைப்பொருளை எடுத்தோத்தினான் அடக்கினார் என அறிக.

இன்னுருபு ஏற்று நின்ற சொல்லை அளவையாக வைத்துப் பிறிதொரு பொருளின்நிலை புலப்படுத்தப்படுதலின் இதனைப் பொருஉப் பொருள் வேற்றுமை எனவும் கூறுவர். பொருவுதலாவது ஒப்பிட்டும் உறழ்ந்தும் கூறுதல். அஃதாவது உறையூரின் சிறியது வஞ்சி -உறையூரின் பெரியது மதுரை – எனவஞ்சியையும் மதுரையையும் உறையூரை அளவையாக வைத்துக் கூறுதலாம்.

இங்ஙனம் உறழாமல் உறையூரின் மேற்குவஞ்சி உறையூரின் தெற்கு மதுரை என்புழி உறையூர் எல்லையாக நின்றது. மற்றுச்

சோழன் உறையூரின் நீங்கி வஞ்சி சென்றான் என்புழிப் பிறிதொரு வகை எல்லையாக நின்றது. எனவே உறழ்ச்சி எல்லை நீக்கம் ஆகியவற்றிற்கு ஓர் அளவையாகக் கொண்டு நிற்கும் இவ் வேற்றுமையை அவற்றுள் ஒன்றன்பாற் படுத்துக்கூறுதல் ஒன்றக் கூறலாமாகலின் அவையாவும் அடங்க ''இதனின் இற்றிது'' என வாய்பாடு கொடுத்தோதினார் என்க. 'இற்று' என்பது இந்நிலைமைத்து என்னும் பொருட்டாம்.

அங்ஙனமாயின் இதனை அளவை வேற்றுமைஎனலாமெனின், அளவை என்பது அளத்தல்-நிறுத்தல்-முகத்தல் எண்ணல் முதலியவற்றைக் குறிக்கும் பெயராதலின் அவ்வாறு கூறின் மயங்க வைத்தல் என்னும் குற்றமாம் என்க. எல்லைப் பொருள் வேற்றுமை என்னாமைக்கும் அதுவே காரணம் என்க.

'இதனினிற்றிது' என்னும் வாய்ப்பாட்டினுள் 'இது' என்பது பொருளைச் சுட்டி நின்றதாகலின், இவனின் இன்னன் இவன், இவளின் இன்னள் இவள், இவரின் இன்னரிவர் இவற்றின் இன்ன இவை என ஏனைப்பாலுக்கும் ஒக்குமெனக் கொள்க.

வேற்றுமை என்பதன் இலக்கண அமைப்பையும் ஐந்தாம் வேற்றுமையின் வேற்றுமை இயல்பினையும் கருதாமல் ஐந்தாவது பொருவும் எல்லையும் ஏதுவும் நீக்கமும் என நான்கு வேறு பாட்டது என உரையாளரும் இடைக்கால நூலாசிரியன்மாரும் கொண்டு கூறினர்.

ஒப்புப் பொருள் இரண்டாவதற்கும் ஏதுப்பொருள் மூன்றா வதற்கும் உரியவாக ஆசிரியர் விளங்கக் கூறியிருத்தலையும் அவர் நோக்காராயினர். ஒரு பொருள் இரண்டு வேற்றுமைக்கு வரும் மயக்கம் வேறு. வேற்றுமை செய்யும் இயல்பு வேறு. இரண்டு மூன்று வேறுபாடுகளை ஒரு வேற்றுமையாகக் கூறுதல் ஏரண முறைக்கு முரண்பட்டதாகும். இங்ஙனம் உரை யாசிரியன்மாரும் பின் நூலாசிரியன்மாரும் மயங்கியதற்கு காரணம். ஆசிரியர் மூன்றாம் வேற்றுமைக்குரிய பொருள்களைக் கூறுதற்கண் ஓதிய ''இன் ஆன் ஏது'' என்பதன்கண் உள்ள 'இன்' என்னும் மாற்றுருபையும் ஐந்தாவதற்குரிய இன் உருபை யும் ஒன்றாகக் கருதியமையும், வேற்றுமைப்பொருள் மயக்கம் கூறுமிடத்து. மூன்றனும் ஐந்தனும் தோன்றக்கூறிய ஆக்கமொடு புணர்ந்த ஏதுக்கிளவி நோக்கோரனைய என்மனார்புலவர் (வே. ம.9) எனக்கூறிய சூத்திரத்தின் செம்பொருள் உணராமையு மாகும். இன்னான் ஏது என்பதற்கு விளக்கம் மேற்கூறப் பட்டது. 'மூன்றனும் ஐந்தனும்' என்னும் சூத்திரத்தின் உண்மை உரை விளக்கம் ஆண்டுக் கூறப்படும்.

இனி 'ஒடு' என்னும் சொல்வருமிடங்களை எல்லாம் உடனிகழ்ச்சி எனக் கொண்டு மயங்கினமை போல 'இன்' என்னும் இடைச்சொல் வருமிடங்களை எல்லாம் ஐந்தாம் வேற்றுமைஉருபாகக் கொண்டு மயங்கி ஏதுப் பொருள் ஐந்தாவதற்கும் உரியதென்று கொண்டனர் அவர். ஏதுப் பொருள்பற்றி மூன்றாம் வேற்றுமைக்கண்வரும் இன் என்னும் மாற்று உருபு வேறு அளவை (எல்லை) பற்றி ஐந்தாம் வேற்றுமைக்கண் வரும் இன்னுருபு வேறு என அறிக.

இனி ஐந்தாவதன் உருபாக இல், இருந்து நின்று என்ற வற்றையும் கொள்வார் சிலர். அவற்றுள் இல் என்பது பிறழ் பிரிப்பான் நேர்ந்த பிழை வடிவாம்-ஏனைய சொல்லுருபுகளாம். மற்று ஐந்தாம் வேற்றுமை எல்லைப் பொருளை இடப்பொருள் பயப்பதாகக் கருதி இது தேவையில்லை ஏழாம் வேற்றுமையுள் அடக்கிவிடலாம் என்போரும் உளர். அவர் உறழ்தலாகிய வேறுபாட்டினை ஏழாவது புரியாது என்பதை எண்ணிலர். ஏனைய விளக்கம் பின்வரும் நூற்பா உரையுள் கண்டுகொள்க.

சூ. 78 : வண்ணம் வடிவே அளவே சுவையே
தண்மை வெம்மை அச்சம் என்றா
நன்மை தீமை சிறுமை பெருமை
வன்மை மென்மை கடுமை என்றா
முதுமை இளமை சிறத்தல் இழித்தல்
புதுமை பழமை ஆக்கம் என்றா
இன்மை உடைமை நாற்றந்தீர்தல்
பன்மை சின்மை பற்றுவிடுதல் என்று
அன்ன பிறவும் அதன்பால என்மனார் (17)

கு-து : மேல் ''இதனினிற்றிது'' எனக் கூறியதன்கண் உள்ள 'இற்று' என்பதன் பொருள் வகையாமாறு கூறுகின்றது.

உரை : வண்ணம் முதலாகப் பற்றுவிடுதல் ஈறாகக் கூறப்பெற்றனவும் அவை போல்வன பிறவும் ஐந்தாம் வேற்றுமைப் பால எனக்கூறுவர் ஆசிரியர்.

எ. டு : வண்ணம் : காக்கையிற்கரிது களம்பழம் எனவரும். ஈண்டு இது வெனச் சுட்டப்பட்டது காக்கையின் வண்ணத்தை. காக்கையின்நிறம் தற்கிழமைப் பொருட்டாய் வேறின்றி நிற்றலின். இன் உருபு காக்கைக்கண் நின்றது. களம்பழத்திற்கும் இஃதொக்கும். இவ்விளக்கம் பின்வரும் பண்புச் சொற்களுக்கும் கொள்க.

வடிவு : சாத்தனின் நெடியன் கொற்றன் எனவும் கையின் நெடியது கால் எனவும் வரும். அளவு :- நாழியின் சிறியது உழக்கு எனவும் வானின் அகன்றது நெஞ்சம் எனவும், கஃசின் நிறைந்தது தொடி எனவும் பத்தின் குறைந்தது ஒன்பஃது எனவும் வரும். ஏனைய அளவைகட்கும் இவ்வாறே கொள்க. சுவை :- தேனின் இனியது சிறாரின்மழலை எனவரும். தண்மை:- நீரின் தண்ணியள் என் நெஞ்சமர்ந்தோள் எனவரும். வெம்மை :- தீயின் வெய்யது தேறார் சிறுசெயல் எனவரும். அச்சம் :- மானின் அஞ்சும் இம் மடவரல் எனவும் கயவரின் அஞ்சுவர் கள்வர் எனவும் வரும். நல்மை :- கற்றலின் நல்லது கேட்டல் எனவரும். தீமை :- கொலையிற்றீயது குரவரை இகழ்தல் எனவரும். சிறுமை :- ஏழ்மையின் சிறுமைத்து இயல்வது கரத்தல் எனவரும். பெருமை :- கல்வியின் மாண்டது கற்றறிந்தடங்கல் எனவரும். வன்மை :- மலையின் வலியது மனத்தின் திண்மை எனவரும். மென்மை :- மலரின் மெல்லியள் இம் மடவரல் எனவரும். கடுமை :- வேலின் கடிதவர் வெஞ்சொல் எனவரும். முதுமை :- கமுகின் முதியது தெங்கு எனவும் இவனின் முதியோன் இவன் எனவும் அதியனின் முதியோள் ஔவை எனவும் வரும். இளமை :- இவனின் இளையன்இவன் எனவும் இலையின் இளையது தளிர் எனவும் அப்பரின் இளையவர் ஆளுடைய பிள்ளையார் எனவும் வரும். சிறத்தல் :- ஓதலிற் சிறந்தது ஒழுக்கமுடைமை எனவரும். இழித்தல் :- இரத்தலின் இழிந்தது ஈயாதிவறல் எனவரும். புதுமை :- காலையிற் புதிது கடும்பகல் எனவரும். பழமை :- கனியின்பழையதுகாய் எனவும்கம்பனிற்பழையவர் கபிலர் எனவும் வரும். ஆக்கம் :- பாலின் ஆயிற்றுத்தயிர் எனவரும். தயிராதற்குப் பால் இடமாக நின்று பின்பு பால் தன் தன்மை நீங்கித் தயிராதலின் நீக்கம் கருத்துப் பொருள்பற்றி நிற்றல் காண்க. தவத்தின் ஆயினான் முனிவன் என்பது மது.

பாலினான் ஆயிற்றுத்தயிர் தவத்தினான் ஆயினன் முனிவன் எனஏதுப் பொருள் கருதின் அவை மூன்றாம் வேற்றுமைக்குரிய வாகும். என்னை ? அதனின் ஆதல் என ஆக்கம் மூன்றா வதற்கும் உரியதாகலின் என்க.

இன்மை :- வறுமையின் இன்மை எழுத்தறியாமை என வரும். உடைமை :- செல்வரின் உடையவர் செப்ப முடையார் எனவரும். நாற்றம் : சாந்தின் நறியது தாழை எனவரும்: (சாந்து-மரம்) தீர்தல் :- பசியிற்றீர்ந்தான் பாணன் எனவும் ஊரிற்றீர்தான் ஒற்றன் எனவும் பழியின் நீங்கினான் பாண்டியன்

எனவும் மலையின் வீழும் அருவி எனவும் வரும். பன்மை :- யானையிற் பலவாம் பரிமா எனவரும். சின்மை :- பரிமாவிற் சிலவாம் படைக்களிறு எனவரும். பற்று விடுதல் :- காமத்திற் பற்று விட்டான், மனைவாழ்க்கையிற் பற்று விட்டான் எனவரும்.

விடுதல் என வாளா கூறின் அஃது இரண்டாவதற்குரிய தாமாகலின் பற்றுவிடுதல் என்றார். தீர்தலும் விடுதலும் ஒத்த பொருளினவாயினும் நீங்குதலும் நீக்குதலும் ஆகிய இட எல்லை வேறுபாடு பற்றி வேறோதினார் என்க. இவற்றுள் தீர்தலும் பற்று விடுதலும் நீக்கம் பற்றியும் ஏனைய உறழ்ச்சி பற்றியும் வந்தன.

இனி, காக்கையின் கரிது களம்பழம் என ஒப்புப்பொருள் கருதின் ஆண்டு இன் என்பது உவமஉருபாம். அவ்வழி அஃது இரண்டாம் வேற்றுமைக்குரிய பொருளாகும் என அறிக. இனி இகழ்ச்சியிற் கெட்டான், மகிழ்ச்சியின் மைந்துற்றான், முயற்சியிற் பிறத்தலான் ஒலி நிலையாது என, ஏதுப் பொருள்பற்றி வருவன வற்றை ஈண்டுக் காட்டுதல் பிழை என உணர்க.

'இன்' என்னும் ஐந்தாம் வேற்றுமை உருபு, 'நின்று' என்னும் வினை எச்சச்சொல்லினைத் திரித்து ஆக்கிக் கொண்ட இடைச் சொல்லாகும். 'இன்' என்னும் மூன்றாம் வேற்றுமையின் மாற்றுருபு இதனான் என்னும் சொல்லின் சுருக்கமாகும். இன் என்னும் சாரியை இதன் என்னும் சொல்லின் மருஉவாகும். 'இன்' என்னும் உவமஉருபு 'இன்ன' என்பதன் கடைக்குறை யாகும். ஆதலின் அவை வடிவத்தான் ஒன்றாக இருப்பினும் பொருள் வேறுபாடுடையவை என அறிக.

சூ 79 : ஆறாகுவதே
அதுவெனப் பெயரிய வேற்றுமைக்கிளவி
தன்னினும் பிறிதினும் இதனது இதுவெனும்
அன்ன கிளவிக் கிழமைத் ததுவே. [18]

க-து : ஆறாம் வேற்றுமையாமாறு கூறுகின்றது.

உரை : அது வெனப் பெயர் பெற்ற வேற்றுமைச் சொல் யாதொரு பெயரிடத்து வரினும் அஃது ஆறாம் வேற்றுமையாம். அது தன்னொடு ஒற்றுமைப்பட்ட பொருளானும் தன்னின் பிறி தாகிய பொருளானும் இப்பொருளினது இப்பொருள் எனச் சொல்ல நிற்கும் அத்தகைய பொருட்கிழமையை உடையது.

இதனது இதுவென் வேறு வேறு காண நில்லாமல் எள்ளது குப்பை, எள்ளது சாந்து, சாத்தனதியற்கை, என்றாற் போல்வன வும், வேறு வேறாகாத எனது உயிர், இராகுத்தலை என்றாற் போல வருவனவும் "இதனது இது" என்னும் பொருளனவேயாம் என்பதறிவித்தற்கு" "அன்ன கிளவி கிழமைத்து" என்றார். கிளவி என்றது ஈண்டுப் பொருளை.

உரையாசிரியன்மார் இச்சூத்திர உரையுள் 'இதன இவை' என்னும் பன்மை வாய்ப்பாடும் அடங்க "அன்ன கிளவி கிழமைத்து" என ஆசிரியர் ஓதியதாக விளக்கங்கூறினார். இடைக்கால நூலோர் "ஆறன் ஒருமைக்கு அதுவும் ஆதுவும் பன்மைக்கு அவ்வும் உருபாம்" எனக் கூறிச் சென்றனர். மூன்றாம் வேற்றுமைக்கு இன்னும் ஆனும் மாற்றுருபுகளாக வரும் எனக்கூறியாங்கு ஆறாவதன் கண் அகரம் பன்மையுருபாக வரும் என யாண்டும் குறிப்பாகவேனும் ஆசிரியர் கூறாமையானும் நல்லிசைப் புலவோர் தம் பாட்டினும் தொகையினும் அகரம் பன்மையுருபாக வாராமையானும். அரசன் நாடுகள்-புலவர் நூல்கள் என்றாற் போல்வனவற்றிற்கு அகரம் பெய்து விரித்தல் இருவகை வழக்கினும் காணப்பெறாமையானும் ஐ முதலிய ஏனைவற்றிற்குப் பன்மையுருபு கூறப்படாமையானும் பன்மை உருபு கோடல் தொல்காப்பிய நெறிக்கும், தமிழ்மரபிற்கும் ஒவ்வாமைஅறிக.

அங்ஙனமாயின் என் கைகள்-அரசன் நாடுகள் என்பவற்றை அது என்னும் உருபான் விரித்தல் ஒக்குமோ என்னின்? ஒக்கும். அரசன் மக்கள் என உயர்திணையாயின் 'உடைய' என்னும் சொல்லுருபான் விரியுமென்க. என்னை ஆசிரியர் குறிப்பு வினை தோன்றும் முறைமை பற்றிக் கூறுமிடத்துப் பொருட் பெயரிடமாகத் தோன்றுபவை உடைமைக் குறிப்புப்படத் தோன்றுதல் கருதி "அதுச் சொல் வேற்றுமை உடைமையானும்" என விதித்தாராகலின் அரசனுடைய மக்கள் எனவிரியுமென்க. அச்சூத்திரத்தான் 'உடைய' என்பது சொல்லுருபாக வரும் என உய்த்துணரவைத்துள்ளமை யறியலாம். இனி இடைக்காலச் சான்றோர் இலக்கியத்துள் அரனதுதோழன்' 'குன்றவர் தமது செம்மல்' 'நினதடியாரொ டல்லான்' - என அது உருபே வந்தவாறும் காண்க. மற்றுச் 'சம்பந்தன செந்தமிழ்' என வந்ததால் எனின் அஃது இசை நயம் கருதி வந்த தொகுத்தல் விகாரமென்க.

தன்னின் ஆகியதற்கிழமை: ஒன்றுபல குழுமியதும், வேறுபல குழுமியதும், ஒன்றியற்கிழமையும், உறுப்பின்கிழமையும் மெய்

திரிந்தாகியதும் என ஐந்துவகைப் படுமாறும். பிறிதின் கிழமை: பொருட்கிழமையும் நிலக்கிழமையும், காலக்கிழமையும் என மூன்றுவகைப்படுமாறும் பிறவும் வருஞ் சூத்திரத்தான் விரித்துக் கூறப்படும். எடுத்துக் காட்டுக்கள் ஆண்டுக் காட்டப்பெறும்.

'து' என்னும் கிழமைப் பொருள்தரும் குறிப்புரிச்சொல் ஒலிநயங்கருதி அகரத்தொடு சேர்ந்து உருபிடைச் சொல்லாய் நின்றது என அறிக. 'து' என்பது உடைமைப் பொருள்தருதல் பற்றியே அதனைக் குறிப்பு வினைக்கண் இறுதி இடைச் சொல்லாக நூலோர் அமைத்துக் கொண்டனர் என்க.

சூ. 80 : **இயற்கையின் உடைமையின் முறைமையின் கிழமையின்**
செயற்கையின் முதுமையின் வினையின் என்றா
கருவியின் துணையின் கலத்தின் முதலின்
ஒருவழி யுறுப்பின் குழுவின் என்றா
**தெரிந்து மொழிச் செய்தியின் நிலையின் வாழ்ச்சியின்**
திரிந்து வேறுபடூஉம் பிறவும் அன்ன
கூறிய மருங்கின் தோன்றுங் கிளவி
ஆறன் பால என்மனார் புலவர் [19]

க-து : மேற்கூறிய தற்கிழமை பிறிதின் கிழமைப் பொருள்கள் வகைப்படுமாறு விரித்துக் கூறுகின்றது.

உரை : இயற்கை முதல் வாழ்ச்சி ஈறாக வருவனவும் திரிந்து வேறுபட்டுவருவனவும் அவை போல்வன பிறவுமாய் மேற் கூறப்பட்டஇலக்கணத்தான் தோன்றிவரும் பொருள்களும் ஆறாம் வேற்றுமைப்பாலன எனக்கூறுவர் ஆசிரியர்.

திரிந்து வேறுபடுதலாவது; கோட்டது நூறு (கோடு = சங்கு நூறு = துகள்) என்புழிக் கோடே துகளாக மாறி நிற்றலாம். இங்ஙனம் வடிவு வேறுபடாமல் சாத்தனது செலவு என வினை முதலின் வேறுபாடாகவரின் மெய்திரிந்தாயதற் கிழமை எனப் படும். மெய் திரிதல்-வடிவின்றிச் செயலும் பண்புமாக நிற்றல்.

எ-டு : இயற்கை : இயல்பாகப் பெற்றிருக்கும் தன்மை. அது, சாத்தனது இயல்பு - நிலத்தது வலிமை-நங்கையது நலம் - எனவரும். நலம் செய்துகொளளப்பட்டதாயின் செயற்கை என்பதன்கண் அடங்கும். இஃது ஒன்றியற்கிழமையாகிய தற்கிழமை.

உடைமை : பிறர்க்கும் பொதுவான ஒன்றினைப் பொருள் முதலியவற்றான் தனக்குரிமையாகக் கொண்டிருத்தல் அது

சாத்தனது பொருள், சாத்தனது ஆடை, சாத்தனது குழை, எனவரும், இதனை நிலைமையில்உடைமை என்று கூறுவர். இது பொருட்பிறிதின்கிழமை.

முறைமை : பிறப்புத்தொடர்பான்வரும் உறவுரிமை. அது மறியது தாய். மறியது தந்தை. கன்றினது தாய். எனவரும். இது பொருட்பிறிதின் கிழமை.

கிழமை : வரலாற்று முறைமையான் தொன்றுதொட்டு ஒன்றற்கு உரிமையாகிவரும் பொருள். அது, வேந்தனது செங்கோல் - பாணரது யாழ், முருகனது குறிஞ்சி நிலம். வெள்ளியது ஆட்சி எனவரும். இவற்றுள் முன்னைய இரண்டும் பொருட் பிறிதின் கிழமை-பின்னையது நிலப்பிறிதின் கிழமை வெள்ளியது ஆட்சி என்பது காலப்பிறிதின்கிழமை.

செயற்கை : தன் முயற்சியான் வளர்த்துக் கொண்டதும் ஒரு காரணத்தான் பெற்றதுமாம். அது சாத்தனது கற்றறிவு-கபிலரது புலமை-அரசனதுமாண்பு-கம்பரது புகழ். எனவரும் இவ்வ திரிபுபற்றி வரும் தற்கிழமை.

முதுமை : இயற்கையுள் ஒரு நிலைமையைக் குறித்து நிற்கும். அது சாத்தனது முதுமை. அறிவினது முதிர்ச்சி. எனவரும். முதுமை என்பது அதனாலாம் பயனை (அனுபவம்) ச்சுட்டி நிற்றலின் இயற்கையுள்ளும் செயற்கையுள்ளும் அடக்க லாகாமைபற்றிப் பிரித்துக் கூறப்பட்டது. தன்னினம் முடித்தல் என்னும் உத்தியான் கொற்றனது இளமை என இளமைப் பயன்கருதி வருதலும் கொள்க. இது தற்கிழமையுள் ஒன்றியற் கிழமையின் பாற்படும்.

வினை : ஒருபொருளின் செயல்பற்றி வருவது. அது சாத்தனது நடை, சாத்தனது கூத்து - செலவு - பார்வை - என வரும். இது மெய் திரிந்தாய தற்கிழமை.

கருவி : காரியத்திற்குத் துணையாக வருவது. அது சாத்தனது எழுதுகோல்-வனைகலத்தது திகிரி எனவரும். இது பொருட் பிறிதின்கிழமை.

துணை : ஒன்றனொடு ஒன்றன் இயைபுணரவருவது, அது அவனது இணக்கம்-அவளது துணை-பெட்டையது துணை. எனவரும் (துணைவன் எனப்பால் தோன்ற நிற்பின் அவளுக்குத் துணைவன் எனக் குவ்வுருபு கொடுத்தல் வேண்டுமெஃக) இது பொருட்பிறிதின் கிழமை.

கலம் : எழுதிய ஓலையைக் குறித்துவருவது. சிறுபான்மை பொருட்கலம் பற்றியும் வரும். நிலத்தது ஒற்றிக் கலம் ; அரசனது பட்டோலை, சாத்தனது விலைத்திட்டு. எனவும், பாலது கலம் எனவும் வரும். இது பொருட் பிறிதின் கிழமை.

முதல் : ஒன்றற்காக வகுத்துக் கொண்ட பொருள். அது வணிகரது முதல், ஒற்றியது முதல், எனவரும். இது பொருட் பிறிதின் கிழமை.

ஒருவழியுறுப்பு : ஒருபொருளின் பகுதியாக ஒன்றி நிற்கும் உறுப்பு, யானையது கோடு - புலியது உகிர் - மரத்தது கிளை - ஞாயிற்றினது கதிர் - எனவரும். இனி ஒருவழியுறுப்பு என வரையாது கூறினமையின் யாதானும் ஒருவழியான் உறுப்பாக நிற்றலும் கொள்ளப்படும். அதுவருமாறு ; அரசனது படை, நாட்டது அரண் - எனவரும். இவற்றுள் முன்னவை தற்கிழமை- பின்னவை பிறிதின்கிழமை.

குழூ : திரட்சி குறித்துநிற்பது. அஃது எள்ளது குப்பை, நெல்லது குவை எனவும், படையதுகுழாம்-பறவையது கூட்டம்- எனவும் வரும். இவற்றுள் முன்னவை ஒன்றுபலகுழுமியது. பின்னவைவேறு பலகுழுமியது. இவை தற்கிழமை.

நிலை: ஒரு பொருளின் அப்பொழுதைய நிலையைக்குறித்து வருவது. சாத்தனது வளமை-கொற்றனது ஏழைமை, பூதனது இயலாமை எனவரும். இது தற்கிழமைப்பற்றி நிற்கும்.

தெரிந்து மொழிச் செய்தி : ஆராய்ந்து மொழியாற் செய்யப் படுதல். செய்தி = செய்யுள். இதனைச் செய்யுட்கிழமை என்றும் கூறுப. கபிலரது பாட்டு-கம்பரது காவியம். எனவும், முருகனது பிள்ளைத்தமிழ் எனவும் வரும். முன்னையவை தற்கிழமை, பின்னையது பிறிதன்கிழமை.

வாழ்ச்சி : வாழ்தலாகிய செயல்பற்றிவரும். அது காட்டது யானை - குளத்ததுதவளை - என்வும், யானையது காடு, தவளையது குளம் எனவும் வரும். இவற்றுள் முன்னவை உருபு தொக்க வழி ஏழாவதனொடு மயங்குமாறு பின்னர்க் கூறுவார். இவை பிறிதின் கிழமை. இவற்றுள் பின்னவை தற்கிழமைப் பொருட்டாகவும் கொள்ளப்படும் என்னை? யானையும் தவளையு மின்றேல் அவற்றிற்கு அப்பெயர் எய்தாமையின் என்க.

திரிந்து வேறுபடுதல் : ஒருபொருள் திரிந்து வேறுவடிவம் பெற்று. நிற்றல் அது, கோட்டது நூறு. எள்ளது சாந்து, என வரும்.

அன்னபிற என்றதனான் : சொல்லது பொருள் - சாத்தனது ஒப்பம் (கைச்சாத்து) அழகினது பொலிவு. சாத்தனது ஒப்பு (ஒப்பு - படிவம்) என்றாற் போல்வன கொள்க. பிறவும் கிழமைப் பொருட்டாய் வருவனவற்றை ஓர்ந்து கொள்க.

கு 81 : ஏழாகுவதே
கண் எனப்பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைசெய் இடத்தின் நிலத்தின் காலத்தின்
அனைவகைக் குறிப்பிற்றோன்றும் அதுவே (20)

க-து : ஏழாம் வேற்றுமை ஆமாறு கூறுகின்றது.

உரை : கண் எனப் பெயர் பெற்ற வேற்றுமைச் சொல் யாதொருபெயரிடத்து வரினும் அஃது ஏழாம் வேற்றுமையாம். அது வினை நிகழிடமும், நிலமும், காலமும் என்னும் அவ்வகை யான இடப் பொருளின் கண் தோன்றும்.

பகற்குறி இரவுக் குறி என்றாற்போலக் குறிப்பென்பது குறிக்கப் படும் இடத்தை உணர்த்தி நின்றது. நிலமொழிந்த இரண்டும் இடமாகக் குறித்துக் கொள்ளப்படும் என்பதறிவித்தற்காக இடம் என்னாது 'குறிப்பு' என ஓதினார். எனவே, பெயர்ப்பொருளை இடமாக வேற்றுமை செய்தல் ஏழாம் வேற்றுமை என்பது பெறப்படும்.

வினை செய் இடம் என்றது புடைபெயர்ச்சியாகிய தொழில் நிகழாநிற்கும் நிகழ்ச்சியாகிய இடம். அது மழை பெய்தற்கண் காற்று வீசிற்று——புல்லுதற்கண் வியர்வை தோன்றிற்று—ஊடலின்கண் புலவி நேர்ந்தது எனவரும். நிலம் என்றது ; காலந்தவிர்ந்த ஏனைய காட்சிப் பொருளும் கருத்துப் பொருளுமாம். அது நிலத்தின்கண் பயிர் விளைந்தது, மலையின் கண் பனிபடர்ந்தது, கடலின்கண் நாவாய் சென்றது, விண்ணின் கண் பருந்து பறந்தது எனவும், அறிவின்கண் உணர்வு தோன்றிற்று, உவப்பின்கண் தோன்றியதுவாழ்த்து, எனவும்வரும். காலம் என்றது : நொடி முதலாக ஊழி ஈறாக வரும்சிறுபொழுது பெரும் பொழுதுகளும் அவைகுறித்தபெயர்களுமாம். அது, ஒரு நொடிக்கண் வருவான். காலைக்கண்கதிர் எழுந்தது. தையின் கண் பிறந்தான். ஆதிரைக்கண் தோன்றினான். வேனிலின் கண் பூத்ததுமா-ஆண்டின்கண் நிகழ்ந்தது சிறப்பு. ஊழிக்கண் தோன்றியது வெள்ளம், எனவரும்,

இங்ஙனம் பல்வகையாக வரும் வினை செய் இடம் முதலியவை இடமாகக் கருதிக் கொள்ளுமாறு வருதலின் "அனை வகைக் குறிப்பின்" என்றார்.

'கண்' என்னும் ஈரெழுத்திரு மொழி விழியை உணர்த்துங்கால் பெயராயும் ; கருதுக என ஏவலை உணர்த்துங் கால் முதனிலை வினையாயும், மதிக்கண் மறு என வேற்றுமை செய்யுங்கால் இடைச் சொல்லாயும், கண்ணகன் ஞாலம் என அடையாக வருங்கால் உரிச்சொல்லாயும் நிற்கும்.

இக் கண் என்னும் உருபிடைச்சொல் ஏணைய உருபுகளைப் போல இடுங்கித் திரியாமற் செஞ்சொல்லாக அமைந்தது. பவணந்தியர் "பொருள்முதலாறும் ஓரிரு கிழமையின் இடனாய் நிற்றல் இதன் பொருள் என்ப" என்றார். வேற்றுமை நிலைக்கும் வேற்றுமைக்குரிய பொருட்கும் அவர் வேற்றுமை கருதிலர். மற்றும் வினை செய் இடத்தை அவர் சுட்டிலர். தொழிற் பெயருள் அடங்கும் என்பது அவர் கருத்துப் போலும். காலம் புணர்ந்து நிற்கும் வினைச் சொல்லையும் வினைப் பெயரையும் ஒன்றாகக் கோடல் ஒவ்வாமையறிக. இடமும் இடத்தமரும் பொருளும் கிழமை பற்றி நிற்கும் என்பது அவர் கருத்து; விண்ணின்கண் பருந்து பறந்தது என்புழி அது விண்ணினது பறவை அல்லது பறவையது விண் எனக் கிழமை கூறுதற்கு ஏலாமையறிக. பிறவும் அன்ன.

சூ. ௭2 : கண்கால் புறம் அகம் உள் உழை கீழ் மேல்
பின் சார் அயல் புடை தேவகை எனாஅ
முன் இடை கடை தலை வலம் இடம் எனாஅ
அன்ன பிறவும் அதன்பால என்மனார் (21)

க-து : "காப்பின் ஒப்பின்" என இரண்டாவதற்கும் "அதனினியறல் அதற்றகு கிளவி" என மூன்றாவதற்கும், "அதற்கு வினையுடைமையின் அதற் குடம்படுதலின்" என நான்காவதற்கும், "வண்ணம் வடிவே" என ஐந்தாவதற்கும், "இயற்கையின் உடைமையின்" என ஆறாவதற்கும் அவ்வேற்றுமையாதற்குரிய பொருள் வகைகளை விரித்தோதியாங்கு அனைவகைக்குறிப்பாகிய இடம் பற்றி வரும் ஏழாவதற்குரிய பொருள் வகையினை விரித்துக் கூறுகின்றது.

உரை : கண் முதலாக இடம் ஈறாக ஓதப்பட்டனவும் அவைபோல்வன பிறவும் ஏழாம் வேற்றுமைப் பாலன என்று கூறுவர் ஆசிரியர். அதன் பால என்றது அவ்வேற்றுமைக்குரிய இடப்பொருளின் பால என்றவாறு. எனாஅ என்பவை எண் இடைச் சொற்கள்.

காட்சி வகையானும் கருத்து வகையானும் ஒன்றைத் தாங்கி நிற்கும் பொருள் (ஆதாரம்) இடமாம். (இடுதற்காகியது இடம்) மலையின் கண் இருந்தான் என்புழி மலையின்கண் யாண்டிருந் தான்? எனக் கருதுங்கால் உச்சி-நடு-அகம்-புறம்-அடி முதலிய வகையுள் ஒன்றைச் சுட்டுதல் வேண்டுமன்றோ? அங்ஙனம் சுட்டிக்கூறப்படும் இடம் மலையென்னும் பொதுவிடத்தின் பகுதி (கூறு)யாதலின் கண் கால் புறம் முதலிய சொற்கள் இட வேறு பாடுணர்த்தும் பொருளாதல் அறிக. இவற்றை உருபென்று கொண்டார் உரையாசிரியர். உருபே என வரைந்தார் பவணந்தியார். உருபு இடைச் சொல்லாக நிற்கும். இவை யாவும் தனித்துப் பொருள் பயந்து பெயராக நிற்குமாறு அறிக.

இவை ஏழாவதன் பொருளாயின் ஊரைக்காத்தான் மண்ணின் இயன்றகுடம் என்புழி உருபின் பின் காத்தல் இயறல் என்னும் அப்பொருட்சொற்கள் விரிந்து வருமாறுபோலக் கண்கால் புற மகம் என்பவை கண்ணுருபின் பின்வரல் வேண்டுமன்றோ எனின்? அற்றன்று, நெல்லுக்கு உழுதான் என்புழி, அதற்கு வினையுடைமை என்னும் பொருள் உழுதான் என்னும் வினை காரணமாகவும், காட்டது யானை என்புழி வாழ்ச்சிப் பொருள் அச்சொற்களின் இயைபு காரணமாகவும் பெறப்படுமாறு போல ஊர்க்கண் செய் என்புழி அவ் இயைபினான் ஊர்ப்பக்கத்தின்கண் செய் உள்ளமையையும் ஆலின் கண் இடந்தஆ என்புழி ஆலின் கீழ்ப்பகுதிக் கண் ஆ கிடந்தமையும் புலப்படுத்து நிற்குமாதலின் அப்பொருட்சொற்கள் விரிந்து வரல் வேண்டுமென்பது யாப்புடைமையாகாதென்க. இனி ஊர்க்கால் நிவந்த பொதும்பர், அரசனுழை இருந்தான், என்புழி கால், உழை, என்பவை இடத்தைத் தெளிவு படுத்தி நின்றமையின் ஆண்டு உருபு விரிதல் வேண்டாதாதலையும் அறிக.

இச்சூத்திரத்துக் கூறப்பெற்ற 'கண்' என்பது உருபு இடைச் சொல்லன்று. இடம் உணர்த்தும் பெயர். இதனை அக்கண்ணி விளைந்தது என வழங்குமாற்றான் அறிக. காணி என்பது அதனடியாகப் பிறந்த உடைமைப்பெயர். தேஎம் என்பது இலக்கணத்திற் பயின்று வரும் இடங்குறித்த திரிசொல். அது மறையோர்தேஎத்துமன்றல் — கொள்ளார் தேஎம் குறித்த கொற்றம், கிழவோள் தேஎத்து — கோடாய்தேஎத்து எனப் பல கோணங்களில் வருதலின் "தேவகை" என்றார். இதற்குத் திசைக்கூறு எனப் பொருள் கூறல் சிறவாமையறிக. ஏனையவும் இங்ஙனம் வகைப்படுமாயினும் அவையெல்லாம் இயற்சொல்லாய்த் தெளிவு பெற நிற்றலின் உய்த்துணர்ந்து கொள்ள வைத்தார்.

அன்னபிற என்றதனான் வயின், வழி, மாட்டு, மருங்கு, பால், முதல், பாடு, அளை, திசை, வாய், உழி, உளி, இல் முதலியன கொள்க. இல் என்பது உள் என்னும் பொருட்டு. உழி உளி என்பவை அதன் ஒலித்திரிபான் வந்தவை. பிறவும் ஓர்ந்தறிந்து கொள்க.

ஓர் இடத்தினை முதல், இடை, கடை அடி நடு முடி அகம் புறம் பக்கம் எனப் பகுத்துணர்தலின் மேற்கூறிய கண் கால் முதலியவை அவற்றுள் ஒன்றனைச் சுட்டி நிற்குமாறு பின்வரும் எடுத்துக்காட்டுக்களான் அறிக.

மலக்கண் நின்றான் எனவும் ஊர்க்கால் இருக்கும் செய்யினை, ஊர்க்கட்செய் என்றும் ஊர்புறத்து நிற்கும் மரத்தினை, ஊர்க்கண் உள்ள மரம் என்றும் எயிலகத்துப் புக்கானை எயிற்கட் புக்கான் என்றும் இல்லுள் இருந்தானை இற்கண் இருந்தான் என்றும் அரசனுழை இருந்தானை அரசன் கண் இருந்தான் என்றும் ஆலின் கீழ் கிடக்கும்ஆவினை ஆலின்கட்கிடந்த ஆ என்றும் மரத்தின் மேலிருந்த குரங்கினை மரத்துக்கண்குரங்கு என்றும் ஏர்ப்பின் சென்றானை ஏர்க்கட் சென்றான் என்றும் காட்டுச்சார் ஓடும் முயலினைக் காட்டின்கண் ஓடும் முயல் என்றும் உறையூர்க்கயல் நின்ற சிராப் பள்ளிக் குன்றினை உறையூர்க்கண் உள்ள சிராப்பள்ளி குன்று என்றும் எயிலின் புடை நின்றானை எயிற்கண் நின்றான் என்றும் மறையோர் தேஎத்துப் பயின்றானை மறையோர்கட் பயின்றான் என்றும் மனை முன் நின்றானை மனைக்கண் நின்றான் என்றும் அரங்கின் இடையிருந்தானை அரங்கின் கண் இருந்தான் என்றும் தேரின் தலைக்கண் உள்ள கொடியை தேர்க்கண் கொடி என்றும் வாயிலின் கடை நின்றானை வாயிற்கண் நின்றான் என்றும் அரசவையின் வலப் புறத்தும் இடப்புறத்தும் இருந்தாரை அரசவைக் கண் இருந்தார் என்றும் கூறப்படுதலின் அவை ஏழாவதற்குரிய இடப்பொருள் பயந்தவாறு கண்டு கொள்க.

'அன்னபிற' என்பதனான் கொள்ளப்பெற்றவை, அவர் வயின் இருந்தான் - மரத்து நிழல் வழி நின்றான், அவர் மாட்டு உளது - அவர் மருங்கு இருந்தான், - கல்வியின் பால் அன்பு வைத்தான் - ஊரில் இருந்தான், - சுரன் முதல் வந்த உரன் மாய் மாலை - நம்பாடளையாத நாள் - கல்லளைச் சுனை நீர், - தேர்த்திசை இருந்தான் - குரை கடல் வாய் அமுதென்கோ - உறைப்புழி ஓலை போல - குளிர்காவுளி சேர் புறையும் எனவரும்,

இனி இவ்இடப்பொருள் மணியின் கண் ஒளி எனப்பொருள் முழுவதுமாகவும் ஆகாயத்தின் கண் பருந்து எனக் கருதிக் கோடலாகவும், உடம்பின் கண் உறுப்பு என ஒற்றுமை உடைய தாகவும் அரசருள் ஏறு - தெய்வத்துள் வைக்கப்படும் எனக் கூட்டிப் பிரித்தலும் பிரித்துக் கூட்டலும் ஆகிய கருத்துப் பொரு ளாகவும் வருமாறு கண்டு கொள்க.

ஏனைய வேற்றுமைகளுள் எயிலைக் காத்தான், மண்ணின் இயன்ற குடம் நெல்லுக்கு உழுதான். காக்கையிற் கரியன், சாத்தனது இயற்கை என உருபும் வேற்றுமை செய்தற்குரிய பொருளும் ஒருங்கு வரும். ஏழாவதன் உருபும் ஏழாவதன் பொருளும் இடக்குறிப்பே பற்றி ஒத்த பொருளினவாய் நிற்றலின் இரண்டும் ஒருங்கு வாராமல் உருபு நிற்கும் கால் பொருட்சொல் குன்றியும் பொருட் சொல் நிற்குங்கால் உருபு குன்றியும் நிற்கும் என அறிக. இந்நுட்பத்திலன ஓராது கண் கால் முதலியவற்றை உருபு எனக் கொள்வார் ஒரு சாரார். அது பொருந்தாமை மேற் கூறப்பட்டது.

சூ. 83 : வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை
ஈற்று நின்றியலும் தொகைவயிற் பிரிந்து
பல்லா றாகப் பொருள்புணர்ந் திசைக்கும்
எல்லாச் சொல்லும் உரிய என்ப. [22]

க-து : வேற்றுமைத் தொகை மொழிகளை விரித்துப் பொருள் கொள்ளும் முறைமை கூறுகின்றது.

அஃதாவது இது காறும் வேற்றுமை உருபுகள் விரிந்து நின்ற வழி எய்தும் வேற்றுமை நிலைகளையும் அவ்வேற்றுமைளைச் செய்யும் பொருட் பாகுபாடுகளையும் பற்றிக் கூறினார். அவை தொடர் மொழிக்கண் புலப்படும் இலக்கணமாகும். எழுவாய் வேற்றுமை ஆதற்கு உரியவாம் என்ற தொகை மொழிகள் விரிந்த வழி அவை தொடர் மொழிகளாகுமன்றோ ? அவ்வழி இவ்விலக்கணமெல்லாம் அவற்றிற்கு எய்துமாகலின் அவற்றை விரித்துக் கொள்ளும் முறைமை இதுவென்பதாகும்.

"வேற்றுமைத் தொகையே வேற்றுமை இயல" (எச்-17) என ஆசிரியர் பின்னர் மாட்டேற்றிக் கூறுவாராதலின் ஈண்டு அவற்றை விரித்துக் கொள்ளுமாறு கூறப்பட்டதென்க.

உரை : முன் மொழி நிலையலாகத் தொகும் வேற்றுமைத் தொகையிடத்துத் தொக்கு நிற்கும் உருபையும் பொருளையும்

விரிக்குங்காலத்துப் பல்லாறாகப் பிரிந்து பொருள் ஒன்றாதற் கேற்பப் பொருந்தி இசைக்கும் எல்லாச் சொற்களும் விரித்தற் குரியன என்று கூறுவர் ஆசிரியர்.

தொகை வயின் வேற்றுமைப் பொருளை விரிக்குங்காலை பிரிந்து புணர்ந்து இசைக்கும் எல்லாச் சொல்லும் உரிய எனக் கூட்டிக் கொள்க. விரிக்குங்காலை என்றதனான் அவை தொக்கு நின்றமை பெறப்படும். வேற்றுமைப் பொருள் என்றது, வேற்றுமை உருபும், பொருளும் என்றவாறாம். ஈற்று நிற்றியலும் தொகை என்றது ஈண்டு வேற்றுமைத் தொகையை என்பது ஏற்புழிக் கோடலாற் கொள்க.

குழையணிந்த செவி என உருபு தொக்குப் பொருள் விரிந்து நிற்றலும். கரும்பிற்கு வேலி என உருபு விரிந்து பொருள் தொக்கு நிற்றலும் ஆகிய இரண்டும் அடங்க வேற்றுமைப் பொருளை விரிக்குங்காலை என்றார்.

அவை தாம், முன்மொழி நிலையலும் பின் மொழி நிலையலும்
இருமொழி மேலும் ஒருங்குடன் நிலையலும்
அம்மொழி நிலையாது அன்மொழி நிலையலும்
அந்நான் கென்ப பொருள் நிலை மரபே (எச்—23)

என்பதனான் வேற்றுமைந் தொகையின் பொருள்நிலை முன் மொழி நிலையல் என்பது பெறப்படும். முன் என்றது இடமுன். தொடரின் கண் அஃது இறுதிநிலையாதலின் ஈற்று நின்றியலும் தொகை என்றார்.

வரலாறு: குழைச் செவி என்னும் இரண்டாவதன் தொகையை விரிப்புழிக் குழையை அல்லது குழையினை உடைய செவி என்றும், அணிந்த செவி, பூண்ட செவி, ஏற்ற செவி எனவும், மட்குடம் என்னும் மூன்றாவதன் தொகையை விரிப்புழி மண்ணானியற்ற குடம், ஆகிய குடம், பண்ணிய குடம் எனவும். கரும்பு வேலிஎன்னும் நான்காவதன் தொகையை விரிப்புழி, கரும்பிற்கு இட்ட வேலி, அமைந்த வேலி, நாட்டிய வேலி, கட்டிய வேலி, கோலிய வேலி, சூழ்ந்த வேலி, எனவும் மலை யருவி என்னும் ஐந்தாவதன் தொகையை விரிப்புழி மலையின் வீழ் அருவி, மலையினின்று விழும் அருவி, வழியும் அருவி, எனவும் வரும். இனி, மரக்கிளை என்னும் ஆறாவதன் தொகையை விரிப்புழி அஃது பெயர் கொண்டு முடியும் இயல்பின தாகலின் மரத்தது கிளை, மரத்தினுடைய கிளை என உருபும் சொல்லுருபுமே விரியும். சாத்தனது பேச்சு சாத்தனது நடை

என விரியும் வழி, சாத்தன் பேசிய பேச்சு, நடந்தநடை என முடிக்கும் சொல்லை விளக்கி நிற்கும் சொற்களும், எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், என வினைக் குறிப்புப்பட வருங்கால் எழுத்தினது இலக்கணம் அதிகரித்து நிற்றலை உடையது. சொல்லினது இலக்கணம் அதிகரித்து நிற்றலை உடையது எனப் பொருள் புணர்தற்குரிய பல சொற்களும் விரியும் எனக் கொள்க. இனிக் குன்றக் கூகை என்னும் ஏழாவதன் தொகையை விரிப்புழிக் குன்றின்கண் இருக்கும்கூகை, வாழும்கூகை, உறையும் கூகை எனவரும். இவற்றுள் வேற்றுமை உருபுகளும், முடிக்குஞ் சொல்லின் பொருள் விளக்கத்திற்கேற்பப் பல்லாறாகப் பொருள் புணர்ந்திசைக்கும் சொற்களும் விரிந்து நின்றவாறு கண்டு கொள்க.

இனி, இவ்வேற்றுமைத் தொகை மொழிகள் வளைக்கை, மட்குடம் என்றாற் போல ஒன்றற்கே உரியதாய் நிற்றலன்றி மரவேலி - சொற்பொருள் என்றாற் போல பல வேற்றுமைகட்குப் பொதுவாயும் நிற்குமாகலின் அவ்வவ்வேற்றுமையைக் கருது மிடத்து அவ்வவற்றிற்குப் பொருந்தும் சொற்களான் விரித்தல் வேண்டுமென்பது புலப்படப் ''பொருள் புணர்ந்திசைக்கும் எல்லாச் சொல்லும் உரிய'' என்றார்.

வரலாறு : மர வேலி என்பது மரத்தானாகிய வேலி எனவும், மரத்திற்கு இட்ட வேலி எனவும் மரத்ினுடைய வேலி எனவும், சொற்பொருள் என்பது சொல்லானாகிய பொருள், சொல்லுக்கு ஏற்கும் பொருள், சொல்லினது பொருள், சொல்லின் கண் நிற்கும் பொருள் எனவும் வருமாறு காண்க.

இவை மரமாகிய வேலி என்றும், சொல்லாகிய பொருள் என்றும் சொல்லும் பொருளும் என்றும் பிற தொகைகளாகவும் வரும். வரினும் ஈண்டு வேற்றுமைத் தொகைக்கே விரி இலக்கணம் கூறப்பட்டது என்க. பிறவும் ஓர்ந்து கொள்க.

இனி இச்சூத்திரத்திற்கு உரிய கருத்தினை உரை யாசிரியன்மார் ஓராற்றான் புலப்படுத்தினரேனும் உரை கூறுதற் கண் சூத்திர நோக்கிற்கும் நூல் நெறிக்கும் ஒவ்வாத விளக்கங் களை கூறிச் சென்றனர். அவற்றைச் சிவஞான முனிவர் எடுத்துக் காட்டி மறுத்துள்ளமை காண்க. அவர் மறுப்புரை ஏற்புடையதாயினும் இச்சூத்திரத்திற்கு அவர் கூறும் உரை பொருந்துமாறில்லை என்னை ?

வேற்றுமைப் பொருளை விரிக்குங்காலை என்பதற்குப் பொருள், காப்பின் ஒப்பின் முதலாகக் கூறிய சொற்பொருள்

பற்றிய பிற சொற்கள் என்றார். காப்பின் ஒப்பின் என்பவை வாய்பாடாதலின் பிற சொற்கள் என்பவை அவற்றுள் அடங்குதலின் கூறியது கூறலாம். பல சொற்களை தம்முள் அடக்கி நிற்றலின் வாய்ப்பாட்டினைத் தொகை என ஆசிரியர் கூறியதாக விளக்குவது மயங்க வைத்தலாம். அதனின் இயறல் அதற்றகு கிளவி என்பவற்றின்கண் இறுதி நிற்கும் சொற்களே ஈற்று நின்றியல்வன என்பது மாறுபடக் கூறலாம். பிறவும் அவர் வலிந்து கூறுவன வெல்லாம் ஒவ்வாமையை ஓர்ந்து அறிக.

**வேற்றுமை இயல் முற்றியது.**

## 3. வேற்றுமை மயங்கியல்

வேற்றுமையியலுள் உருபு பற்றியும் ஒவ்வொரு பொருள் பற்றியும் வேற்றுமைக்கு ஓதப்பெற்ற இலக்கணத்திற் சிதையாமல் அவை பிறிதொரு வேற்றுமை உருபொடும் பொருளொடும் மயங்கி வருமாறு கூறுதலின் இவ்வியல் வேற்றுமை மயங்கியல் என்னும் பெயர்த்தாயிற்று. இதனுள் வேற்றுமை மயக்கமேயன்றி ஏழுவகை வேற்றுமைக்கும் பொதுவாய சில இலக்கணம் பற்றியும் பிறமரபு பற்றியும் உருபுகளின் வடிவத்திரிபு பற்றியும் கூறப்படுதலின் இது மிகுதி பற்றிய குறியீடென்க.

வேற்றுமை மயக்கம் என்பது, உருபு மயக்கம், பொருள் மயக்கம் என இரு திறப்படும். அவற்றுள் உருபு மயக்கமாவது: தனக்குரிய பொருளிற்றீராமல் பிறிதொன்றன் பொருட்கண் சென்று மயங்குதலும் தம் பொருளிற்றீர்ந்து பிறிதொன்றன் பொருளாய் மயங்குதலும் என இருவகைத்தாய் நிகழும். பொருள் மயக்கமாவது: ஒரு பொருள் இரண்டு வேற்றுமைக்குப் பொது வாக நின்று மயங்குதலும், ஒரு வேற்றுமைக் கோதிய பொருள் தன் பொருளிற்றீராது பிறிதொரு வேற்றுமை உருபொடு கூடி அவ் வேற்றுமைக் கண் சென்று மயங்குதலும் என இரு வகைத்தாய் நிகழும். இம்மயக்கங்கள் தொகை மொழி தொடர் மொழி ஆகிய இரண்டன் கண்ணும் வரும். அவை உருபு தொக்கு மயங்குதலும் விரிந்து மயங்குதலும் தனித்தனி மயங்குதலும் ஒருங்கு மயங்குதலும் எனப்பல நிலைகளாக வரும். அவற்றான் சொற்றொடர் அமைப்பின் பல்வேறு நிலைகள் புலனாகும்.

சூ. 84 : கரும மல்லாச் சார்பென் கிளவிக்கு
உரிமையும் உடைத்தே கண்ணென் வேற்றுமை

க-து : இரண்டாவதன் பொருளொடு ஏழாவது மயங்குமாறு கூறுகின்றது.

உரை : மெய்யுறுதல்தொழில் அல்லாத சார்பென்னும் சொற்கு, கண்ணென்னும் ஏழாம் வேற்றுமையும் உரிமையுடைத்தாகும். உம்மையான் ஆண்டும் இரண்டாவது வருதலே சிறப்புடைத்தாம் என்று கொள்க.

கருமமல்லாச் சார்பிற்கு ஏழாவதும் உரித்தெனவே கருமச் சார்பிற்கு இரண்டாவதே உரியது என்பது பெறப்படும். கருமச் சார்பாவது : தூணைச் சார்த்தான், ஊரைச் சார்ந்தான், அரசனைச் சார்ந்தான் எனத் தொழிற்பாடு புலனாகக்கண்ணுற்று நிற்றலாம். கருமமல்லாச்சார்பாவது : சைவ நெறியைச் சார்ந்தான் சமண நெறியைச் சார்ந்தான் எனத் தொழிற்பாடு கருத்துவகையான் புலப்பட நிற்றலாம்.

எ-டு : சைவ நெறிக்கண் சார்ந்தான் எனவரும். அரசனது கொள்கை வழி நிற்பது பொருளாயின் அரசன்கண் சார்ந்தான் எனவரும். இரண்டாவதற்குரித்தாக ஓதப்பெற்ற 'சார்பு' தொழில், கருத்துவகையான் நிகழுங்கால் உருபேற்ற சொல் இடப்பொருள் தோன்ற நின்றலின் ஏழாவது மயங்கும் என்னாது உரிமையும் உடைத்தே என்றார்.

இஃது தன் பொருளிற்றீராமல் இரண்டு வேற்றுமைக் கண்ணும் சேறலின் பொருள் மயக்கமாம். மேலை இயலுள் ஏழாவது அதிகாரப்பட்டு நின்றமையின் இரண்டாவது ஏழாவதனோடு மயங்கலை முதற்கண் தொடங்கினார் என்க.

சூ. 85 : சினைநிலைக் கிளவிக்கு ஐயும் கண்ணும்
வினைநிலை ஒக்கும் என்மனார் புலவர். [2]

க-து : சினைக் கிளவியின் கண் இரண்டும் ஏழும் மயங்குமென்கின்றது.

உரை : ஒரு பொருளினது உறுப்பு என்னும் நிலையைப் பெற்ற சொல்லுக்கு ஏற்ற வினை, முடிபாக வருங்கால் இரண்டனுருபும் ஏழனுருபும் ஆண்டு வருவதற்கு ஒக்கும். நிலைவினை என மாறுக.

எ-டு : கண்ணைக் குத்தினான் - கண்ணுட் குத்தினான், கிளையை வெட்டினான் கிளையின்கண் வெட்டினான்எனவரும்.

குத்தப்படும் பொருளும் வெட்டப்படும் பொருளும் அத்தொழில்கள் நிகழ்தற்கு இடமாகவும் அமைதலின் இரண்டு உருபிற்கும் ஏற்பனவாயின. காததல் புகழ்தல் போன்ற ஒவ்வா விளைகள் மயங்காவாதலின், ஒக்கும் வினைகளே கொள்ளப்படு

மென்பார் நிலைவினை என்றார். முதல் சினை என்பவை நியதியின்றித்தடுமாறும் இயல்பினவாதலின் ஒன்றன் பாற் படுதலை நிலை என்றார். இஃது உருபும் பொருளும் உடன் மயங்கின மயக்கம். இஃது நிலை மொழி பற்றிய வரையறை யாகலின் வேறு கூறினார்.

சூ. 86 : கன்றலும் செலவும் ஒன்றுமார் வினையே [3]

க-து : இரண்டாவதனொடும் ஏழாவதனொடும் வருமொழித் தொழிற்சொல் மயங்குமாறு கூறுகின்றது.

உரை : கன்றலும் செலவும் ஆகிய தொழிற் சொற்கள் மேற கூறிய இரண்டு வேற்றுமைக் கண்ணும் ஒத்த வரவினவாம்.

எ-டு : சூதினைக் கன்றினான் - சூதின் கட் கன்றினான் எனவும், நெறியைச் சென்றான் - நெறிக்கட் சென்றான் எனவும் வரும். கன்றுதல் - இவறுதல். சார்பென் கிளவி போலன்றி இவை இரண்டு வேற்றுமைக்கண்ணும் ஒத்த வரவின ஆதலின் 'சார்பென் கிளவிக்கு' என்பதன் பின்வையாது இதனை ஈண்டு வைத்தார்.

சூ 87 : முதற்சினைக் கிளவிக்கு அதுவென்வேற்றுமை
முதற்கண் வரினே சினைக்கு ஐவருமே [4]

க-து : ஒரு தொடரின் கண் முதலும் சினையும் ஒருங்குவருதற்கண் எய்தும் வேற்றுமை மயக்கம் ஆமாறு கூறுகின்றது.

உரை : முதலும் சினையும் ஒருங்குவரும் தொடரின்கண் ஆறாம் உருபு முதற்பொருள் இடத்துவரின் சினைக்கிளவியி னிடத்து இரண்டாம் உருபு வரும்.

எ-டு : யானையது கோட்டைக் குறைத்தான், மரத்தினது கிளையை முரித்தான் எனவரும்.

சூ. 88 : முதல்முன் ஐவரின் கண்ணென் வேற்றுமை
சினைமுன் வருதல் தெள்ளி தென்ப. [5]

க-து : இதுவுமது.

உரை : மேற்கூறிய முதற்சினைகிளவிகள் அங்ஙனம் ஒருங்கு வருமிடத்து முதற்கிளவிக்கண் இரண்டாம் உருபு வரின் சினைக் கிளவிக்கண் ஏழாவதன் உருபு வருதல் தெளிவுடையதாகும் என்று கூறுவர் ஆசிரியர்.

எ-டு : யானையைக் கோட்டின்கண் குறைத்தான், மரத்தினைக் கிளையின் கண் வெட்டினான், எனவரும். செயப் படு பொருள் ஆதல் கருதியும் இடமாதல் கருதியும் யானையைக் கோட்டைக் குறைத்தான் எனவும் யானையின் கண் கோட்டைக் குறைத்தான் எனவும் வருதல் தெள்ளிது அன்றென்றவாறாம்.

சினைநிலைக் கிளவிக்கு ஐயும் கண்ணும் ஒத்த வரவின என மேற் கூறப்பட்டமையான் முதலொடு கூடி ஒருங்கு வருங்கால் முதற்பொருள் ஏற்கும் உருபிற்கேற்பச் சினைக்கிளவி ஒன்றனை மட்டுமே ஏற்றுவரும் என இவ்விரு சூத்திரங்களானும் வரையறை செய்தார். இவற்றை ஒரு சூத்திரமாகக் கூறினும் இழுக்காதென்க. இவை இரண்டும் பொருள் மயக்கங்கூறினவாம்.

சூ. 89 : முதலும் சினையும் பொருள்வேறு படாஅ
நினையுங் காலைச் சொற்குறிப் பினவே (6)

க-து : முதற்பொருள் சினைப்பொருட்கண் உருபுகள் தடுமாறி வருவதற்குக் காரணம் கூறும் முகத்தான் முதலும் சினையும் பற்றிய தொரு மரபு கூறுகின்றது.

உரை : முதல் என்பதும் சினை என்பதும் பொருளான் வேறு வேறு ஆகா. ஆராயுமிடத்து அவை வேறு வேறாகச் சொல்லப் படும் குறிப்பினவாம்.

அஃதாவது அரசனது யானையைக் குத்தினான் என்புழி அரசன் குத்தப்படவில்லை என்பது புலனாகும். காரணம் பொருள் இரண்டும் வேறு வேறு ஆதலின். யானையது துதிக்கையை வெட்டினான் என்புழி வெட்டுப்பட்டது யானையே யானையும் துதிக்கையும் வேறுவேறல்ல ஆதலின். அரசனைத் தேரின் கண் வெட்டினான் என்பதையும் யானையைக் கோட்டின் கண் குறைத்தான் என்பதையும் அவ்வாறே அறிகிறோம். யானையது கோடு என்னுமிடத்து யானையின் ஒரு பகுதியைச் சினையாகவும் ஏனையவற்றை முதலாகவும் கருதுகின்றோம். யானையது துதிக்கை என்றவழி முன்னர் முதற்பகுதியாக நின்ற துதிக்கைச் சினையாகவும் சினையாக நின்ற கோடு முதற்பகுதியாகவும் மாறி விடுகின்றது, ஆதலின், சுட்டி எடுத்துக் கொண்ட பொருளை முதலாகவும் அதன் பகுதிகளைச் சினையாகவும் கருதுகின்றோம். மேலும் யானை என்னும் ஒருபொருளை முதலாகக் கருதுங்கால் அதன் பகுதி களாகிய தலை உடல் கால் துதிக்கை ஆகியவற்றைச் சினையாக வும், துதிக்கையை முதலாகக் கருதுங்கால் அதன், பகுதியாகிய இடை, கடை, நுனி, பக்கம், துளை, புள்ளி ஆகியவற்றைச் சினை யாகவும் கூறுகின்றோம்,

இங்ஙனம் ஒரு பொருளின் கண் ஒன்றைச் சினையாகச் சொல்லுங்கால் ஏனைய உறுப்புக்கள் முதலாகவும், உறுப்புக் களின் உட்பகுதிகளைக் கூறுங்கால் முன்னர் உறுப்பாக நின்ற பொருளே முதலாகவும் குறிக்கப்படுதலின் முதலும் சினையும் வேறு வேறல்ல, சொல்லுவோன் வேறுபடுத்துக்கூறும் குறிப்பே யாம், என்பது விளங்கப் "பொருள் வேறுபடா" என்றார். சொல்லுவோனது குறிப்பான் இப்பொருள் இவ்விடத்து முதலாக நின்றது. இப்பொருள் சினையாக நிற்கின்றது. என உணர வேண்டுதலின் "நினையுங்காலை" என்றார்.

இச்சூத்திரந்தான் ஒரு பொருளையே உடைமையாகவும் உடையதாகவும் கோடற்குக் காரணமும், அவ்வாற்றான் ஒன்றையே செயப்படு பொருளும் இடப்பொருளுமாகக் கோடற்குக் காரணமும் கூறி, முதல் சினைக்குரிய இலக்கணத்தைப் பெறப் படவைத்தார் என்க. இதனான் முதல் சினைக்கண் ஒரே உருபுவாராமைக்கு 'ஏது' கூறினார் என்றறிக. முதலும் சினை யும் மாறி மாறி வருமாறு : படையது யானையை வெட்டினான் - யானையது கோட்டைக் குறைத்தான் கோட்டினது நுனியை அறுத்தான் - நுனியது வெடிப்பினைப் பொருத்தினான் எனவும், யானையைக் கோட்டின் கண் குறைத்தான். கோட்டினை நுனிக்கண் சிதைத்தான் எனவும் வரும்.

சூ. 90 : பிண்டப் பொருளும் ஆயியல் திரியாது
புண்டியல் மருங்கின் மரீஇய மரபே (7)

க-து : பிண்டப் பொருளும் முதலும் சினையும் போல இலக்கணம் பெற்று நிகழும் என்கின்றது.

உரை : ஒத்தனவும் வேறானவுமான பொருள்களின் திரட்சி யாகிய பிண்டப்பொருளும் மேற்கூறிய இலக்கணத்திற்றிரியாமல் வரும். அவ்வாறு வருதல் பழமையான இலக்கணப் பகுதியிடத்து மருவிய முறையாகும்.

எ டு : குப்பையது தலையைச் சிதறினான். குப்பையைத் தலைக்கண் சிதறினன் எனவரும். குப்பை-குவியல். இயற்கை யாக வரையுறைப்படாமல் ஒத்தனவும் வேறானவுமான பொருள் களின் செயற்கைத் திரட்சியாதலின் பிண்டப்பொருளை மாட்டெறிந்து கூறினார் என்க.

சூ 91 : ஒருவினை ஒடுச்சொல் உயர்பின் வழித்தே (8)

க-து : மூன்றாம் வேற்றுமைக்குரிய "அதனொடு இயைந்த ஒருவினைக்கிளவி" என்ற ஒடுச் சொற்காவதோர் சிறப்புவிதி கூறுகின்றது.

**உரை :** மூன்றாம் வேற்றுமைக் கண் ஏதுப்பொருள் பற்றி வருமெனக் கூறப்பட்ட ஒருவினை ஒடுச்சொல் உயர்ந்த பொருளினிடத்தே வரும். ஒடுச்சொல் என்றது ஒடு என்னும் உருபினை. உயர்பு ஆகுபெயர்.

அஃதாவது ஒருவினையான் முடியும் பொருள்களுள் ஒன்றனை, அருள் ஆட்சி அறிவு திரு சிறப்பு முதலியவற்றான் உயர்வாக மதித்தல். (ஏகாரம் தேற்றம்) உயர்பின் வழித்தாய வழியே அஃது காரணப்பொருட்டாகும் என்பது இதனான் அறிவுறுத்தப்பட்டது.

**எ-து :** அரசனொடு இளையர் வந்தார். யானையொடு பாகன் வந்தான் எனவரும். நாயொடு நம்பி வந்தான் என இழித்தற்பொருள்மாட்டும் வருமால் எனின்? நம்பியினும் நாய்க்கு யாதானுமொறு சிறப்புள் வழியே அவ்வாறு வரும். இன்றேல் அஃது ஒடுஉருபன்று, ஒருங்கு என்னும் பொருள்தரும் இடைச் சொல்லாம்.

**சூ. 92 :** மூன்றனும் ஐந்தனும் தோன்றக்கூறிய
ஆக்கமொடு புணர்ந்த ஏதுக்கிளவி
நோக்கு ஓரனைய என்மனார் புலவர். (9)

**க-து :** மூன்றாவதும் ஐந்தாவதும் ஒருபொருட்கண் மயங்குமாறு கூறுகின்றது.

**உரை :** மூன்றாம் வேற்றுமைக்குரிய பொருளின்கண்ணும் ஐந்தாம் வேற்றுமைக்குரிய பொருளின் கண்ணும் தெளிவாகக் கூறப்பெற்ற, ஆக்கச் சொல்லொடு புணர்ந்து ஏதுக் குறித்து வரும் சொற்கள் கருத்து வகையான் ஒருதன்மையன எனக் கூறுவர் புலவர்.

என்றது : "அதனின் ஆதல்" எனவும் "புதுமை பழமை ஆக்கம் என்றா" எனவும் இரண்டற்கும் உரியதாக ஓதப்பெற்ற ஆக்கச் சொல்லோடு, 'இன் ஆன்' ஏது என மூன்றாவதற்கு ஓதிய மாற்றுருபாகிய இன்னும், ஐந்தாவதற்கு ஓதிய இன் உருபும் வரின் அவை இரண்டு வேற்றுமைகட்கும் ஒத்த நோக்குடையனவாம் என்றவாறு.

ஏதுக்கிளவி எனப் பொதுப்படக் கூறினாராயினும் ஏற்புழிக் கோடல் என்பதனான் இன், ஆன் இரண்டனுள் 'இன்' உருபே கொள்ளப்படும். என்னை ? ஐந்தாவதனோடு ஒத்தது அதுவேயாதலின் என்க. எனவே இன்னுருபும் ஆக்கச் சொல்லும் ஒருங்குவருமிடத்து இம்மயக்கமாம் என்பது புலப்படும்.

எ-டு : மண்ணின் ஆகிய குடம் - எள்ளின் ஆகிய நெய், பஞ்சியினாகிய நூல் - பாலினாகிய தயிர் எனவரும்.

மண்ணே குடமாகவும் - எள்ளே நெய்யாவும் - பஞ்சியே நூலாகவும் - பாலே தயிராகவும் மாறி நிற்றலான் மண் முதலிய வற்றைக் காரணமாகக் கருதியவழி மூன்றாவதற்கும், நீக்கமாகிய அளவையைக் கருதியவழி ஐந்தாவதற்கும் பொருந்தி வருமாறு காண்க.

"ஆக்கந்தானே காரண முதற்றே" என்றதனான் ஆக்கச் சொல் காரணம் பற்றியே நிற்கும் என்பார் "தோன்றக் கூறிய" என்றும், மண்ணிற் செய்த குடம் என இன் உருபு ஆக்கச் சொல்லொடு புணராது வேறு சொல்லோடு புணர்ந்து நிற்பினும் மண்ணிற்குடமாயிற்று என ஆக்கச் சொல் இடம் மாறி நிற்பினும் இம்மயக்கம் நிகழாது. ஆண்டவை மூன்றாவதற்கே உரியவாம் என்பதை உணர்த்த "ஆக்கமொடு புணர்ந்த எதுக்கிளவி" என்றார் என அறிக.

'இஃ' என்பது எதுவின்கண் மாற்றுருபாக மூன்றா வதற்கும், ஐந்தாகுவதே இன்னெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி, என ஐந்தாவதற்கும் ஓதப்பெற்றமையானும் ஆக்கம் இரண்டற்கும் ஓதப்பெற்றமையானும் "நோக்கு ஓரனைய" என்றார். இஃது உருபு மயக்கமும், நீக்க அளவையொடு ஆக்கம் மயங்குதலின் பொருள் மயக்கமுமாம் என்க.

இனி உரையாசிரியன் மார் ஏதுப்பொருள் (வேற்றுமை நிலை) மூன்றாவதற்கும் ஐந்தாவதற்கும் உரித்தாகக் கொண்டமையான் ஏதுக்கிளவி என்பதற்கு ஏதுப்பொருள் என உரை கூறி வாணிகத்தான் ஆயினான் - வாணிகத்தின் ஆயினான் என உதாரணங் காட்டினார்.

இரண்டற்கும் ஏதுப்பொருள் உரித்தாயின் மயக்கமாமாறு யாங்ஙனம்? என ஒரு தடையை எழும்பிச் சேனாவரையர் எதுப் பொருள்தனக்குரிய வாற்றான் தன் பொருளாயின வாறு போலப் பிறிதொன்றன் பொருளாதலும் உடைமையின் அம்முகத்தான் மயங்கின எனப்படும் என விடைகூறினார். கூறினும் அவ்வமை தியை அவர் மனச்சான்று ஏலாமையயான் இரண்டு உருபுகள் ஒரு பொருளின் கண் மயங்கின, எனப் பின்னர்க் கூறினார். எதுப் பொருள் ஐந்தாவதற்கில்லை என்பதும், மூன்றாவதன்கண் ஏதுப் பொருள் பற்றி வரும் 'இன்' என்னும் மாற்றுருபு வேறு 'இதனின் இற்றிது' என்னும் ஐந்தாவதன்கண் அளவைப்பற்றி வரும் இன் என்னும் உருபு வேறு என்பதும் மேல் விளக்கப்பெற்றன.

சூ. 93 : இரண்டன் மருங்கின் நோக்கல் நோக்கம் அவ்
விரண்டன் மருங்கின் ஏதுவு மாகும். [10]

க-து : இரண்டாவதனொடு மூன்றாவது மயங்குமாறு கூறுகின்றது.

உரை : இரண்டாம் வேற்றுமைக்கு ஓதப்பட்ட நோக்கப் பொருளின் மருங்காகிய நோக்கல் நோக்கம், ஏதுக்கிளவி என மேற்கூறப்பட்ட இன்னும் ஆனுமாகிய இரண்டிடத்து ஏதுப் பொருளாகவும் வரும்.

'நோக்கலின் அஞ்சலின்' என ஓதப்பெற்ற 'நோக்கம்' கட் பொறியால் நோக்கும் நோக்கமாகும். நோக்கல் நோக்கம் என்பது கருத்தான் நோக்குதலாதலின் அதன் மருங்கினதாயிற்று. உம்மையான் இரண்டாவதன்கண் வருதலே பெரும்பான்மை என்பதும், நோக்கும் நோக்கு இரண்டாவதற்கே உரியதென்பதும் புலப்படும். ஆக்கமொடு புணர்ந்த ஏதுக்கிளவி அதிகாரப் பட்டமையான் "இன்னான் ஏது" என மூன்றாவதற்கு ஓதிய அவ் இரண்டு உருபுகளையும் சுட்டி அவ்விரண்டன் மருங்கின் என்றும், கருவிப்பொருளை நீக்குதற்கு 'ஏதுவும்' என்றும் கூறினார். இதுவே ஆசிரியர் கருத்தென்பதை "ஓம்படைக் கிளவிக்கு ஐயும் ஆனும்" எனப்பின்னர் உருபுகளை விதந்து கூறுதலான் அறியலாம்.

எ-டு : வானோக்கி வாழும் உயிரெல்லாம் மன்னவன் கோல் நோக்கி வாழுங்குடி. எனவரும்.

வானையும் கோலையும் கண்ணான் நோக்கும் உயிரும் குடியும் இடைஈடின்றி அவற்றின் பயனாகிய மழையையும் நீதி யையும் கருத்தான் நோக்குதலின் செயப்படுபொருளே ஏதுவாகவும் நிற்பனவாயின என்க. வானும் மழையும், கோலும் நீதியும் வேறு வேறன்மையின் இம்மயக்கம் நிகழ்வதாயிற்றென்க. அதனான் அவை விரியுமிடத்து வானை நோக்கி வாழும், கோலை நோக்கி வாழும் எனவும் வானின் நோக்கி வாழும் வானான் நோக்கி வாழும் கோலின் நோக்கி வாழும் கோலான் நோக்கி வாழும் எனவும் விரியும் என்க. இஃது உருபும் பொருளும் ஒருங்கு மயங்கின மயக்கம்.

உரையாசிரியன்மார் அவர் கொள்கைக்கேற்ப மூன்றா வதற்கும் ஐந்தாவதற்கும் உரிய ஏதுப்பொருளில் நோக்கல் நோக்கம் மயங்குமென உரை கூறினர். மூன்றனும் ஐந்தனும் என்னும் சூத்திரத்து 'ஏதுக்கிளவி' என்பதே எழுவாயாகாலின் அவ்விரண்டு என்னும் சுட்டு மூன்றனும் ஐந்தனும் என்பன வற்றைச் சுட்டுதற்கு ஏலாமை அறிக.

**சூ. 94 : அதுவென் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்
அதுவென் உருபுகெடக் குகரம் வருமே [11]**

**க-து :** ஆறாவதன் கண் நான்காவது மயங்குமாறு கூறுகின்றது.

**உரை :** அது என்னும் கிழமைப் பொருள் வேற்றுமை உயர் திணை முறைப்பெயர்த் தொகையின் கண் உருபு விரியுங்கால் அது என்னும் உருபுவிரியாது நான்கன் உருபாகிய குகரம் விரிந்து வரும்.

உயர்திணைத் தொகை என்றதனான் முறைப்பெயர்த் தொகை என்பதும், வரும் என்பதனான் விரியும் என்பதும் பெறப்பட்டன. கெடுதலாவது ஆண்டுவாராமை.

**எ-டு :** நம்பி மகன் - நம்பி தந்தை - நங்கை கணவன் - நங்கைதாய் என்பவை முறையே. நம்பிக்கு மகன் - நம்பிக்குத் தந்தை - நங்கைக்குக் கணவன் நங்கைக்குத்தாய் என விரிந்து வரும். தன்மைப் பெயரும் சுட்டுப்பெயரும் இவ்வாறே எனக்கு மகன், அவனுக்குத் தந்தை, எனவரும். முறைப்பெயரல்லா வழியும், அஃறிணையாய வழியும் அதுவென்னும் உருபே விரியும் என்க. நம்பியது குதிரை நங்கையது மயில் எனவும் மறியது தாய், மறியது தந்தை எனவும் வரும்.

இதன் பயன் சாத்தன் தாய் - சாத்தன் தந்தை எனவரும் பெயர்த் தொகை இரு திணைக்கும் பொதுவாய் நிற்குமன்றே ? அவ்வழி சாத்தற்குத்தாய் எனவிரியின் நிலை மொழி உயர்திணை எனவும் சாத்தனதுதாய் எனவிரியின் நிலை மொழி அஃறிணை எனவும் வரைந்தறிதலாம் என்க. அதுவென் உருபு வாராது என்னாது 'கெட' என்ற வாய்பாட்டு வேற்றுமையான் சிறு பான்மை உடைய என்னும் சொல்லுருபு விரிதல் வழக்கின்கண் கொள்க. சாத்தனுடையதாய் எனவரும்.

அன்றி, அதுவென்பது அஃறிணைப்பால் தோன்ற நிற்றலின் குகரம் விதித்தாரெனின் அது மரபிலக்கணம் பற்றிய தாய்க் கிளவியாக்கத்துள் அமைதலன்றி மயக்க இலக்கணம் கூறும் வேற்றுமைமயங்கியலுள் கூறலமையாதென்க.

**சூ. 95 : தடுமாறு தொழிற் பெயர்க்கு இரண்டும்மூன்றும்
கடிநிலை யிலவே பொருள்வயி னான [12]**

**க-து ;** இரண்டாவதும் மூன்றாவதும் மயங்குமாறு கூறுகின்றது.

உரை: உருபு தொக்குநிற்கும் வேற்றுமைத் தொடர்மொழி, தொகை மொழிகளின்கண் தொழிற் சொல் தடுமாறி வரும் பெயர்க் கண் இரண்டாவதும் மூன்றாவதும் வரின் நீக்கப்படும் நிலையின அல்ல. பொருந்துமாற்றான் வரும் என்றவாறு.

வரலாறு: புலி கொன்ற யானை அல்லது புலி கொல் யானை என உருபு தொக்க மொழியிடத்துக் கொல்லுதல்தொழில் யானைக்குரிய தாயின் புலியைக் கொன்ற யானை என இரண்டாவதும். புலிக்குரிய தாயின் புலியாற் கொல்லப்பட்ட யானை என மூன்றாவதும் விரிந்து வரும்.

இது வேற்றுமை மயக்கமன்றாயினும் தடுமாறு தொழில் காரணமாக ஒருபெயர் ஒருகால் செயப்படு பொருளாகவும் ஒரு கால் கருவிப் பொருளாகவும் மயங்குதலின் இதனை இவ்வியலுட் கூறினார். இதுவும் ஒருவகை வேற்றுமைமயக்கமாதல் ஒப்புமையான் என்க.

சூ. 96: ஈற்றுப் பெயர் முன்னர் மெய்யறி பனுவலின்
வேற்றுமை தெரிப உணரு மோரே [13]

க-து: தடுமாறு தொழிற்கண் ஒன்றனைத் தெரியுமாறு கூறுகின்றது.

உரை: மேற்கூறிய தடுமாறு தொழிற்றொகையின்கண் ஈறாகிய பெயரின் முன்னர் வந்து பொருள்வேறு பாடுணர்த்தும் சொற்களான் இப்பெயர் இன்ன வேற்றுமைக்குரியது எனத் தெளிந்து கொள்வர் உணரும் இயல்புடையோர்.

மெய்யறிபனுவல் - பொருளறிவிக்கும் சொல், என்றது, பயனிலையாக வந்து முடிக்குஞ் சொற்களை.

வரலாறு: புலிகொல் யானை ஓடா நின்றது - புலிகொல் யானை சிதைந்தது. எனப் பயனிலை கொண்டு முடிந்தவழி, ஓடா நின்றது என்பதனால் கொல்லப்பட்டது புலி எனவும் சிதைந்தது என்பதனால் கொல்லப்பட்டது யானையெனவும் தெரிந்தவாறு காண்க.

இனி, புலிகொல் யானை பெரிது - புலிகொல் யானை கிடந்தது என்றாற் போல முடியின் அவ்வழி கூறுவோனது பிற குறிப்புகளான் தெளிய வேண்டுதலின் "உணருமோரே" என்றார். தடுமாறு தொழிற்றொகைக்கண் பொருள் வேறு பாடறிந்தன்றி உருபு விரிக்கலாகாமையின் இது கூறப்பட்டது.

சூ. 97 : ஓம்படைக் கிளவிக்கு ஐயும் ஆனும்
தாம்பிரி விலவே தொகவரு காலை [14]

க-து : ஒரு பொருட்கண் இரண்டாவதும் மூன்றாவதும் மயங்குமாறு கூறுகின்றது.

உரை : உருபு தொக்கு நிற்கும் மொழியிடத்து இரண்டாவதற் கோதிய ஓம்படைச் சொற்கு ஐயுருபும் ஆனுருபும் பிரிவிலவாய் வரும். அஃதாவது ஒத்த உரிமையவாய் வரும் என்றவாறு.

ஆன் என விதந்து கூறினமையான் ஏதுப் பொருட்டாய மூன்றாவது என்பதும் ஏதுவின் கண்வரும் பிறிதொரு உருபாகிய இன்னுருபு இப்பொருளின்கண் வாராதென்பதும் புலப்படும்.

வரலாறு : அறம் போற்றி வாழ்க - அறங்காத்து வாழ்க என்னும் தொகை விரியும் வழி - அறத்தைப் போற்றி வாழ்க என ஐயுருபும் அறத்தாற் போற்றி வாழ்க என ஆனுருபும் விரிந்து வரும். அறம் போற்றுதல் வாழ்க்கையின் இன்றியமையாக்கடன் ஆதலின் அது செய்யப்படு பொருளாகவும், ஏதுப் பொருளாகவும் நின்றது. அதனான் அஃது இரண்டுருபிற்கும் ஒப்பதாயிற்றென்க.

நோக்கல் நோக்கம் பெரும்பான்மையும் ஐயுருபானும் சிறு பான்மை ஏதுப் பொருட்குரிய இன் ஆன் என்னும் இரண்டு உருபானும் வரும். ஓம்படைக் கிளவிக்கு ஐயும் ஆனும் ஒத்த உரிமையவாய் வருதலானும் இன் உருபு வாராமையானும் இதனைப் பிரித்துக் கூறினார் என்க.

சூ. 98 : ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்கு
ஏழும் ஆகும் உறைநிலத் தான [15]

க-து : ஆறாவதும் ஏழாவதும் மயங்குமாறு கூறுகின்றது.

உரை : ஆறாவதன் பொருளுள் ஒன்றாகிய வாழ்ச்சிக் கிழமைக்கு 'அது' உருபேயன்றி உறையும் நிலமாய வழி ஏழாவதன் உருபும் விரிந்து வரும்.

இஃது உருபு தொக்கு நிற்கும் மொழிக்கண் நிகழும் மயக்கம் என்பது அதிகாரத்தாற் பெறப்பட்டது. அஃதாவது: காட்டுயானை என்னும் தொகை விரியுழிக் காட்டது யானை எனவும் காட்டுள் யானை எனவும் விரியும். யானைக்காடு, என வாழ்ச்சிப் பொருள் உடைமை பற்றி நிற்பின் யானையது காடு என ஆறாவதே விரியும் என்பது தோன்ற "உறைநிலத்தான" என்றார்.

**சூ. 99 :** குத்தொக வருஉம் கொடையெதிர் கிளவி
அப்பொருள் ஆறற்கு உரித்து மாகும் [16]

**க-து :** நான்காவதன்கண் ஆறாவது மயங்குமாறு கூறுகின்றது.

**உரை :** குவ்வுருபுதொக்குவரும் கொடையை ஏற்றுக் கொள்ளுதலை உணர்த்தும் தொகைமொழி, விரியும் வழி நான்காவதற்கு உரித்தாதலேயன்றி ஆறாவதற்கும் உரியதாகும். எதிர்தல் - திரிபின்றி ஏற்றுக் கொள்ளுதல்.

**வரலாறு :** தேவர்பலி என்னும் தொகைமொழி, தேவர்க்குப் பலி எனவும் தேவரது பலியெனவும் விரிந்து வரும். தேவர்க்கு நேர்ந்த பலி தப்பாது அவர்க்கு உரிமையாய் விடுதலின் ஆறாவதற்கும் உரியதாயிற்றென்க. தாலிப்பொன் - கபிலர் நட்பினன் எனவரும் நான்கன் தொகைகள் கொடை எதிர் கிளவிகள் அல்லவாதலின் அவைபோல்வன ஆறற்கு உரியவாகாமையின் 'உரித்தும்' ஆகும் என்றார். "குத் தொகவருஉம் கொடையெதிர் கிளவி" என அதன் உரிமையை விரித்தவாறு.

**சூ. 100 :** அச்சக் கிளவிக்கு ஐந்தும் இரண்டும்
எச்ச மிலவே பொருள்வயி னான [17]

**க-து :** ஐந்தாவதும் இரண்டாவதும் மயங்குமாறு கூறுகின்றது.

**உரை :** நோக்கலின் அஞ்சலின் (வேற்-11) என இரண்டாவதற்கும் தண்மை வெம்மை அச்சம் என்றா (வேற்-17) என ஐந்தாவதற்கும் உரித்தாக ஓதப்பெற்ற அச்சக்கிளவிக்கு உருபு தொக்கு நிற்கும் மொழிக்கண் ஐந்தாம் உருபும் இரண்டாம் உருபும் குறைவின்றி வரும். 'எஞ்சுதலில' என்றது ஒன்றின் ஒன்று எஞ்சாது ஒப்ப வரும் என்றவாறாம்.

விரிந்து நின்ற வழி செயப்படுபொருளும் - நீக்கப் பொருளும் தெரிய சொற்கள் வேறு வேறு நிற்கும். தொக்கவழி ஒரு சொல்லே செயப்படு பொருளாகவும் எல்லைப் பொருளாகவும் உருபிற்கேற்பப் பொருள் தருதலின் மயக்கமாயிற்றென்க.

**வரலாறு :** பழியஞ்சும் என்னும் தொகை விரியும் வழிப் பழியின் அஞ்சும் எனவும் பழியை அஞ்சும் எனவும் விரியும். பழியின் அஞ்சும் என்புழிப் பழியினின்று நீங்குதலைக் கருதும் மெய்ப்பாடு அச்சமாம். பழியை அஞ்சும் என்புழிப் பழி தன்னைப் பற்றாமற் பொருட்டுச் செய்யும் செயல் அச்சமாம்.

இரண்டும் ஐந்தும் என்னாது முறை மாற்றிக் கூறியதனான் பழிக்கு அஞ்சும் எனச் சிறப்பான்மை நான்காவது விரிதலும் கொள்க. பழியை ஏற்றுக் கொள்ள அஞ்சும் என்பது பொருள்.

உரையாசிரியன்மார் ஐந்தாவதனை ஏதுப் பொருள்பட விளக்குவார். பழி ஏதுவாயின் அஞ்சப்படும் பொருள் வேறொன்றாமாறு அறிக. ஐந்தாவதற்கு ஏதுப்பொருள் உண்டெனல் பிழையான கோட்பாடென்பது மேல் விளக்கப்பட்டது.

சூ. 101 : அன்ன பிறவும் தொன்னெறி பிழையாது
உருபினும் பொருளினும் மெய்தடுமாறி
இருவயின் நிலையும் வேற்றுமை யெல்லாம்
திரிபிடன் இலவே தெரியு மோர்க்கே (18)

க-து : வேற்றுமை மயக்கங்கட்கு ஆவதொரு புறனடை கூறுகின்றது.

உரை : வேற்றுமை மயக்கம் பற்றி மேல் எடுத்தோதப் பெற்றனவேயன்றி அவை போல்வன பிறவும், தொல்லோர் தம் இலக்கண மரபு பிழையாமல் உருபானும் பொருளானும் வடிவு தடுமாறித் தனதும் பிறிதுமாகிய ஈரிடத்தும் நிலை பெறும் வேற்றுமை மயக்கமெல்லாம், வேற்றுமையின் இயல்பினை ஆராய்ந்தறிந்தோர்க்கு அவைதிரிபின் பாலன அல்ல என்பது புலனாம். என்றது, வேற்றுமையியலுள் ஓதப்பெற்ற வரையறையை நோக்க, மயங்கி வந்தன என்றதல்லது. அவை வழுவின அல்ல, மொழி மரபுகளே என்றவாறாம்.

அன்னபிறவும் என்றதனால் வருவன வருமாறு: உருபு மயக்கம் : "கிளையரி நாணற் கிழங்குமணற் கீன்ற முளை" எனக் குவ்வுருபு, இடப் பொருட்டாகும் மணலைக்கோடற் பொருளாக மயக்கஞ் செய்தது. பொருள் மயக்கம்: நோயை நீக்கினான்-நோயின் நீங்கினான் என நீக்குதற்பொருள் இரண்டாவதனொடும் ஐந்தாவதனொடும் மயங்கிற்று. கடலைக் காடொட்டாது - கடலிடைக் காடொட்டாது என ஒட்டுதற் பொருள் இரண்டாவதனொடும் ஏழாவதனொடும் மயங்கிற்று. இங்ஙனம் மயங்கினவேனும் நாணல் தன் கிழங்கினை மணற்கு ஈனுதலான் மணல் ஏற்கும் பொருளாதற்கு உரித்தானவாறும். அழுக்காறுடையான் சேரற்குரிய இடம் தவ்வை எனக் கருதிய வழி அழுக்காறுடையாற்குத் தவ்வையைக் காட்டி விடுதல்செயப்படு பொருளாதற்கு உரித்தானவாறும். நீக்கினான் என்ற வழி நோய் சாத்தன் கொண்டிருந்ததாயின் இரண்டாவதற்கும் தன்னை நோக்கி வருவதாயின் ஐந்தாவதற்கும் நீக்குதல் தொழில் ஏற்புடைத்தாமாறும். ஒட்டுதல் என்னும் கருமச் சார்பு

சிறுபான்மை ஏழாவதனொடு வருதல் ஏற்புடைத்தாமாறும் காண்க. இங்ஙனம் இவற்றை ஓர்ந்துணர வேண்டுதலின் "திரிபிடனிலவே தெரியுமோர்க்கே" என்றார் என்க.

இனி உரையாசிரியனிமார் உரையுள், நோயை நீங்னான் எனக் காணப்படும் உதாரணம் ஏடெழுதுவோரால் நேர்ந்த பிழை யாகலாம்; நீங்குதல் என்பது எல்லைப் பொருளாவதன்றிச் செயப்படு பொருளாதற்கு இயையாமை அறிக.

முறையிற் குத்துங்குத்து முறையாற் குத்துங்குத்து என்பவை இன் ஆன் ஏது என்னும் மூன்றாவதன்கண் அடங்கும் ஆதலின் ஆண்டு மயக்கமின்று. இன் உருபினை ஐந்தாவதாகக் கருதி உரையாசிரியன்மார் மயக்கமென்று மயங்கினர். கடலொடு காடொட்டாது. தந்தையொடு சூளுற்றான் என்பவை உருபு மயக்கமாவதன்றிப் பொருள் மயக்கமாகா. உடனிகழ்ச்சி என்பததொரு வேற்றுமையை உண்டெனக்கருதி இவற்றை அவர் கூறினார். பிறவும் இந்நூல் நெறிக் கொவ்வாதனவாக உரையாளர் கூறுவனவற்றை ஓர்ந்து விலக்குக.

சூ. 102 : உருபு தொடர்ந்தடுக்கிய வேற்றுமைக்கிளவி
ஒருசொல் நடைய பொருள்சென் மருங்கே

க-து : உருபேற்ற சொற்கள் தொடர்ந்து பயனிலை முடிபு கொள்ளுமாறு கூறுகின்றது.

உரை : தொடர் மொழியின் கண் உருபுகள் தொடர்ந்து, அடுக்கி வரும் வேற்றுமைச் சொற்கள் பொருள் இயைந்து செல்லுமிடத்து அவை ஒரு சொல்நடை போன்றனவாகும்.

என்றது, தொடர் மொழிக்கண் ஒத்த உருபுகளோ வேறு பட்ட உருபுகளோ தொடர்ந்து அடுக்கி வந்த சொற்கள் தனித் தனியே முடிக்குஞ் சொற்கொண்டு முடிதல் வேண்டுமென்னும் யாப்புறவில்லை, அவை முடிக்குஞ் சொல் ஒன்றனான் முடிதற் குரிய பொருளியைபு உடையாவாயின் அவ்வழி அவை ஒரு சொல் நடைபோன்ற வழக்கினவாம் என்றவாறு, 'ஒரு சொல் நடைய' என்பதன்கண் உவம உருபு தொக்கு நின்றது. அங்ஙனம் பொருளியைபில்லாவழிப் பலசொல்நடையவாய் அவ்வவற்றிற் கேற்ற முடிக்குஞ் சொல்லொடு தொடர்ந்து முடியும்.

வரலாறு : நிலத்தையும் நீரையும் தீயையும் வளியையும் போற்றினர் எனவும், கண்ணானும் கருத்தானும் நோக்கினான் எனவும் அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது மன்னவன்கோல், எனவும் வரும். இவை ஒருவகை உருபுகளே

அடுக்கி வந்து ஒரு பயனிலை கொண்டன. மரத்தை நுனிக்கட் குறைத்தான் எனவும். சாத்தனைக் கண்களான் வீட்டின்கண் கண்டேன் எனவும்வரும். இவை வேறுஉருபுகள் அடுக்கிவந்து ஒரு பயனிலை கொண்டன. யானையது கோட்டைக் குறைத்தான். மனைக்கண் இருந்து நோய்க்கு மருந்தினை உண்டான். இவை பொருள் செல்மருங்கின் இயையாமையின் பல சொல்நடையவாய் ஏற்ற முடிபுகளைக் கொண்டன.

உருபுகள் தனித்தனி பயனிலை கொள்ளாமல் அடுக்கி வந்து ஒருபயனிலையான் முடிதலும் ஓராற்றான் மயக்கத்தின்பாற் படுதலின் இவ்விதிச் சூத்திரத்தை ஈண்டு வைத்தோதினார் என்க.

சூ. 103 : இறுதியும் இடையும் எல்லா உருபும்
நெறிபடு பொருள்வயின் நிலவுதல் வரையார்

கரு-து : உருபேற்ற சொற்கள் தொடர்க்கண் நிற்கும் நிலை கூறுகின்றது.

உரை : பயனிலை கோடற்கண் உருபேற்ற சொற்கள் எல்லாம் கவர்பொருள் படாமல் அவ்வவ் வேற்றுமைக்குரிய செம்பொருள்படுமிடத்துத் தொடர் மொழிக்கண் இறுதி நிற்றலையும் இடைநிற்றலையும் வரையறை செய்யார் ஆசிரியர். யாண்டு நிற்பினும் ஒக்கும் என்றவாறு. உருபென்றது உருபேற்ற சொற்களை யாகும். என்னை ? உருபு ஒரு சொல்லின் இடை நிற்றலின்மையின் என்க.

எ-டு : உண்டான் உணவை-துவக்குண்டான் கொடியொடு-கொடுத்தான் பாணற்கு. வலியன் சாத்தனின் - இருந்தான் மலையின்கண், என வரும். ஆறாவது இறுதிநிற்பின் வினைக் குறிப்பாமாதலின் நெறிபடுபொருளன்றாய் வரையப்படும்என்க.

இனி, கூகைகுன்றத்தின்கண் - உணர்ந்தான் கேள்வியான், எனவருபவை கவர் பொருனினவாம். என்னை ? கூகை என்பது குன்றத்திற்கு அடையாய் நிற்றற்கும்-கேள்வியான் என்பது வினைக் குறிப்புப்பெயராதற்கும் ஏற்குமாகலின் என்க.

ஈறு பெயர்க்காகும் என்றது எழுவாய் வேற்றுமைப் பெயர்க் கண் உருபு நிற்குமிடம் கூறிற்று. இஃது உருபேற்றசொல் தொடர்மொழிக்கண் நிற்கும் இடம் கூறிற்று. இவ்வேறுபாடும் இரு சூத்திரங்களின் செம்பொருளும் ஓராமல் உரையாசிரியன்மார் ஈண்டைக்கு ஒவ்வாத பல விளக்கம் கூறி இச்சூத்திரம் வழுவமைத்ததாகக் கருதி மயங்கினர். உருபேற்ற சொல் இடம் பிறழ்ந்து நிற்றலும். ஓராற்றான் மயக்கத்தின்பாற் படுதலின் இதனை ஈண்டுவைத்தார்

சூ. 104 : பிறிது பிறிது ஏற்றலும் உருபு தொகவருதலும்
நெறிபட வழங்கிய வழிமருங் கென்ப [21]

க-து : உருபுகளின்நிலை பற்றியதொரு புறனடை கூறுகின்றது.

உரை : காப்பு முதலாக ஓதப்பெற்ற அறுவகை வேற்றுமைப் பொருள்களைப்பற்றி வரும் வேற்றுமை உருபு ஏற்கும் பெயர்கள், பொருள்நோக்கிற்கியைய வேறுவேறு உருபுகளை ஏற்று வருதலும், உருபுகள் தொக்கு நிற்ப அப்பொருள் விளங்க வருதலும் இலக்கண நூலோர் முறைபெறவழங்கிய இலக்கண வழக்கிடத்தன என்று கூறுவர் ஆசிரியர்.

அஃதாவது தொடர் மொழிக்கண் வேற்றுமைப் பொருள்கள் மயங்குந்தொறும் அம்மயக்கத்திற்கேற்ப வேற்றுமையுற்ற பெயர்கள் பிறிது பிறிதாகப் வரும் அவ்வவ் உருபுகளை ஏற்று வருதலும் பொருள் நிலை திரியாமல் உருபுகள் குன்றி வருதலும், இலக்கண நெறியே என்றவாறு. வேற்றுமைக்கிளவி என்பது மேலைச் சூத்திரத்தினின்று அதிகரித்தது. உருபென்பது தாப்பிசையாய்ப் பிறிது பிறிதென்பவற்றொடும் இயைந்து நின்றது.

வரலாறு : இரண்டாம் வேற்றுமைக்குரிய சார்பு பொருள் கருமமல்லாச்சார்பாகிய வழி ஒரு பெயரே அரசனைச் சார்ந்தான் எனவும் அரசன்கண் சார்ந்தான் எனவும், இரண்டாவதற்குரிய நோக்கு என்னும் பொருள் நோக்கல் நோக்கமாகிய வழி ஒரு பெயரே - வானை நோக்கி வாழும், வானான் நோக்கி வாழும், வானின் நோக்கி வாழும் எனவும், இரண்டாவதற்கோதிய கன்றல் என்னும் பொருள் செயப்படு பொருளைக் கருதியவழிச் சூதினைக் கன்றினான் எனவும் இடப் பொருளைக் கருதிய வழிச் சூதின்கண் கன்றினான் எனவும் யானைக்கோடு குறைத்தான் என்னும் தொடர்க்கண், யானை செயப்படுபொருளாய வழி யானையைக் கோட்டின்கண் குறைத்தான் எனவும், கோடு செயப்படு பொருளாய் யானை இடப் பொருளாய வழி, யானையின்கண் கோட்டைக்குறைத்தான் எனவும், கோட்டினை உடைமைப் பொருளாகக் கருதியவழி யானையது கோட்டைக் குறைத்தான் எனவும் நாகர் பலி என்னும் தொகைமொழிக்கண் கொடுப் போரைக் கருதியவழி நாகர்க்குப் பலிகொடுத்தார் எனவும் கொள் வோரைக் கருதியவழி நாகரது பலியைக்கொடுத்தார் எனவும் புலிகொல் யானை என்னும்தொகைநிலைத் தொடர்மொழியின் கண் புலி செயப்படுபொருளாய வழி புலியைக் கொன்றயானை எனவும் கருவிப் பொருளாய வழி புலியாற் கொல்லப்பட்ட யானை

எனவும் பழியஞ்சினான் என்னும் தொகைச் சொல்லின்கண் அஞ்சுதல் செயப்படுபொருள் வினையாயின் பழியை அஞ்சினான் எனவும் எல்லையாகிய அளவைப் பொருளாயின் பழியின் அஞ்சினான் எனவும் காட்டுயானை என்னும் தொகைமொழிக்கண் யானை உடைமைப் பொருளாயின் காட்டது யானை எனவும் வாழ்ச்சிப் பொருளாயவழிக் காட்டின்கண் (உள்ள) யானை எனவும் ஒரு பெயரே வேறு வேறு உருபுகளை ஏற்று வந்தவாறு கண்டு கொள்க. இங்ஙனம் வருபவை பிறிது பிறிதேற்றலாம்.

2) மரம் வளர்த்தான்-மரப்பாவை? நெல்லுழவு-வரையருவி-சாத்தன் கை-குன்றக் கூகை-என்னும் தொகைச் சொற்களின் கண் முறையே ஐம் முதலிய ஆறு உருபுகளும் வெளிப்படாமல் தொக்கு நின்று அவ்வவ் வேற்றுமைப் பொருளாகத் திரிபின்றி உணர்த்தி நிற்றலைக் கண்டு கொள்க. இவை உருபுதொக வருதலாம்.

முடிக்குஞ் சொல் ஒன்றாக நிற்குமிடத்து,முடிக்கப்படுஞ்சொல் ஒரு வேற்றுமைக்குரிய உருபேயன்றிப் பிறிதொரு வேற்றுமைக் குரிய உருபையும் ஏற்று வருதல் வழுவாமோ என்று மயங்கற்க, முடிக்குஞ் சொல் ஒன்றாயினும் நோக்கிக்கூறும் பொருள் வேறுபாட்டிற்கேற்பப் பிறிதாகிய உருபுகளை ஏற்று வருதல் இலக்கண நெறியே என்பதையும் தொடர்மொழிப் பொருளை வேறுபடுத்திக் காட்டுவது வேற்றுமை உருபுகளே ஆதலின் அவை ஆண்டு இல்வழி அவை வேற்றுமைத் தொடராகுமோ! ஆகாவோ? என மயங்கற்க. நிறுத்த சொல்லும் குறித்து வருகிளவியும் அப் பொருள் தோன்றப் புணர்ந்து நிற்பின், உருபுகுன்றினும் பொருள் திரியாவாதலின் உருபுதொகவருதலும் இலக்கணமாம் என்பதை யும் தெரிந்துணர "நெறிபட வழங்கிய வழிமருங்கென்ப" என்றார்.

எழுத்ததிகாரத்துக் கூறப்பட்ட வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்கும், எச்சவியலுட் கூறப்பெறும் வேற்றுமைத் தொகை மொழிக்கும் இச்சூத்திரமே விதியாக அரிமா நோக்காக நின்றது.

பிறிது பிறிது ஏற்றலும் என்பதற்கு எக்காரணத்தாலோ உரை யாசிரியன்மார் ஆறாம் வேற்றுமை உருபு பிறவேற்றுமைகளை ஏற்குமென விபரீதமாகப் பொருள் கூறினர். தெய்வச்சிலையார் தவிரப் பிறரெல்லோரும் அதனை அப்படியே ஏற்றுக் கொண் டுள்ளனர். உரையாசிரியன்மார் கருத்துக்களைச் சிவஞான முனிவர் மிகத்தெளிவாக மறுத்துள்ளமையைச் சூத்திரவிருத்தியுள் கண்டு தெளிக. உரையாசிரியரைப் பின்பற்றிப் பவணந்தியர்.

"ஆறனுரு பேற்கும் அவ்வுருபே" எனச் சூத்திரம் செய்தார். அதற்குச் சிவஞான முனிவர் மொழி இலக்கணத்திற்கேற்ப நல்லுரை வரைந்துள்ளமை பாராட்டற்குரியது. உயராசிரியர் உரைபொருந்துமென்பாரும் உளர். முயற்கோடு உண்டென்பாரைத் தெளிவித்தல் நீருட்குளித்தாரைத் தீயாற்றேடுதல் ஒக்குமென விடுக்க.

இனி, தெய்வச் சிலையார் 'பிறிதுபிறிதேற்றல்' என்பதற்கு உருபுகள் அடுக்கி ஒருவினையான் முடிதலேயன்றி வேறு வேறு வினைகளானும் முடியுமென மேற்சூத்திரத்தைக் கருதி உரை கூறுவார். அக்கருத்து அவ்வுருபுகட்குரிய இலக்கணச் சூத்திரங்களால் பெறப்படுமாகலின் பயனில் கூற்றாய் முடியும் என்க.

சூ. 105 : ஐயுங் கண்ணும் அல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகா இறுதி யான [22]

க-து : "இறுதியும் இடையும் எல்லா உருபும் நிலவுதல் வரையார்" எனக் கூறிப் பின்னர் "பிறிது பிறிதேற்றலும் உருபு தொக வருதலும்" உண்டென்றமையான், யாண்டும் உருபு தொக வரும் என நின்றதனை ஒருமருங்கு விலக்கித் தொகாத இடமும் உருபும் இவை என்கின்றது.

உரை : ஐகார வேற்றுமைப் பொருளும் கண்ணென் வெற்றுமைப் பொருளும் அல்லாத ஏனைய வேற்றுமைப் பொருள் பற்றி வரும் சொல்லிடத்துத் தொடர்மொழி இறுதிக்கண் உருபுகள் தம் வடிவு தொக்கு (மறைந்து) நில்லா-விரிந்துவரும் என்றவாறு. எனவே ஐயும் கண்ணும் தொக்குநிற்கும் என்றவாறாம்.

எ-டு : கடந்தான்நிலம், இருந்தான் குன்றத்து. எனவரும். எறிந்தான் வாளான், கொடுத்தான் சாத்தற்கு என்பவை, எறிந்தான் வாள், கொடுத்தான் சாத்தன் என உருபுதொக்குவரின் அவ்வப் பொருள்தாராமையின் இறுதிக்கண் தொகா என்றார். ஏனையவும் அன்ன. இறுதியான என்றது உருபு மயக்கம்.

சூ. 106 : யாதன் உருபிற் கூறிற் றாயினும்
பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்

க-து : தன் பொருளிற்றீர்ந்து வரும் உருபு மயக்கம் ஆமாறு கூறுகின்றது.

உரை : ஒரு தொடரின்கண் வேற்றுமை ஏற்கும் பெயர் யாதொரு வேற்றுமைக்குரிய உருபொடு கூட்டிக் கூறப்பெற்றதாயினும் அத்தொடர்ப் பொருள் செல்லும் பக்கத்து வேற்றுமைப் பொருளையே அது சார்ந்துநிற்கும்,

என்றது, உருபுகள்தம் பொருளிற்றீர்ந்தும் சிறுபான்மை வருமாதலின் உருபு நோக்கி வேற்றுமையைக் கருதாமல் பொருள் நோக்கி அவ்வவ் வேற்றுமையைக் கொள்க என உருபுபற்றிப் புறனடை கூறியவாறு.

எ டு: கோட்டுப் பூச் சூடினும் காயும் ஒருத்தியைக் காட்டிய சூடினீரென்று (குறள்-1313) இதனுள் ஒருத்தி என்னும் சொல் ஐகார உருபொடு கூடி நின்றதாயினும் 'காட்டிய சூடினீர்' என்னும் பொருள் செல்லும் பக்கத்தான் அது கோடற் பொருட்டாய் நின்றவாறுகாண்க. 'கொக்கினுக் கொழிந்த தீம்பழம்' (நற் - 280) என்னும் தொடர்க்கண் கொக்கினுக்கு என நான்கன் உருபு நின்ற தேனும் ஒழிதற் பொருள் அதற் கின்மையான் ஐந்தாவதன் பொருட்டாய் நின்றவாறு காண்க. (கொக்கு-மாமரம்) "மெய்யுருபு தொகா இறுதியான"(வே.ம-22) என்னுமிடத்து ஆன் உருபிற்கு இடப்பொருளின்மையான் அஃது ஏழாவதன் பொருட்டாய் மயங்கியவாறு காண்க. ஏனையவும் இவ்வாறே கண்டு கொள்க.

சூ. 107 : எதிர் மறுத்து மொழியினும் தத்தம் மரபிற்
பொருள்நிலை திரியா வேற்றுமைச் சொல்லே

க-து : செயப்படுபொருள் முதலாக ஓதப்பெற்ற வேற்றுமைகட்குக் "காப்பின் ஒப்பின்" என்பவை முதலாக ஓதப்பெற்ற பொருள்கள் யாவும் விதி வாய்ப்பட்டான் கூறப்பெற்றமையான் எதிர்மறுத்துக்கூறும் வழி அவ் விலக்கணம் 'ஒவ்வுங்கொல் ? என நின்றஐயங் களைகின்றது.

உரை : 'காப்பின் ஒப்பின்' எனவும் 'அதனினாதல்' என்வும் உடன்பாட்டுச் சொற்களாக ஓதப் பெற்றவேற்றுமை செய்யும் வினைநிலைக் கிளவிகளை எல்லாம் எதிர் மறையாகக் கூறினும் ஐ முதலிய வேற்றுமைகளை ஏற்று நிற்கும் சொற்கள் செயப்படு பொருள் முதலாய தத்தம் பொருள் நிலையினின்று திரியா, அவ்வப்பொருள்படவே நிற்கும்.

விதிவினையின்றி மறைவினை தோன்றாமையின் விதி வினைக்கண் எய்தும் செயப்படு பொருள் முதலியவை மறை வினைக்கண் சேறுங்காலும் தம்பொருள் திரியா என்க. என்னை? மறுக்கப்படுதல் வினைமுடிபுகளையே ஆதலானும். விதிவினைக் கும் மறைவினைக்கும் தொழில் முதனிலையாவும் ஒக்குமாத லானும். அம்முதனிலைகள் பற்றியே வேற்றுமை தோன்றுத லானும், பொருட்டன்மைபோல வினைத்தன்மையும் அழிவுறாத தாகலானும், "எதிர் மறுத்து மொழியினும் பொருள் நிலை திரியா" என்றார். விதியும் மறையும் வினைச் சொற்கே உரிய

வாகலான் பெயர் கொண்டு முடியும் ஆறாவது ஒழிந்த ஏனைய வற்றிற்கே இவ்விலக்கணமாம் எனக் கொள்க.

எ-டு : குடத்தை வனையான், வேலான் எறியான், அரசற்குக்கொடான், மலையின் வீழான், மன்றின்கண் இரான் எனவரும்.

"எதிர்மறை வினையும் விதிவினையொடு ஒக்குமென்பது நூன் முடிபு" எனச் சேனாவரையரும் "எதிர்மறைவினை விதி வினையொடு ஒக்கும் என ஆனை கூறிற்று" என நச்சினார்கினியரும் "வழுவமைத்தவாறு" எனத் தெய்வச் சிலையாரும் இச்சூத்திரவிதிக்கு விளக்கமும் அமைதியும் கூறுவர். அவை மொழி இயல்புக்கும் இந்நூல் நெறிக்கும் ஒவ்வாமையை ஓர்ந்தறிக.

சூ. 108 : கு ஐ ஆன் என வரூஉம் இறுதி
அவ்வொடுஞ் சிவணும் செய்யுளுள்ளே [25]

க-து : ஒரு சார் வேற்றுமை உருபுகள் செய்யுட்கண் வடிவு திரிந்து வருமாறு கூறுகின்றது.

உரை : கு, ஐ, ஆன் எனச் சொல்லப்பட்டனவாய் வரும் வேற்றுமை உருபுகள் மூன்றும் செய்யுளுள் தம்மை ஏற்ற பெயரிறுதிக்கண் அகரத்தொடு பொருந்தி நிற்றலும் உடையவாம்.

நான்கனுருபு பெயரொடு கூடி இறுதியாக நின்றாலன்றிக் குற்றியலுகரமாதற் கேலாமையின் 'இறுதி' என விதந்து கூறினார். அதனான் இறுதி என்றது பெயரிறுதி என்பது பெறப்பட்டது. ஏற்புழிக் கோடலான் சிவணுதல் குவ்விற்கும் ஆனுக்கும் கொள்க. ஐ ஆன் கு என முறையிற் கூறாமையான் ஐகாரம் (மெய்பிறிதாதல்) திரிதல் கொள்க. எதிர்மறை உம்மையைச் சிவணுதலும் என மாறிக் கூட்டிக் கொள்க.

எ டு: "கடி நிலையின்றே ஆசிரியற்க" (புள்ளிமயங் - 94) "காவலோனக் களிறஞ்சும்மே" "புரை தீர் கேள்விப் புலவரான-புள்ளினான" எனவரும்.

சூ. 109 : அவற்றுள்
அவ்வெனப் பிறத்தல் அஃறிணை மருங்கின்
குவ்வும் ஐயும் இல்லென மொழிப (26)

க-து : மேலதற்கு ஒரு புறனடை கூறுகின்றது.

உரை : மேற்கூறிய உருபுகளுள்குவ்வும் ஐயும் அஃறிணைப் பெயர்க்கண் ஈறாக நின்று அகரதொடு சிவணுதல் இல்லை எனக் கூறுவர் ஆசிரியர்.

அகரமாகத் திரிதலைப்"பிறத்தல்" என்றார். எழுத்துத் திரிதல் என்பது பிறப்பிடம் வேறுபடுதலான் எய்தும் நிலையே என்பது எழுத்ததிகாரத்துள் விளக்கப்பட்டது. எ. டு: மேற் காட்டப்பெற்றன.

சூ 110 : இதனது இதுவிற்று என்னும் கிளவியும்
அதனைக் கொள்ளும் பொருள் வயினானும்
அதனாற் செயற்படற் கொத்த கிளவியும்
முறைக்கொண் டெழுந்த பெயர்ச்சொற் கிளவியும்
பால்வரை கிளவியும் பண்பி னாக்கமும்
காலத்தின் அறியும் வேற்றுமைக் கிளவியும்
பற்றுவிடுகிளவியும் தீர்ந்து மொழிக்கிளவியும்
அன்ன பிறவும் நான்க னுருபிற்
றொன்னெறி மரபின தோன்ற லாறே (27)

கு-து : நான்கனுருபு விரிந்து நின்ற சொல் பிறவேற்றுமைப் பொருளொடு மயங்குமாறு கூறுகின்றது. இஃது உருபு மயக்கம்.

உரை : இதனது இது விற்று என்பதுமுதலாகத் தீர்ந்து மொழிக்கிளவி, என்பதீறாகக் கூறப்பெற்றவையும், அவை போல்வன பிறவும் நான்காவதன் உருபினாற் கூறுதலாகிய முறைமை தொன்மையான இலக்கண மரபாகும்.

வரலாறு : 1. இதனதுஇது விற்று என்னும் கிளவி என்பது : இப் பொருளினுடையது இப்பொருள் இத்தன்மைத்து எனவரும். ஆறாவதற்குரிய உடைமைப் பொருட்கண், நான்கனுருபு யானைக்குக் கோடு கூரிது எனவரும்.

2. அதனைக் கொள்ளும்பொருள் வயினானும் என்பது : இதனை இதனாற்கொள்ளும் எனவரும் மூன்றாவதற்குரிய கருவிப் பொருட்கண், நான்கனுருபு 'காணத்திற்குக் கொண்ட அரிசி எனவரும்.

3. அதனாற் செயற்படற் கொத்த கிளவி என்பது:இதனான் இது செய்யத்தகும் எனவரும் மூன்றாவதற்குரிய ஏதுப் பொருட் கண், நான்கனுருபு "அவனுக்குச் செய்ய இயலும் இக்காரியம்" எனவரும்.

4. முறைக்கொண்டெழுந்த பெயர்ச் சொற்கிளவி என்பது:- பிறப்புத் தொடர்பான கிழமை கொண்டு நிற்கும் ஆறாவதற்குரிய முறைப் பொருட்கண், நான்கனுருபு இம்மகளுக்குத்தாய், இது இக்குருளைக்குத் தந்தை இது எனவரும். உயர்திணைத் தொகைவயின் அதுவென் உருபுகெடக் குகரம் வரும்'' என்றதனான் இஃது அஃறிணை முறைப் பெயர் என்பது போதரும்.

5. பால்வரை கிளவி என்பது:- இடத்தை வரைந்துணர்த்தி வரும் ஐந்தாவதற்குரிய எல்லைப் பொருட்கண், நான்கனுருபு, கருவூர்க்குக் கிழக்கு மருவூர் எனவரும்.

6. பண்பின் ஆக்கம் என்பது:- பண்பு பற்றி வரும் ஒன்றனொடு ஒன்றை உறழ்ந்து கூறும் ஐந்தாவதற்குரிய பொருட்கண், நான்கனுருபு சாத்தற்கு, நெடியனாயினான் - அரசற்கு மேலாயினான் எனவரும்.

7. காலத்தின் அறியும் வேற்றுமைக் கிளவி என்பது:- காலத்தின் கண் வேறுபாடு அறியவரும் ஏழாவதன் காலப் பொருட்கண், நான்கனுருபு நேற்றைக்கு வந்தான். நாளைக்கு வரும்-என உலக வழக்காக வரும்

8. பற்று விடுகிளவி என்பது:- பற்றுவிடுதல் என்னும் ஐந்தாவதற்குரிய பொருட்கண் நான்கனுருபு, மனை வாழ்க்கைக்குப்பற்று விட்டான் எனவரும்.

9. தீர்ந்து மொழிக்கிளவி என்பது:- தீர்தல் பொருளுணர்த்தும் ஐந்தாவதற்குரிய நீக்கப் பொருட்கண் நான்கனுருபு, ஊர்க்குத் தீர்ந்தான் - ஊர்க்கு நீங்கினான் எனவரும்.

அன்னபிறவும் என்றதனான் ஏழாவதன் இடப்பொருட்கண் நான்கனுருபு - ஊர்க்குச் சென்றான் எனவும், ஐந்தாவதன் எல்லைப்பொருட்கண் ஊர்க்குச் சேயன் எனவும் தொன்னெறி மரபினவாய் வருவன கொள்க.

சூ 111: ஏனை உருபும் அன்ன மரபின
மான மிலவே சொன் முறையான (28)

க-து: ஏனைய உருபுகளும் பிறபொருட்கண் வருமென்கின்றது.

உரை: மேற்கூறிய நான்கனுருபல்லாத ஏனைய உருபுகளும் தொகையின்றி விரிந்து நிற்கும் தொடர் மொழிக்கண் மேற்கூறிய மரபினவாகச் சொல்லும் முறைமைக்கண் குற்றமிலவாம்.

எ-டு : நூலது குற்றங்கூறினான் என்னும் தொடர்க்கண் உரிமைப்பொருட்குரிய ஆறாவது, நூலைக்குற்றங்கூறினான் எனச் செயப்படுபொருட்டாய்வந்தது. அவனது குற்றேவல் செய்தான் என்னும் தொடர் அவனுக்குக் குற்றேவல் செய்தான் எனக்கோடற் பொருட்டாய் வந்தது. பிறவும் தொன்னெறி மரபினவாய் வருவன ஓர்ந்தறிந்து கொள்க.

சூ. 112 : வினையே செய்வது செய்யப்படு பொருளே
நிலனே காலம் கருவி என்றா
இன்னதற் கிதுபய னாக என்னும்
அன்ன மரபின் இரண்டொடுந் தொகைஇ
ஆயெட் டென்ப தொழில்முத னிலையே (29)

க-து : ''அன்றி யனைத்தும் பெயர்ப்பயனிலையே'' எனவும் ''வினையே ''வினைக்குறிப்பவ்விரு முதலிற்றோன்று மதுவே'' எனவும் ''வினை முதற்கருவி அனைமுதற் றெனவும் ''எப்பொருளாயினும் கொள்ளும்'' எனவும் ''இதனினிற்றிது'' எனவும் ''இ த ன தி து'' எனவும் ''அனைவகைக்குறிபிற்றோன்றும்'' எனவும், முதல் ஏழுவேற்றுமைக்குக் கூறிய இலக்கணங்களான் பெயர்ப்பொருளை வேற்றுமைப்படுத்துவன தொழில் நிலைக்கிளவிகளே என்பது ஓராற்றான் புலப்படுத்தப்பட்டமை யின் தொழில் நிலைக்கிளவிகள் அங்ஙனம் வேற்றுமைப் படுத்தற்குக் காரணமாமாறு கூறுகின்றது.

உரை : வினையே=புடைபெயர்ச்சியை உணர்த்தும் உண், தின் செல், வா, போ, முதலிய வினையடிகளாகிய வினையும். செய்வது=தொழிலை நிகழ்த்தும் வினை முதலும். செயப்படு பொருள்=வினை முதலின் தொழில் சென்றுபடும் பொருளும். நிலனே=அத்தொழில் நிகழ்தற்கு ஆதாரமாகிய இடனும். காலம்= அத்தொழில் நிகழ் காலமும், கருவியும்=தொழிலை நிகழ்த்தும் வினை முதற்குத் துணையாக நிற்கும் கருவியும் ஆகிய ஆறும், அத்தொழில் நிகழ்த்துதற்குரிய நோக்கமாகிய இன்னதற்கு எனவும் அத்தொழிலின் விளைவாகிய இது பயனாக எனவும் சொல்லப்பெறும் இம்மரபினையுடையவாகிய இரண்டொடும் கூடி, அமையும் அவ் எட்டும் முற்றி நிற்கும் தொழிற்கு அடிப்படைக் காரணங்கள் என்று கூறுவர் ஆசிரியர்.

வினைச் சொற்கள் இங்ஙனம் எட்டுக்காரணங்களை உடைமையான் அவை பெயர்ப் பொருளை வேற்றுமை செய்தற் குரியவாயின என்பதும். வேற்றுமை மயங்கி வருதற்குக் காரணமும் அவையே என்பதும் இதனாற் புலப்படும்.

"இன்னான் ஏது" என்னும் மூன்றாவது கருவிக்கண்ணும் "இதனினிற்றிது" என்னும் ஐந்தாவது நிலத்தின் கண்ணும் "இதனதிது" என்னும் ஆறாவது செயப்படு பொருட் கண்ணும் அடங்கும்மாதலின் அவற்றை அவற்றுள் அடக்கி ஓதினார். என்னை? புகை உண்மையான் நெருப்புண்டு என்னுமிடத்து நெருப்புண்மை புகையான் அறிதலின் புகை கருவி யாக நின்றவாறும், மலையின் வீழ் அருவி என்னுமிடத்து அருவி மலையின்கண்ணதாதலை உணர்தலின் மலை இடமாகி நின்ற வாறும் சாத்தானது கை என்னுமிடத்துச் சாத்தன் கையை உடையான் என்பது பொருளாதலின், உடையான் என்னும் வினைக்குறிப்பான் அஃது செயப்படு பொருளாதற்கு ஒத்தவாறும் கண்டு கொள்க. இங்ஙனம் இவை உருபு வகையாற்றோன்றாமல் தொடரமைப்பான் பெறப்படுதலின் நேரே உரிமை பெறாமல் பிறவற்றைச் சார்ந்து அடங்கி நின்றன என்க. "இன்னதற்கு இது பயனாக" என்பவை தொழிற்கு நேரே காரணமாகாமல் 'பொருட்டாக' நிற்றலின் பிரித்து எண்ணிக் கூட்டப்பெற்றன.

தொழில் முதனிலை எட்டனுள் செய்வது முதல் வேற்றுமையையும் வினையும் செயப்படு பொருளும் இரண்டாம் வேற்றுமையையும், ஆறாம் வேற்றுமையையும் கருவி மூன்றாம் வேற்றுமையையும் நிலமும் காலமும் ஏழாம் வேற்றுமையையும், ஐந்தாம் வேற்றுமையையும், இன்னதற்கு என்பது நான்காம் வேற்றுமையையும், இது பயனாக என்பது இரண்டாம் வேற்றுமையையும் நான்காம் வேற்றுமையையும் தோற்றுவிப்பன வாகும்.

ஆதலின் வேற்றுமை ஏழற்கும் பொதுவாகிய இச்சூத்திரம் இவ்வியலின் கண்ணதாயிற்று. அங்ஙனமாயின் இதனைவேற்றுமை யியல் இறுதியில்வைக்க எனின். வேற்றுமை மயக்கத்திற்குக் காரணமும் இதுவே என்பது புலப்பட ஈண்டுவைத்தார் என்க.

**வரலாறு :** உண்டான் என்புழித் தொழில் பலவற்றுள் ஒரு தொழிலை வரைந்துணர்த்தும் உண் என்னும் வினையடியாகிய முதனிலை வினையும், உயர்திணை ஆடூஉ ஒருமையாகிய செய்வதும் உண்ணுதற்றொழிற்குரிய உணவு என்னும் செயப்படு பொருளும் அத்தொழில் நிகழ்தற்குரிய இடமாகிய நிலனும் அத்தொழிலின் (இறந்த) காலமும் - வினைமுதற்குத் துணை புரியும் கையும் வாயுமாகிய கருவியும், பசிக்கு அல்லது வயிற்றுக்கு என்னும் கோடற் பொருளாகிய இன்னதற்கு என்பதும், சுவைத்தல் அல்லது உடலோம்பல் என்னும் இது பயனாக என்பதும் தோன்றியவாறு காண்க.

அவ்வாறே (குழையை) உடையான் என்புழி உடைமை உணர்ச்சியாகிய உளத்துநிகழ் வினையும், உடையானாகிய வினை முதலும் குழையாகிய செயப்படுபொருளும் செவி உறுப்பாகிய இடமும் நேற்றுஉடையான் இன்று உடையான் நாளை உடையனாவான் என்னும் காலக்குறிப்பும் செல்வச் செருக்கினைப் புலப்படுத்தும் நோக்காகிய கருவியும் செவிக்குப் பூட்டினான் என்னும் இன்னதற்கு என்பதும் பிறர் மதிப்பைக் கோடலாகிய இது பயனாக என்பதும் தோன்றியவாறு காண்க.

இச் சூத்திரத்திற்கு உரையாசிரியன்மார் கூறியுள்ள உரையும் விளக்கமும் நூற்கருத்தைத் தெளிவுறுத்தாமையை விளக்கப்புகின் விரியும். மேலும் இதனை வினைச் சொற்கு இலக்கணம் கூறியுள்ளதாகவும், இஃது இடம்மாறி நிற்பதாகவும், வடநூலார் கூறும் காரகங்களை விளக்கியதாகவும் கூறினாருமுளர். இச் சூத்திரத்தொடு இயைபில்லாக் கருத்துக்களைக் கூறிக் குழப்பினாரும் உளர். அவையெல்லாம் நூற்கருத்தாகாமையை ஈண்டுக் கூறிய உரையானும் முன்னும் பின்னும் ஆசிரியர் கூறியவற்றானும் ஓர்ந்தறிந்து கொள்க.

சூ. 113 : அவைதாம்
வழங்கியல் மருங்கிற் குன்றுவ குன்றும் (30)

க-து : மேலதற்கொரு புறனடை கூறுகின்றது.

உரை : மேற்கூறப்பட்ட தொழில் முதனிலை எட்டனுள் தொழிற் சொற்கள் வழங்கிவருமிடத்துக்குன்றத்தகுவனகுன்றி நிற்கும். 'அவற்றுள்' என்னும் பாடம் காலத்தாற் பிறழ்ந்த தெனல் வேண்டும்.

எ-டு : கொடி ஆடிற்று, என்புழிப் புறநிலைச் செயப்படு பொருளும், இன்னதற்கு என்பதும் குன்றி நின்றன. நடந்தான் என்புழிப் புறநிலைச் செயப்படுபொருள் குன்றிநின்றது. பிறவும் ஓர்ந்துகொள்க.

## ஆகுபெயர்

இனி எழுவாய் வேற்றுமை மயக்கத்தினை ஆகுபெயர் எனக் குறித்து ஆசிரியர் கூறுதலான் அதுபற்றியதொரு சிறுகுறிப்பு :

பெயர்ச் சொற்கள் யாவும் இருதிணை ஐப்பாற் பொருள் களைக் குறித்துணர்த்தும் குறியீடுகளே. அக்குறியீட்டுச் சொற்களின் பொருட் காரணம் சிலவற்றுள் தெற்றெனத் தோன்றா

வாயினும், எல்லாச் சொல்லும் காரணம் பற்றியனவே என்பது நூலோர் துணிபு. சொல் பொருளுணர்த்துங்கால் தனக்குரிய செம்பொருளை வெளிப்பட உணர்த்தலும், யாதானும், ஓர் இயைபு பற்றித் தொடர்புடைய பிற பொருளைக் குறிப்பான் உணர்த்தலும் அதன் இலக்கணமாம். (பெயரியல் - 3.) இவை முறையே வெளிப்படை என்றும் குறிப்பு என்றும் வழங்கப் பெறும். பொருளை உணர்தலும் இவ்வாறேயாம். யானை நேரே வருதலைப் பார்த்துணர்தல் வெளிப்படை உணர்வு, அதன் மணியோசை முதலிய ஏதுவான் உணர்தல் குறிப்பானுணர்தல்.

பல சொற்கள் ஒரு பொருளைத்தருதற்கும் ஒரு சொல் பல பொருளைத் தருதற்கும் காரணம் அச்சொற்களின்கண் அமைந் துள்ள தன்மைகளேயாம் அஃதாவது அனல்-கனல்-தணல், தீ, முதலிய பல சொற்கள் உள. இவற்றின் பொருளை நோக்கின். அனல் (அல் + நல் = அனல்) இருளின் கண் நலம் பயப்பது கனல் (கன் + அல் = கனல்) இனிமை அல்லாதது (கன்—இனிமை) தணல் (தண் + அல்) குளிர்ச்சி அல்லாதது அழல் = அழிதல் (அழிய (வேகச்) செய்தல்) தீ—தேய்த்து அழித்தல், என்பனவாம். (உரிச் சொல் மொழியாதற்கண் எய்தும் புணர்ச்சிக்கண் இரு மொழிப்புணர்ச்சிக்குரிய விதிகள் அமையா என்பதுபற்றி உரியியலுள் கண்டு கொள்க.)

இச் சொற்களின் காரணங்கள் வேறு படினும் யாவும் நெருப்பிற்குரிய தன்மைகளாய் ஒன்று படுதலின் ஒரு பொரு ளுணர்த்தின. அவ்வாறே 'கிள்ளை' என்னும் சொல், கிளி - குதிரை முதலியவற்றை உணர்த்திற்று. என்னை? இதன் அடிப்படை உரிச்சொல் 'கிள்' எனபதாம். கிள் என்பதற்குக் கிளைத்தல், கிள்ளுதல், கிளத்தல் முதலியவை பொருளாம். கிளி சொல்லை விட்டுவிட்டு வெளிப்படுத்தலும் குதிரை விட்டுவிட்டுத் தாவிச் செல்லுதலும் ஒற்றுமைத்தன்மையாம். இங்ஙனம் யாதேனும் ஒருதன்மை ஒத்தலான் ஒரு வேர்ச்சொல்லினின்று பல சொற்கள் கிளைப்பனவாயின.

இனி, எழுவாய் என்னும் முதல் வேற்றுமை இலக்கணம், "பெயர்தோன்றும் நிலையே" என்பதாம். அஃதாவது இருதிணை ஐம்பாற் சொற்களுள் செப்பலும் வினவலும கருதி ஒன்றைப் பிரித்து வாங்கிய நிலையில் அச்சொல் எழுவாய் வேற்றுமை யாகின்றது.

சொல்லினது இலக்கணமாக மேற்கூறப்பட்ட வெளிப்படை, குறிப்பு என்னும் இரண்டிலக்கணமும் இங்ஙனம் எழுவாயாக வரும்

பெயர்க்கும் ஒத்தலின் அப்பெயர் வெளிப்படையாகச் செம் பொருள்தரின் அதனை ஆக்கப்பெயர் என்றும், யாதானும் ஓரியைபான் குறிப்புப் பொருள்தரின் அதனை ஆகுபெயர் என்றும் இலக்கண நூலோர் வகுத்தமைத்தனர்.

அஃதாவது, தெங்கு என்னும் ஒருபெயர் தெங்குவளர்ந்தது - தெங்கு முற்றிற்று என வருங்கால், வளர்ந்தது என்னும் பயனிலையான் தெங்கு என்பது மரத்தினையும், முற்றிற்று என்னும் பயனிலையான் தெங்கினது காயினையும் உணர்த்தி நின்றது. மேலும் இவ்வாறே தெங்கு என்னும் பெயர் தெங்கு வளர்த்தான், தெங்கு உத்தரமிட்டான், தெங்குதின்றான், தெங்கு கறிசமைத்தான், தெங்கின்பால் பிழிந்தான் என ஏனை வேற்றுமைப் பொருட்கண்வரினும் ஆக்கப் பெயராகவும் - ஆகு பெயராகவும் நிற்பதைக் காணலாம்.

பெயர்ப்பொருளை வேற்றுமைப்படுத்துவது வினைகளே யாதலின் அவ்வினைகளே ஆக்கப் பெயர்களை ஆகுபெயர் களாக வேறுபடுத்தும் என்க.

செயப்படுபொருள் முதலிய வேற்றுமை உருபுகள் தம் பொருளிற்றீர்ந்தும், தீராமலும் பிறவேற்றுமையொடு மயங்குதல் போல ஆக்கப் பெயர்களும் தம்பொருளிற்றீர்ந்தும் - தீராமலும் ஆகுபெயராய் வந்து மயங்குதலின், இதனை இவ்வியலுள்வைத் தோதுகின்றார் ஆசிரியர். எனவே, ஆகுபெயர் எழுவாய் வேற்றுமை மயக்கம் என்பதுதெளிவாம்.

எழுவாய் வேற்றுமையாய் நிற்குமோர் ஆக்கப்பெயர், தன் இயற்பொருளுணர்த்தாமல் தன்னொடு தொடர்புடைய பிறிதொரு பொருளுக்கு ஆகி அப்பொருள் உணர்த்துங்கால் அஃது எழுவாயாகிய பெயரின் மயக்கமே என்பதை ஓர்ந்து ஆகு பெயரிலக்கணத்தை வேற்றுமைமயங்கியலுள் ஆசிரியர் கூறும் தமிழிலக்கணக் கோட்பாட்டின் நுண்மையினையும் செம்மை யினையும் ஓராமல் யாவற்றையும் வடமொழி இலக்கணத்தொடு ஒப்பிட்டுக்காணும் திரிபுணர்வான் ஆகுபெயரைச் சொற்பொருள் உணர்த்தும் இலக்கணவகையாகத் தாமே எண்ணிக் கொண்டு ஆகுபெயரிலக்கணத்தைத் தொனிநூலுள் - அலங்காரநூலுள் கூற வேண்டுமெனக் கருதுவாருமுள்ளர். அவர் சொற்குறிப்பு வேறு செய்யுட்குறிப்பு வேறென்பதை உணராமல் தமிழ்நூலாசிரியர்பால் குறைகாண முயல்வோராவர் என அறிக.

இனி ஆகுபெயர் என்னும் தொகை மொழி வினைத்தொகை யாதலின் முன்னர் ஆகியிருப்பனவும் அவ்வப்பொழுது ஆகுநவும்

எல்லாம் அமையுமெனக் கொள்க. மரபு காரணமாக ஆகுபெயர்களுள் பல, ஆக்கச் சொல்லாகவே இருவகை வழக்கினும் வழங்கும் என்பதும் அறிக. எடுத்துக்காட்டாக, புளி என்பது ஒரு சுவையின் பெயர் அது அதனையுடைய பழத்திற்கு ஆகிப் பின்னர் அப்பழத்தினையுடைய மரத்திற்கு ஆயிற்று எனினும் இப்பொழுது மரம் ஆக்கப் பெயராகவும், பழம் ஆகு பெயராகவும் வழங்குகின்றன. இங்ஙனம் இயற்பெயராக மருவி வருவன வற்றையும் ஓர்ந்தறிந்து கொள்க.

ஆகுபெயர் என்பது ஒரு சொல்லாகவே நிற்கும். ஒரோவழி அவ் ஆகுபெயர் அடையடுத்தும் நிற்கும். ஒரு பொருள் குறித்து இரு சொல்லாகவும் வரும். அவ்வழி அஃது இருபெயரொட்டு என வழங்கப்படும். எவ்வாறு நிற்பினும் ஆகுபெயர் தன்னொடு யாதானுமொரு இயைபு பற்றிய பிறிது ஒரு பொருளைக் குறிப்பான் உணர்த்துவது அதன் இலக்கணமாகும். "ஆகுபெயர்" என்பது சொல்லின் முடியும் இலக்கணத்ததாய் நிற்றலின் அதன் பாகுபாடுகளை மட்டுமே ஈண்டுக் கூறுகின்றார்.

சூ. 114 : முதலிற் கூறும் சினையறி கிளவியும்
சினையிற் கூறும் முதலறி கிளவியும்
பிறந்த வழிக் கூறலும் பண்பு கொள் பெயரும்
இயன்றது மொழிதலும் இருபெயரொட்டும்
**வினைமுத லுரைக்கும் கிளவியொடு தொகை இ**
அனை மரபினவே ஆகுபெயர்க்கிளவி [31]

க-து : பெயர் என்னும் எழுவாய் வேற்றுமை மயக்கமாகிய ஆகுபெயர், ஆகி வரும் மரபு பற்றிய கூறுபாடுகள் இவை என்கின்றது.

உரை : 1) முதல் பொருளின் பெயரான் சினைப் பெயரை அறியக் கூறப்படும் சொற்களும் (2) சினைப் பொருளின் பெயரான் முதற் பொருளை அறியக்கூறப்படும் சொற்களும் (3) பொருள் தோன்றிய இடத்தாற் கூறப்படும் சொற்களும் (4) வண்ணம் வடிவு சுவை முதலாயபண்புப் பெயர்களாற் கூறப்படும் சொற்களும் (5) காரியமாகிய பொருள் அஃதியன்றதற்குரிய காரணத்தாற் கூறப்படும் சொற்களும் 6) ஒரு பொருளை விளக்க அடையாக வந்த சொல்லொடு ஒட்டுபபட்டு நிற்கும் இரு பெயரொட்டாகிய சொற்களும் (7) பொருளை இயற்றிய வினை முதலாற் கூறப்படும் சொற்களொடு கூடி அத்தகைய மரபினவாய் வருவனவே ஆகுபெயர்ச் சொற்களாகும்.

அனைமரபின என்றது அஃது ஆகிவரும் பொருட் கூறுபாடு கள் இவ்விலக்கணத்தன என்றவாறாம். ஒப்பின் முடித்தல் என்னும் உத்தியான் பிறந்தவழிக்கூறல் என்பதனொடு பிறந்தவழி நிகழ்வனவும் கொள்க. தன்னின முடித்தல் என்னும் உத்தியான் இயன்றதுமொழிதல் என்பதனொடு இயல்வது மொழிதலும் கொள்க. அஃதாவது காரணமாகிய பொருளை, அதனான் இயலும் காரியத்தாற் கூறுதலாம். அளவை ஆகுபெயர் பற்றிப் பின்னர் விதந்து கூறுதலான் பண்பென்பதற்கு அளவுப்பெயர் தவிர்த்த ஏனையவற்றை கொள்க.

எ-டு: 1) கடுத்தின்றான் - தெங்குதின்றான் என்பவை முதற்பொருள் தத்தம் சினைப் பொருளுணர்த்தி நின்றன.

2) இலை நட்டு வளர்த்தான் - பூ நட்டு வாழும் என்பவை சினைப் பொருள் தத்தம் முதற் பொருளாகிய கொடியை உணர்த்தின.

3) குழிப்பாடி உடுத்தினான் - உறையூர் அணிந்தான் என்பவை அவ்வவ் ஊரின்கண் நெய்து வந்த ஆடையை உணர்த்தின. இது பிறந்த வழிக்கூறல். ஆறுபெருகிற்று - குளம் நிறைந்தது என்பவை இடத்துநிகழ் பொருளாகிய நீரை உணர்த்தின.

4) காரறுத்தான்-நீலம் சூடினான் என்னும் பண்புப்பெயர் கார்முகில் பெய்யும் நீரால் விளைந்த நெல்லையும் நீலநிறத்தை யுடைய மலரையும் உணர்த்தின. கார் என்பதனைக் கால ஆகுபெயர் என்ப. கார் முகிலுக்காய்ப் பின்பு அது பெய்யும் காலத்திற்காய்ப் பின்னர் நெல்லுக்கு ஆயினமையின் இருமடி ஆகுபெயர் எனவும் கூறுவர். இனிப்பு உண்டான் துவர்ப் புண்டான் என்பவை அச்சுவையமைந்த பண்டங்களை உணர்த்தின. கூன் வந்தான் என்புழிக் கூன் என்னும் வடிவம் அவ்வடிவினானை உணர்த்திற்று. இது பண்புகொள் பெயர்.

5) பொன் அணிந்தான் மணியணிந்தான் என்பவை அவற்றாலாகிய அணிகலன்களை உணர்த்தின. இது இயன்றது மொழிதல். கீறல் ஆறியது - வெட்டு ஆறவில்லை, என்பவை அவற்றாலாகிய புண்களை உணர்த்தின. யாழ்கேட்டான் குழல் கேட்டான் என்பனவும்அது. யாழிடத்துப் பிறந்த ஓசையெனக் கொள்ளின் பிறந்த வழிக்கூறலாய் அடங்கும். நெல்லைப் பெற்ற வனைச் சோறு பெற்றான் என்பதும், கல்வியைப் பெற்றவனை வாழ்வு பெற்றான் என்பதும் இயல்வது மொழிதலாம். இயன்றது

மொழிதலைக் காரிய ஆகுபெயர் என்றும் இயல்வது கூறலைக் காரண ஆகுபெயர் என்றும் கூறுவர்.

6) பவளவாய், திரிதாடி, அறுகால் என்பவை, வாயினை உடையாளையும் தாடியை உடையானையும், கால்களையுடைய வண்டினையும் உணர்த்தின. பவளம், திரிபு, ஆறு என்பவை அவற்றிற்கு அடையாக வந்து அவற்றை விளக்கி நின்றன. இது இருபெயரொட்டு. இவற்றுள் பவளவாய், திரிதாடி என்பவை அன்மொழித்தொகையல்லவோ எனின் அல்ல. வாயும், தாடியும், இயைபுடையவாய்ச் சினையிற்கூறும் முதலறி கிளவிகளாய் நிற்றலின் அன்மொழியாகா என்க. பால்வளை - பால்போலும் வெள்ளிதாகிய வளையலை அணிந்தாள். பெய்வளை - பெய்த வளையலை அணிந்தாள் என்றாற் போல இயைபின்றிவரின் அவை அன்மொழித்தொகையாதற்கு ஏற்குமென்க. பிறவிளக்கங் களைத் தொகைமொழி இலக்கணங்கூறும் எச்சவியலுட்கண்டு கொள்க. வகரக்கிளவி, பெயர்ச் சொற்கிளவி என்பனவும் இரு பெயரொட்டாகுபெயராம். இவற்றை முன்மொழி (கிளவி) ஆகுபெயர் என்றும் கூறுவர்.

7) கம்பரைக்கற்றான், திருவள்ளுவரைப் பயின்றான் என்பவை அவராற் செய்யப்பெற்ற நூல்களை உணர்த்தின-இவை வினைமுதலுரைக்கும் கிளவியாம். தொல்காப்பியம், கபிலம் என்பவை ஈறுதிரிந்து செயற்பாடு உணர்த்தி நிற்றலின் ஆகுபெயராதற்கேலா என்க.

திருவாசகம் திருவாய் மொழி என்பவை பாக்களை உணர்த்தி நிற்பின் ஆகுபெயராம். இவற்றை அடையடுத்த ஆகுபெயர் என்ப. இவை பாக்களை உணர்த்தாமல் நூல்களை உணர்த்தி நிற்பின் அன்மொழித் தொகையாம் என்க.

சூ 115 : அவைதாம்
தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணலும்
ஒப்பில் வழியாற் பிறிதுபொருள் சுட்டலும்
அப்பண் பினவே நுவலுங் காலை. [32]

க-து : ஆகுபெயர்கள் அமைந்து நிற்கும் வகைமை கூறுகின்றது.

உரை : மேல் அனை மரபினவாய் வரும் எனக் கூறப்பெற்ற ஆகுபெயர்க் கிளவிகள் தாம் இவ்வியல்பின எனச் சொல்லுமிடத்து அவை தம் பொருளிடத்து இயைபுடைமையான் தம்மொடு பொருந்தி வருதலும் ஒத்துடைமையில்லாத பிற இயைபுகளான்

பிறிதாகிய பொருளைச் சுட்டி வருதலும் ஆகிய அவ் இரு தன்மையினவாகும். ஒப்பாவது, தற்கிழமைத் தொடர்பு அஃதில் வழி எனவே பிரிதின் கிழமையவாய் வரும் என்றவாறு.

**வரலாறு :** கடுத்தின்றான். தெங்குதின்றான், இலை நட்டான், பொன்னணிந்தான் என்றாற் போல்வன தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணிவந்தன. குழிப்பாடி உடுத்தான். வாள்வெட்டு, யாழ்கேட்டான், திருவள்ளுவரைப் பயின்றான் என்றாற்போல்வன. ஒப்பில் வழியாற் பிறிது பொருள் சுட்டி வந்தன. இவற்றை முறையே விடாத ஆகுபெயர் என்றும் - விட்ட ஆகுபெயரென்றும் கூறுப.

## சூ. 116 : வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்

**க.து :** ஆகுபெயர்க்கண் வேற்றுமைகளைப் போற்றி உணர்க என்கிறது.

**உரை :** மேற்கூறிய இருவகையானும் வரும் ஆகுபெயர்கள் செயப்படுபொருள் முதலாய வேற்றுமைகளின் தொடர்பினான் வருமாதலின் இவ்விவ் வேற்றுமைப் பொருளான் இப்பெயர் ஆகுபெயராயிற்று எனப் போற்றிக் கொள்க.

ஆகுபெயர்களின் வேற்றுமைத் தொடர்புகள் உணரப்பெறா விடின் அவை தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணி வந்தனவா, ஒப்பில் வழியாற் பிறிது பொருள் சுட்டி வந்தனவா என்பது புலப்படா, ஆகலின் 'போற்றல்' வேண்டும் என்றார்.

போற்றி உணருங்கால் இரண்டாம் வேற்றுமையும் ஆறாம் வேற்றுமையும் தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணிவரும். ஏழாம்வேற்றுமை ஒப்பில் வழியாற்பிறிது பொருள் சுட்டி வரும். மூன்றாம்வேற்றுமை இரு நிலைமைத் தாயும் வரும் என அறிக.

**வரலாறு :** மஞ்சள் உடுத்தாள் என்பது மஞ்சளைத் தோய்த்த ஆடையை உடுத்தாள் என இரண்டாம் வேற்றுமை பற்றி வந்த ஆகுபெயர். கடுத்தின்றான் என்பது கடுவினது காயைத் தின்றான் என ஆறாம்வேற்றுமை பற்றி வந்த ஆகுபெயர். இவை தம் பொருள்வயின் தம்மொடு சிவணி வந்தன. குழிப்பாடி உடுத்தான் என்பது, குழிப்பாடி என்னுமிடத்தில் நெய்துவந்த ஆடையை உணர்த்தலின் ஏழாம் வேற்றுமை பற்றி வந்த ஆகு பெயர். இஃது ஒப்பில்வழியாற் பிறிது பொருள் சுட்டி வந்தது. பொன் அணிந்தான். என்பது பொன்னாலாகிய அணிகலனை அணிந்தான் என மூன்றாம் வேற்றுமைபற்றித் தம்மொடு சிவணி வந்தஆகுபெயர். இஃதொருவாள்வெட்டு என்பது வாளான்

வெட்டப்பெற்ற புண் என ஒப்பில் வழியாற் பிறிது பொருள்சுட்டி வந்த ஆகுபெயர். நான்காம் வேற்றுமை பற்றியும் ஐந்தாம் வேற்றுமை பற்றியும் வேறுபாடுறுதல் அரிதாகும்.

தண்டுண் கிடந்தது என நாலாவதற்கு வலிந்து உரிமை செய்து காட்டுவார் நச்சினார்க்கினியர். அவர் ஐந்தாவதற்கெனக் காட்டும் பாவை வந்தாள் என்பது இரண்டாவதற்கேற்பதல்லது ஐந்தாவதாகாமை வேற்றுமையியலுட் கூறிய விளக்கத்தான் அறிக. (தண்டுண் — வாழைத்தண்டாகிய உணவு)

**சூ. 117 :** அளவும் நிறையும் அவற்றொடு கொள்வழி
உளவென மொழிப உணர்ந்திசி னோரே

**க-து :** அளவுப் பெயரும் நிறைப் பெயரும் ஆகுபெயராய் வருமென்கின்றது.

**உரை :** அளவுப்பெயரும் நிறைப்பெயரும் அனைமரபினவாய இலக்கணத்தொடு பொருந்தக் கொள்ளுமிடத்து அவை மேற் கூறிய ஆகுபெயராதற்கு உள என்று கூறுவர் இலக்கண மரபுணர்ந்தோர். நீட்டலளவையும்எண்ணலளவையும் அளவை என்பதனுள் அடங்கும்.

அளவைப் பெயர்கள் காட்சிப்பொருளொடு படுத்துணரப்படும் கருத்துப் பொருளாகலின் நாழி - உழக்கு, கழஞ்சு, தொடி, தடி, மா, ஒன்று, இரண்டு என்னும் பெயர்கள் அவ்அளவைகளைத் தரும் மரக்கால், நிறைகல், அளவுகோல், பொருள் முதலிய கருவிகளையும், அக்கருவிகளான் அளக்கப்பெற்ற பொருள் களையும் ஆகுபெயரான் உணர்த்தலின் மேலனவற்றொடு ஒருங்கு கூறாமல் பிரித்துக் கூறினார்.

**வரலாறு :** இஃதொரு நாழி என்பது அளவு கருவியையும் அளக்கப் பெற்ற பொருளையும் இடம் நோக்கி உணர்த்தும். இவ்வாறே நிறைப் பெயரும்-நீட்டலளவைப் பெயரும் உணர்த்தும் எண்ணலளவை, பொருள் பற்றியே உணர்த்தும் அது கருவியன்மையன். இஃதொரு கழஞ்சு — கருவி — பொருள். இஃதொரு மா — நிலம். இஃதொரு கோல் — கருவி — பொருள். இஃது ஒருநாழி — கருவி—பொருள். இஃது ஒன்று, இது பத்து — பொருள். எனவரும்.

அளவுப்பெயர்கள் கருவியையும் உடைமைகளையும், இடத்தையும் பற்றிப் பொருள் கோடற்கியை வருதலின்—அளவு கருவிகளை உணர்த்தும்வழித் தத்தம் பொருள்வயின் தம்மொடு

சிவணலாயும், அளக்கப் பெற்ற பொருள்களை உணர்த்தும் வழி ஒப்பில் வழியாற் பிறிதுபொருள் சுட்டலாயும் கருதிக் கோடலின் பொதுப்பட "அவற்றொடு கொள்வழி" என்றும், இவை திரிபின்றி ஆகுபெயராயே கொள்ளினும் ஆம் என்பார் "உள" என்றும் கூறினார்.

நூ. 118 : கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே

க-து : ஆகுபெயர்பற்றிப் புறனடை கூறுகின்றது.

உரை : மேற்கிளந்து கூறப்பெற்ற மரபினவாய் வரும் ஆகுபெயர்களேயன்றி வேறுபிறவற்றுள் தோன்றிவரினும் மேற்கூறப்பெற்ற இலக்கணத்தான் உணர்ந்துகொள்க.

வரலாறு : பாவைபோல் வாளைப் பாவை என்றும், நரியின் பண்புடையானை நரி என்றும் எழுத்தாலாகிய நூலை அறிவித்தவனை எழுத்தறிவித்தவன், என்றும் சொல்லிலக்கணம் உணர்ந்தானைச் சொல்லுணர்ந்தான் என்றும் வருவன கொள்க. இனி, பேச்சு வழக்கின்கண் சிறப்பாகப்பயின்றறிந்தமை நோக்கிச் 'சிலம்பு' வந்தான் என்றும், 'சிந்தாமணி' வந்தான் என்றும், இடையறாது கொண்டியல்வதுபற்றிப் பட்டுருமாலை வந்தான், குடை வந்தான் என்றும் வருவனவும் வழக்கு நோக்கிக் கொள்க. வரிவடிவங்களையும் அடையாளங்களையும் அவ்வப் பொருளாகக் கூறுங்கால் அவை ஆகுபெயராதலையும் ஓர்ந்துணர்ந்து கொள்க.

வேற்றுமை மயங்கியல் முற்றியது.

## 4. விளி மரபு

எட்டாவதாக நிறுத்தப்பெற்ற விளிவேற்றுமையது மரபுகளை உணர்த்தலின் இவ்வியல் விளிமரபென்னும் பெயர்த்தாயிற்று. ஏனைய வேற்றுமைகளைப் போலத் தனியே உருபு என்ப தொன்றின்றிப் பெயரகத்து ஈறாகி வருதலானும், அங்ஙனம் வருங்கால் ஒன்றே திரிபாயும் இயல்பாயும் நிற்றலானும் "இயல்" என்னாது மரபு எனறார்.

விளித்தலாவது அழைத்தல். அஃதாவது படர்க்கைப் பொருளை எதிர்முகப் படுத்து முன்னிலைப் பொருளாக வேறு

படுத்தல். எனவே இதன் வேற்றுமைத்தன்மை படர்க்கையை முன்னிலையாக்குதல் என்பது அச்சொல்லானே அதன் இலக்கணம் பெறப்படுதலின் அதன் மரபுகளையே இவ்வியலுள் விரித்தோதுகின்றார்.

சூ. 119: விளி எனப்படுவ கொள்ளும் பெயரொடு
தெளியத் தோன்றும் இயற்கைய என்ப [1]

கருத்து: சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல் என்னும் உத்தியான் விளி வேற்றுமையின் இலக்கணம் எதிர்முகமாக்குதல் என்பது பெறப்பட்டமையின், இச்சூத்திரம் அஃது ஏனைய வேற்றுமைகளைப் போல எல்லாப் பெயர்களொடும் வாராது ஒருசார் பெயர்களொடு மட்டுமே வருமென அதனது சிறப்பியல்பு கூறுகின்றது.

உரை: விளி எனச் சிறப்பித்துக் கூறப்பெறுபவைதாம் தம்மை ஏற்கும் பெயரொடு விளங்கத்தோன்றும் இயல்பின, என்று கூறுவர் நூலோர்.

விளியேற்ற பெயர் இயல்பாதலும், ஈறுதிரிதலும் குன்றலும், பிறிது ஏற்றலுமாக அமைந்து வேற்றுமை செய்தலின் அத்திரிபுகளே உருபின் பயத்தவாம் என்பதறிவித்தற்கு 'விளி எனப்படுவ' எனப்பன்மையாற் கூறினார். "கொள்ளும் பெயரொடு" என்றதனாற் கொள்ளாப் பெயரும் உளவென்பது பொருட்பேற்றாற் கொள்ளப்படும். அண்மை விளிக்கண் விளியேற்ற பெயர் திரிபின்றி நிற்குமாயினும் ஆண்டு அஃது வேற்றுமையுற்றமையை முடிக்குஞ் சொல் புலப்படுத்தி விடுமாகலின் 'தெளியத்தோன்றும்' என்றார்.

எ-டு: அன்பன் வருக! அன்ப வருக! அன்பா வருக! அன்பனே வருக! அன்பினாய் வருக! அன்பினோய் வருக! அன்பாவோ வருக! என இயல்பாயும் திரிந்தும் வந்தவாறு கண்டு கொள்க.

சூ. 120: அவ்வே
இவ்வென அறிதற்கு மெய்பெறக் கிளப்ப [2]

கருத்து: இனி விதிக்கப் பெறும்இலக்கணங்கட்குத் தோற்றுவாய் கூறுகின்றது.

உரை: மேற்கூறிய விளியும், அவற்றைக் கொள்ளும் பெயரும் கொள்ளாப் பெயரும் இவை எனத் தெற்றென அறிந்து கோடற்குப் பொருள் தோன்ற இனிக் கிளந்து கூறப்படும்.

மேற்கூறிய விளி என்றது, இயல்பாயும் திரிந்தும் நிற்கும் விளிமரபினை. 'கிளக்கப்படும்' என்பது கிளப்ப எனக்குறைந்து நின்றது. அன்றி இலக்கண நூலோர் கிளந்தே கூறுபவாதலின் யானும் அவ்வாறே கூறுவென் எனக் கருத்துக் கூறலுமாம்,

விளியேற்ற பெயர்களே விளிவேற்றுமையாகி நிற்கும் ஒற்றுமை நயங்கருதி "அவ்வே" என்றார். அதனான் அவ்வே என்னும் சுட்டு, விளிவேற்றுமையது திரிபுகள், கொள்ளும் பெயர் கொள்ளாப்பெயர் ஆகிய மூன்றையும் சுட்டிநிற்றல் புலனாகும். அன்றி 'அவ்வே' என்பது கொள்ளும் பெயர் கொள்ளாப் பெயர் களை மட்டும் சுட்டி நின்றது எனின், மேலைச் சூத்திரத்து "விளி எனப்படுவ" என்றது நின்றுவற்றும். மற்றும், இ ஈ யாகும் ஐ ஆய் ஆகும் (விளி-4.) ஓவும் உவ்வும் ஏயொடு சிவணும் (விளி-5) அன் என் இறுதி இயற்கையாகும் (விளி-13.) என்றாற் போல வருவனவெல்லாம் விதிபெற்று அடங்காவாய்க் குன்றக் கூறலாய் முடியும் என்க.

சூ. 121 : அவைதாம்
இ உ ஐ ஓ என்னும் இறுதி
அப்பால் நான்கே உயர்திணை மருங்கின்
மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயரே

க-து : உயர்திணையுள் விளிகொள்ளும் உயிரீற்றுப்பெயர்கள் இவைஎன்கின்றது.

விளிக்கப்படுதலை உணர்ந்து, விளிப்போர் விதிக்கும் ஏவலை யும் வியங்கோளையும் ஏற்றுச் செயல்படுந்திறன் உடையவை ஆறறிவுடைய உயர்திணைப் பொருளும், அக்கிளைப்பிறப்பின வாகிய பொருளுமே எனினும் "உறுப்புடையது போல் உணர் வுடையது போல் மறுத்துரைப்பது போல் நெஞ்சொடு புணர்த்துக்" கூறுதலும் (பொரு-2.) "ஞாயிறு திங்கள் அறிவே நாணே...... சொல்லுநபோலவும் கேட்குநபோலவும் சொல்லியாங் கமையும் என்மனார் புலவர்" (செய்யுள் - 192) என்பவற்றான் அஃறிணைப் பொருள் மாட்டுச் சொல் நிகழ்த்தலும் செய்யுள் மரபாகலின் ஆசிரியர்-உயர்திணைப்பெயர் அஃறிணைப் பெயர் விரவுப்பெயர் ஆகிய மூவகைப் பெயர்களும் விளிகொள்ளும் மரபினை ஓர்ந்து விதி கூறத்தொடங்குகின்றார்.

அங்ஙனங்கூறுங்கால், எல்லாப் பெயர்களும் பொருட் பகுதியான் இருகூறாய் அடங்குதலின் பெயரியலுள்விதந்தோதப் பெறும் உயர்திணைப் பெயர்களையும், உயர்திணைப் பொருளுணர்த்தி வரும் விரவுப் பெயர்களையும், ஆகுபெயராயும் அன்மொழித் தொகையாயும் உயர்திணை உணர்த்தி வரும் பெயர்களையும் உயர்த்திணைப்பெயர் என ஒன்றாக அடக்கியும், அஃறிணைப் பொருளுணர்த்தி வரும் விரவுப் பெயர்களைத் தனி யாகவும், அஃறிணைப் பெயர்களையும் அஃறிணைப் பொரு

ஞுணர்த்தி வரும். ஆகுபெயர் அன்மொழித் தொகைப் பெயர்களையும் அஃறிணைப் பெயர் என ஒன்றரிகவும் அடக்கி ஓதுகின்றார். இதனை உயர்திணை மருங்கின் மெய்ப் பொருள் சுட்டிய விளிகொள் பெயரே (விளி-3) என்றும், கிளந்த இறுதி அஃறிணை விரவுப்பெயர் (விளி-33) என்றும், புள்ளியும் உயிரும் இறுதியாகிய அஃறிணை மருங்கின் எல்லாப் பெயரும் (விளி-34) என்றும் கூறுவதனான் அறியலாம்.

**உரை :** கிளக்கப்படுபவைதாம், உயர்திணைப் பாலவாய் உயர்திணைப் பொருளைக் கருதிய உயிரீற்று விளிகொள் பெயர் இ உ ஐ ஓ என்னும் இறுதியை உடைய அக்கூற்று நான்குமே யாம்.

'அவைதாம்' என்பது அதிகாரச் சூத்திரமாய் இனி வருகின்றவற்றெடெல்லாம் இயையும், ஏகாரம் பிரி நிலை. உயிரீறும் உயிர்மெய்யீறும் அடங்க "அப்பால்நான்கே என்றார். விளிகொள் பெபராகிய அவைதாம் நான்கு எனக் கூட்டிப் பொருள் கொள்க. எடுத்துக் காட்டுக்கள் சிறப்புச் சூத்திரத்துள் காட்டப் பெறும், நச்சினார்க்கினியர் ஈண்டு அஃறிணைப் பெயர்களை எடுத்துக் காட்டுதல் முரண்படக் கூறலாகும்.

**சூ. 122 :** அவற்றுள்
இ ஈ யாகும் ஐ ஆய் ஆகும் [4]

**க-து :** இகர ஐகார ஈறுகள் விளி கொள்ளுமாறு கூறுகின்றது.

**உரை :** மேற்கூறியவற்றுள் இகர ஈறு ஈஎனத் திரியும், ஐகார ஈறு ஆய் எனத்திரியும். 'ஆகும்' என்றது திரிந்து விளிவேற்றுமை யாகும் என்றவாறு.

**எ.டு :** நம்பீ வருக! நங்காய் செல்க! எனவும், சாத்தீ வருக! எனவும் வரும். சுடர்த்தொடீ கேளாய்! எனவும் வரும் அன்னை-அன்னாய் எனவும் எந்தை எந்தாய் எனவும் வரும். முறைப் பெயர்க்குச் சிறப்பு விதி மேற்கூறுப.

**சூ. 123 :** ஓவும் உவ்வும் ஏயொடு சிவணும் [5]

**க-து:** உகர ஈறும் ஓகார ஈறும் விளி கொள்ளுமாறு கூறுகின்றது.

**பொருள் :** எஞ்சி நின்ற ஓகாரமும் உகரமும் ஏகாரத்தொடு பொருந்தி விளிவேற்றுமையாகும்.

எ-டு : கோவே வருக! வேந்தே வருக! எனவரும். இவ் உகரம் சார்பெழுத்து என்பது உணர அதனைப்பிற் கூறினார்.

சூ. 124 : உகரந் தானே குற்றிய லுகரம் [6]

க-து : இஃது ஐயமகற்றுகின்றது.

பொருள் : மேல் வாளா கூறிய உகரம் சார்பெழுத்துக்களுள் ஒன்றாகிய குற்றியலுகரமாகும். முற்றியலுகரமாயின் உடம்படுமெய் பெற்றுப் புணர்தலல்லது உயிரேற இடந்தாராதாகலின் உகரந் தானே குற்றியலுகரம் என விளக்கினார் என்க.

சூ. 125 : ஏனை உயிரே உயர்திணை மருங்கின்
தாம்விளி கொள்ளா என்மனார் புலவர் (7)

க-து : உயர்திணையிடத்து விளியேலா உயிரீறுகள் இவை என்கின்றது.

பொருள் : மேற்கூறிய நான்குமல்லாத ஏனைய எட்டு உயிரீற்று உயர்திணைப் பெயர்கள் விளி கொள்ளா எனக் கூறுவர் புலவர். ஏ-தாம் என்பவை இசைநிறை.

கொள்பவை இவை எனவே கொள்ளாதவை தாமே பெறப்படுமாயினும் இங்ஙனம் எடுத்துக் கூறுதல் பிறிதொரு பயன் நோக்கியதாகும். இதன் பயனாவது : எடுத்தோதாத அகர ஈறும், ஆகார ஈறும், முற்றுகரஈறும் ஊகார ஈறும் முறையே (மக) மகவே! (எல்லா) எல்லா! (திரு) திருவே! (ஆடூ) ஆடூவே என ஏகாரம் பெற்றும் இயல்பாயும் விளி ஏற்றலும், திரியும் எனப்பெற்ற இகர ஐகாரங்கள் (கணி) கணியே! (இறை) இறையே! என ஏகாரம் பெறுதலும். மலர்விழி-பணிமொழி என்றாற்போல வரும் இருபெயராட்டு ஆகுபெயர்களின் இகர ஈறு ஈயாகத்திரியாமல் ஏகாரம் பெறுதலும் பிறவும் சான்றோர் வழக்குநோக்கிக் கொள்ள வைத்தலாம் என்க.

சூ. 126 : அளபெடை மிகூஉம் இகர இறுபெயர்
இயற்கைய வாகும் செயற்கைய என்ப (8)

க-து : விகாரவகையான் வரும் இகரஈற்றுப் பெயர்கட்கு எய்தியது விலக்குகின்றது.

உரை : இயல்பாகவன்றி அளபெடுத்தலான் விகாரப்பட்டு மிக்குநிற்கும் இகர ஈற்றுப் பெயர்கள் திரியாமல் இயற்கையவாய் வரும்இலக்கணத்தனவாகும்.

எ-டு : தொழீஇ ! செல்க எனவரும். தொழீஇ என்பது தொழுவன் என்பதன் பெண்பாற் சொல். அது குருவி குரீஇ என வருதல் போன்றஇயற்கை அளபெடையாம்.

குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும் நெட்டெழுத்திம்பர் ஒத்த குற்று எழுத்தே (மொழி — 8). என்பதனான் அளபெடைக்கண் நிற்கும் குற்றுயிரைக் குற்றெழுத்தீறாகவே கொள்ளல் வேண்டும் என்பது விதியாக லின் இங்ஙனம் அளபெடைக்கண் மிக்கு நிற்பவை நெடிலீறோ குறிலீறோ என்னும் ஐயத்தை நீக்கிக் குறிலீறே என்பது அறிவித்ததற்கு "அளபெடை மிகஉம் இகர இறுபெயர்" என்றார். இவ்வாறு வருவன விகாரப் பெயர்களாம் என்பதனை உணர்த்த "செயற்கைய" என்றும் கூறினார். இச்சூத்திரத்திற்குத் தமிழ் மொழியமைப்பையும் ஆசிரியர்கருத்தையும் ஓராமல் உரையாசிரியன்மார் ஒவ்வா விளக்கம் கூறிச் சென்றனர்.

சூ. 127 : முறைப்பெயர் மருங்கின் ஐயென் இறுதி
ஆவொடு வருதற்கு உரிமையும் உளவே [9]

க-து : ஐகாரஈற்று முறைப்பெயர்கட்கு எய்தியதன்மேற் சிறப்பு விதி கூறுகின்றது.

உரை : முறைப் பெயர்களிடத்து ஈறாக வரும் ஐகார இறுதிச் சொற்கள் ஆகாரமாக வருதற்கு உரிமை உடையனவும் உளவாம். ஆவாகத்திரிதலை ஆவொடுவருதல் என்றார்—உம்மை எதிர்மறை.

எ—டு : அன்னை - அன்னா எனவும் தாதை - தாதா (தாத்தா) எனவும் வரும். எதிர்மறை உம்மையான் தந்தை, தங்கை, தவ்வை முதலியவை ஆவாகத்திரியாமற் பொது விதியே பெறுமெனக் கொள்க. உரையாசிரியன்மார் காட்டும் 'அத்தை' என்பது எம்முறைப் பெயர் என்பது புலனாகவில்லை. அத்தா என்பது அத்தன் என்னும் முறைப் பெயர் ஈறு கெட்டு அயல் நீண்டதாகும். ("அஞ்சியத்தை மகள் ஆந்தையார்" எனவரும் புலவர் பெயர் ஆய்வுக்குரியதாகும்).

சூ. 128 : அண்மைச் சொல்லே இயற்கையாகும் (10)

க-து : அண்மை விளிக்கண் மேல் எய்திய விதிகளை விலக்குகின்றது.

உரை : மேற்கூறிய நான்கு ஈறுகளும் அண்மை விளிக்கண் இயல்பாக வரும். -சொல் என்றது விளியை.

எ. டு : நம்பிவாழி ! நங்கை வாழி ! வேந்து வருக ! கோகானாய் ! எனவும், மகவாராய்! எல்லா வருக ! ஆடு செல்க ! எனவும்வரும்.

இச்சூத்திரத்தை உயிரிறுகளின் பின்னரும் புள்ளியீறுகளின் முன்னரும் அரிமா நோக்காக வைத்தார், புள்ளியீற்று அண்மை விளிக்கும் இதுவே விதியாகலின் என்க.

சூ. 129 : னரலள என்னும் அந்நான் கென்ப
புள்ளி யிறுதி விளிகொள் பெயரே [11]

க-து : விளியேற்கும் புள்ளியீற்றுப் பெயர்களாமாறு கூறுகின்றது.

உரை : பதினொரு புள்ளி ஈறுகளுள் னரலள என்னும் அந்நான்கு புள்ளியை இறுதியாக உடைய பெயர்கள் உயர்திணைக்கண் விளிகொள்வன எனக் கூறுவர் புலவர்.

முறையிற் கூறாது னகரம் முன் வைத்தார் னகரமும் ரகரமும் அன் ஆன் அர் ஆர் இர் என நின்று அவ்வவற்றிற்கேற்ற விதி பெற்று வருமென் பதறிவித்ததற்கு என்க.

சூ. 130 : ஏனைப் புள்ளி யீறுவிளி கொள்ளா [12]

க-து : உயர்திணை மருங்கின் விளியேலாத புள்ளியீற்றுப் பெயர்கள் இவை என்கின்றது.

உரை : மேற்கூறிய நான்குமல்லாத ஞணநம யவழ என்னும் ஏழுபுள்ளியீற்றுப் பெயர்கள் உயர்திணைக்கண் விளி கொள்ளாவாம்.

இங்ஙனம் வாராதனவற்றைக் கூறியதன் பயனாவது : னரலள என்பவற்றிற்கு இனி ஓதும் விதிகளேயன்றிச் சிறிது வேறுபட்ட விதிகளையும் அவை எய்தும் என்பதும், கொள்ளா என்றவற்றுள் ணகரமும் யகரமும் ழகரமும் சிறுபான்மை விளியேற்று வருமென்பதும் பெறுதலாம். அவற்றை அவ்வவ் ஈறுபற்றி ஓதும் சூத்திர உரையுள் கண்டு கொள்க.

கொள்ளா என்றவற்றுள் ணகர ஈறு ஆண்வருக ! ஆணேவருக ! என்றும் யகர ஈறு 'விளங்கு மணிக்கொடும் பூண் ஆய் !' (புறம் -130) எனவும், விறற் சேய் வருக! எனவும், அருந்திறல், பெருந்திறல் என்றாற்போல மகர ஈறு அரும்புகழ் வருக ! பெரும் புகழ் வருக ! என ஆகுபெயராயும்வரும்.

ஞ ந ம என்பவை உயர்திணை மருங்கிற் பெயராய் வாராமை யானும் வகரம் சுட்டுப்பெயராயும் உரிச்சொல்லாயுமன்றி இயற் பெயராய் வாராமையானும் விலக்குண்டன. இச்சூத்திரத்தை வினையினும் பண்பினும் என்னும் சூத்திரத்தின் பின்வையாது ஈண்டு வைத்தார், கூறப்பெற்ற புள்ளியீறுகள் பிறவாறும்விளி கொள்ளும் என்னும் இலக்கணம் அதிகரித்தற் பொருட்டென்க.

சூ. 131 : அவற்றுள்
அன் என் இறுதி ஆவா கும்மே [13]

க-து : னகர ஈற்று உயர்திணைப்பெயர் விளியேற்குமாறு கூறுகின்றது.

உரை : விளிகொள்ளும் புள்ளியீறுகளுள் அன் என்னும் இடைச்சொல்பற்றி நிற்கும் பெயரினது ஈறு ஆவாகத் திரிந்து வரும்.

எ-டு : (தோழன்) தோழா வருக! (சேர்ப்பன்) சேர்ப்பா வருக! எனவரும்.

"ஏனைப்புள்ளியீறு" என்றதனான். முறைமை சுட்டா மகன் என் கிளவி, படிவ உண்டிப் பார்ப்பன மகனே! எனவும், மன்னன் என்பது மன்னனே! மன்னவனே! என்றும் கிழவன் என்பது கிழவோய்! கிழவோயே! எனவும் வருதலையும், ஒன்றென முடித்தல் என்னும் உத்தியான், தம்முன் எம்முன் என்னும் முறைப் பெயர் தம்முனா! எம்முனா! என வருதலையும் கொள்க.

சூ. 132 : அண்மைச் சொல்லிற்கு அகரமுமாகும் [14]

க-து : இதுவுமது.

உரை : அன்னீற்றுப் பெயரீறு அண்மை விளிக்கண் அகரமாகத் திரிதலும் ஆகும். திரிதலாவது குன்றலாம். உம்மையாற்றிரியாது நிற்றலே பெரும்பான்மை எனக் கொள்க.

எ-டு : (துறைவன்) துறைவ கேள்! எனவும் துறைவன் வருக! எனவும் வரும். "ஏனைப்புள்ளியீறு" என்றதனான் நம்பன் என்பது நம்பான் என ஈற்றயல் நீண்டு வருதலும் கொள்க.

சூ. 133 : ஆன் என் இறுதி இயற்கை யாகும் (15)

க-து : இதுவுமது.

உரை : ஆன் என்னும் இறுதிஇடைச்சொல் பற்றி வரும் பெயரினது ஈறு திரியாது இயல்பாகவரும்.

எ. டு : சேரமான் வருக! மலையமான் வருக! எனவரும். ''ஏனைப்புள்ளியீறு'' என்றதனான் அம்மான் என்பது அம்மானே எனவும் கன்னான் என்பது கன்னா எனவும் வாயிலான் என்பது வாயிலோய்! எனவும் வாயிலோயே! எனவும் வருதல் கொள்க.

சூ. 134 : தொழிலிற் கூறும் ஆன்என் இறுதி
ஆய் ஆ கும்மே விளிவயி னான [16]

க-து : இதுவுமது.

உரை : விளிவேற்றுமைக்கண் ஆயினவாய்த் தொழிற் சொல்லாற் கூறப்பெறும் பெயரிறுதி ஆன் என்னும் ஈறு ஆய் எனத் திரிந்து வரும்.

எ. டு. : உண்டான், தின்றான், என்னும் வினையாலணையும் பெயர்கள் உண்டாய் வருக! சென்றாய் வருக! எனவரும். உடையான், குழையான் என்னும் குறிப்பு வினைப் பெயரும் உடையாய்! குழையாய்! என வரும். ''ஏனைப்புள்ளியீறு'' என்றதனான், உண்டான் வருக என இயல்பாயும் உண்டோய், தின்றோய் என ஆய் 'ஓய்' எனத் திரிந்தும் வரும்.

சூ. 135 : பண்பு கொள் பெயரும் அதனோ ரற்றே (17)

க-து : இதுவுமது.

உரை : பண்படியாகத் தோன்றி வரும் ஆனீற்றுப் பெயரும் தொழிலிற் கூறும் பெயரிலக்கணத்தொடு ஒரு தன்மைத்தாம். என்றது ; ஆன் ஆயாகத் திரிந்துவரும் என்றவாறு.

எ-டு : கரியான் என்பது கரியாய் வருக! எனவும் (நெடியன்) நெடியாய்! எனவும் வரும். கரியான் வருக! என இயல்பாயும் கரியோய்! எனத் திரிந்தும் வரும் எனக் கொள்க.

சூ. 136 : அளபெடைப் பெயரே அளபெடை இயல

க-து : இதுவுமது.

உரை : னகர ஈற்று அளபெடைப் பெயர்கள் இகர ஈற்று அளபெடைப் பெயரியல்பினவாம்.

இகர ஈறு நீண்டு அளபெடுத்தவழி ஈகாரஈறாகாமல் இகர ஈறாக நின்று திரிபின்றி விளிவேற்றுமையாகும் என்பதனொடு மாட்டெறிந்து கூறினமையான் அழாஅன், புழாஅன், என்னும் இயற்கை அளபெடைச் சொற்களாயினும், மலையமாஅன், சேரமாஅன் என்னும் இசைநிறை அளபெடைச் சொற்களாயினும் அவை அன்னீறாகவே கொள்ளப்படும் என்பது பெறப்பட்டது. அவ்வழி அன்னீற்றிற்கு ஓதிய ஆஅவாகத் திரியும் விதியைப் பெறாமல் இயல்பாக நின்று விளியேற்கும் என்றவாறாம்.

எ-டு: அழாஅன் வருக! மலையமாஅன் வருக! என வரும். ஒப்பின் முடித்தல் என்னும் உத்தியான், ஓன் சாரியை பெற்றுக் கோஒன் எனவரும் பெயரும் 'பேஎன்' என உயர்திணை மருங்கின் அளபெடுத்துவரும் பெயரும் இயல்பாக விளியேற்கும் எனக் கொள்க. அளபெடையை ஆனீறாகக் கருதி உரையாசிரியன்மார் கூறும் விளக்கங்கள் இந்நூல் நெறிக்கு ஒவ்வாமையறிக.

சூ 137 : முறைப்பெயர்க் கிளவி ஏயொடு வருமே (19)

க-து : இதுவுமது.

உரை : னகர ஈற்று முறைப் பெயராக வரும் சொல்விறுதி ஏகாரத்தொடு பொருந்தி வரும்.

எ-டு : மகன் என்பது மகனே வருக! எனவரும். பெரு மகனே, மருமகனே தலைமகனே என அடையடுத்துவரினும் ஒக்கும்.

சூ. 138 : தான் என் பெயரும் சுட்டுமுதற் பெயரும்
யானென் பெயரும் வினாவின் பெயரும்
அன்றி யனைத்தும் விளிகோ ளிலவே (20)

க-து : னகர ஈற்றுள் விளியேலாப் பெயர்கள் ஆமாறு கூறுகின்றது.

உரை : தான் என்னும் படர்க்கைப் பெயரும் சுட்டினை முதலாகக் கொண்ட அவன் இவன் உவன் என்னும் பெயர்களும், யான் என்னும் தன்மைப் பெயரும், யாவன் என்னும் வினாப் பெயரும் ஆகிய அவ் அனைத்துப் பெயர்களும் விளிகொள்ளுதல் இலவாம்.

சூ. 139 : ஆரும் அருவும் ஈரொடு சிவணும் (21)

க-து : ரகர ஈற்று உயர்திணைப் பெயர்கள் விளி ஏற்குமாறு கூறுகின்றது.

**உரை :** ஆர், அர் என்னும் இடைச் சொற்களை இறுதியாக உடைய ரகர ஈற்றுயர்திணைப் பெயர்கள் ஈர் என்பதனொடு பொருந்தி விளியேற்கும். அர் ஆர் என்பவை ஈர் எனத் திரிந்து நிற்கும் என்றவாறு.

**எ-டு :** சான்றார் என்பது சான்றீர் வருக! எனவும், மாந்தர் என்பது மாந்தீர் வருக! எனவும் கூத்தர்-கூத்தீர்-எனவும் வரும். 'ஏனைப்புள்ளியீறு' என்றதனான் மாந்தர் வம்மின் கூத்தர் வம்மின் என இயல்பாக வருதலும்கொள்க.

**சூ. 140 :** தொழிற்பெய ராயின் ஏகாரம் வருதலும்
வழுக்கின் றென்மனார் வயங்கி யோரே (22)

**க-து :** இதுவுமது.

**உரை :** மேற்கூறிய ரகர ஈற்றுச் சொற்கள் தொழிலிற் கூறும் பெயர்களாயின் அவற்றொடு ஏகாரம் வருதலும் குற்றமின்று எனக்கூறுவர் வயங்கியோர்.

**எ-டு :** கற்றார் என்பது கற்றீரே வருக! எனவும், உண்பார் என்பது உண்பீரே வருக! எனவும் வரும். ஒருசார் பெயர்கள் (வந்தவர்) வந்தவரே (சென்றவர்) சென்றவரே எனவருதலும் கொண்டோரே! உண்டோரே! என ஆகாரம் ஓகாரமாகத் திரிந்து வருதலும் கொள்க.

"ஏனைப் புள்ளியீறு" என்றதனான் :- நம்பியர் - நம்பியீரே நங்கையர் - நங்கையீரே எனத் தொழிற் பெயரல்லாதன ஏகாரம் பெற்று வருதலும் பெண்டிர் - கேளிர் என்னும் இயல்பீற்றுப் பெயர்கள் பெண்டிரே - கேளிரே என ஏகாரம் பெற்று வருதலும் பெண்டிர் வருக! என இயல்பாக வருதலும்கொள்க.

**சூ. 141 :** பண்புகொள் பெயரும் அதனோ ரற்றே (23)

**க-து :** இதுவுமது.

**உரை :** பண்படியாகப் பிறந்த ரகார ஈற்றுப் பெயரும் அதனொடு ஒருதன்மைத்தாம். என்றது, ஈறு திரிந்து ஏகாரம் பெறுதலும் திரியாது ஏகாரம் பெறுதலும் இயல்பாதலும் ஆகு மென்றவாறு.

**எ-டு :** கரியார் - கரியீரே வருக! எனவும் வெளியர் - வெளியரே! எனவும் கரியார் வருக! எனவும் வரும்,

சூ. 142 : அளபெடைப் பெயரே அளபெடை இயல

க-து : இதுவுமது.

உரை : ரகார ஈற்று அளபெடைப் பெயர்கள் னகார ஈற்று அளபெடைப் பெயர்களின் இயல்பினவாம். அஃதாவது திரிபின்றி இயற்கையாகவே விளியேற்றுவரும் என்றவாறு.

எ-டு : மகாஅர் வருக ! சிறாஅர் வருக ! எனவரும்.

சூ. 143 : சுட்டுமுதற் பெயரே முற்கிளந் தன்ன (25)

க-து : இதுவுமது.

உரை : அவர், இவர், உவர், என்னும் ரகார ஈற்றுச் சுட்டுப் பெயர்கள் னகார ஈற்றுச் சுட்டுப்பெயர்க்கோதியாங்கு விளியேலா என்றவாறு.

சூ. 144 : நும்மின் திரிபெயர் வினாவின் பெயரென்று
அம்முறை இரண்டும் அவற்றியல்பியலும் (26)

க-து இதுவுமது.

உரை : வேற்றுமை ஏற்றற்குரியதாகிய நும் என்னும் பெயரினின்று திரிந்த எழுவாய்ப் பெயராகிய நீயிர் என்பதும், ரகார ஈற்று வினாப்பெயராகிய யாவர் என்பதும் மேற்கூறிய சுட்டுப் பெயரியல்பாக நிகழும். என்றது ;. இவையும் விளியேலா என்றவாறு.

சூ. 145 எஞ்சிய இரண்டின் இறுதிப் பெயரே
நின்ற ஈற்றயல் நீட்டம் வேண்டும் (27)

க-து : லகார ளகார ஈற்றுப் பெயர்கள் விளி ஏற்குமாறு கூறுகின்றது.

உரை : புள்ளியீறுநான்கனுள் எஞ்சிநின்ற லகார ளகார ஈற்று உயர்திணைப் பெயர்கள் விளியேற்குமிடத்து ஈற்றயல் நின்ற குற்றெழுத்துக்கள் நீளுதல் வேண்டும். அங்ஙனம் நீளுதலே விளிவேற்றுமையாம் என்றவாறு.

எ-டு : (குரிசில்) குரிசீல் வருக ! (தோன்றல்) தோன்றால் வாழ்க! எனவும் (மக்கள்) மக்காள்காண்மின்! (அடிகள்) அடிகாள் கேண்மின் ! எனவும் வரும். "ஏனைப்புள்ளியீறு" என்றதனான் குரிசில் வருக-அடிகள் வருக! என இயல்பாயும், தாழ்

குழலே ! அடிகளே ! என ஏகாரம் பெற்றும் "நீட்டம் வேண்டும்" எனப் பொதுப்படக் கூறியதனான் அடிகள் என்பது அடிகேள் ! எனத்திரிபாக நீண்டும் வருதல் கொள்க.

**சூ. 146 :** அயல் நெடிதாயின் இயற்கை யாகும் (28)

**க-து :** மேலதற்கு ஒருபுறனடை கூறுகின்றது.

**உரை :** மேற்கூறிய லகார ளகார ஈற்றுப் பெயர்களின் ஈற்றயல் நெடிலாயே இருப்பின் அவை இயல்பாகவே விளியேற்கும்.

**எ-டு :** திருமால் காண்க ! பெருமாள் வருக ! எனவரும். 'ஏனைப்புள்ளியீறு' என்றதனான் இவை ஏகாரம் பெற்று வருதலும் கொள்க. திருமாலே ! பெருமாளே ! எனவரும். பெண்பால், கோமாள், எனக்காட்டுவர் உரையாளர்.

இனி நச்சினார்க்கினியர் நமர்காள் எனக்காட்டுவது இந்நூல் நெறிக்கு முரணாம். என்னை 'கள்' ஈறு அஃறிணைக்கல்லது வாராதென ஆசிரியர் ஓதுதலின் என்க. "நமரங்காள்" என்பது நமர் அங்கங்காள் என்பதன் மரூஉ வெனக் கொள்ளத்தகும். கிளைநுதற்பெயர் ! 'கள்' விகுதியொடு கூடி விளியேற்றல் இடைக்காலத் தெழுந்த வழூஉ வழக்காம் என்க.

**சூ. 147 :** வினையினும் பண்பினும்
நினையத் தோன்றும் ஆள்என் இறுதி
ஆய் ஆகும்மே விளிவயி னான (29)

**க-து :** ஒருசார் ளகர ஈற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

**உரை :** விளிவேற்றுமைக்கண் ஆயினவாய், வினையடி யானும் பண்படியானும் கருதத் தோன்றிவரும் பெயரிறுதியாகிய ஆள் என்னும் இடைச்சொல் ஆய் எனத் திரிந்து வரும்.

**எ-டு :** உடன் பிறந்தாள், என்பது உடன் பிறந்தாய் வருக ! எனவும் கரியாள் - நெடியாள் என்பவை கரியாய் வருக ! நெடியாய் வருக ! எனவும் வரும். "விளிவயினான" என்ற மிகையான் செய்யுட்கண் ஆ ஓவாக நிற்குமிடத்து ஓய் என வருதலும் கொள்க. நின்றோள் - செய்யோள் - மாயோள் என்பவை, நின்றோய் ! செய்யோய் ! மாயோய் ! எனவரும். "ஏனைப் புள்ளியிறு" என்றதனான் ஏகாரம் பெறுதலும் கொள்க.

சூ. 148 : முறைப்பெயர்க்கிளவி முறைப் பெயரியல (30)

க-து : ளகர ஈற்று முறைப் பெயர் விளியேற்குமாறு கூறுகின்றது.

உரை : ளகார ஈற்று முறைப் பெயர்கள் னகார ஈற்று முறைப் பெயரியல்பினவாய் ஏகாரம் பெற்று வரும். எ-டு : (மகள்) மகளே வாழ்க ! மருமகளே வருக ! எனவரும்.

சூ. 149 : சுட்டுமுதற் பெயரும் வினாவின் பெயரும்
மேற்கிளந் தன்ன என்மனார் புலவர் (31)

க-து : ளகர ஈற்றுச் சுட்டுப் பெயரும்வினாப் பெயரும் விளியேலா என்கின்றது.

உரை : சுட்டெழுத்துக்களை முதலாகக் கொண்டுவரும் ளகர ஈற்றுச் சுட்டுப் பெயர்களும் ளகர ஈற்று வினாப் பெயரும் மேல் னகரகர ஈற்றிற்குக் கூறிய தன்மையவாம். என்றது, இவையும் விளியேலா என்றவாறு.

சூ. 150 : அளபெடைப் பெயரே அளபெடையியல (32)

க-து : லகர ளகர ஈற்று அளபெடைப் பெயர்கள் விளி ஏற்குமாறு கூறுகின்றது.

உரை : லகார ளகார ஈற்று அளபெடைப் பெயர்கள் ரகாரஈற்று அளபெடைப் பெயரியல்பினவாம். அஃதாவது திரியாது இயல்பாக விளியேற்கும் என்றவாறு. எ-டு : மாஅல் வருக ! வேஎள் வருக ! எனவரும்.

சூ. 151 : கிளந்த இறுதி அஃறிணை விரவுப் பெயர்
விளம்பிய நெறிய விளிக்குங் காலை [33]

க-து : அஃறிணைப் பொருளுணர்த்திவரும். விரவுப் பெயர்கள் விளிஏற்குமாறு கூறுகின்றது.

உரை : உயர்திணைப் பெயர்க்கண் விளிகொள்ளுதற் குரியனவாக எடுத்தோதப் பெற்ற இறுதிகளையுடையவாய் வரும் அஃறிணை விரவுப்பெயர்கள் விளிக்கப்படுமிடத்து அவ்வவ் ஈறுபற்றி உயர்திணைப் பெயர்கட்குக் கூறிய நெறியினவாகும்.

கிளந்த இறுதியாவன, இ உ ஐ ஓ என்னும் உயிரீறுகளும் னர லள என்னும் புள்ளியீறுகளுமாம். ஆண்டு அவற்றிற்குக் கூறிய விதிகளோடு விதப்பானும் உத்தியானும் கொண்ட விதிகளுள் ஏற்பன இவற்றிற்கும் கொள்க.

எ-டு : (சாத்தி) சாத்தீ செல்க! எனவும் (விருந்து) விருந்தே வருவாய் எனவும் (கோதை) கோதாய் உண்க! எனவும் (சாத்தன்) சாத்தா உழுவாய்! எனவும் (கூந்தல்) கூந்தால்வளர்க! எனவும் (மாக்கள்) மாக்காள் செல்க! எனவும் வரும். இனி முறைப் பெயர், தாயே வருக! தந்தையே வருக மகனே வருக மகளே வருக எனவரும்.

ஒகார ஈறும் ரகர ஈறும் பற்றி அஃறிணை விரவுப் பெயர் வந்தவழிக் கண்டுகொள்க. ரகரஈறு ஆகுபெயராய் (உயிர்) உயிரே வருக எனவருதற்காகும். இவையாவும் அண்மை விளிக் கண் இயல்பாதலும் கொள்க. 'விளிக்குங்காலை' என்றதனான் கிளந்த இறுதியல்லாத அகர ஆகார ஈறுகள் - மகவே வருக! - (பிணா) பிணாவே வருக! என விளிஏற்றல் கொள்க.

சூ. 152 : புள்ளியும் உயிரும் இறுதி யாகிய
அஃறிணை மருங்கின் எல்லாப் பெயரும்
விளிநிலை பெறூஉங் காலந்தோன்றின்
தெளிநிலை உடைய ஏகாரம் வரலே [34]

க-து : அஃறிணைப் பெயர்கள் விளி கொள்ளுமாறு கூறுகின்றது.

உரை : அஃறிணைப் பொருள் பற்றிப் புள்ளியும் உயிரும் இறுதியாக வரும் எல்லாப் பெயர்களும் விளிக்கும் நிலைமை எய்தும் காலந்தோன்றின் ஏகார இடைச் சொல்லை ஏற்று விளி வேற்றுமையாதல் தெளியும் நிலையுடையவாகும். வரையறைப் படாமையின் புள்ளியும் உயிரும் எனப் பொதுப்படக் கூறினார்.

செய்யுள் வழக்கின்கண் முன்னிலையாக்கலும் சொல்வழிப் படுத்தலும் வேண்டுங்கால், சொல்லுந போலவும் கேட்குந போலவும் அஃறிணைப் பொருள்கள் விளிக்கப்படுதலின் "விளிநிலைபெறூஉம் காலந்தோன்றின்" என்றார். ஏகாரம் பொதுநிலையான் விளித்தற்குரியஇடைச்சொல்லாய் வழங்குதலின் "தெளிநிலை உடைய ஏகாரம் வரலே" என்றார். சுட்டுப் பெயரும் வினாப் பெயரும் பொதுநிலையான் விளியேலாமை பெறப்பட்டமையின் விதந்து கூறாராயினார்

இனி ஏகாரம் வருதல் வேண்டும் என யாப்புறுத்தாமல் 'தெளிநிலை உடைய' என்றதனான் சிறுபான்மை உயர் திணைக்கு ஓதிய விதிகளுள் பொருந்துவன பெற்று வரு மென்பதும், 'புள்ளியீறு பதினொன்றனுள் ஞகரம் பெயர்க் கீறாகாமையானும் வகரம் சுட்டுப் பெயராயும் உரிச்சொல்லாயும்

நிற்றலானும் உயிரீறுகளுள் எகர ஒகரங்கள் பெயர்க்கு ஈறகா என்றமையானும் ஔகாரம் முதனிலை வினையாகவன்றிப் பெயரீறாக வாராமையானும் அவை ஒழிந்த ஏனைய ஈறுகளே கொள்ளல் வேண்டுமென்பதும், குற்றியலுகரம் உகரத்துள் அடக்கப்பட்டதென்பதும் உய்த்துணர்ந்து கொள்க.

எ-டு : விள, விளவே! புறா, புறாவே! புலி, புலியே! தீ, தீயே! முசு, முசுவே! வண்டு, வண்டே! பூ, பூவே! மரை, மரையே! சோ, சோவே! என உயிரீற்று அஃறிணைப் பெயர்கள் வரும் (முசு-குரங்கு. சோ - அரண்) மண், மண்ணே! வெரிந்-வெரிநே! மரம், மரமே! கடுவன், கடுவனே! புல்வாய், புல்வாயே! தகர், தகரே! குயில், குயிலே! பறழ்-பறழே! உதள், உதளே! எனப் புள்ளியீற்று அஃறிணைப் பெயர்கள் வரும். (வெரிந்-முதுகு, பறழ்-பறவைக்குஞ்சு, உதள்-ஆடு)

இனித் "தெளி நிலை உடைய" என்றதனான். வருந்தினை வாழி என் நெஞ்சம்! கருங்கால் வெண்குருகு ஒன்றுகேண்மதி! என இயல்பாயும் மந்தி-மந்தீ என இகரம் ஈகாரமாயும், நாரை - நாராய் என ஐகாரம் ஆய் ஆகியும் அலவன் - அலவ! என ஈறு குன்றியும் குறுமுயல் குறூஉயால் என ஈற்றயல் நீண்டும் பிறவானும் சான்றோர் வழக்கினுள் வருவன கொள்க.

சூ. 153 : உளவெனப் பட்ட எல்லாச் சொல்லும்
அளபிறந் தனவே விளிக்குங் காலை
சேய்மையின் இசைக்கும் வழக்கத் தான [35]

க-து : மூவகைப் பெயர்கட்கும் எய்தியதன்மேற் சிறப்பு விதி கூறுகின்றது.

உரை : விளிகோடற்குரியன என மேல்விதந்து கூறப்பட்ட எல்லாச் சொற்களும் சேய்மை இடம் பற்றி இசைக்கும் வழக்கின் கண் விளிக்குமிடத்து அளபிறந்தனவாம்.

அளபிறந்தன என்றது உயிரீறாயின் அவற்றின் மிக்கும் புள்ளியீறாயின் அவற்றின் அயல்நின்ற உயிர்மிக்கும் சேய்மைக் கேற்ப இசைக்கும் என்றவாறு.

எ-டு : (நம்பி) நம்பீஇ நம்பீஇஇ! (ஆடூ) ஆடூஉ! சாத்தா, சாத்தாஅ, மலையமான், மலைமாஅன், மால் மாஅல்—மாஅஅல் எனவும் (தொழிஇ) தொழிஇஇ (குரீஇ) குரீஇஇ எனவும் விளவேஎ! புறவேஎ எனவும் வரும்.

சூ. 154 : அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம்
அம்முறைப் பெயரொடு சிவணா தாயினும்
விளியொடு கொள்ப தெளியு மோரே [36]

க-து : பெயரேயன்றி 'அம்ம' என்னும் இடைச்சொல்லும் பெயரைச் சார்ந்து நின்று விளியேற்கும் என மரபு கூறுகின்றது.

உரை : புணர் மொழிக்கண் "உரைப்பொருட்கிளவி நீட்டமும் வரையார்" (தொகைமரபு-10) எனக்கூறப் பெற்ற 'அம்ம' என்னும் இடைச் சொல்லினது நீட்டமாகிய 'அம்மா' என்னும் சொல் மேற்கூறிய முறையாகிய மூவகைப் பெயரொடு ஒன்றாகப் பொருந்தாதாயினும் "அம்ம கேட்பிக்கும்" என்னும் அதன் பொருள் நிலையைத் தெளித்தோர் அதனை விளி கொள்ளும் பெயரொடு சார்த்திக் கொள்ளுவர். 'அம்முறைப் பெயர்' என்றது முன்னர் விளிகொள்ளும் பெயராகக் கூறிய உயர்திணைப்பெயர் அஃறிணைப் பெயர் பொதுப் பெயர்களை.

எ-டு : அம்மா சாத்தா ! அம்மா கொற்றா ! எனவரும். சாத்தா கொற்றா ! என விளிக்கப்பட்ட பெயர்களைச் சார்ந்து விளிகோடலின் "விளியொடு கொள்ப" என்றார். "அம்ம கேட்பிக்கும்" என வினைப்பண்பு இதன் பொருளாக ஓதப் பட்டமையின் 'அம்மா' என நீண்டவழிப் பெயர்ப்பண்புடைய தாயிற்றுப் போலும் என நிகழும் ஐயம் நீங்க ஆண்டும் அஃது வினைப் பண்பினதே என்றுணர 'அம்முறைப் பெயரோடு சிவணாது' என்றும், விளிப்பெர் ஒப்ப ஈறுதிரிந்து நிற்றலின் விளிப் பெயரோடு சார்த்திக் கொள்ளல் வேண்டுமென்பது உணர "ஆயினும் விளியொடு கொள்ப" என்றும் கூறினார். இச் சூத்திரத்தின் இரண்டாவது அடி "அம்முப்பெயரொடு சிவணா தாயினும்" என்றிருந்து ஏடெழுதுவோரான் அம்முறைப் பெயர் எனத் திரிந்திருத்தல் வேண்டுமெனத் தெரிகிறது.

இனி "அசைச் சொல் நீட்டம்" என்பதன்கண் உம்மை தொக்கதாக வைத்து அம்மஎன்னும் அசைச் சொல்லும் அதன் நீட்டமும் எனப் பொருள் கொண்டு அம்ம வாழி தோழி : என அண்மைவிளி ஏற்று நின்றதாகக் கொள்க.

சூ. 155 : தநநு எயென அவை முதலாகித்
தன்மை குறித்த னளரவென் இறுதியும்
அன்ன பிறவும் பெயர்நிலை வரினே
இன்மை வேண்டும் விளியொடு கொளலே

க-து : உயர்திணைப் பெர்களுள் விளியேலாதவை இவை எனக் கூறுகின்றது.

உரை : தநநுஎ என்னும் எழுத்துக்கள் முதலாகிக் கிழமை குறித்து நின்ற னளர என்னும் இறுதிகளை உடைய சொற்களும் அவை போல்வன பிறவும் பெயர் நிலைமையுற்றுவரின் அவற்றை விளியேற்கும் பெயர்களொடு கோடல் இன்மைவேண்டும்.

அவையாவன: தமன், தமள் தமர்-நமன், நமள், நமர்-நுமன் நுமள், நுமர்-எமன்-எமள், எமர் எனவும் தம்மான், தம்மாள், தம்மார், நம்மான், நம்மாள், நம்மார் நும்மான் நும்மாள், நும்மார் எம்மான், எம்மாள், எம்மார் எனவும் வருவன.

அன்னபிறவாக வருவன : பிறன், பிறள், பிறர், பிறிது, பிற, மற்றையான், மற்றையாள், மற்றையார், மற்றையது, மற்றை யவை என வருவனவும் யான், நீ, தான் என்னும் மூவிடப் பெயர்களும் ஆம்.

விளிமரபு முற்றியது

## 5. பெயரியல்

கிளவியாக்கம் முதலாக விளிமரபு ஈறாக உள்ள நான்கு இயல்களானும் இருவகை வழக்கினும் செப்பும் வினாவுமாக நிகழும் சொற்கள் பெயரும் வினையுமாக ஆக்கம் பெறுமாறும், அவை தம்முள் தொடருங்கால் வழுவின்றியும் மரபு பற்றியும் நிகழுமாறும் அவை அல்வழியானும் வேற்றுமைவழியானும் தொடருங்கால் எழுவாய் முதலாக விளியீறாக எட்டுவகையாக அமையுமாறும், அவ்எட்டனுள் உருபும் பொருளும் காரணமாகச் செயப்படுபொருள் வேற்றுமை முதலாக இடப்பொருள் வேற்றுமை ஈறாகவுள்ள ஆறும் வேற்றுமைத்தொடர் எனப்படுமாறும், முதல் வேற்றுமையும் விளிவேற்றுமையும் அல்வழித்தொடர் எனக் கொள்ளுமாறும், வேற்றுமை உருபுகள் விரிந்தும், மறைந்தும் நின்று வேற்றுமைப்பொருள் பயக்குமாறும், உருபும், பொருளும் மயங்கி வந்து பொருள் பயக்குமாறும், எட்டாவதாகிய விளிவேற்றுமையின் இயல்புப் பற்றித் தொடர் மொழி இலக்கணங் கூறினார்.

இனி, அத் தொடர்மொழிகட்கு உறுப்பாகி நிற்கும் பெயர் வினை இடை உரி என்னும் நான்கு சொற்களின் இயல்பும், அவைபற்றிய வழக்கும் நெறியானே புலப்படுத்தத் தொடங்கி முதற்கண் அந்நால்வகைச் சொற்கும் உரிய பொதுவிலக்கணங் களை மூன்று சூத்திரங்களான் உணர்த்திப் பின்னர் முதலாவு

தாகிய பெயர்ச்சொற்களின் இலக்கணம் கூறுதலின் இவ்வோத்துப் பெயரியல் என்னும் பெயர்த்தாயிற்று.

பெயர்ச் சொல்லியல் என்பது பெயரியல் எனக் குறைந்து நின்றது. ஏனைய வினையியல், இடையியல் உரியியல் என்பவற்றையும் இவ்வாறே கொள்க. பெயர் என்பது பெய் + அர் (ஆர்) என்னும் இரண்டு உரியடிகளான் ஆக்கமுற்று மருவியதோர் ஒட்டுச் சொல். இதன் பொருள் பெய்து நிரப்புதல் என்பதாம்.

பொருளை நோக்கி எழும் உணர்வும், பருப்பொருட்கும் நுண் பொருட்கும் உள்ள இயைபும், மொழிப் பொருட்குக் காரணமாதலின் சொற்கள் யாவும் காரணத்தை அடிப்படையாகக் கொண்டனவேயாம். உணர்வை அடிப்படையாகக் கொண்டு இருதிணைப் பொருளையும் சுட்டி வழங்குதற் கிடப்பெறும் குறியீடுகளே பெயர்ச்சொல் எனப்படும் என்க.

**சூ. 156 : எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே (1)**

**க-து :** சொற்களின் பொதுவியல்பு கூறுகின்றது.

**உரை :** பெயர்வினை இடைஉரி என்னும் நால்வகைச் சொற்களும் பொருள் குறித்து நிற்பனவேயாம். ஏகாரம் தேற்றம்

**எ-டு :** நிலம், நீர், தீ, வளி, வான், நம்பி, நங்கை, புள், விலங்கு, மரம், மலர், செம்மை, கருமை, உண்மை, நன்மை எனவும்; உண்டான், உண்டது, கரியன், கரியது எனவும், கொன்(னூர்) (பண்டுகாடு) மன் (கேண்) மதி எனவும், உறு (கால்) தவப் (பெரியன்) எனவும் வரும்.

இடைச் சொல்லும் உரிச்சொல்லும் பெயர் வினைகளைச் சார்ந்தே பொருளுணர்த்துமென்பது இலக்கணமாதலின் அவற்றைச் சார்ந்து நின்று தம் பொருளுணர்த்தியவாறு கண்டு கொள்க. இடங்குறித்தும், சீர்நிறைத்தும் இசை நிறைத்தும் வருதலின் இசைநிறை - அசைநிலையாக வரும் இடைச் சொற்களும் பொருளுணர்த்துவனவேயாம். சொல் பொருள் குறித்தன எனக் கருவி கருத்தாவாக ஓதப்பட்டது. ''ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே'' (கிளவி-1) என்பது சொற்களின் கூறுபாடுணர்த்திற்று. இச்சூத்திரம் அச்சொற்கள் பொருள்குறித்தே வரும் என இலக்கணங் கூறிற்று என்க.

இது தனிமொழி பற்றிய இலக்கணமாதலின், முயற்கோடு, யானைமயிர்க்கம்பலம் முதலிய தொகை மொழி - தொடர்மொழி

களைக் காட்டி உரையாசிரியன்மார் ஐயமெழுப்புதலும் அமைதி கூறலும் ஈண்டைக்கு வேண்டற்பாலன அல்ல. இது முதலாக ஐந்து சூத்திரங்களைக் கிளவியாக்கத்துட் கூறாமை பற்றிச் சேனா வரையர் கூறும் தடைவிடைகள் தேவையற்றவை. இச்சூத்திர விளக்கமாகத் தெய்வச்சிலையார் கூறுவன இந்நூல் நெறிக் கேலாதவை என்க.

சூ 157 : பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
சொல்லின் ஆகும் என்மனார் புலவர் [2]

கு-து : சொல் தன்னையும் பொருளையும் உணர்த்துமாறும் ஆண்டு நிகழ்வதோர் ஐயம் நீங்குமாறும் பற்றிக் கூறுகின்றது.

உரை : சொல் கருவியாகத் தன்னின் வேறாகிய பொருளை அறிந்து கோடாலும் இஃது இன்னசொல் என அச் சொல்லின் தன்மையை அறிந்து கேடாலும் ஆகிய இரண்டும் பொருள் குறித்து வருமென்ற அச் சொல்லானே விளக்கமாகும் என்று கூறுவர் புலவர்.

எ-டு : நம்பி, வந்தான், பெறுகதில், உறுகால் என்பவை முறையே உயர்திணை ஆடூஉ எனவும், உயர்திணை ஆடூவின் வருதற்றொழில் நிகழ்ந்து முடிந்தது எனவும், பெறுதலை விழைகின்றேன் எனவும் மிக்க காற்று எனவும் பொருளுணர்த்தி நின்றவாறும். "நீயென் கிளவி ஒருமைக்குரித்தே" எனவும், செய்கென் கிளவி வினை யொடு முடியினும்" எனவும், "உம் உந்தாகும் இடனுமாருண்டே" எனவும் "வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம்"எனவும் நின்றவற்றுள் நீ - செய்கு - உம் - வயா என்பவை பிற பொருளுணர்த்தாமல் முறையே பெயர்ச் சொல், வினைச்சொல், இடைச்சொல் உரிச்சொல் எனத் தம்மையே உணர்த்தி நின்ற வாறும் கண்டு கொள்க.

இனி "கூறிய முறையின் உருபு நிலை திரியாது, ஈறுபெயர்க் காகும்" என்னுமிடத்துப் பெயர் என்னும் சொல் பிறபொருட் பெயர்களையும், தன்னையும் ஒருங்குணர்த்தி நின்றதாம்.

சொல்லினது பொருளைத் தெரியுங்கால் சொல் உணர்வு மறைந்தும் - சொல்வகையைத் தெரியுங்கால் பொருள் உணர்வு மறைந்தும் நிற்கும், ஆதலின் இவை சொற்களின் வகையல்ல - அவற்றின் இலக்கண நிலை என அறிக. ஒவ்வொரு சொல்லும் இங்ஙனம் இரு நிலைமை எய்தும் என உணர்த்தியவாறாம். சொல் தன்னை உணர நின்ற வழியும் பொருளுணர்த்தியதேயாம் என ஐயமகற்றியவாறும் கண்டுகொள்க.

சூ. 158 : திரிபுவேறு நிலையிலும் குறிப்பிற்றோன்றலும்
இருபாற்றென்ப பொருண்மை நிலையே [3]

க-து : பொருண்மை தெரிதல் இருவகைட்படுமென்கின்றது.

உரை : மேற்கூறப்பெற்ற பொருண்மை தெரிதலாகிய நிலை யாவது, ஒரு சொல் பொருளை வெளிப்படையாகத் தெரிவித்துக் குறிப்பினின்று வேறுபட நிற்றலும், குறிப்பானே பொருள் தெரிய நிற்றலும் என இரு கூறுபாட்டினை உடைத்து என்று கூறுவர் புலவர்.

'தெரிபு' என்பது 'அரில்தபத்தெரிந்து' (பாயிரம்) என்றாற் போலத் தெரிவித்து என்னும் பொருள்பட நின்றது. வேறு நிற்றலாவது குறிப்புச் சொல்லின் வேறுபட நிற்றல், அஃதாவது சொல் தனக்குரிய நேரிய பொருளைக் காட்டி நிற்றல்.

எ-டு : அவன், நிலம், மலை, வந்தான், சென்றான் என்பவை திரிபின்றித் தம்பொருளை நேரே விளக்கி நின்றன. ஒருவர் வந்தார் என்புழி அவ்வொருவர் ஆடூஉ அல்லது மகடூஉ என்பதைப்பின் முன் வரும் சொற்களான் அறிந்து கொள்ளுமாறு நிற்றலும் சோறுண்ணா நிற்பவன் கற்கறித்து நன்கட்டாய் என்புழி தீங்கட்டாய் எனப் பொருள் தருதலும், கடுந்தின்றான் என்பது மரத்தை உணர்த்தாமல் அதன் காயை உணர்த்தலும், இவ்வாறு வரும் அன்மொழித் தொகைகளும் உவமப் போலியாயும் உள்ளுறை உவமமாயும் வருவன பிறவும் குறிப்பாற் பொருள் தருவனவாம். பொருண்மை நிலை இருபாற்றெனவே சொன்மை நிலை ஒன்றே என்பது பெறப்படும்.

சூ. 159 : சொல்லெனப் படுவ பெயரே வினையென்று
ஆயிரண் டென்ப அறிந்திசி னோரே [4]

க-து : மேற்கூறப்பெற்ற சொற்கள் தகவுபற்றி வகைப்படுமாறு கூறுகின்றது.

பொருள் : சொல்லென்று சிறப்பித்துக் கூறப்படுபவை பெயர்ச்சொல்லும் வினைச் சொல்லும் என அவ்விரண்டுகூறாகும் என்று சொல்லுவர் இலக்கண நெறியறிந்தோர். எனப்படுதல்-சிறப்பித்துச் சொல்லப்படுதல்.

இவை சிறப்புடையன எனவே; சிறப்பில்லாதனவும் உள என்பது பெறப்படும். அவற்றை மேற்கூறுவார். சிறப்பாவது பால் முதலிய உறுப்பான் நிறைந்து நிற்றல். சிறப்பின்மை யாவது அவற்றிற்குத் துணையாயமைந்தும் சார்ந்தும் பொருள்

தந்து நின்றல். இருதிணைப் பொருளின்றிச் சொற்கள் தோன்று தலின்றாகலான் அப்பொருளைச் சுட்டிவரும் பெயர் முன்னும் அப்பொருளின்புடைபெயர்ச்சி முதலியவற்றை உணர்த்தி வரும் வினை பின்னுமாக வைக்கப்பெற்றன.

சூ. 160 : இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும்
அவற்றுவழி மருங்கிற் தோன்று மென்ப [5]

க-து : சிறப்பில்லா ஏனைய இரு சொற்கள் இவை என்கின்றது.

பொருள் : இடைச்சொல்லும், உரிச்சொல்லும் மேற்கூறிய பெயர் வினைகளைச் சார்ந்து அவற்றின் வழியாகவும் அவற்றின் இடமாகவும் தோன்றி நிற்கும்.

"அவற்றுவழி மருங்கிற்றோன்றும் என்றதனான்" இவற்றின் சிறப்பின்மை உணரலாம். வழியினும், மருங்கினும் என விரித்துப் பொருள் கொள்க. அவற்றின் வழி மருங்காகி அவற்றை வேறு படுத்தும் - நிறைவித்தும் தம்பொருளுணர்த்தும் நிலையை நோக்கி இடைச் சொல் முன்வைக்கப்பட்டது. சிறப்புடையவை இரண்டு சிறப்பில்லாதவை இரண்டு என வகைப்படுத்திய வாற்றான் சொல்லின் தொகை நான்கென்பது பெறப்பட்டது. இவற்றின் இயல்புகளை நான்கு இயல்களாக அமைத்துக் கூறுத லானும் அது தெளியப்படும்.

சூ. 161 : அவற்றுள்
பெயரெனப் படுபவை தெரியுங் காலை
உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்
ஆயிருதிணைக்கும் ஓரன்ன உரிமையும்
அம்மூ வுருபின தோன்ற லாறே (6)

க-து : இது முதலாகப் பெயர்ச் சொற்களுக்குரிய சிறப்பிலக்கணங் கூறத் தொடங்கி அவை திணைபற்றி வகைப்படுமாறு இச்சூத்திரத்தான் கூறுகின்றார்.

பொருள் : மேற்கூறப்பெற்றநால்வகைச் சொற்களுள் பெயர்ச்சொல் என்று கூறப்படுவனவற்றை ஆராயுங்கால், அவை தோன்றுமாற்றான் உயர்திணைக்கே உரிமை உடையனவும், அஃறிணைக்கே உரிமையுடையனவும் அவ்விஇருதிணைகட்கும் ஒருங்கொத்த உரிமையுடையனவும் என அம் மூன்று படிவத்தன வாகும்.

"உரிமையுடையனவும்" என்பது உரிமையும் என விகாரப்பாட்டுகின்றது. உருபென்றது (உருப்படி) ஈண்டு

வகைகளை உணர்த்தி நின்றது, ஓரன்ன உரிமை என்பது உயர் திணையாதற்கும் அஃறிணையாதற்கும் சமனாக நிற்கும் நிலைமையை. இங்ஙனம் இருதிணைக் கண்ணும் விரவுதலின் அவ்வகையினை விரவுப் பெயர் என்றும், பொதுப்பெயர் என்றும் கூறுவர். எனவே பெயர்ச் சொற்கள் உயர்திணைப் பெயர் அஃறிணைப்பெயர், விரைவுப்பெயர் என மூவகைப்படும் என்பதாயிற்று.

சூ. 162 : இருதிணைப் பிரிந்த ஐம்பாற் கிளவிக்கும்
உரியவை உரிய பெயர்வயி னான [7]

க-து : கிளவியாக்கத்துள் இருதிணை ஐம்பாற்குரியசொற்களை "னஃகான் ஒற்றே ஆடூஉவறிச்சொல்" என்பது முதலாய சூத்திரங்களான் ஆக்கிக் கொள்ளுமாறு கூறிப்பின்னர் "இருதிணை மருங்கின் ஐம்பாலறிய ஈற்றின் நின்றிசைக்கும் பதினோரெழுத்தும் தோற்றந்தாமே வினை யொடு வருமே" என வினைச் சொற்கண் பாலறியுமாறு கூறிப் பெயர்ச் சொற்களும் வடிவான் இருதிணை ஐம்பால்களைக் காட்டும் என்பதனைப் "பெயரிற்றோன்றும் பாலறிகிளவியும் மயங்கல் கூடா" [கிளவி-11] என்பதனான் உய்த்துணர வைத்தார். அந்நெறியானே பெயர்ச்சொற்கள் பாலுணர்த்தும் முறைமையை இச்சூத்திரத்தாற் கூறுகின்றார்.

உரை : இருதிணைக்கும் உரியவாக ஆடூஉவறிசொல் முதலாகப் பலவறி சொல் ஈறாகப்பிரிந்து நின்ற ஐம்பாற் சொல்லுக்கும் மேற்கூறிய பெயர்களிடத்தான சொற்களில் உரியவை உரியவாம்.

என்றது ; படர்க்கை வினைகள் "னஃகான்" ஒற்று முதலாய வற்றொடு கூடித்திரிபின்றிப் பாலுணர்த்துமாறு போலப், பெயர்ச் சொற்கள் அவ் ஈறுகளான் ஐம்பாற் சொற்கள் ஆதற்கு உரியவை உரியவையாம் என்றவாறு. "உரியவைஉரிய" என்றதனான் அவ்வாற்றான் உரிய அல்லாதனவும் உளவென்பதும் 'ஐம்பாற் கிளவிக்கும்' என்றதனான் பிறஈறுகளான் வருதற்குரியவையும் உளவென்பதும் பெறப்படும்.

அவை வருமாறு: அன்னவன், அன்னவள், அரசர், வணிகர், கரியது, கரியன, என இவை னஃகான் ஒற்று முதலியவாக ஓதியவற்றான் பாலுணரவந்தன, நம்பி, நங்கை, கோ, வேள் என இவை பிற ஈறுகளான் பாலுணர வந்தன. பெண்மகன், மக்கள், பெண்டு என்பனவை ஓதப்பெற்ற ஈறுகளான் வந்து அவற்றிற்குரிய பால் காட்டாமல் வேறுபால் உணர்த்தி நின்றன. பிறவும் சான்றோர் வழக்கு நோக்கிக் கண்டு கொள்க.

இனி இச்சூத்திரத்திற்கு உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் கூறும் வலிந்துரை தொடர்மொழி பற்றியதாகலின் ஈண்டைக்கு ஒவ்வாமை அறிக. "அவன் இவன் உவன் என வரூஉம் பெயரும்" என்பது முதலாக ஆசிரியர் ஈறுபற்றியும் எடுத்தோதலின், ஈறுபற்றி உணர்த்தலாகாமையின் உரியவை உரிய என்றார், என்னும் சேனாவரையர் கருத்தும் பொருந்தாமை அறிக.

சூ. 163 : அவ்வழி
அவன் இவன் உவன் என வரூஉம் பெயரும்
அவள் இவள் உவள் என வரூஉம் பெயரும்
அவர் இவர் உவர் என வரூஉம் பெயரும்
யான் யாம் நாம் என வரூஉம் பெயரும்
யாவன் யாவள் யாவர் என்னும்
ஆவயின் மூன்றொடு அப்பதி னைந்தும்
பாலறிவந்த உயர்திணைப் பெயரே. [8]

க-து : உயர்திணைக்குரியவாய் வரும் ஒருசார் பெயர்ச் சொற்கள் இவை என்கின்றது.

உரை : மேல் உரியவை உரிய எனக்கூறிய முறைமை யான் அவன் முதலாக யாவர் ஈறாகக் கூறப்பெற்ற அப்பதினைந்து சொற்களும் உயர்திணைக்கே உரிய பெயர்ச்சொற்களாம். வழக்குப்பயிற்சி குறைந்தவையாதலின் வினாப்பெயர்களைப் பிரித்தோதினார்.

யான் என்பது ஆடு மகடுவாகியவற்றுள் ஒன்றனை வரைந்துணர்த்தாதாயினும் உயர்திணை ஒருமை உணர்த்தலின் பாலறி கிளவியாயிற்று. ஈண்டுப் பால் என்றது ஒருமைப் பன்மைப் பாலையே என்பது இதன் புறனடைச் சூத்திரத்தான் அறிக. இது முதலாக நான்கு சூத்திரங்களான் உயர்திணைப் பெயர்கள் வித்து கூறப்படுகின்றன.

இவை பிரிப்பப்பிரியா ஒருமொழிப் புணர்ச்சியான் அமைந்த சொற்களாதலின் சுட்டு முதலாகிய னகரம் என்றாற்போலக் கூறாமல் அவற்றையே எடுத்தோதினார் என்க. இடைக்கால நூலார் இந்நெறியுணராது வழுவினர்.

ஆசிரியர் இருதிணை ஐம்பாற் சொற்களை வகுத்துக் கூறுகின்றார் எனப்பிறழக் கருதிய நச்சினார்க்கினியர் நம்பி,

பெண்டாட்டி, ஆடூஉ மகடூஉ என வரும் ஈறுகள் இருபாற்கும் உரியவாய் வருதலின் ஈறுபற்றி ஓதாது பெயர்பற்றி ஓதினார் என விளக்கங் கூறினார்- அஃது ஆசிரியர் கருத்தாகாமை "பாலறிவந்த உயர்திணைப் பெயரே" எனவும் பாலறிவந்த அஃறிணைப் பெயரே எனவும் பின்னர்க் கூறு மாற்றான் அறிக. 'ஒப்பக் கூறல்' என்னும் உத்தியான் ஐம்பாற் பகுப்பையும் உணர்ந்து கொள்ள வைத்தார் என்க. மேல்வருவனவற்றிற்கும் இஃதொக்கும்.

சூ. 164 : ஆண்மை யடுத்த மகனென் கிளவியும்
பெண்மை யடுத்த மகளென் கிளவியும்
பெண்மை யடுத்த இகர இறுதியும்
நம்மூர்ந்து வரூஉம் இகர ஐகாரமும்
முறைமை சுட்டா மகனும் மகளும்
மாந்தர் மக்கள் என்னும் பெயரும்
ஆடூஉ மகடூஉ ஆயிரு பெயரும்
சுட்டு முதலாகிய அன்னும் ஆனும்
அவை முதலாகிய பெண்டன் கிள்வியும்
ஒப்பொடு வரூஉம் கிளவியொடு தொகைஇ
அப்பதி னைந்தும் அவற்றோ ரன்ன. [9]

க-து : இதுவுமது.

உரை : ஆண்மையடுத்த மகனென் கிளவி முதலாக ஒப்பொடுவரூஉம் கிளவி ஈறாக ஓதப் பெற்றனவாய் வரும் அப் பதினைந்து சொற்களும் பால் விளங்க வந்து நிகழும் உயர் திணைக்கு உரிய பெயர்ச்சொற்களாம்.

ஆண்மையடுத்த மகனென் கிளவி என்றது ஆண்மைப் பண்பை உணர்த்தும் சொல்லாகிய ஆண் என்பதனைத் தொடர்ந்து நிற்கும் மகன் என்னும் பெயர் என்றவாறு. அஃதாவது இருபெயரொட்டன்று என்றதாம். இவற்றைப் பிரிப்பின் ஒவ்வொன்றும் விரவுப்பெயராதலின் ஆண்மையடுத்த மகனென் கிளவி என விளங்கக் கூறினார். பெண்மையடுத்த மகளென் கிளவி என்பதற்கும் இவ்விளக்கம் ஒக்கும். அவை முறையே ஆண்மகன் - பெண்மகள் எனவரும்.

"பெண்மையடுத்த இகரஇறுதி" என்பது பெண் என்னும் பண்புச்சொல்லைத் தொடர்ந்து நிற்கும் ஆள்வினையொடு கூடிய இகர ஈற்றுப் பெயர் என்பதாம். அஃது பெண்டாட்டி எனவரும்.

இவ்இகர ஈறு பெண்ணென்னும் சொல்லொடு நேரேதொடராமல் ஆளுதல் வினைப்பண்புணர்த்தும் உரிச்சொல்லொடு கூடி ஆட்டி எனவருமென்பது தோன்றப் பிரித்துக் கூறினார். அதனான் பெண்தன்மையை அடுத்து இவ்வாறு இகர இறுதியாகத் திருவாட்டி, பெருமாட்டி எனவும் வரும். தலைவி, தோழி, கிழத்தி, செவிலி, விறலி, பாடினி, ஒருத்தி முதலாயினவும் பெண்மையடுத்த இகர இறுதியாக அடங்குமென்க.

இவ்வாறு ருவன விரவுப் பெயராதற்கும் ஒக்குமன்றோ எனின் ? பயனும் சிறப்புங்கருதி ஓராவினையும் பெற்றத்தையும் அவள், அவன் எனக் கூறுதல் போல இவை அஃறிணைக்கண் வழங்கப்படுதலன்றி முடவன் முடத்தி என்றாற்போல இருதிணைக்கும் ஒத்த உரிமையவாய் வருவன அல்ல என்பதை இருவகை வழக்கும் நோக்கி அறிக. இங்ஙனம் கொள்ளாக்கால் சாத்தி - கொற்றி என்றாற்போல வரும் பெயர்கள் பெண்பால் உணர்த்துதற்கு ஏலாவாய்க்குன்றக் கூறலாய் முடியும் என்க.

நம்மூர்ந்துவரூஉம் இகர ஐகாரம் என்பது : நம் என்னும் முதனிலையொடு கூடி இகர இறுதியாயும் ஐகார இறுதியாயும் வரும் பெயர்ச்சொற்கள் என்றவாறு அவை நம்பி - நங்கை எனவரும்.

முறைமை சுட்டாமகனும் மகளும் என்பது: இன்னார்க்கு அல்லது இன்னதற்கு என உரிமை கருதாமல் ஆடூஉ மகடூஉ என்னும் துணையாய் வரும் பெயர்ச்சொற்கள், அவை - மகனே தோழி என்றனள் (அகம் 48 'மகள்மறுத்துமொழிதல்', என வந்தவாறு காண்க.

மாந்தர் மக்கள் என்னும் பெயரும் என்பது : மாந்தர் எனவும் மக்கள் எனவும் பன்மை குறித்து வரும் பெயர்ச் சொற்களாம்.

ஆடூஉ மகடூஉ ஆயிருபெயரும் என்பது. ஆடூஉ எனவும் மகடூஉ எனவும் ஒருமை குறித்து வரும் பெயர்ச் சொற்களாம்.

சுட்டுமுதலாகிய அன்னும் ஆனும் என்பது: சுட்டிடைச் சொற்களை முதலாகக் கொண்டு பலுணர்த்தும் ஈற்றொடு தொடர்ந்து, அவன் இவன் என்னும் சுட்டுப்பெயர்களை ஒப்பப் பொருளுணர்த்தி நிற்கும் அன்னிற்று ஆனீற்றுப் பெயர்களாம்.

அவை : அன்னன் இன்னன் எனவும் அன்னான், இன்னான் எனவும் வரும். உகரச் சுட்டிடைச்சொல் முதலாக வரும் உன்னன் உன்னான் என்பவை சிங்க ஈழத்துப் (இலங்கை) பயின்று வருகின்றமை போலத் தமிழீழத்து (தமிழகத்து)ப் பயின்று வரவில்லை, என்க.

இனி, சுட்டு முதலாகிய அன்னும் ஆனும் என்றற்கனான் அவை சுட்டெழுத்துக்களை அடுத்துவரின் அவன், இவன், அவான், இவான் என்றன்றே வரல்வேண்டுமெனின், அற்றன்று சுட்டெழுத்துக்களின் அடிப்படையில் வருவன அவன் இவன் உவன் எனப்பிரிப்பப் பிரியா ஒரு சொல்லாக வரும் என்பதுணர "அவன் இவன் உவன் என வரூஉம் பெயரும்" என ஆசிரியர் மேல் விதந்து கூறினமையானும், சுட்டெழுத்துக்கள் இடைச்சொல்லா தலின் இடைச்சொற்கள் தம்மீறுதிரிதலும் பிறிதவண் நிலையலும். பிறவுமாகிய இலக்கணத்தை உடையவாதலானும் ஈண்டுச் சுட்டென்றது ஆன், ஈன், ஊன், என்னும் இடம் உணர்த்தும் சுட்டுப்பெயர்களின் திரிபாக வரும் அன், இன், உன் என்பவற்றை என அறிக. இதனை இவரிவர் கூறினார் என்பதை இன்னின்னார் கூறினார் எனவரும் வழக்கானும் அவ்வனைத்தும் என்பதனை அன்றியனைத்தும் என ஆசிரியர் வழங்கலானும் உணர்க.

இனி அன்னன், அன்னான் என்பவை ஒப்பொடுவரூஉம் கிளவியாகவோ எனின்? ஆகா. ஒப்பொடுவரின் அன்னவன் இன்னவன் என்றே வருதல்வேண்டும். என்னை. "அன்ன என்னும் உவமக்கிளவி" என்று கூறியதல்லது ஆசிரியர்' அன் என்னும் உவமக்கிளவி' என ஓதிற்றிலராகலின் என்க. அன்னவன் அனையவன் என்பவை வழக்கினுள் அன்னன் அனையன் என விகாரமாய்க்குறைந்தும் வரும் ஆதலின் அன்னன் என்னும் சுட்டுப்பெயர் வேறு அன்னன் என்னும் உவமப் பெயர் வேறு என்று உணர்க. அன்னன் என்புழிச் சுட்டப்படும் பொருள் (தன்மை) கிழமையாக நிற்பின் சுட்டுப் பெயராம்: உவமமும் பொருளுமாக (புலியன்னன்) நிற்பின் உவமப் பெயராம். என இவை தம்முள் வேறுபாடுணர்க.

இனி உரையாசிரியன்மார் அன் - இன் - உன் என்னும் சுட்டிடைச் சொற்கள் உளவாதலைக்கருதாராய் இதற்கு அவ்வாளன் இவ்வாளன் உவ்வாளன், அம்மாட்டான் - இம் மாட்டான் - உம்மாட்டான் என்பவற்றை எடுத்துக் காட்டினர். அவற்றுள் அன்னும் ஆனும் முறையே ஆள் - மாடு என்பவற்றை அடுத்து வந்தனவன்றிச் சுட்டுக்களை அடுத்து வாராமையின் அவை சூத்திரக்கருத்திற்கு ஏலாமை அறிக.

அன்னர் அன்னார் என்னும் பன்மைப்பெயர் பெரும்பான்மை யும் ஒப்புணர்த்தியே வருதலின் அர் ஆர் என்பவற்றொடு வரும் என விதந்து கூறாராயினர். அவை சுட்டுப் பொருள் உணர்த்தி வருமேல் அன்ன பிறவும் (பெய - 12) என்னும் புறனடையாற் கொள்க.

அவை முதலாகிய பெண்டன் கிளவி என்பது : சுட்டுக்களை முதலாகக் கொண்டு பெண்மை பற்றி வரும் பெயர்ச் சொற்களாம். அவை அன்னள் - இன்னள் - அன்னாள், இன்னாள் எனவரும்.

அவை முதலாகிய 'அள்ளும் ஆளும்' என்னாது பெண்டன் கிளவி எனக் கூறினார் அவ்வாட்டி இவ்வாட்டி எனவரும் இகர ஈற்றுப் பெயர்களும், அப்பெண்டு இப்பெண்டு எனவரும் உகர ஈற்றுப் பெயர்களும் முறைமை கருதாது வரும் அன்னை எனவரும் ஐகார ஈற்றுப் பெயரும் கோடற்கென்க. (பெண்டன் கிளவி - பெண்தன்மை உடைய கிளவி - தன் = தன்மை) உரையாசிரியன்மார் பெண்டென் கிளவி எனம்பாடங் கொண்டு அப்பெண்டு, இப்பெண்டு உப்பெண்டு என உதாரணம் காட்டுவர். அது பொருந்தாதெனக் கருதிய சேனாவரையர் வழங்கிறந்தது எனக் கூறுவர்.

ஒப்பொடுவருஉம் கிளவி என்பது ; உவம உருபிடைச் சொற்களை முதனிலையாகக் கொண்டு வரும் பெயர்களாம். அவை அன்னவன், அன்னவள், அன்னவர், அனையவன், அனையவள் அனையவர் எனவரும்.

ஒப்பிடைச் சொல்லான் வரும் என்னாது ஒப்பொடுவருஉம் எனப் பொதுப்பட ஓதியமையான் புலியான், வேங்கையான், பூசையான், மயிலாள், குயிலாள், கண்ணார், பொன்னார், கோதையார், கூற்றத்தார் என ஒப்புமைக் கருத்தான் வருவனவும் கொள்க. இனி இதற்குப் பொன்னன்னான், பொன்னன்னாள் எனத் தொடர் மொழிகளைக் காட்டுவது நேரிதாகாமை அறிக.

மேலைச் சூத்திரத்துக்கூறிய பதினைந்தும் ஒருமொழியாய்த் திரிபின்றி உயர்திணை முப்பாலையும் பற்றிப் பெரு வழக்கிற்றாய் வருவன. இக் கூறிய பதினைந்தும் அவ்வாறன்றித் தொடர்ச் சொல்லாயும். வழக்குப் பயிற்சிக் குறைந்தவையாயும் வருதலின் அவற்றொடு கூறாமற் பிரித்துக் கூறினார் என்க.

சூ. 165 : எல்லாரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்
எல்லீரும் என்னும் பெயர் நிலைக்கிளவியும்
பெண்மை யடுத்த மகனென் கிளவியும்
அன்ன இயல என்மனார் புலவர் [10]

க-து : இதுவுமது.

உரை : எல்லாரும் என்னும் படர்க்கைப் பெயரும்-எல்லீரும் என்னும் முன்னிலைப் பெயரும் பெண்ணென்னும் சொல்லைத்

தொடர்ந்து நிற்கும் மகன் என்னும் சொல்லாகிய பெண்மகன் என்னும் சொல்லும் மேலன போலப் பால் விளங்கவரும் உயர்திணைப் பெயர்ச் சொற்களாம் என்று கூறுவர் புலவர்.

எல்லார், எல்லீர், என்பவை உம்மை பெற்று நிற்றலானும் மகன்என ஈறுதிரிந்து நிற்றலானும் இவற்றை வேறாகக் கூறினார்.

சூ. 166 : நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே
வினைப்பெயர் உடைப் பெயர் பண்புகொள்பெயரே
பல்லோர்க் குறித்த முறைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த சினை நிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த திணை நிலைப் பெயரே
கூடிவரு வழக்கின் ஆடியற் பெயரே
இன்றிவர் என்னும் எண்ணியற் பெயரொடு
அன்றி அனைத்தும் அவற்றியல் பினவே [11]

க-து : இதுவுமது.

உரை : நிலப்பெயர் முதலாக எண்ணியற்பெயர் ஈறாக ஓதிய அவ்வனைத்துப் பெயர்களும் மேலன போலப் பாலறிவந்த உயர்திணைப் பெயர்ச் சொற்களாகும். இயல்பினவே என்னும் ஏகாரம் இசைநிறை. ஏனையஎண்ணுப் பொருளன.

நிலப்பெயராவன : முல்லை முதலாய நிலமும், நாடும், ஊரும் பற்றி வருவன. அவை, முல்லையான், குறிஞ்சியான் நாட்டான், ஊரான், மதுரையான் என்வரும். வஞ்சிநாடன் என அவை அடையடுத்தும் வரும். அன், ஆன், அள், ஆள், அர், ஆர் என்னும் இறுதிகளை ஏற்பனவற்றொடு பொருந்தக் கூட்டிக் கொள்க.

குடிப்பெயராவன: குடிமரபு பற்றி வரும் பெயர் அவை சேரன் சோழன், சேரமான், மலையமான் எனவும் பாணன், கடம்பன் எனவும்வரும். இவைபற்றி வரும் பெண்பாற் பெயர் சோழச்சி, சேரச்சி, பாணத்தி, கடம்பச்சி என்றாற் போல வரும். ஒன்றென முடித்தலான், பார்ப்பான், பார்ப்பனி, வேளாளன் சோழியன், என வருவனவும், கொள்க. பெண்பாற்கும், பலர்பாற்கும் ஏற்ற பெற்றி கொள்க.

குழுவின் பெயராவன :- யாதானும் ஒரு துறைக்கண் ஒத்த உரிமையுடையோரைப் பலர் கூடியுறையும் கூட்டத்தைக் குறித்துவரும் பெயர். அவை : அவையத்தார், மன்றத்தார்,

ஆயத்தார், கழகத்தார் எனவரும். அவையத்தான், அவையத் தாள் எனச் சிறுபான்மை ஒருமைப்பாலாயும்வரும்.

வினைப்பெயராவன :- தொழில் காரணமாக வரும்பெயர்கள் அவை. உண்டவன், தின்றவன், உண்டான், தின்றான் எனவரும். சாதி குறியாது கொல்லன், தச்சன், கூத்தன் என வருவனவும் கொள்க. பெண்பாற்கும் பலர்பாற்கும் ஒட்டிக் கொள்க.

உடைப் பெயராவன :- ஒன்றை உடைமையாகக் கொண் டிருத்தல் பற்றி எய்திய பெயர். அவை. குட்டுவன், பூழியன், வெற்பன், சேர்ப்பன், குழையன், வேலன், வில்லன், எனவரும். பெண்பாற்கும், பலர்பாற்கும் என்பன அமைத்து ஒட்டிக்கொள்க.

பண்புகொள் பெயராவன :- வன்மை, வடிவு, சுவை அளவு முதலிய குணம் பற்றி வரும் பெயர்ளொம். அவை கரியன், கூனன், இனியன், நெடியன் நல்லன் தீயன் எனவரும். பெண்பாற்கும் பலர்பாற்கும் ஒட் டிக் கொள்க.

இவ் அறுவகைப் பெயரும் ஆடூஉ மகடூஉ பல்லோர் என்னும் மூன்றுபாற்கும் இயையுமாற்றான் வரும் என்பது உணர இனி வருவனவற்றைப் பல்லோர்க் குறித்த என விதந்து கூறினார் என அறிக.

பல்லோர்க்குறித்த முறைநிலைப் பெயராவன : பன்மை பற்றிவரும் முறைப் பெய்ர்களாம். அவை தாயர், தந்தையர், தாய்மார், தந்தைமார் எனவும் மாமன்மார் பாட்டன்மார் என வழக்கின்கண் வருவனவும் மகன்மார், மகள்மார் எனப் பன்மைப் பொருட்டாய் வருவனவும் கொள்க.

"கொடுங்கோற் காவலர் பின்னின்றுய்ப்ப
இன்னே வருகுவர் தாயர்" (முல்லைப்பாட்டு-1516) என

அஃறிணைக் கண்ணும் வந்ததால் எனின் ? ஆண்டு உயர்த்துக் கூறும் மரபினான் வந்தமை 'வருகுவர்' என்னும் உயர்திணை வினைமுடிபாற் பெறப்படுதலின் சொல்நிலையில் வழுவின்மை அறிக.

பல்லோர்க் குறித்த சினை நிலைப் பெயராவன : பன்மைப் பாலாய்ச் சினை காரணமாக முதலுக்கு எய்திய பெயர், அவை குருடர், செவியர், தலையர், வாயர் எனவரும்.

பல்லோர்க்குறித்த திணைநிலைப் பெயராவன : பன்மை பற்றித் திணைகாரணமாக வரும் பெயர் - திணை என்றது கைக்கிளை முதலாய ஏழும், அவற்றின் புறத்திணைகளுமாம். இவற்றுள் குறிஞ்சி முதலாய ஐந்தும் நிலத்திற்கும் பெயராக வருதலின் குறிஞ்சியான், முல்லையான் எனவருவன நிலப் பெயர் என்பதன்கண் அடங்கும், ஆயர், வேட்டுவர் என்றாற் போல வருவன திணை தொறும் மரீஇயதிணைநிலைப் பெயர் எனப்பின்னர்க் கூறுவாராகலின் அவை மரபு பற்றிய திணைப் பெயராய் அடங்கும். அவை ஒழிந்த ஏனையவை ஈண்டுக் கொள்ளப்படும்.

இனி, கைக்கிளையும் பெருந்திணையும் குறிஞ்சி முதலிய அகனைந்திணைக்கும் அகப்புறமாய் அவற்றிடையே தோன்றி நிகழ்தலான் அவைபற்றிப் பெயர் ஆக்கம் உறுதலில்லை அவற்றின் புறனாகிய பாடாண்டிணைக்கும் காஞ்சித்திணைக்கும் இஃதொக்கும். எனவே, திணை நிலைப் பெயராய் வருதற் குரியவை வெட்சியும், அதற்குமாறாகிய கரந்தையும், வஞ்சியும், உழிஞையும், அதற்குமாறாகிய நொச்சியும்; தும்பையும், வாகையு யாகிய ஏழுமே என்பது பெறப்படும். அவை வெட்சியார், கரந்தையார், வஞ்சியார், உழிஞையார், நொச்சியார், தும்பை யார், வாகையார் எனவரும்.

இனி வெட்சியான், கரந்தையான் என ஒருமைக்கும் வருமால் எனின்? அவை அத்திரளுள் ஒருவன் என்னும் பொருள் பட நிற்றலின் குழுவின் பெயர் என்பதற்கு இனமாய் அடங்கு மென்க. இம்மூவகைப் பெயர்களுள் முன்னவை ஒருமை பற்றி வரின் விரவுப் பெயராம் ஆதலானும் பின்னது குழுவின் பெயராம் ஆதலானும் பல்லோர்க்குறித்த என விதந்து ஓதினார் என்க.

கூடி வருவழக்கின் ஆடியற் பெயராவன : இளையோர் தம் முள்ள விளையாடுதற்கண் குழூஉப்படப் பிரிந்து அவ்வப்போது அமைத்துக் கொள்ளும் பெயர். ஆடியல் வழக்கின் வருபெயர் என்க. அவை வருமாறு : கடலைக்கையான் முகப்பவர், மணலைக்கயிறாகத் திரிப்பவர், விண்ணை அளப்பவர், மலையை உகிரால் பிளப்பவர் என்றாற்போல வரும். இவை பெயரினாகிய தொகையாய் வந்து ஒரு சொல் நீர்மையவாக நிற்பன என அறிக.

உரையாசிரியன்மார், பட்டிபுத்திரர், கங்கை மாத்திரர் எனக் காட்டுப. இதற்குத் தெய்வச்சிலையார் கூறும் விளக்கமும், காட்டும் பொருந்தாதனவாகும். இவற்றுள் பொருந்துமாற்றான் ஒருமைப் பெயராய் வருவனவும் கொள்க.

இன்றிவர் என்னும் எண்ணியற் பெயராவன :- இவ் வளவினர் என எண்ணான் இயன்றுவரும் பெயர்களாம். அவை, ஒருவன், ஒருத்தி, இருவர், மூவர், நால்வர், பன்னிருவர், முப்பத்து மூவர், நூற்றுவர், நாற்பத்தெண்ணாயிரவர் என்றாற்போல வருவனவாம்.

பொருளான் வேறுபட்ட பல்வகைப் பெயர்கள் நிலம், குடி முதலிய ஓர் அடிப்படையுள் ஒன்றுபட்டு இனமாய் நிற்றலின் இவற்றைப் பிரித்து வேறு கூறினார் என்க.

ஒப்பொடுவரும் கிளவியும் ஓரினமாக வருமேனும் இவை உவமஉருபு பற்றியும் பொருள் பற்றியும் வெவ்வேறு முதனிலை களொடு வருதலின் முதனிலை வேறுபட்டு வரும் பெயர்களொடு வைத்தார் என்க.

சூ. 167 : அன்ன பிறவும் உயர்திணை மருங்கின்
பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
என்ன பெயரும் அத்திணை யவ்வே (12)

க-து : உயர்திணைப் பெயர்பற்றிப் புறனடை கூறுகின்றது.

உரை : மேற்கூறப் பெற்ற பெயர்களை ஒப்பவருவனவும் பிறவுமாய் உயர்திணையிடத்து ஒருமையும் பன்மையுமாகிய பால் விளங்கவரும் எவ்வகையான பெயர்களும் உயர்திணைக் குரியவையாம்.

அவற்றுள் சிலவருமாறு :- ஏனாதி. காவிதி, அமைச்சன், மன்னன், ஒற்றன், தூதன், வாயிலான், அடியான், பிறன், மற்றையான், எமன், நுமன், என்றாற்போல்வன. இவற்றைப் பொருந்து மாற்றான் மகடூஉவிற்கும் பல்லோர்க்கும் ஆக்கிக் கொள்க. இனி எல்லேம், வல்லேம், ஒருவேன், இருவேம், பலவேம் என வருவன "கடி சொல்லில்லை" என்பதனாற் கொள்க.

இச் சூத்திரங்களான் உயர்திணைச் சொற்கள் இவ்வாறு வரும் என்றதன்றி உயர்திணைக்குரிய முப்பாற் சொற்கள் இவை என்பது உணர்த்துதல் ஆசிரியர் கருத்தன்மை "பன்மையும் ஒருமையும் பாலறிவந்த" என்பதனானும் "அத்திணையவ்வே" என்பதனானும் விளங்கும்.

சூ. 168 : அது இது உது வென வரூஉம் பெயரும்
அவை முதலாகிய ஆய்தப் பெயரும்
அவை இவை உவை யென வரூஉம் பெயரும்
அவை முதலாகிய வகரப் பெயரும்
யாது யா யாவை என்னும் பெயரும்
ஆவயின் மூன்றொடு அப்பதி னைந்தும்
பாலறி வந்த அஃறிணைப் பெயரே (13)

க-து : திறந்த முறையானே அஃறிணைப்பெயர்கள் வருமாறு கூறத் தொடங்கி இச் சூத்திரத்தான் ஒருசார் அஃறிணைப் பெயர் இவை எனக் கூறுகின்றது.

உரை : அது, முதலாக யாவை, ஈறாகக் கூறப்பெற்ற அப்பதினைந்து சொற்களும் ஒருமையும் பன்மையுமாகியபால் விளங்க வரும் அஃறிணைப் பெயர்ச் சொற்களாகும்.

அவை முதலாகிய என்றது அச்சுட்டுக்களை முதலாக உடைய என்றவாறு. அவையாவன அஃது, இஃது, உஃது என்பனவும் அவ், இவ், உவ், என்பனவுமாம். யாது யாவை என்பவை எது, எவை யென இக்காலத்துத் திரிந்து வழங்கு கின்றன. அவைதொல்காப்பிய நெறியை நோக்க வழூஉ வழக்காகும்.

சூ. 169 : பல்ல பலசில என்னும் பெயரும்
உள்ளஇல்ல என்னும் பெயரும்
வினைப் பெயர்க்கிளவியும் பண்புகொள் பெயரும்
இனைத்தெனக் கிளக்கும் எண்ணுக்குறிப் பெயரும்
ஒப்பின் ஆகிய பெயர்நிலை உளப்பட
அப்பால் ஒன்பதும் அவற்றோ ரன்ன (14)

க-து : இதுவுமது.

உரை : பல்ல பல சில உள்ள இல்ல என்னும் பெயர்களும் வினைகாரணமாக வந்த பெயர்களும் பண்பு காரணமாக வந்த பெயர்களும் இவ் அளவினது எனக்கூறப்பெறும் எண்ணாற் குறிப்பிடப்பெற்றுவரும் பெயர்களும் ஒப்புப்பற்றி வரும் பெயர்களும் ஆகிய அக்கூற்று ஒன்பதும் மேலனவற்றொடு ஒத்த அஃறிணைப் பெயர்களாம்.

வருமாறு : பல்ல, பல, பல்லவை எனவும் சில்ல, சில, சில்லவை எனவும் உள்ள உள்ளவை எனவும் இல்ல, இல்லவை, இல எனவும்வரும். இவ்வைந்தும் கூறுபட்டுவந்தன.

வினைப் பெயராவன : வருவது, செல்வது - வருபவை, செல்பவை, உண்டது, உண்டன - இடிதாங்கி - சேர்ந்தாரைக் கொல்லி என்றாற்போல்வனவாம். பண்புகொள் பெயராவன : கரியது, கரியவை, வெளியது, வெளியவை நல்லது - நல்லவை - நெடியது - நெடியவை - இனியது - இனியவை என்றாற் போல வருவனவாம்.

எண்ணுக் குறிப்பெயராவன : பொருளையே சுட்டி வரும் ஒன்று, இரண்டு, பத்து, நூறு, ஆயிரம், கோடிஎன்றாற் போல்வன வாம். எண்ணுப் பெயர் என்னாது எண்ணுக்குறிப்பெயர் என்ற தனான் தாமரை, ஆம்பல், வெள்ளம் எனவரும் எண்ணுப் பெயர்களும்கொள்க.

ஒப்பின் ஆகிய பெயராவன : ஒப்புமை குறித்து உவம உருபிடைச் சொல் முதனிலையாகவரும் பெயர்களாம். அவை :- அன்னது, அன்னவை, போல்வது, போல்பவை, போன்றவை, ஒத்தது, என்றாற் போல வருவனவாம்.

வாள் போல இருப்பதனால் வாளை மீனுக்கு அப்பெயர் வந்ததாயினும் அங்ஙனம் ஒப்புமையாக்கத்தான் வரும் பெயர்கள் இயற்பெயராவதல்லது ஒப்பின் ஆகிய பெயராகா என அறிக. மேலன போல இவை தனிச் சொல்லாக நில்லாமல் வகைப்பட (இனம்) நிற்றலின் இவற்றை வேறு பிரித்தோதினார் என்க.

சூ. 170 : கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே
கொள்வழி யுடைய பலவறி சொற்கே [15]

க-து : அஃறிணை என்பது அவரலவும் பிறவுமாகிய பல்வேறு பொருள்களைப் பற்றி வருவதாகலின், உருவும், அருவும் காட்சியும் கருத்துமாகி இலங்கும் பல்வேறு பொருட்குத்தொன்று தொட்டுவழங்கி வரும் குறியீடுகள் யாவும், ஒருமைக்கும் பன்மைக்கும், பொதுவாய் இனப்பெயர்களாய் (சாதிப் பெயர்) அமைந்தவை என்பதும், அவை 'கள்' என்னும் ஈற்றிடைச் சொல்லோடு சிவணி நின்றவழித் திரிபின்றிப் பன்மைப்பால் உணர்த்தி நிற்கும் என்பதும் கூறுமுகத்தான் அஃறிணை இயற்பெயர்க்குரியதோர் இலக்கணமாமாறு கூறுகின்றது.

உரை : கள் என்னும் இறுதியொடு பொருந்திவரும் அஃறிணை இயற்பெயர்கள் பலவறி சொல்லாதற்கு உரியவாகக் கொள்ளும் முறைமை உடையனவாம். எனவே கள்ளொடு சிவணாதவழி ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் அத்திணைப் பொதுப் பெயராக நிற்கும் என்பதாம்.

அகரச்சுட்டு அஃறிணையாகிய திணையைச் சுட்டி நின்றது.

அவையாவன : மலை, கடல், நாடு, மரம், செடி, கொடி, யானை, குதிரை, நாரை, நந்து, மீன், பாம்பு, ஈ, எறும்பு, முதலியவாய உருவப்பொருள்களும் வளி, வான், முதலியவாய அருவப் பொருள்களும் செம்மை, கருமை, முதலியவாய காட்சிப் பொருள்களும், அன்பு, அறிவு, வன்மை, மென்மை முதலியவாய கருத்துப் பொருள்களும் பிறவுமாம்.

அவை கள்ளொடு சிவணியவழித் திரிபின்றிப் பால் உணர்த்துமாறு : மலைகள், யானைகள், மரங்கள், மீன்கள், வளிகள், செம்மைகள், அறிவுகள் எனவரும். கள்ளொடு சிவணாதவழிப் பாற் பொதுவாய் நிற்குமாற்றைப் "பன்மை சுட்டிய" (பெயரியல் 28) என்னும் சூத்திரத்தாற் கூறுப.

அஃறிணை இயற்பெயர் எனினும், அஃறிணை விரவுப்பெயர் எனினும் அஃறிணைப் பொதுப்பெயர் எனினும், பால்பகா அஃறிணைப் பெயர் எனினும் ஒக்கும். மக்கட் சாதி ஒன்றே யாதலின் அவர்கட்கு இட்டு வழங்குதற்கு இவ் அஃறிணையியற் பெயர்களே துணையாக அமைதலின் னஃகான் ஒற்றும் ளஃகான் ஒற்றும் இகரஈறும் பெற்று ஆண், பெண், என்னும் பாலுணர நிற்பினும் அவையெல்லாம் விரவுப் பெயராதற்குரியவாய் நிற்கும் என அறிக.

கள்ளீறு உயர்திணைக்கண் கொள்ளுதல் இலக்கண நெறி யன்றாம். துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல் மற்றையவர்கள் தவம் (திருக்குறள் 263) என வருமால் எனின் ? ஆண்டு அஃது மற்றையவர் என்னும் பன்மை பல்வேறு நிலையி லுள்ளார் யாவரையும் எஞ்சாமற் சுட்டுதற்பொருட்டு அர்எ ன்னும் விகுதி இடைச்சொல்லைப் பன்மைப் படுத்த வந்த விகுதிப் பொருள் விகுதி என்று உணர்க. கள்ளீறு உயர்திணைக்கண் வருங்கால் அஃது அர், ஆர், மார் என்னும் இடைச்சொற்களின் பின்னல்லது தனித்து வாராமையும் ஓர்ந்து கொள்க. இத் தமிழ் மரபு பேணாத பவணந்தி முதலானோர் கள்ளீறு உயர்திணை க்கண்ணும் வருதற்காம் எனக் கொண்ட கொள்கையை ஆயாது பின் பற்றியமையான் இற்றைக்கு மாற்றவியலாத அளவிற்கு அது பயில வழங்குவ தாயிற்று என்க.

சூ. 171 : அன்ன பிறவும் அஃறிணை மருங்கின்
பன்மையும் ஒருமையும் பாலறிவந்த
என்ன பெயரும் அத்திணை யவ்வே [16]

க-து : அஃறிணைப்பெயர்ச்சொல் பற்றிப் புறனடை கூறுகின்றது.

**உரை :** மேற்கூறப்பெற்ற பெயர்கள் போல்வனவும் பிறவும் அஃறிணையிடத்துப் பன்மைப்பாலும் ஒருமைப்பாலும் விளங்க வரும் எவ்வகைப் பெயர்களும் அஃறிணைக்கு உரியனவாகும்.

**எ-டு :** பிற, பிறிது - மற்றயவை, மற்றையது எனவும் நிலம், நீர் தீ எனவும் உண்ணல் தின்னல் எனவும் வரும் - பிற அமன்ன.

**சூ. 172 :** தெரிநிலை உடைய, அஃறிணை இயற்பெயர்
ஒருமையும் பன்மையும் வினையொடுவரினே

**க-து :** கள்ளொடு சிவணாத அஃறிணை இயற்பெயர்கள் பால் தெரியவருமாறு கூறுகின்றது.

**உரை :** பாற்பொதுவாக நிற்கும் அஃறிணை இயற்பெயர்கள் ஒருபாலுக்குரிய சிறப்பு வினையான் முடியவரின் ஒருமைப் பாலும், பன்மைப்பாலும் விளங்கும் நிலையினை உடையனவாம்.

**எ-டு :** யானை வந்தது-யானை வந்தன, மரம் வளர்ந்தது-மரம் வளர்ந்தன எனவும் வாய்மை நன்று, வாய்மை நல்ல எனவும் வரும். சிறப்புடைப் பொருளைத்தானினிது கிளத்தல் என்பதனான் "வினையொடுவரினே" என்றாராயினும் பால் காட்டும் பெயர்களான் தெரிநிலை உடையவாதலும் கொள்ளப் படும். **எ-டு :** ஆ ஒன்று - ஆ பல, யானை இது, யானை இவை - எனவரும்.

இஃது அஃறிணை இயற்பெயரின் இலக்கணமாயினும் அஃறிணைப்பெயர் வகை கூறிய அதிகாரத்துச் சேரவையாமல் அதன் புறனடைக்குப் பின்னும் ஓராற்றான் விரவுப் பெயரொடு ஒத்தலின் விரவுப்பெய ரதிகாரத்திற்கு முன்னும் வைத் தோதினார் என்க.

**சூ. 173 :** இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமையின்
திரிபு வேறுபடூஉம் எல்லாப் பெயரும்
நினையுங் காலைத் தத்தம் மரபின்
வினையொடல்லது பால் தெரி பிலவே (18)

**க-து :** நிறுத்த முறையான் இருதிணைப் பொதுப்பெயர் (விரவுப்பெயர்) இலக்கணம் பொதுவகையாற் கூறுகின்றது.

**உரை :** ஒருகால் உயர்திணையாயும் ஒருகால் அஃறிணை யாயும் பயனிலைக்கேற்பத் திரிந்து வேறுபடும் (விரவுப்) பெயரெல்லாம், இருதிணைக்கும் சொல்லாதற்கு ஒத்த உரிமை

யுடையனவாதலின், ஆராயுங்கால் அவை அவ்வத்திணைக்கு ஓதிய மரபினான் வரும் வினையானல்லது தனித்து நின்றவழி தாமேதிணைப் பகுதி விளங்க நிற்றல் இலவாம்.

எனவே, தத்தம் மரபின் வினையொடு வந்து பால் தெரிய நிற்கும் என்பதும், ஆண்டும் பொதுவினைவரின் விளங்க நில்லா என்பதும் கூறியவாறாம். பால் என்றது திணையாகிய பகுப்பினை. தத்தம் மரபின் வினையாவன :- கிளவியாக்கத்துள் கூறப்பெற்ற பதினோரீற்றுப் படர்கை வினைகளுள் பொதுப் பெயர்க்கு உரியவாய் வரும் வினைகளாம். பொதுவினையாவன: முன்னிலை வினைமுதலாக வினையியலுள் கூறப்படும் எண்வகை வினைகளாம்.

எ டு : சாத்தன் - வந்தான் சாத்தன் வந்தது. சாத்தி வந்தாள் - சாத்தி வந்தது. கோதை வந்தான்-கோதை வந்தாள் கோதை வந்தது - கோதை வந்தன, என இவை தத்தம்மரபின் வினைகளான்பால் தெரிய நின்றன. சாத்தா வந்தனை - சாத்தா வாழ்க - சாத்தன் வரும் என இவை பொது வினையான் வந்து பால் தெரிய நில்லாதன.

"வினையொடல்லது பால் தெரிபிலவே" என எதிர்மறை முகத்தாற் கூறினமையின் அவை தத்தம் மரபின் பெயரொடுவந்து பால் தெரியநிற்றலும் கொள்க. எ-டு : சாத்தன் ஒருவன்-சாத்தி ஒருத்தி, சாத்தன் அவன்-சாத்தி அவள் - சாத்தன் ஒன்று -சாத்தி ஒன்று சாத்தன் அது -"சாத்தி அது என வரும். ஒருவன் முதலாயஇப்பெயர்கள் முடிக்குஞ் சொல்லாய் வினைத்தன்மை யுற்று நிற்கும் என அறிக.

சூ 174 : நிகழூஉ நின்ற பலர்வரை கிளவியின்
உயர்திணை ஒருமை தோன்றலும் உரித்தே
அன்ன மரபின் வினைவயி னான. (19)

க.து தத்தம் மரபின் வினையானன்றி ஒருசார் பொது வினையான் வந்து பால் தெரிய நிற்றலும் உண்டு என மேலதற்கொரு புறனடை கூறுகின்றது.

உரை : நிகழ்காலம் பற்றி நின்ற "செய்யும்" என்னும் முற்றுச் சொல்லான் விரவுப் பெயர் உயர்திணை ஒருமை தோன்ற வருதலும் உரித்து, அத்தகைய மரபினை உடைய தொழில் பற்றிய வினையிடத்து. செய்யுமென்னுமுற்று எதிர்காலத்திற்கும் உரித்தாகலின் இம்மரபு நிகழ்வினை உணர்த்தி நிற்குமிடத்து என்பது விளங்க "நிகழூஉ நின்ற கிளவி" என்றார்.

பலர்வரைகிளவி என்றது. பின்னர் "பல்லோர் படர்க்கை முன்னிலைத் தன்மை அவ்வயின் மூன்றும் நிகழுங்காலத்துச் செய்யும் என்னும் கிளவியொடு கொள்ளா" (வினை - 30) என விதிக்கப் பெறுதலின் செய்யும் என்னும் வினைமுற்றினை என்பது விளங்கும்.

**வரலாறு** : சாத்தன் நகைக்கும். சாத்தி (உணவு) சமைக்கும் எனவரும் நகைத்தலும் சமைத்தலும் எவ்வாற்றானும் அஃறிணைக்கு இயையாமையின் சாத்தன் சாத்தி என்பவை உயர்திணை ஒருமையாகிய ஆடூஉவையும் மகடூஉவையும் உணர்த்தி நின்றவாறு கண்டுகொள்க.

அன்னமரபின் வினைவயினான் உயர்திணை ஒருமை, பால்வரை கிளவியான் தோன்றலும் உரித்து எனக்கூட்டிப் பொருள் கொள்க. உம்மை எதிர்மறையாகலான், நூல்சமைக்கும் உணவு உண்ணும் என்றாற் போல வரும் பலர்வரை கிளவியான் தோன்றாமையும் உரித்து எனக் கொள்க. சமைத்தல் - கூடு சமைத்தல். எனப்பிற பொருள் பற்றிவரின் வரைந்துணர்த்தாமை யின் "அன்னமரபின் வினைவயினான" என்றார்.

இனி, சாத்தா நகைத்தனை. நகைக்க! எனவும் நகைத்த சாத்தன், சாத்தன் நகைத்து நின்றான் எனவும் வரும் முன்னிலை வினையானும் வியங்கோள் வினையானும் இருவகை எச்சத் தானும் உயர்திணை ஒருமை தோன்றுதலின் "செய்யும்" என்னும் நிகழ்கால முற்றுவினை ஒன்றையே விதந்து கூறிய தென்னை எனின்? முன்னிலை வியைாற் பாலறியுமாறு "முன்னஞ் சேர்த்தி முறையின் உணர்தல்" என்னும் விதியாற் பெறப்படுதலானும் வியங்கோள்வினை எதிர்காலத்திற்குரியதாய், வேண்டுவோன் விரும்பிக் கூறுதலன்றி அத்தொழில் நிகழ்தல் உறுதிப்பாடு டையதன்மையானும், இருவகை எச்சமும் முடிக்குஞ் சொற்களான் பாலறியப்படுதலானும் அவற்றை நீக்கிச் செய்யும் என்னும் கிளவியை விதந்தோதினார் என்க.

இம்மரபு நோக்காமல் வியங்கோளானும் இருவகை எச்சத் தானும் சிறுபான்மை உயர்திணைப்பால் தோன்ற நிற்றல் ஒன்றென முடித்தலாற் கொள்க என்பார் சேனாவரையர். மேலும் அவர்காட்டிய யாழ் எழூஉதல் - சாந்தரைத்தல் என்பவை அனனமரபின் வினையாதற் கேலாமையும் அறிக. ஓர் அஃறிணைஒருமை நிகழ்த்தும் எத்தகைய வினையாயினும் அதனை ஓர் உயர்திணை ஒருமை நிகழ்த்தும் அறிவாற்ற லுடைமையின் உம்மையான் அஃறிணைப்பால் தோன்ற நிற்றலும் கொள்க என்பார் உரைபொருந்தாமையறிக.

சூ 175 : இயற்பெயர் சினைப்பெயர் சினைமுதற்பெயரே
முறைப்பெயர்க் கிளவி தாமே தானே
எல்லாம் நீயிர் நீயெனக் கிளந்து
சொல்லிய அல்ல பிறவும் ஆஅங்கு
**அன்னவை தோன்றின் அவற்றொடுங் கொளலே**

க-து : விரவுப்பெயர்கள் பாகுபாடுற்று நிற்குமாறு கூறுகின்றது.

உரை : இயற்பெயர் முதலாக நீ என்பது ஈறாகச் சொல்லப் பெற்றனவும், அவையல்லாத பிறவும் விரவுப் பெயரிடத்து அத்தகையவாய்த் தோன்றின், அவ் இயற்பெயர் முதலாய வற்றொடு கூட்டிக் கொள்க.

''அவற்றொடும்'' என்னும் உம்மை அன்னவையாகத் தோன்றி வருவன உயர்திணைக்குரியவாய் நின்று செய்யுள் வழக்கானே விரவுப் பெயராயும் வரும் என்பது தோன்ற நிற்றலின் எச்சவும்மையாம்.

இயற்பெயராவது : சாத்தன் கொற்றன் என யாதானுமோர் காரணத்தான் தோன்றிய சொல்லை அக்காரணம் கருதியும் கருதாமலும் ஒருமுதற் பொருளுக்கு இட்டு வழங்குதற் பயத்தவாய் நிகழும் இடு பெயர். இயற்பெயரெனிலும் முதற்பெயர் எனினும் ஒக்கும். சினை முதலிய நிமித்தமின்றிக் குறியீடாய் வழங்கப் படுதலின் இயற்பெயரெனப்பட்டது.

சினைப்பெயராவது :- நெடுஞ்செவியன் செங்கண்ணன், முடவன், கூனன் எனச் சினை நிமித்தமாக அச் சினையை உடைய முதற்பொருளுக்கு வழங்கும் பெயர். சினைமுதற் பெயராவது : குறுங்கைக் கொற்றன் நெடுஞ்செவிச் சாத்தன் கொடும்புறமருதி எனச் சினைப் பெயரும் முதற் பெயரும் இணைந்து ஒரு சொல் நீர்மைத்தாய் முதற் பொருளுக்கு வழங்கும் பெயர்.

முறைப் பெயராவது :- தாய், தந்தை, மகன், மகள், என ஒன்றனொடு ஒன்றற்குப் பிறப்புத் தொடர்பாய காரணத்தான் அமைந்துவரும் பெயர். தாம், தான், எல்லாம் நீயிர், நீ என்பவை தம்மை உணர்த்தி நின்றன.

அன்னவையாகத் தோன்றி வருவன : பொன்னன்-மலையன் என்றாற் போலப் பொருள் பற்றியும், காடன், நாடன், நடுவன் என்றாற் போல இடம்பற்றியும் வேனிலான்-சித்திரையான்

என்றாற்போலக் காலம்பற்றியும் கரியன் வெளியன் என்றாற் போலப் பண்புபற்றியும், ஊணன் நடையன் என்றாற்போலத் தொழில் பற்றியும், மூப்பன், சின்னான் என்றாற்போல அகவை பற்றியும் இவையல்லாத பிறபொருள் பற்றியும் வரும் ஆண்மைப் பெயர்களும், இவ்வடிப்படையாக வரும் ஏற்புடைய பெண்மைப் பெயர்களும், மக, குழவி என முறைப்பெயர்க்கு இனமாக வரும் பெயர்களுமாம்.

இவை பெரும்பான்மையும் உயர்திணைக்கண் ஆக்கமுற்று அமைந்து, செய்யுள் வழக்கானும் சிறுபான்மை உலகவழக்கானும் அஃறிணைக்கண் சார்த்தி வழங்கப்படும் என்பது தோன்ற "ஆங்கு அன்னவை தோன்றின்" என்றும், "அவற்றொடுங் கொளல்" என்றும் கூறினார். நீயிர் என்பது இடைக்குறையாய் நீர் என நின்றதாயினும் அதனையும் சான்றோர் வழக்கு நோக்கி ஒரு பெயராகக் கொள்க.

சூ. 176 : அவற்றுள்
நான்கே இயற்பெயர் நான்கே சினைப்பெயர்
நான்கென மொழிமனார் சினைமுதற் பெயரே
முறைப் பெயர்க்கிளவி இரண்டா கும்மே
ஏனைப் பெயரே தத்தம் மரபின [21]

க-து : மேலைச் சூத்திரத்துத் தொகுத்துக்கூறிய விரவுப்பெயர்களை விரித்துக் கூறுகின்றது.

உரை : மேற்கூறிய விரவுப் பெயர்களுள், இயற்பெயர் முதலிய மூன்றும் ஒவ்வொன்றும் நான்கு கூற்றன. முறைப்பெயர் இரண்டு கூறாகும். ஏனையவை தனித்தனியாக நிற்கும் இலக்கணத்தனவாகும்.

ஆக, கிளந்தோதிய விரவுப் பெயர்கள் பத்தொன்பது கூறுபாட்டின என்பதாயிற்று. விரவுப் பெயர்களின் விரி என்னும் ஒரு பொருள் பற்றிநிற்றலின் ஒரு சூத்திரமாகக் கொள்ளப் பெற்றது. மூன்றாகப் பிரித்துக் கோடலுமாம்.

சூ. 177 : அவைதாம்
பெண்மை இயற்பெயர் ஆண்மை இயற்பெயர்
பன்மை இயற்பெயர் ஒருமை இயற்பெயர் என்று
அந்நான்கு என்ப இயற்பெயர் நிலையே (22)

சூ. 178 : பெண்மைச் சினைப்பெயர் ஆண்மைச் சினைப்பெயர்
பன்மைச் சினைப்பெயர் ஒருமைச் சினைப்பெயர் என்று
அந்நான் கென்ப சினைப்பெயர் நிலையே(23)

சூ. 179 : பெண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
ஆண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
பன்மை சுட்டிய சினைமுதற் பெயரே
ஒருமை சுட்டிய சினைமுதற் பெயரென்று
அந்நான் கென்ப சினைமுதற் பெயரே (24)

சூ. 180 : பெண்மை முறைப்பெயர் ஆண்மை முறைப்பெயரென்று
ஆயிரண்டென்ப முறைப்பெயர் நிலையே (25)

பொருளியைபுகருதி இந்நான்கு நூற்பாக்களுக்கும் ஒருங்கு பொருள் கூறப்படுகின்றது.

க-து : இவை மேலைச் சூத்திரத்து நான்கு இரண்டு எனப் பெற்றவை இவை என அவற்றின் பெயரும் முறையும் பற்றிக் கூறுகின்றன.

உரை : சூத்திரத்தானே பொருள் விளங்கும்.

ஈண்டுப் பன்மைப்பெயர் என்றது கள்ளொடு கூடாத அஃறிணை இயற்பெயராகிய பெயர்களை. என்னை ? "பாலறி கிளவியான் வரும் பன்மைப் பெயர்கள் விரவிவாராமையான் என்க. பாலறி கிளவிகளாவன அர், ஆர், ப, மார், அ, வ, என்பவை.

பேணுதல் தன்மையும் ஆளுதல் தன்மையும் ஆகிய மக்கட் பண்பு அஃறிணைக்கின்மையின் பெண்மை ஆண்மை என்றது உறுப்பளவான் கூறப்பட்டது போலும் எனக் கொள்ளற்க என்பார் பெண்மை சுட்டிய ஆண்மை சுட்டிய என்றும், பொதுப்பெயராகி நிற்கும் ஒரு பெயரே முடிக்குஞ் சொல்லான் பன்மை ஒருமை களைச் சுட்டி நிற்றலின் "பன்மைசுட்டிய ஒருமைசுட்டிய" என்றும் கூறினார். 'சுட்டிய' என்பதனை முறைப்பெயர் என்பத னொடும் கூட்டிப் பொருள் கொள்க. வினைச்சொற் போல ஈற்றான் பால்விளக்குதல் விரவுப் பெயர்க்கின்மையின் ஈறுகருதாது குறித்துக் கொள்ளப்படுதலின் "சுட்டிய" என்றார் என்க.

பெயர்ச்சொற்களின் வகை கூறத்தொடங்கி உயர்திணைப் பெயர்களை ஈற்றுவகையான் அவன், இவன், உவன் எனக் கூறியதனான் ஆண்மைப் பெயர்க்குரியவை னகர ஈற்றுச்

சொற்கள் எனவும் அவள், இவள், உவள் எனவும் பெண்மை யடுத்த இகர இறுதி எனவும் கூறியதனான் பெண்மைப் பெயர்க் குரியவை ளகர ஈறும் இகர ஈறும் எனவும் கொள்ளவைத் தமையான் ஆண்மை சுட்டிய விரவுப் பெயரும் பெண்மை சுட்டிய விரவுப் பெயரும் அவ்வவ் ஈறுகளான் வருமென்பதும், அது, இது, உது முதலியவாக விதந்தோதிய சொற்கள் பால் காட்டி நிற்றலின் அவை உயர்திணைக்கண் சென்று விரவா என்பதும் "தெரிநிலை உடைய அஃறிணை இயற்பெயர்" என்னும் சூத்திரத்தான் பன்மையும் ஒருமையும் சுட்டி வரும் விரவுப் பெயர்கள் இடுபெயராகிய இயற்பெயராயே வருமென்பதும் அவ் அஃறிணை இயற்பெயர்களே உயர்திணைக்கண் சென்று விரவும் என்பதும் அச்சூத்திரங்களான் பெறப்பட வைத்தமையின் ஆசிரியர் விரவுப் பெயர்கள் இவை என எடுத்தோதாமல் "திரிபு வேறுபடூஉம்" என அதன் இலக்கணத்தை மட்டுமே கூறித் தன்மை காரணமாகவும், ஒருமை பன்மை காரணமாகவும் முறைப் பெயர் இடப்பெயர் ஒழிந்தவற்றை, நான்கு கூறுகளாக வகுத் தோதினார் என்க. அங்ஙனம் ஓதியவாற்றான் அப்பதினான்கு பெயர்களுள் பெண்மைப் பெயர் நான்காயும் ஆண்மைப்பெயர் நான்காயும், பன்மைப்பெயர் மூன்றாயும் ஒருமைப்பெயர் மூன்றாயும் நிற்குமாறறிந்து கொள்க.

இனி, இயற்பெயர் முதலாக ஓதியவற்றுள் முறைப் பெயர்கள் பல்லோர்க் குறித்த முறைநிலைப் பெயரே (பெயரியல்-11) என்றதனான் ரகர ஈற்றொடு வருவழி உயர்திணைக்கே உரியவாயும் "கள்" ஈற்றொடு வருவழி அஃறிணைக்கே உரியன வாகவும் நிற்றலின், விரவுப் பெயராதற்கண் பிற இடைச் சொற்களொடு கூடாமல் செம்மொழியாயே நிற்கும் என்பதும், பல்லோர்க் குறித்த திணை நிலைப்பெயர் யாவும் உயர் திணைக்கே உரிய எனக் கூறினமையான் (பெய - 12) பல்லோரறியும் சொற்கள் விரவுப் பெயராக வாரா என்பதும். "கள்ளொடு சிவணும் அவ்வியற்பெயரே கொள்வழியுடைய பலவறி சொற்கே" என்றமையான் அஃறிணை இயற்பெயர், கள்ளீற்றொடு பொருந்தி நிற்குமிடத்து அவையும் விரவுப் பெயராக வாரா என்பதும் பெறப்படும். எனவே பன்மை விரவுப்பெயர், ஒருமை விரவுப் பெயர் என்பவை கள்ளொடு சிவணாது செஞ்சொல்லாக வரும் அஃறிணை இயற்பெயர்களே என்று தெளியப்படும்.

இனி, ஆண்மை, பெண்மை, ஒருமை, பன்மை என முறையிற் கூறாதது என்னை எனின்? னகர ஈறுபற்றி வரும் ஆண்மைப்

பெயர்கள் இருதிணைக்கண்ணும் ஆண்மையை மட்டுமே சுட்டி வருதலும் இகர ஈறுபற்றி வரும் விரவுப் பெயர்கள் பெண்மையையே அன்றிச் செவியிலி முதுகுடுமி என ஆண்மையையும், ஒருமையை யும் சுட்டி வருதலுமாகிய சிறப்பு நோக்கிப் பெண்மைப் பெயர் முன்வைக்கப்பட்டது. அஃறிணை இயற்பெயர்கள் யாவும் சாதிப் பெயர்களே யாதலின் அவை பன்மைக்கருத்துடையவேயாம். அங்ஙனம் பன்மைக்குறியீடாகிய சொல்லே ஒருமையையும் உணர்த்திநிற்றல் நோக்கிப் பன்மைப் பெயர் முன் வைக்கப் பட்டதென்க.

அதனான் உயர்திணையாகிய இனத்தைச் சுட்டும் பெயரை மாந்தர், மக்கள் எனத் தமிழ் நூலார் பன்மைவாய்பாட்டான் ஓதி மாந்தன், மாந்தி மக்கன் மக்கி என ஒருமைப்பால் ஓதா ராயினர். உயர்திணையுள் மாந்தர் என்னும் பெயர்வழிஆடூஉவறி சொல்லும் மகடூஉவறி சொல்லும் பெறுதல் வேண்டிய சான்றோர் மாந்தரன், மாதராள் என ஆக்கஞ் செய்து கொண்டனர். மாந்தரன் என்பது மைந்தன் எனவும் மாதராள் என்பது மாதரார் மாதரி எனவும் இடைக்காலச் சான்றோரான் வழங்கப் பெறலாயின என்க. இந்நெறி பற்றியே தெய்வங்களின் வேறு பட்ட முழுமுதற் பொருளாகிய பரம்பொருளை இறைவன், முனைவன், பரமன் என ஒருமைச் சொல்லான் சான்றோர் வழங்கினர் எனத் தெளிக.

**சூ. 181 :** பெண்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருத்திக்கும் ஒன்றிய நிலையே

**க-து :** பெண்மை சுட்டிய பெயர் இருதிணைக்கண்ணும் விரவுமாறு கூறுகின்றது.

**உரை :** பெண்மை சுட்டி வரும் விரவுப் பெயர் நான்கும் அஃறிணைப் பெண்மைப் பொருள் ஒன்றற்கும், உயர்திணை மகடூஉவிற்கும் பொருந்திய நிலையினவாம். நான்காவன : இயற் பெயர், சினைப்பெயர், சினைமுதற்பெயர், முறைப்பெயர் ஆயவை. ஆண்மை சுட்டிய பெயர்க்கும் இஃதொக்கும்.

**எ-டு :** சாத்தி வந்தது-சாத்தி வந்தாள். முடத்தி வந்தது- முடத்தி வந்தாள். முடக்கொற்றி வந்தது - முடக்கொற்றி வந்தாள். தாய் வந்தது - மகள் வந்தது - தாய் வந்தாள் - மகள் வந்தாள் எனவும், சாத்தி ஒன்று - சாத்தி ஒருத்தி. சாத்தி இது - சாத்தி இவள் எனவும் வரும். ஒன்று என்பது ஆண்மை பெண்மைகட்குப் பொதுவாயினும் பெண்மை சுட்டிய என்பதனாற் பெண்மைப் பொருள் என்பது பெறப்படும்.

சூ. 182 : ஆண்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருவற்கும் ஒன்றிய நிலையே

க-து : ஆண்மை சுட்டிய விரவுப் பெயர் இருதிணைக்கண்ணும் விரவு வருமாறு கூறுகின்றது.

உரை : ஆண்மை சுட்டிவரும் விரவுப்பெயர் நான்கும் அஃறிணை ஆண்மைப் பொருள் ஒன்றற்கும் உயர்திணை ஆடூஉ விற்கும் பொருந்திய நிலையினவாகும்.

எ-டு : சாத்தன் வந்தது - சாத்தன் வந்தான். முடவன் வந்தது - முடவன் வந்தான். முடக்கொற்றன் வந்தது - முடக் கொற்றன் வந்தான். தந்தை வந்தது. தந்தை வந்தான், மகன் வந்தது, மகன் வந்தான். எனவும், சாத்தன் ஒன்று - சாத்தன் ஒருவன் - சாத்தன் இது - சாத்தன் இவன் எனவும் வரும்.

சூ. 183 : பன்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றே பலவே ஒருவர் என்னும்
அன்றிப் பாற்கும் ஓரன் னவ்வே (28)

க-து : பன்மை சுட்டிய விரவுப் பெயர் இருதிணைக்கண்ணும் வருமாறு கூறுகின்றது.

உரை : பன்மை சுட்டிவரும் மூன்று பெயரும் அஃறிணைப் பொருள் ஒன்றற்கும், அத்திணைப்பலவிற்கும் உயர்திணை ஆடூஉ மகடூஉ வாகிய இரண்டற்குமுரிய ஒருவர் என்று சொல்லப்படும் அவ் விருபாற்கும் ஒத்த உரிமையவாம்.

மூன்றாவன :- இயற்பெயர் - சினைப்பெயர் - சினை முதற் பெயர் ஆகியவை. ஒருமை சுட்டிய பெயர்க்கும் இஃதொக்கும்.

"ஒன்று - பல" என்றதனான் அவை அஃறிணை என்பதும் 'ஒருவர்' என்றதனான் அஃது உயர்திணை என்பதும் பெறப் பட்டன. ஒருவர் என்னும் பெயர்நிலைக்கிளவி இருபாற்கும் உரித்தே தெரியுங்காலை (பெயரியல் - 31) என்பதனான் ஒருவர் என்றது ஆடூஉ மகடூஉ வாகிய இரண்டும் என்பது புலப்படும்.

அகரச்சுட்டு 'அன்றி' எனத்திரிந்து நின்றது. உரை யாசிரியன்மார் என்றிப்பாற்கும் எனப்பாடங்கொண்டனர். "என்னும்" என முற்கூறிய பின்னர் அப்பொருட்டாகிய என்று என்பதனைப் பின்னும் கூறுதல் பொருந்தாமையறிக. அன்றி என்னும் அகரச் சுட்டினது இன்றியமையாமையை அவர் ஓர்ந்திலர்.

ஒன்றே பலவே என்னும் ஏகாரம் எண்ணேகாரம் "பாற்கும்" என்னும் உம்மை எச்சவும்மை. இவ்வும்மையை எண்ணும்மையாகக் கருதி மயங்கினர் உரையாசிரியன்மார்.

எ-டு: யானை வந்தது-யானை வந்தன, யானை வந்தாள்-யானை வந்தான் எனவும், நெடுங்கழுத்தல் வந்தது - வந்தன, வந்தாள் - வந்தான் எனவும் பெருங்கால் யானை வந்தது - வந்தன - வந்தாள் - வந்தான் எனவும் வரும்.

அஃறிணை இயற்பெயர்களே பன்மை விரவுப் பெயராக வருதற்குரியவை என்பது மேல் விளக்கப்பெற்றது. அவை உயர்திணைக்கண் இடுகுறியாய் வழங்கற்பயத்தவாய் வருமென்பதும் ஆண்டு விளக்கப்பட்டது. அங்ஙனம் அஃறிணைக்கு உரிமையுடைய அவ்இயற்பெயர்கள் இடுபெயராய் உயர்திணையுள் இருவகை ஒருமைப்பாற்கும் சென்று விரவுதலின் அப்பெற்றி தோன்ற "ஒருவர் என்னும் அன்றிப்பாற்கும்" என விதந்து சுட்டி எச்ச உம்மை கொடுத்தோதினார் என்க.

சேனாவரையர் பன்மைசுட்டிய பெயர் பன்மையையேயன்றி ஒருமையையும் சுட்டுதல் பொருந்துமோ? என்னும் தடையை எழுப்பி வடமொழியாளர் கூறும் விசேடண விசேடிய இலக்கணத்தைச் சுட்டி அமைதி கூறுவாராயினர். சங்கர நமச்சிவாயர் முதலானோர் இருதிணைக்கண்ணும் பன்மைசுட்டி வருதலையே இச்சூத்திரம் கூறுவதாக வலிந்து விளக்கங் கொண்டனர். பிற்கால உரை விளக்கத்தாரும் இக்கால ஆய்வாளரும் தத்தமக்குத்தோன்றியவாறெல்லாம் விளக்குவர்.

இவர் யாவரும் தமிழியல் மரபையும் ஆசிரியர் மிக நுட்பமாக அமைத்துச் செல்லும் சூத்திர நடையையும் நன்கு கருதாமல் நன்னூல் முதலிய பின்னூல்களின் தாக்கத்தானும், வடமொழி மரபுகளை அடிப்படையாகக் கொள்வதானும் இங்ஙனம் போலி உரைகளைப் படைத்தனராவர். என்னை?

இன்னதிணைக்கு உரியவை என்னும் சிறப்புரிமை பெறாத பொதுப்பெயர்கள் இருதிணை ஐம்பாற்குரிய சிறப்பு வினைகளுள் (சிறுபான்மை சிறப்புப் பெயர்களுள்) ஒன்றனை எய்திமுடியுங்கால் பொதுமை நீங்கி இருதிணைகளுள் ஒன்றனுள் அடங்கும் என்பது விரவுப் பெயர்க்குரிய இலக்கணமாம். அங்ஙனம் அவை தத்தம்மரபின் வினையொடு கூடிநில்லாமல் தனித்துநிற்கும் நிலைமைக்கண் அவை விரவுப் பெயர் எனப்படுகின்றன. ஆதலின் அவை இருதிணைக்கண்ணும் வினைநோக்கி விரவு மாற்றை ஆய்ந்து விளக்குதலே ஈண்டு ஆசிரியர் நோக்கமாகும்,

அம்முறைமையான் முதற்கண் அப் பொதுப் பெயர்களை காரணம்பற்றியும் தன்மைபற்றியும் தொகுதியாகவும் தனியாகவும் வகுத்துக் கொண்டு அவற்றிற்குக் குறியீடுதருகின்றார். அக்குறி யீடுகளுள் பெண்மைப்பெயர் ஆண்மைப் பெயர் என்பவை தன்மைபற்றியும்-ஒருமை பன்மை என்பவை பால் (எண்) பற்றியும் வந்த குறியீடுகளாகும்.

அப்பொதுப் பெயர்கள் இருதிணைக் கண்ணும் விரவுங்கால் அவ்வத்திணைக்கண்] அமைந்துள்ள பால்களொடு விரவுதல் வேண்டும். உயர்திணைக்கண் மூன்றுபாலும் அஃறிணைக்கண் இரண்டுபாலும் உள, (அஃறிணை ஒருமைப்பாலுள் ஆண்மை பெண்மை உடையனவும் இரண்டும் இல்லாதனவும் உள.) உயர்திணைக்குரிய பால்களுள் பல்லோரறியுஞ்சொல் விரவுதலின் மையின் அவை ஒழிந்த இரண்டுபாலொடு மட்டுமே பொதுப் பெயர் விரவிவரும். எனவே, இருதிணைக்கண்ணும் பொதுப் பெயர்கள் விரவுங்கால் ஆண்மை, பெண்மை, ஒருமை, பன்மை என்பவற்றொடு விரவும் என்பதைத் தெளியலாம்.

அதனான், பெண்மை இயற்பெயர் முதலாக ஒவ்வொன்றையும் எடுத்துக் கொண்டு ஒவ்வொன்றும் இருதிணைக்கண்ணும் உள்ள ஆண், பெண், ஒன்று, பல என்பனவற்றுள் எவ்வெவ்வற்றொடு விரவுகின்றது என்பதனை ஆய்ந்து காணுங்கால், பெண்மைப் பெயர் நான்கும் உயர்திணைப் பெண்ணொடும் அஃறிணைப் பெண்ணொடும் விரவுதலையும் ஆண்மைப் பெயர் நான்கும் அவ்வாறே இருதிணை ஆணொடு விரவுதலையும் காணலாம். பன்மைப்பெயர் என்பது பால்பகா அஃறிணைப் பெயர்களே யாதலின் அவை அஃறிணையில் ஒன்றனொடும், பலவினொடும் உயர்திணையுள் ஆணொடும் பெண்ணொடும் விரவுதலை நோக்கி ஆசிரியர் பன்மை சுட்டிய எல்லாப் பெயரும் இந்நான்கு பாலொடும் விரவி வரும் என்றும் கூறினார். அவ்வாறே ஒருமை சுட்டிய பெயர் இருதிணையுள்ளும் உள்ள மூன்று ஒருமைப் பாலொடு விரவும் என்று கூறுவார். எனவே, பெண்மை இயற் பெயர் முதலாய பதினான்கு பொதுப் பெயர்களும் இருதிணைக் கண்ணும் சென்று விரவுதலைப்பற்றியனவே இவ்விலக்கண விதிகள் என்பதைத் தெளியலாம். மற்று ஒவ்வொரு விரவுப் பெயரும் எவ்வப்பால்களைக் காட்டும் என்பதோ, எவ்வப் பால்களை ஏற்கும் என்பதோ ஈண்டு ஆராய்ச்சி இல்லை என்பதும் புலனாகும்.

ஆகவே, நூல்நெறியையும், விதியையும், விதிக்கப் பெறுவதனையும் நோக்காமல் "பன்மைப்பெயர்" என்பதைக்

கிழமைப் பொருளாகக்கருதிக் கொண்டு பன்மைசுட்டிய பெயர் என்பது பன்மைப்பாலையே சுட்டவேண்டும் அல்லது ஏற்க வேண்டும் என எண்ணி இடர்ப்படுதல் மயக்க உணர்வாதலறிக. மற்றும் பன்மைசுட்டிய பெயர் என்றது பன்மைக்குரிய வடிவான் அமைந்த பெயரன்றாம். பன்மைவினையொடு முடியுங்கால் அம்முடிபு நோக்கி நின்ற பெயராகும். சொல்வடிவு பன்மைபற்றி நிற்குமாயின் அஃது இருதிணையுள் ஒன்றனுள் அடங்குதலன்றி விரவும் பெயர் ஆகாது என அறிக.

தமிழ்நெறியறியாத பவணந்தியார் உரையாசிரியர் வழிநின்று "அவற்றுள், ஒன்றே இருதிணைத் தன்பாலேற்கும்" என்றார் இதன் பிழைபாடுகளை விரிக்கின் பெருகு மென்க.

சூ. 184 : ஒருமை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருவர்க்கும் ஒன்றிய நிலையே

க-து : ஒருமை விரவுப்பெயர் இருதிணைக்கண்ணும் வருமாறு கூறுகின்றது.

உரை : ஒருமை சுட்டி வரும் பெயர் மூன்றும் அஃறிணைப் பொருள் ஒன்றற்கும் உயர்திணை ஒருமை இரண்டற்கும் பொருந்திய நிலையினவாம். பெண்மைப் பெயரும் ஆண்மைப் பெயரும் ஒருமையே எனினும் அவை சொல்லளவில் தம் தன்மை யுணர நின்று, ஒருமையைச் சுட்டும் நோக்கின்றிப் பெண்மை ஆண்மை என்னும் பொருட்டன்மை காட்டி வரும். ஒருமை சுட்டிய பெயர் சொல்லளவில் பெண்மைத் தன்மையும் ஆண்மைத் தன்மையும் இன்றி ஒருமைப் பாலாகிய நிலையைச் சுட்டிவரும் என்க.

எ. டு : கோதை வந்தது, கோதை வந்தான், கோதை வந்தாள் எனவும் செவியிலி வந்தது, செவியிலி வந்தான், செவியிலிவந்தாள் எனவும் கொடும் புறமருது வளர்ந்தது, கொடும் புறமருது வளர்ந்தான், கொடும்புறமருது வளர்ந்தாள் எனவும் வரும். கோதை இது, கோதை இவன் - கோதை இவள் எனவும் வரும். (மருது - மருதமரம்) கொடும்புறமருதி - கொடும்புற மருதன் என்பவை ஈற்றான் பெண்மை ஆண்மைகளை உணர்த்தி நிற்றலின் அவை காட்டாதல் பொருந்தா என்க.

சூ. 185 : தாமென் கிளவி பன்மைக்குரித்தே [30]

க-து : தத்தம்மரபினவாய் வரும் பொதுப் பெயருள் 'தாம்' என்பது இருதிணைக் கண்ணும் வருமாறு கூறுகின்றது.

உரை : தாம் என்னும் பொதுப்பெயர் இருதிணைக்கண்ணும் பன்மைப்பாலுக்கு உரித்தாய் வரும்.

எ-டு : தாம் வந்தார், தாம் வந்தன எனவும் தாம்பலர்-தாம் பல எனவும் வரும்.

சூ. 186 : தானென் கிளவி ஒருமைக் குரித்தே (31)

கு-து : தானென்னும் பொதுப்பெயர் இருதிணைக்கண்ணும் வருமாறு கூறுகின்றது.

உரை : தான் என்னும் பொதுப்பெயர் இருதிணைக்கண்ணும் ஒருமைப்பாலுக்கு உரித்தாய் வரும்.

எ-டு : தான் வந்தான், தான் வந்தாள், தான் வந்தது எனவும் தான் ஒருவன், தான் ஒருத்தி, தான் ஒன்று எனவும் வரும்.

சூ. 187 : எல்லாம் என்னும் பெயர்நிலைக் கிளவி
பல்வழி நுதலிய நிலைத்தா கும்மே [32]

கு-து : எல்லாம் என்னும் பொதுப்பெயர் இருதிணைக்கண்ணும் வருமாறு கூறுகின்றது.

உரை : எல்லாம் என்னும் பெயர்நிலைமையாகிய பொதுச்சொல் பன்மைப் பாலைக்கருதிய நிலைமைத்தாகும்.

இப்பொதுப்பெயர் உயர்திணைக்கண் வருங்கால் தன்மைப் பன்மைக் கண்ணும் அஃறிணைக்கண் வருங்கால் படர்க்கைப் பன்மைக் கண்ணும், முன்னிலைப்பன்மைக் கண்ணும் வருதலின் பன்மை என்னாது “பல்வழி” என வாய்ப்பாடு வேறுபடுத்திக் கூறினார் என்க.

எ-டு : எல்லாம் வந்தேம் எனவும் எல்லாம் வந்தன-எல்லாம் வந்தீர், எனவும் வரும், எல்லாம் யாம்-எல்லாம் அவை, எல்லாம் நீயிர் எனவும் வரும்.

எல்லாம் என்னும் சொல் தலையெல்லாம் நொந்தது. மேனி எல்லாம் பசந்தது என எஞ்சாப் பொருட்டாய் வருமிடத்து அஃது உரிச்சொல் நிலைமை எய்துதலின் “பெயர் நிலைக்கிளவி” என்றார். எல்லாம் என்னும் உரிச்சொல்வேறு-எல்லாம் என்னும் பெயர்வேறு. உரிச்சொல்லாய வழி ஒருமை வினையான் முடியும்-பெயராவழி பன்மையான் முடியும் என அறிக.

சினை என்பது ஒரு பொருளின் பகுதியேயாதலின் "ஒருவழி உறுப்பு" என்றது போல ஒரு பொருளின் பகுதிகளைக் குறிக்கும் போது பன்மையாகலின், பொருட் பன்மையேயன்றி இடப்பன்மையும் அடங்கப் பல்வழி என்றார். அது நிலமெல்லாம் செழித்தன, ஊரெல்லாம் திரண்டன என்றாற்போல வரும். அங்ஙனம் வருதலும் கொள்க. எல்லாம் என்பதுஉயர்திணைக்கண் தன்மைப் பன்மைக்கே வரும் என்பதும், எல்லாம் வந்தீர் என்னுமிடத்து அஃது அஃறிணை முன்னிலையே என்பதும் வருஞ்சூத்திரத்தாற் பெறப்படும்.

சூ. 188 : தன்னுள் ளுறுத்த பன்மைக் கல்லது
உயர்திணை மருங்கின் ஆக்க மில்லை [33]

க-து : எல்லாம் என்னும் பெயர் நிலைக்கிளவி இருதிணைக்கண்ணும் விரவும் வழி இடம் வரையறுக்கின்றது.

உரை : மேற்கூறிய எல்லாம் என்னும் பொதுப்பெயர் உயர்திணையிடத்து விரவுங்கால் தன்மைப்பன்மைக்கல்லது ஏனை ஈரிடத்தும் விரவுதலில்லை.

தன்மைச்சொல் அஃறிணைக்கின்மையின் தன்னுள்ளுறுத்த என்றதனான் உயர்திணை என்பது பெறப்படும். எல்லாம்என்னும் சொல் எல்லாரும், எல்லீரும் எனத்திரிந்து முறையே உயர்திணைக்கண் படர்க்கையினும் முன்னிலையினும் வருமிடத்து அவை விரவுப் பெயராகா என்க. இதனை, "எல்லாரும் என்னும் படர்க்கை இறுதியும், எல்லீரும் என்னும் முன்னிலை இறுதியும்" (உருபியல்-19) எனவும், எல்லாரும் என்னும் பெயர் நிலைக்கிளவியும் எல்லீரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும் (பெயரியல்-10) எனவும் ஆசிரியர் கூறியவாற்றான் அறிக.

இங்ஙனம் உயர்திணை இடத்தை வரைந்து கூறினமையின் அஃறிணைக்கண் தன்மை ஒழிந்த ஏனை ஈரிடத்தும் வரும் என்பது பெற்றாம். எ-டு : எல்லாம் வந்தேம் உயர்-த-பன்மை. எல்லாம் வந்தீர் அஃறி-மு-பன்மை எல்லாம் வந்தன அஃறி-ப-பன்மை, என வரும்.

இனி உரையாசிரியன்மார் ஆக்கமில்லை என்றதனான் சிறுபான்மை படர்க்கையிடத்து வருதல் கொள்க எனக்கூறி நெறிதாழிருங்கூந்தல் நின்பெண்டிரெல்லாம் (கலி-97) எனவும் கண்டனிர் எல்லாம் கதுமென வந்தாங்கே (கலி-140) எனவும் எடுத்துக்காட்டுப. அவையெல்லாம் செய்யுள் விகாரமாம் என்க. வழுவமைதி எனினும் ஒக்கும்.

சூ. 189 : நீயிர் நீ என வரூஉங் கிளவி
பால்தெரிபிலவே உடன்மொழிப் பொருள (34)

க-து : நீயிர்-நீ என்னும் பொதுப்பெயர்க்கு இலக்கணங் கூறுகின்றது.

உரை : நீயிர் நீ எனவரும் முன்னிலைப் பெயர்கள் (ஏனைப் பொதுப் பெயர்களைப் போல வினையான்) திணை வேறுபாடு தெரிதல் இல (முன்னத்தான் உணரும் முறைமை யொடு இருதிணைகளையும் ஒருங்குமொழிதலையுடைய பொருளினவாம். பால் என்றது ஈண்டுத்திணையினை.

எ-டு : நீயிர் வந்தீர், நீயிர் வம்மின் எனவும். நீ வந்தாய் - நீ வந்தனை, நீ காண்டி எனவும் வரும். தத்தம் மரபிலவாக வரும் முன்னிலைவினைகளும் பொது வினையாய் நிற்றலான் 'பால்தெரிபிலவே' எனவும், 'உடன் மொழிப் பொருள' என்றும் கூறினார். இவை திணை புலப்படுத்துமாறிற்னை "முன்னஞ் சேர்த்தி முறையின் உணர்தல்" (பெயரியல்-39.) என்பதனாற் கூறுப.

சூ. 190 : அவற்றுள்
நீயென் கிளவி ஒருமைக் குரித்தே (35)

க-து : நீயென்னும்பொதுப்பெயர் பால்காட்டுமாறு கூறுகின்றது.

உரை : மேற்கூறிய முன்னிலைப் பெயர்களுள் நீ என்னும் சொல் (திணைகாட்டாதாயினும் இருதிணைக்கண்ணும் ஒருமை குறித்து வரும். எ-டு : நீ வந்தாய் என்பது ஒருவன் ஒருத்தி யாகிய உயர்திணைக்கும் ஒன்றுபற்றிய அஃறிணைக்கும் உரித்தாய்நின்றவாறு காண்க.

சூ. 191 : ஏனைக் கிளவி பன்மைக் குரித்தே (36)

க-து : நீயிர் என்பது இன்னபால் காட்டும் என்கின்றது.

உரை : பிறிதொன்றாகிய நீயிர் என்னும் பொதுப்பெயர் இரு திணைக்கண்ணும் பன்மைக்குரித்தாய் வரும். எ-டு : நீயிர் வந்தீர், என்பது உயர்திணைப் பல்லோர்க்கும், அஃறிணைப் பலவிற்கும் உரித்தாய் வந்தவாறு கண்டு கொள்க.

முறையிற் கூறாது இதனைப்பிற் கூறியது நீயிர் என்னும் சொல் நும்மின் திரி பெயர் என்பதை நினைவுறுத்தற்கும், இடைக் குறையாய் நீர் என நிற்பினும் கொள்ளற்கும் என்க.

சூ. 192 : ஒருவர் என்னும் பெயர்நிலைக் கிளவி
இருபாற்கும் உரித்தே தெரியுங் காலை (37)

க-து : ஒருவர் என்னும் சொல் பால்விரவுமாறு கூறுகின்றது.

உரை : ஒருவர் என்னும் பெயர் நிலைமைத்தாகிய சொல் ஆராயுமிடத்து ஒருவன் ஒருத்தி என்னும் இருபாலுக்கும் உரித்தாய் வரும். எ-டு : ஒருவர் வந்தார் - ஒருவர் அவர், எனவரும்.

இருபாற்கும் எனப் பொதுப்பட நிற்பினும் 'ஒரு' என்னும் முதனிலையாற் பாலுணர்த்துவன ஒருவன் ஒருத்தி என்பனவே ஆதலின் அவையே கொள்ளப்படும். உயர்திணை ஒருமைப்பால் இரண்டேயாதலின்பாற்கும் என்னும் உம்மை முற்றும்மை. ஆடூஉ மகடூஉ என்னும் இருபாற் கண்ணும் விரவுதலின் இதனை விரவுப் பெயரதிகாரத்து வைத்தார் என்க. ஒருவர் (ஒருவுவர்) - நீங்குவர் என்னும் பொருள்தருமிடத்து வினைநிலை எய்துதலின் பெயர்நிலைக்கிளவி என்றார்.

சூ. 193 : தன்மை சுட்டின் பன்மைக் கேற்கும் (38)

க-து : ஒருவர் என்னும் சொற்கு வினைமுடிபு கூறுமுகத்தான் அதன்கட் கிடப்பதோர் ஐயமகற்றுகின்றது.

உரை : மேற்கூறிய ஒருவர் என்னும் பெயரினது இயல்பினைக் கருதின் அது பன்மைச் சொல்லான் முடிதற்கு ஏற்புடையதாகும். எ-டு : மேற்காட்டப்பட்டது.

ஏனைவிரவுப் பெயர்கள் சுட்டி நிற்கும், பெண்மை, ஆண்மை கட்கு ஏற்ப வினை கொள்ளுமன்றே? அங்ஙனம் இதுவும் கொள்ளுமோ என நின்ற ஐயம் நீங்கப் பன்மைக்கு ஏற்கும் என்றார்.

முதனிலையாகிய பொருளான் ஒருமையாயும் இறுதி இடைச் சொல்லான் பன்மையாயும் நிற்றலின் முடிபு பற்றிய தடுமாற்றம் நீங்கப் பன்மை முடிபு கோடல் மரபென்பது அறிவித்தற்கு "ஏற்கும்" என்றார்.

சூ. 194 : இன்னபெயரே இவையெனல் வேண்டின்
முன்னஞ் சேர்த்தி முறையின் உணர்தல்

க-து : மேற்கூறியவற்றுள் நீயிர், நீ என்பவற்றிற்குத் திணையும், ஒருவர் எனபதற்குப் பாலும் அறியும் முறைமை கூறுகின்றது.

**உரை :** நீயிர், நீ, ஒருவர் என்பவை இன்னதிணை, இன்ன பால் பற்றி நிற்கும் பெயரே என அறிதல் வேண்டின் செப்புவோனது குறிப்பொடு சேர்த்தி முறையானே உணர்க. முறையாவது வழக்கு.

**எ-டு :** நீயுந்தவறிலை (கலி-56) என்பது மகடுவாகிய உயர் திணையையும், நீயே பிறர்நாடு கொள்ளுங்காலை (புறம் - 57) என்பது ஆடுவாகிய உயர்திணையையும், இன்றுணைப் பிரிந்தாரை உடையையோ நீ (கலி - 129) என்பது அஃறிணை ஒன்றனையும் குறிப்பான் உணர நின்றன. நீ அரசன்-நீதோழி-நீகிள்ளை எனப் பின்வரும் சொற்களான் ஆடூஉ மகடூஉ ஒன்று என்பது உணர நின்றது. பறவை வேட்டுவன் வலையைச் சுருக்குவானாய் நீயிர் அகப்பட்டீர் என்புழி அஃறிணையையும், சொல்வலைவேட்டுவன் நீயிர் அகப்பட்டீர் என்புழி உயர்திணை யையும் உணர்த்தி நிற்குமாறறிக.

ஒருவர் மணந்தார் - என்புழி ஒருவனையும் ; ஒருவர் வாழ்க்கைப்பட்டார் என்புழி ஒருத்தியையும் உணர்த்தி நிற்குமா றறிக. ஆயிழையார் ஒருவர். அயில்வேலார் ஒருவர் என்புழியும் அவ்வாறே உணர்த்தி நின்றது. பிறவும் இவ்வாறே கண்டு கொள்க. இங்ஙனம் இடமுதலாய சூழல்களான் உணரப்படுதலின் "முன்னஞ் சேர்த்தி" என்றும், "முறையின் உணர்தல்" என்றும் கூறினார்.

**சூ. 195 :** மகடூஉ மருங்கின் பால்திரி கிளவி
மகடூஉ வியற்கை தொழில் வயினான [40]

**க-து :** இச்சூத்திரம் முதலாகப் பெயர்ச்சொல்பற்றி ஒழிந்து நின்ற மரபுபற்றிய இலக்கணங் கூறுகின்றார். இச்சூத்திரம் உயர்திணைப் பெயருள் பெண்மையடுத்த மகனென் கிளவி என்பதற்காவதோரியல்பு கூறுகின்றது.

**உரை :** மகடூஉப் பொருண்மைத்தாகிய தொகைச் சொற்கண் ஒருகூறு திரிந்துநிற்கும் 'பெண் மகன்' என்னும் பெயர், பயனிலை கொள்ளுமிடத்து மகடூஉவிற்குரிய இலக்கணத்ததாகும்.

**எ-டு :** பெண்மகன் வந்தாள், எனவரும். பெண்மகன் என்னும் தொகைச் சொல் முதனிலைபற்றி மகடூஉ வினை கொள்ளுமோ இறுதிநிலைப்பற்றி ஆடூஉ வினைகொள்ளுமோ என நிகழும் ஐயம் நீங்கிப் பொருண்மைப்பற்றி மகடூவின் வினை கொள்ளுதலே இலக்கணம் என்பதுணர "மகடூஉவியற்கை" என்றார். "சிறப்புப்பற்றித் தொழில் வயினான" என்றாரேனும் பெண்மகன் சிறியள் எனக்குறிப்புவினையினையும், பெண்மகன் இவள் எனப்பெயரினையும் கோடலுமாம்.

சூ. 196 : ஆ ஓ வாகும் பெயருமார் உளவே
ஆயிடன் அறிதல் செய்யு ளுள்ளே (41)

க-து : ஒருசார் பெயர்ச்சொற்கள் செய்யுட்கண் ஈறுதிரிந்துவருமென்கின்றது.

உரை : ஆன், ஆள், ஆர், ஆய் என்னும் ஈறுகளுள் நிற்கும் ஆகாரம் ஓகாரமாக மாறிவரப்பெறும் பெயர்ச்சொற்களும் உள அவை அவ்வாறு வருமிடம் செய்யுள் வழக்கினுள் என அறிக.

என்றது ; மூவகைப் பெயர்களையும் ஓதுமிடத்து அவன், அவள், அவர் எனவும் சுட்டு முதலாகிய அன்னும் ஆனும் எனவும் கூறியதனான். அவை செய்யுட்கண் திரிந்தம் வரும் என்பதும் அத்திரிபு பொருட்டிரிபாகாதென்பதும் கூறியவாறாம். "ஆகும் பெயரும் உளவே" என்றதனான் ஆகாமல் வருவனவும் உள என்பது பெறப்படும். செய்யுள் என்றது செய்யுள் வழக்கினை.

எ-டு : வில்லோன் காலன கழலே தொடியோள் மெல்லடி மேலவும் சிலம்பே நல்லோர் (குறுந்-7) எனவும் பருவரல் செப்பாதோயே (நற்-70) எனவும் வரும்.

'ஆய்' வினையாலணையும் பெயர்க்கண் ஈறாகி நிற்கும் என்க. சேரமான், மலையமான், பெருமாள், கருமார், கன்னார் என்பவை திரியாதன. அழாஅன்-புழாஅன் என்பனவும் திரியாவாம். ஆயிடன் அறிதல் என்றதனான் சிறுபான்மை கிழவன், கிழவள், பெரியர் என்னும் தொடக்கத்தன அகரம் ஓகாரமாய் கிழவோன், கிழவோள், பெரியோர் எனவருதலும், இன்னும் இதனானே அவை கிழவோய் என முன்னிலைக்கண் வருதலும் கொள்க.

சூ. 197 : இறைச்சிப் பொருள்வயின் செய்யுளுட் கிளக்கும்
இயற்பெயர்க் கிளவி உயர்திணை சுட்டா
நிலத்துவழி மருங்கிற் றோன்ற லான [42]

க-து : இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமையவாய் வருவன விரவுப் பெயர்களெனவும் அவைதத்தம் மரபின் வினையொடு வந்து திணையும் பாலும் விளக்குமெனவும் ஒரோவிடத்து அன்னமரபின் தொழில்பற்றி வரும் பொதுவினையாகிய செம்மும் என்னும் முற்றும் திணைவிளக்கும் எனவும் கூறினமையின் தத்தம் மரபின் வினையின்றிப் பொது வினையான் வருமிடத்தெல்லாம். இயற்பெயர்கள் பொதுவாக நிற்கும் என்றதற்குப் புறனடையாகச் செய்யுளுள் பொதுவினை பெற்று நிற்பினும் இறைச்சிப் பொருள் பயத்தற் பொருட்டு உயர்திணைப் பண்புகள் ஏற்றிக் கூறப் பெற்றிருப்பினும் ஐவகை நிலைத்துக் கருப்பொருள் மேல் வரும் இயற்பெயர்கள் திணையொடு பழகிய பெயரல்லாதவிடத்து அஃறிணையையே சுட்டி வரும் என அஃறிணை இயற்பெயர் பற்றியதொரு இயல்பு கூறுகின்றது.

**உரை :** இறைச்சிப் பொருள் பயக்குமிடத்துச் செய்யுளுட் கூறப்பெறும் விரவுப் பெயராய இயற்பெயர்கள், திணை உணர்தற்குத் துணையாக அவ்வந்நிலப்பொருள்மேற் றோன்றி வருதலான் அவை உயர்திணையைச் சுட்டமாட்டா. அஃறிணையையே சுட்டி நிற்கும்.

சாத்தன் சாத்தி என்றாற்போல வரும்-முதற் பெயரும், அஃறிணை, இயற்பெயரும் அடங்க இயற்பெயர்க்கிளவி எனப் பொதுப்பட ஓதினார். உறுப்பு முதலிய சார்புகளான் வெளிப்பட நிற்பின் அவை அஃறிணைப் பெயர் என்பது தாமே புலப்படு மாதலின் விரவுப் பெயர் எனற்கு ஏற்பப் பொதுப்பட நிற்பன வற்றிற்கே இவ்வதி இயையுமென அறிக.

அகப்பொருட் செய்யுட்களை வரைந்து சுட்டுவதற்காக இறைச்சிப் பொருள்வயின் செய்யுள்'' என்றார். ''இறைச்சி தானே உரிப் புறத்ததுவே'' (பொருளியல் - 23) ''இறைச்சியுட் பிறக்கும் பொருளுமாருளவே'' (பொருளியல் - 34) ''அன்புறு தகுந இறைச்சியுட் சுட்டலும்'' (பொருளியல் - 35) என, ஓதுவன வற்றான் இறைச்சியின் இயல்பு அறிந்து உணர்க.

இறைச்சி என்பது உள்ளுறையின் வகையேயாதலின் உள்ளுறை உவமம் பற்றிக் கருப்பொருளக வரும் இயற்பெயரும் கொள்க. எ-டு : ''கடுவன் முதுமகன் கல்லா மூலற்கு வதுவை யயர்ந்த வண்பறழ்க் குமரி'' எனவும் ''மாதர் வண்டின் நய வருந்தீங்குரல் மணநாறு சிலம்பின் அசுணம் ஓர்க்கும் (நற் - 244) எனவும் கல்லாக்கடுவன் கணமலி சுற்றத்து மெல்விரல் மந்தி குறை கூறும் செம்மற்றே (குறிஞ்சிக்கலி-4) எனவும் கொடியை வாழி தும்பி இந்நோய் படுகதில்லம்ம (நன்றி - 277) எனவும் கொடுவரி வென்ற வருத்தமொடு நெடுவரை மருங்கின் துஞ்சும் யானை (குறிஞ்சிக்கலி - 13 )எனவும் வரும்.

கடுவன், முதுமகன், முலன் எனவும்; மாதர் வண்டு எனவும்; கல்லாக்கடுவன், மந்தி குறைகூறும், எனவும்; கொடியைதும்பி எனவும்; வருத்தமொடு துஞ்சும்யானை எனவும் உயர்திணைப் பண்புகளை ஏற்றிக்கூறி இறைச்சியும் உள்ளுறையும் பெறப்பட வைத்துள்ளமை கண்டு கொள்க. இவை பொதுப் பெயர்களா யினும் அஃறிணையையே சுட்டி நின்றவாறும் கண்டு கொள்க.

சூ. 198 : திணையொடு பழகிய பெயரலங் கடையே[43]

**க-து :** மேலைச் சூத்திரத்திற்கொரு புறனடை கூறுகின்றது.

உரை : மேலைச்சூத்திரத்துச் செய்யுளுள்இறைச்சிப்பொருள் வயின் கிளக்கும் இயற்பெயர்க்கிளவிகள் உயர்திணையைச் சுட்டா என்றது, ஐந்திணைஒழுக்கத்திற்குரியதலைமக்களுக்குரிய வாகத் திணையொடு தொன்று தொட்டுப் பயின்று வரும் பெயர் அல்லாத விடத்தேயாம் : என்றது, திணையொடு பழகிவரும் இப்பெயர்கள் உயர்திணையைச் சுட்டி (விரவுப்பெயராய்) வரும் என்றவாறு.

அவையாவன : காளை, மீளி, விடலை என்னும் தொடக்கத்தன. திணை என்றது உரிப்பொருளாகிய ஒழுகலாற் றினை. அஃது ஈண்டு அவ்வொழுகலாற்றினையுடைய மக்கள் மேல்நின்றது.

எ-டு : "வயக்களிற்றன்ன காளையொடு என்மகள் கழிந்த தற்கு அழிந்தன்றோ இலனே" (அக-55) எனவும் "அருஞ்சுர மிறந்தவென் பெருந்தோட் குறுமகள் திருந்துவேல் விடலை யொடு வருமெனத் தாயே" (அதம் 195) எனவும் "எம்ம னோரிற் செம்மலும் உடைத்தே" (அகம்-34) எனவும் வரும். இவற்றுள் காளை, விடலை செம்மல் என்னுப் விரவுப் பெயர்கள் உயர்திணையைச்சுட்டி நின்றவாறு கண்டுகொள்க.

இவ்விரண்டு சூத்திரங்களும் விரவுப் பெயர் பற்றிய ஒழிபிலக்கணமாகும். இவ்வற்றின் நோக்கறிந்துரையாது உரை யாசிரியன்மார் நெகிழ்ந்து போயினர். இத்தகைய தொன்மரபு களை ஓர்ந்தறித்து கொள்க.

பெயரியல் முற்றியது.

## 6. வினையியல்

வினைச்சொற்கள் பற்றிய இயல்பும் மரபும் உணர்த்துதலின் வினையியல் எனப்பெயர் பெற்றது. இச்சொல் 'விண்' என்னும் அசைவுக் குறிப்புணர்த்தும் உரிச்சொல் உடைமைப் பொருள் படும் ஐகாரத்தோடு கூடி 'விணை' என்றாகி இலக்கணக் குறியீடு கருதித்திரிக்கப்பட்டு 'வினை' என நின்றது.

வினைச்சொல் என்பது பெயர்ச் சொல்லாற் சுட்டப்பெறும் பொருளின் தொழிலாகிய புறநிகழ்ச்சியையும் தன்மை நிலை யாகிய அகநிகழ்ச்சியையும் உணர்த்தும் இலக்கணக்குறியீடாகும். அசைவாகிய புடை பெயர்ச்சி காலத்தொடு தொடர்புடைய

தாகலின் புடைபெயர்ச்சியை உணர்த்திவரும்சொல் காலத்தைக் காட்டும் உறுப்பினைத் தன்னகத்தே கொண்டு நிகழும். தன்மை நிலை என்பது தன்னானும் பிறிதானும் விளங்கும் நிலைமைத் தாகலின், அந்நிலையை உணர்த்திவரும் சொல் காலங்காட்டும் உறுப்பின்றிக் காலமுணர்த்தும் துணைச் சொல்லை அவாவி அக்குறிப்பானே காலத்தொடு புணர்ந்து நிற்கும். இவற்றுள் முன்னது "காலக்கிளவி" என்றும் "வினை" என்றும் பின்னது "குறிப்பு" என்றும் "குறிப்புவினை" என்றும் இலக்கணநூலாரான் வழங்கப்பெறும். உரையாளர் முறையே தெரிநிலைவினை குறிப்பு வினை எனக்கூறுவர்.

இருதிணைப்பொருள்களை உணர்தற்குக் கருவியாகிய பெயர்ச்சொற்களை ஆக்குதற்கு அடிப்படையான உரிச் சொற்களே வினைச்சொற்களை ஆக்கிக்கோடற்கும் அடிப்படை யாகும்.

"இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப் பெயரினும் வினையினும் மெய்தடுமாறி" வரும் உரிச்சொற்கள் திணைபால் இடங்காட்டும் இடைச்சொற்களொடு கூடிவரின் பெயர்ச் சொற்களாம். அவற்றொடு காலம் புணர்ந்து நிற்பின் வினைச் சொற்களாம். இவை திணைபால் இடம் காட்டாமல் காலத்தொடு மட்டும் புணர்ந்துநிற்பின் அவை வினைஎஞ்சுகிளவி, பெயரெஞ்சு கிளவி எனப்படும்.

பொருட்பெயர் இடப்பெயர் பண்புப்பெயர் தொழிற்பெயர் என்னும் நான்கனுள் தொழிற்பெயர் முதனிலையாக வரும் வினைச் சொற்கள் காலந்தெற்றெனப் புலப்பட நிற்கும், ஏனைப் பெயர்களின் முதனிலைகளை அடிப்படையாகக் கொண்டு வரும் வினைச் சொற்கள் காலம் குறிப்பாகக் கொள்ளுமாறு நிற்கும்.

பெயர்ச்சொல் முதலிய நால்வகைச் சொற்களின் இலக்கணங் களையும் சொல் வடிவங்களின் துணையான் உணர்த்தல் வேண்டுதலானும் பொருட்பெயர் முதலாய நால்வகைப் பெயர் களின் முதனிலைகளே வினைச்சொற்கட்கு முதனிலைகளாக வருதலானும் விரிவஞ்சி அவற்றை விதந்து கூறாமல் இறுதி இடைச்சொற்கள் வாயிலாகவும், வாய்பாடுகள் வாயிலாகவும் ஒரோவழி அச்சொற்களையே எடுத்தோதியும் சிறுபான்மை பொருளை விதந்தோதியும் ஆசிரியர் வினைச்சொல் பற்றிய இயல்புகளை இவ்வியலுள் விளக்குகின்றார். சில இயல்பு கிளவி யாகத்துட் பெறப்பட்டன. எஞ்சியவை எச்சவியலுள் பெறப்படும்.

சூ. 199 : வினை எனப்படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும் (1)

க-து : எல்லா வினைச்சொற்கும் உரிய பொதுவிலக்கணங் கூறுகின்றது.

உரை : வினைச்சொல் என்று கூறப்படுவது வேற்றுமை கொள்ளாது, ஆராயுங்காலத்துக் காலத்தொடு விளங்கி நிற்கும். வேற்றுமையாவது வேற்றுமையியலுள் கூறிய எண்வகை வேற்றுமை நிலைகள். வேற்றுமை கொள்ளாது என்றதனான் உருபேலாமைதாமே பெறப்படும்.

வினையாலணையும் பெயரை நீக்குதற்குவேற்றுமை கொள்ளாதென்றும் இடைச்சொல் உரிச்சொற்களை நீக்குதற்குக் காலமொடு தோன்றும் என்றும் கூறினார். குறிப்பு வினைக் கண்ணும் எதிர்மறை வினைக்கண்ணும் காலம் தெற்றெனப் புலப்படாமையின் 'நினையுங்காலை' என்றார்.

எ-டு: உண்டான், உண்டது, எனவும், கரியன், கரியது எனவும் வரும். உண்ணான், உண்ணாது, என எதிர்மறை வினைவரும். ஏனைப்பாலிடங்களிலும் ஒட்டிக்கொள்க.

சூ. 200 : காலந் தாமே மூன்றென மொழிப (2)

க-து : மேற்கூறிய காலத்தின் தொகை கூறுகின்றது.

உரை : காலமொடு தோன்றும் எனப்பெற்ற அக்காலம் மூன்று கூறுபடுமெனக் கூறுவர் தொன்னூலாசிரியர். தாமே என்பது அடிநிரப்பவந்த அசைச்சொல். காலமாவது 'பொருள் நிகழ்வு உரைப்பது' (செய்-194) என்பாராகலின் இச்சூத்திரம், மொழிவாம் என்னும் உத்திக்கு இனம்.

காலம் என்னும் சொற்குப் பொருள். இடையறாது செல்வது என்பதாகும். கலித்தலைச் செய்வது காலம். இஃது கால் எனவும் காலை எனவும் வழங்கும்.

சூ. 201 : இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றா
அம்முக் காலமும் குறிப்பொடுங் கொள்ளும்
மெய்ந்நிலை உடைய தோன்றலாறே [3]

க-து: மேற்கூறிய காலங்களின் பெயரும் அவை வினைச் சொற்களிடத்துத் தோன்றும் முறைமையும் கூறுகின்றது.

உரை : இறப்பின் கண்ணும், நிகழ்வின் கண்ணும் எதிர்வின் கண்ணும்வரும் அம்மூன்று காலமும் வினைச் சொற்களுள்

தோன்றுமிடத்து வெளிப்பட நிற்றலேயன்றிக் குறிப்பாகவும் கொள்ளப்படும் பொருள் நிலையை உடையவாம். எனவே, காலம் வெளிப்பட வரும் வினைச்சொல், குறிப்பாக வரும் வினைச்சொல் என வினைச்சொற்கள் இருவகைப்படும் என்றவாறாம்.

உண்ணுதல் என்பது புடைபெயர்ச்சியை உடையதொரு தொழில். அஃது ஒரு வினைமுதலான் நிகழ்ந்து முடிந்திருப்பின் இறந்தகாலம். அத்தொழில் தொடங்கப் பெறாது இருப்பின் எதிர்காலம் தொடங்கி முற்றுப்பெறாதிருப்பின் நிகழ்காலமாம். காலமுணர்த்தும் குறியீடுகள் வினைச் சொல்லின் இடையினும், இறுதியினும் அச் சொல்லொடு நெறிப்படி ஒன்றுபட்டுப் பிரித்துணர்தற்கு ஏலவும் ஏலாமலும் அமைந்து நிற்கும்.

ஒருமொழிப்புணர்ச்சியாய் வரலாற்று முறைமையான் நிற்கும் இவற்றைப் பிரித்து வரையறை செய்தல் சாலாது என்பார் "புணரியல் நிலையிடைஉணரத்தோன்றா எழுத்து-482 என்றும் வினைச் சொல்லுள் காலம் உணர்த்தும் உறுப்புப் புணர்ந்தே நிற்குமென்பார். "வினைசெயல் மருங்கின் காலமொடு வருநவும் (இடை-2) என்றும் கூறினார். கூறினாரேனும் மாணாக்கர்க்குச் சொற்பொருளை உணர்த்துமிடத்து நூல் நெறிபிறழாமல் இயலும் வகையான் பிரித்துணர்த்தல் வேண்டுமென்பார். "சொல் வரைந்தறியப் பிரித்தனர் காட்டல்" (எச்ச - 67) எனவும் ஆணை கூறினமையான் உரை விளக்கத்துள் காலங்காட்டும் இடைச்சொற்கள் ஓராற்றான் பிரித்து உரைக்கப்படுமெனக.

சூ 202 : குறிப்பினும் வினையினும் நெறிப்படத் தோன்றிக்
காலமொடு வரூஉம் வினைச்சொல் எல்லாம்
உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்
ஆயிரு திணைக்கும் ஓரன்ன உரிமையும்
அம்மூ உருபின தோன்றலாறே [4]

க-து: வினைச்சொற்கள் திணைவகையான் பாகுபாடு பெறுமாறு கூறுகின்றது.

உரை : குறிப்புப் பொருண்மை பற்றி வரும் சொல்லானும், தொழிற் பொருண்மை பற்றிவரும் சொல்லானும் முறையாகத் தோன்றிவரும் வினைச்சொற்கள் எல்லாம் தேன்றுமாற்றான் உயர்திணைக்கே உரியனவும் அஃறிணைக்கே உரியனவும் அவ் இருதிணைக்கும் ஒப்ப உரியனவும் என அம் மூன்று படிவத்தன வாகும்.

குறிப்புப் பொருண்மைபற்றி வரும் சொற்களாவன : பொருட் பெயரும் இடப்பெயரும் பண்புப்பெயருமாக அமைவனவாகும். [காலப் பெயர் இடப்பெயருள்ளும் சினைப்பெயர் பொருட் பெயருள்ளும் அடங்கும்] தொழிற் பொருண்மைபற்றி வரும் சொற்களாவன, தொழிற் பெயர்களாக அமைவனவாம். சிறுபான்மை ஏற்றபெற்றி இடைச்சொல், உரிச்சொற்களடியானும் வரும்.

அம்முக்காலமும் குறிப்பொடுங்கொள்ளும் என அதிகரித்து நின்றமையான் குறிப்புப் பொருண்மை முற்கூறப்பட்டது என்க. மூன்று காலத்திற்கும் ஒப்ப உரியவாதலின் முற்கூறப்பட்டது எனினுமாம். ''காலமொடுவரூஉம் என்றது'' வழிமொழிதல், அதனாற் பயன் அம்முக்காலமும் சொல்லகத்து உறுப்பாயும் அச்சொல் முழுதாயும் நிற்குமென அறிதலாம்.

இனி, உயர்திணை வினைச்சொற்கள் இடம்பற்றித் தன்மை வினை, படர்க்கை வினை எனவும், பால்பற்றி ஆடூஉ அறிவினை, மகடூஉ அறிவினை, பல்லோர் அறிவினை எனவும், தன்மை வினை ; தனித்தன்மை வினை, உளப்பாட்டுத் தன்மை வினை எனவும் வகைப்பட்டு அம்முக்காலமும் பற்றி விதிவினையாயும் மறைவினையாயும் விரிந்துவரும். அஃறிணை வினைச் சொற்கள் படர்க்கைக்கே உரியவாய் ஒன்று, பல என்னும் பால் பற்றி விதி வினையாயும் மறை வினையாயும் வரும். ஆயிரு திணைக்கும் ஓரன்ன உரிமையவாய் வரும் வினைச்சொற்கள் முன்னிலைவினை முதலாக எண்வகையினவாய் அவ்அவற்றிற் குப் பொருந்திய காலத்தொடு ஒருமையும், பன்மையுமாகிய பாலுணர்த்தி விதி வினையாயும் மறைவினையாயும் வரும். அவை அங்ஙனம் வருதலான் ''நெறிப்படத் தோன்றி வரும்'' என்றார்.

சூ. 203 : அவைதாம்
அம் ஆம் எம் ஏம் என்னும் கிளவியும்
உம்மொடு வரூஉம் கடதற என்னும்
அந்நாற் கிளவியொடு ஆயெண் கிளவியும்
பன்மை உரைக்குந் தன்மைச் சொல்லே (5)

க-து : நிறுத்த முறையானே உயர்திணை வினைச்சொற்கள் வருமாறு கூறத் தொடங்கி அவற்றுள் தன்மைப் பன்மை வினை ஈற்றிடைச் சொற்களான் அமைந்து வருமாறு கூறுகின்றார்.

அவைதாம் என்பது அதிகாரம் உணர்த்தும் செழற்சீரடி அது கூனாய் நின்று இனிவருகின்றவற்றொடுஃ சென்றியையும். (தெய்வச்சிலையார் உரையுள் இக்கூன் இடம் பெறவில்லை) தலைதடுமாற்றமாகத் தன்மைப்பன்மை வினை முற்கூறினார். தன்மைவினை உயர்திணைக்கே உரித்தென்பது அறிவித்தற் கென்க.

**உரை :** அம் ஆம் எம் ஏம் என்னும் ஈற்றிடைச் சொற்களும், உம்மையொடு கூடிவரும் கடதற வாகிய கும்டும் தும்றும் என்னும் அந்நான்கு ஈற்றிடைச் சொற்களொடு ஆகிய எட்டுச் சொற்களும் தன்மைப் பன்மையை உணர்த்தும் உயர்திணை வினைச் சொற்களாம்.

ஆய எண்கிளவியும் என்பது ஆயெண்கிளவி என விகாரமாய் நின்றது. அம் ஆம் முதலியவை அவற்றை ஈறாக உடைய வினைச்சொற்களை ஆகு பெயரான் உணர்த்தி நின்றனவாதலின் ஆயெண் கிளவி என்பது எழுவாயாயும் தன்மைச் சொல் என்பது பயனிலையாயும் நின்றன.

தன்மையாவது தனி ஒருவராகிய நிலைமைத்தாயினும் பிறரை அகப்படுத்தி நிற்றற்கண் பன்மையாதற் கொத்தலின் தன்மைப் பன்மை என்பது இலக்கணமாயிற்றென்க. பிறரை அகப்படுத்துமிடத்துத் தன்னொடு முன்னிலையாரை அகப் படுத்தலும் படர்க்கையாரை, அகப்படுத்தலும் அவ்விருவரையும் ஒருங்கு அகப்படுத்தலும் ஆம். அவ்வழி முன்னிலையாரை அகப்படுத்தற்கண் "யாம்" எனவும், படர்க்கையாரையும், அவ் விருவரையும் ஒருங்கு அகப்படுத்தற்கண் "நாம்" எனவும்கூறுதல் மரபாகும். அம் ஆம் என்பவை, யாம் என்பதனொடும் எம் ஏம் கும் டும் தும்றும் என்பவை நாம் என்பதனொடும் பெரும்பான்மை யும் இயைந்து வரும்.

அம் ஆம் எம் ஏம் என்பவை மூன்று காலமும், கும்டும் தும்றும் என்பவை எதிர்காலமும் பற்றி வருதலான் பிரித்தோதினார். அவற்றுள் கும்ஈறு வினை கொண்டு முடிதற்கும் ஏற்றலானும், தடற என்பவை காலமுணர்த்தும் உறுப்பாகாமல் ஈற்றிடைச் சொற்குத் துணையாய் நிற்றலானும் அவற்றை 'உம்' ஈறு என ஒன்றாகக் கூறாமல் "அந்நாற்கிளவியும்" என வகுத்தோதினார்.

இனி, அவை கால இடைச் சொற்களொடு இயையுங்கால் ஆம் எம் என்பவை அன் என்னும் சாரியை பெற்றும் ஆம் என்பது சாரியை பெறாதும் ஏம் என்பது பெற்றும் பெறாதும் வரும்,

அம்மும் எம்மும் எதிர்காலத்தொடு வருங்கால் அன்பெறாதும் வரும். எதிர்காலமுணர்த்தும் வகரத்தொடு சிறுபான்மை குகரமும் உகரமும் சாரியையாக வரும். ஓரெழுத் தொருமொழி களும் இருவகை 'உகர ஈற்றுச் சொற்களும் இன்சாரியையொடு வரும். காலமுணர்த்தும் இடைச் சொற்களை ஆசிரியர் விதந்து கூறினாரில்லை எனினும் "வினைசெயல் மருங்கின் காலமொடு வருநவும்" எனக் குறித்துச் "சொல் வரைந்தறியப் பிரித்தனர் காட்டல்" என ஆணையும் கூறினமையான் சான்றோர் வழக்கு நோக்கி அவை உணரப்படும் என்க.

இறந்தகால முணர்த்துவன :- தடற என்னும் ஒற்றும், இகரத்தின் திரிபாகவரும் இன் என்னும் இடைச்சொல்லுமாம். நிகழ்காலமுணர்த்துவன : ஆநின்று கின்று என்பனவாம். கின்று என்பது இடைக்குறையாய்க் கிறு எனவும் நிற்கும். எதிர்காலமுணர்த்துவன : பகர வகர ஒற்றும் ககர உயிர் மெய்யுமாம்.

அவை இறந்தகாலத்தொடு வருமாறு : எ-டு : உண்டனம்- உண்டாம், உண்டெனெம்- உண்டேம், உண்டனேம், டகரம் இறந்தகாலம் காட்டிற்று. தகரம் தானே மிகுந்தும் தன்கிளை எழுத்து மிகுந்தும் உரைத்தனம் - வரைந்தனம் . உணர்ந்தாம் - வரைந்தாம், உரைத்தனெம், வரைந்தனெம் - உரைத்தேம் - உரைத்தனேம், வரைந்தேம் - வரைந்தனேம் எனவரும். உகர ஈற்றுச் சொற்கள் கலக்கினம் தெருட்டினம் எனவும். உரிஞ்சினம், திருமினம், பொருநினம் எனவும் வரும். ஈரெழுத்தொரு மொழி யாக வரும் குற்றுகர ஈற்றுச் சொற்கள் இடையே ஒற்று இரட்டி உற்றனன் உற்றான் - நக்கனன் - நக்கான் புக்கனன் - புக்கான் விட்டனன் விட்டான் எனவரும். சிறுபான்மை கொடுத்தனன், சிறுத்தனன், எனப் பொதுவிதியொடும் வரும். இவற்றை ஏனைய இறுதிகளொடும் ஒட்டிக் கண்டு கொள்க. றகர ஒற்று தின்றனம் தின்றாம். தின்றனெம், தின்றனேம், தின்றேம், எனவரும். இன் இடைச்சொல், யோயினம் கூயினம் போயினாம் கூயினாம், போயினேன், போயினேம் எனவரும். இவற்றுள் யகரம் உடம்படுமெய்யாகிய உருபு. தாவினம், மேவினம் என வகர உடம்படுமெய்யொடும்வரும்.

அவை நிகழ்காலத்தொடு வருமாறு : உண்ணா நின்றனம், உண்கின்றெனம், உண்ணா நின்றனெம், உண்கின்றனெம் உண்ணாநின்றனேம், உண்ணாநின்றேம், உண்கின்றனேம், உண்கின்றேம் எனவரும்.

அவை எதிர்காலதொடு வருமாறு : உண்பம், உண்பாம் - உண்பெம் - உண்பேம், வருவம், வருவாம், வருவெம், வருவேம் எனவும் உண்குவம், தின்குவம், உண்ணுவம், தின்னுவம் எனவும் பாடுகம், நகுகம் எனவும் வரும்.

உம்மொடு வரும் கடதறக்கள் எதிர்காலம் பற்றி வரும். ஒருசார்சொற்கள் உகரச்சாரியை பெற்றும்வரும். எ-டு : உண்கும், காண்டும், வருதும், சேறும், எனவும் உரினுதும், திருமுதும், பொருநுதும் எனவும் வரும். ககரம் இறந்தகாலத் திற்கும் உரியதாமெனக் கொண்டு நக்கனம், நக்காம் என உதாரணங்காட்டுவர் உரையாளர். நக்கனம் என்பதன்கண் நக் முதனிலையாகாமையின் அது பொருந்தாமையறிக.

இனி உண்டும், வந்தும் சென்றும் என டும், தும், றும் என்பவை இறத்தகாலங்காட்டும் என்பார் பவணந்தியார் அங்ஙனம் வருதல் சான்றோர் செய்யுட்கண் காணப் பெறாமையின் அவை ஆய்வுக்குரியனவாம்.

காலங்காட்டும் இடைச்சொற்கள் பற்றிய வரலாறு : இறந்த காலமுணர்த்தும் டகர றகரங்கள் தகரத்தின் திரியேயாம். 'தகரம்' தொல் என்னும் உரிச்சொல்லின் இடுங்கிய வடிவமெனக் கருதலாம். இன் என்பது இற்றல் என்னும் சொல்லின் முதனிலை இடைச் சொல்லாகக் கொள்ளப்பட்டதெனலாம். நிகழ்கால முணர்த்தும் ஆநின்று-கின்று என்பனவற்றுள் ஆநின்று, என்பது ஆகநிற்றல் என்பதன் மருவாகவும், கின்று என்பது கிற்றல் என்பதன் திரிபாகவும் கொள்ளலாம். எதிர்காலமுணர்த்தும் பகர வகரங்கள் புகல், வரல் என்னும் முதனிலைகளின் சுருங்கிய குறியீடுகளாகக் கருதலாம்.

சூ. 204 : கடதற என்னும்
அந்நான் கூர்ந்த குன்றிய லுகரமொடு
என் ஏன் அல் என வரூஉம் ஏழும்
தன்வினை உரைக்கும் தன்மைச் சொல்லே

க-து : தன்மை ஒருமைவினைச் சொல் வருமாறு கூறுகின்றது.

உரை : கடதற என்னும் மெய்களை ஊர்ந்து நின்ற குற்றுகரத்தை ஈறாகவுடையனவாகவும் என் ஏன் அல் என்னும் ஈற்றவாய்வருவனவுமாகிய ஏழும் ஒருமை உணர்த்தி வரும்தன்மை வினை உயர்திணைச் சொற்களாகும்.

கடதற ஊர்ந்த குற்றியலுகரமாவன குடுதுறு என்பனவாம். தனிவினை உரைக்கும் என்பது எதுகை நோக்கித் தன்வினை என விகாரமாய் நின்றது. தனிமை-ஒருமை. குன்றியலுகர மென்றதும் செய்யுள் விகாரமாம். உம்மொடுவரூஉம் கடதற என மேல் அதிகரித்து நின்றமையின் அவற்றை முற்கூறினார்.

நால்வகைக் குற்றுகர ஈறும் அல்லீறும்எதிர்காலம் பற்றி வரும். என், ஏன் என்பவை மூன்று காலமும் பற்றி வரும். இவை சாரியை பெற்று வருதலும் கால இடைநிலைபெற்று வருதலும் மேற்கூறியாங்குக் கொள்க. அஃதாவது உகர ஈறு உம்மீற்றொடும் என், ஈறு எம் ஈற்றொடும் ஏன் ஈறு ஏம் ஈற்றொடும் ஒக்கும்.

உண்டு, வந்து சென்று என டுதுறு என்பவை இறந்த காலங் காட்டும் என்பார் பவணந்தியர். அவை முற்றுப் பொருளில் சான்றோர் செய்யுட்கண் காணப்பெறாமையான் அவை ஆய்வுக் குரியனவாம்.

எ-டு : உண்கு (உண்பேன்) கொண்டு (கொள்வேன்) வருது (வருவேன்) சேறு (செல்வேன்) எனவும், காண்பல், கொள்வல், எனவும் வரும். காண்குவல் எனச் சிறுபான்மை உகரச் சாரியை யொடும் வரும். அல் ஈறு வருமொழி மெல்லினம் நோக்கி னகர மாகத் திரிந்து நின்றமையை [காண்பல் மற்றம்ம - காண்பன் மற்றம்ம] ஓராது 'அன்' என்பதும் தன்மைக்கண்வரும் என இடைக்காலத்தார் தவறாகக் கொண்டனர். அதுபற்றி வழி நூலாரும் இலக்கணமாக்கிக் கொண்டனர். அதனான் "இலென்" என்று தீயவை செய்யற்க (குறள்-205) உளெனாவென்னுயிரை உண்டு (கலி-22) என நின்ற சான்றோர் பாடங்களும் திருத்திக் கொள்ளப்பட்டன என்க. பாடந்தவறு எனக் கருதாமல் அதற்கு அமைதி கூறினர் உரையாசிரியன்மார். என் ஈறு, உண்டனென் - உண்ணாநின்றனென், உண்பென் எனவும் வரும். ஏன் ஈறு உண்டேன், (உண்கிறேன் என்பது சேரி வழக்கு) உண்பேன், செல்வேன், உண்குவேன், செல்குவேன் எனவரும்.

சூ. 205 : அவற்றுள்
செய்கென் கிளவி வினையொடு முடியினும்
அவ்வியல் திரியாது என்மனார் புலவர் (7)

க-து: மேலனவற்றுள் ஒன்றற்குச் சிறப்பு விதி கூறுகின்றது, எத்திறத்தானும் பெயர் முடிபினவே (எச்ச-33) என்பதனை நோக்கிய புறனடை எனினுமாம்

உரை :- மேற்கூறிய தன்மை ஒருமைவினை ஏழனுள் 'செய்கு' என்னும் சொல் பிறிதொரு வினையொடு முடியுமாயினும் தான் முற்றுவினை என்னும் இலக்கணத்தின் மாறுபடாது என்று கூறுவர் புலவர். எ-டு :- காண்கு வந்தேன் (காண்பேன் வந்தேன்) எனவரும்.

வந்தது கொண்டு வாராததுணர்தல் என்னும் உத்தியான் 'செய்கு' என் கிளவி திரியாது எனவே ஏனை முற்றுக்கள் திரியுமென்பதாம். திரிதலாவது, முற்று என்னும் தன்மை நீங்கி எச்சவினை எனக்கூற நிற்றலாம். அவை வருமாறு : பெயர்த்தனென் முயங்கயான்' எனவும், 'தங்கினை சென்மோ' எனவும் 'மோயினள் உயிர்த்தகாலை' எனவும் மூன்றிடத்தும் வந்த முற்று வினைகள் எச்சப் பொருட்டாய் நின்றவாறு கண்டுகொள்க.

திரியாது எனப் பொதுப்படக்கூறியவதனான், வியங்கோள் ஒழிந்த ஏனை முற்றுக்கள், வினையாலணையும் பெயர்ப் பொருட்டாதலும் கொள்க. 'செய்கு' அங்ஙனம் திரியாமையும் அறிக. ஒன்றெனமுடித்தல் என்பதனான் செய்கும் என்னும் பன்மை வினைக்கும் இவ்விதி கொள்ளப்படும். எ-டு : காண்கும் வந்தேம் எனவரும்.

ஏனை உகர ஈறுகளும் உம்மீறுகளும் எச்சப்படாவாயினும் அவை வினையொடு முடிதலின்மையின் 'செய்கு' என்கிளவி என விதந்தோதினார்.

ஏனைய திரியும் இது திரியா தென்றற்குக் காரணம். இஃது எதிர்காலச் சொல்லாகலின் செய்தென் எச்சமாகத் திரிதற் கேலாமையும் செயவென் எச்சமாகத்திரிப்பின் தன்வினையான் முடியும் என்பதனொடு மாறு கொள்கின்றமையும், பெயர்த் தன்மை யுற்று உருபேலாமையுமாம்.

சூ. 206 : அன் ஆன் அள் ஆள் என்னும் நான்கும்
ஒருவர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே

க-து : உயர்திணை ஒருமைப்படர்க்கை வினைச்சொல் ஆமாறு கூறுகின்றது.

உரை : அன் ஆன் அள் ஆள் என்னும் நான்கும் ஆடூஉ மகடூஉ என்னும் ஒருவர் மருங்கின் வரும் உயர்திணைப் படர்க்கைச் சொற்களாம்.

'ஒருவர் மருங்கின்' என்றதனான் ஆடூஉ மகடூஉ என்னும் இருபாற்கும் என்பது பெற்றாம். இந்நான்கீறுகளும் சாரியைபெறுங் கால் அன்னும் அள்ளும் அம் ஈற்றொடும் ஆனும் ஆளும் ஆம் ஈற்றொடும் ஒக்கும்.

**எ-டு :** உண்டனன் உண்ணாநின்றனன், உண்பன் எனவும், உண்டனள்உண்ணா நின்றனள் உண்பள் எனவும், உண்டான், உண்ணாநிற்றான் உண்பான் எனவும், உண்டாள் உண்ணாநின்றாள், உண்பாள் எனவும், உண்ணுவன் உண்ணுவள், உண்குவன் உண்குவள் எனவும் வரும். கேட்குநன்-நோக்குநன் எனச் சிறுபான்மை நகரம் நிகழ்காலம் பற்றிவரும்.

இச் சூத்திரம் ''மாரைக்கிளவி'' என்பதன் பின்னர் இருத்தல் வேண்டும். இப்பிறழ்ச்சி ஏடெழுதினோரான் நிகழ்ந்த தாகலாம். அன்றிக் கிளவியாக்கத்துள் நிறுத்தமுறையாற்கூறினார் எனின் அமையும்.

**சூ. 207 :** அர் ஆர் ப என வரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே (9)

**க-து :** உயர்திணைப் பல்லோர் படர்க்கை வினைச்சொல்லாமாறு கூறுகின்றது.

**உரை :** அர், ஆர், ப என்னும் ஈறுகளை உடைய மூவகை வினைச் சொற்களும் பல்லோர் மருங்கின் வரும் உயர்திணைப் படர்க்கை வினைச் சொற்களாம்.

அர் ஆர் என்பவை மூன்று காலமும் பற்றிவரும், சாரியை பெறுங்கால் அர் ஈறு அன் ஈற்றொடும் ஆர் ஈறு ஆன் ஈற்றொடும் ஒக்கும். பகர ஈறு எதிர்காலம் பற்றி வரும் உகரச் சாரியை பெற்றும் பெறாதும், சிறுபான்மை குகரமும் பெற்று வரும். பன்மையொடு காலம் காட்டுதலும் இதனியல்பென அறிக.

**எ-டு :** உண்டனர், உண்ணாநின்றனர் உண்பர் எனவும், உண்டார், உண்ணாநின்றார் - உண்பார் எனவும், உண்ணுவர் - உண்குவர் எனவும் உண்ப, செல்லுப-உண்குப எனவும் வரும்.

**சூ. 208:** மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கைக்
காலக் கிளவியொடு (ம்) முடியுமென்ப [10]

**க-து :** மாரீற்றிற்குச் சிறப்புவிதி கூறுகின்றது.

**உரை :** மேற்கூறியவற்றைப் போல மாரீற்று வினைச் சொல்லும் பல்லோர் படர்க்கை வினைச் சொல்லாம். அஃது பெயரொடு முடிதலேயன்றி வினையொடும் முடியும் என்று கூறுவர் புலவர். காலக்கிளவி என்றது தெரிநிலை வினைச் சொல்லை. கிளவியொடும் என்னும் எச்சவும்மை புணர்ச்சி விகாரத்தாற் குன்றியது.

எ-டு : கொண்மார் வந்தார்-எள்ளுயார் வந்தார் எனவரும். இது 'செயற்கு' என்னும் எச்சப்பொருட்டாய் நின்கும்.

மாரீறு பெயர்கொண்டு முடியாதெனக் கருதுவர் உரையாசிரியன்மார் சிலர். அவர் கருத்து ஒவ்வுமாறில்லை. என்னை பாடின் மன்னரைப் பாடன்மார் எமரே (புறம்-375) நோய் மலி வருத்தம் காணன்மார் எமரே (நற்றி-64) என்பவை பெயர் கொண்டு முடித்தவாறு காண்க.

இவை ஏவற் பொருளவாய் நின்றன என வலிந்து பொருள் கூறுவார் சேனாவரையர். ஏவற்பொருளவாயின் "எமரே" என்பது விளிகொள் பெயராதல் வேண்டும். அஃது இந்நூல் நெறிக்கு முரணாதலை யறிக.

சூ. 209 : பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அந்நா லைந்தும் மூன்று தலையிட்ட
முன்னுறக் கிளந்த உயர்திணையவ்வே (11)

க-து : அம் ஆம் என்பவை முதலாக வாளா கூறப் பெற்றவற்றைத் தொகுத்து உயர்திணைக்குரியவை அவை எனக் கூறுகின்றது.

உரை : பன்மையும் ஒருமையுமாகிய பாலுணரவந்த, அம் ஆம் என்பவை முதலாக முன்னர் வகுத்து ஓதப்பெற்ற இருபத்து மூன்று ஈறுகளையுடைய வினைச்சொற்களும் உயர்திணையினவாம்.

இச் சூத்திரம் 'விரிந்தது தொகுத்தல்' என்னும் உத்தியான் அமைந்தது.

முன்னுறக்கிளந்த என்பதற்குக் கிளவியாக்கத்துட் கூறப் பெற்ற எனப் பொருள் கூறி ஈரிடத்தும் கூறியதனாற் பயன் இது என்பட விளக்கங் கூறுவார் சேனாவரையர்.

இனி, அம்மூ உருபின (வினை — 4.) எனத் தோற்றுவாய் செய்து பின்னர், அவைதாம் அம் ஆம் எனத் தொடங்கிக் கூறிய சூத்திரங்களுள் திணை சுட்டப் பெறாமையான் ஈண்டு அவற்றைத் தொகுத்துத் திணைக்குரிமை கூறினார் என்க.

இதன் பயன் கிளவியாக்கத்துள் கூறிய னஃகான் ஒற்று முதலியவை அன் ஆன் முதலிய இடைச் சொற்கள் என்பதும் அவை படர்க்கைக்குரியவை என்பதும் உயர்திணைக்குரிய ஈறுகள் இருபத்துமூன்றே என்னும் வரையறையும் பெறுதலாம்.

சூ. 210 : அவற்றுள்
பன்மை யுரைக்குந் தன்மைக் கிளவி
எண்ணியல் மருங்கின் திரிபவை உளவே (12)

க-து : உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைபற்றியதொரு புறனடை கூறுகின்றது. தன்மைப்பன்மை வினை பற்றிய வழுவமைதி எனலுமாம்.

உரை : மேற்கூறியவற்றுள் பன்மைத்தன்மை உணர்த்தும் வினைச்சொற்கள் தன்னொடு பிற பொருளை உளப்படுத்து எண்ணுதற்கண் திரிவனவுமுள. என்றது, தன்மைவினை உயர்திணைக்கே உரியதென்றதனான் உயர்திணையையே உளப்படுத்தல் வேண்டுமன்றே அங்ஙனமின்றி ஓரோவழி அஃது அஃறிணையை உளப்படுத்தி வருதலும் உண்டு. அங்ஙனம் வரினும் இழுக்காகாது என்றவாறு.

எ-டு : யானும் என் எஃகமும் சாறும் (சால்தும் = அமைவேம்) யானும் என் யானையும் பகையை வெல்வேம் என வரும் “திரிபவை உள” என்றதனான் திரிபவை சிறுபான்மை என்பது கருத்து.

தெய்வச் சிலையார் இச்சூத்திரத்தின் நோக்கறியாது உரை கூறுவார். யாம் இருவர் என்னுமிடத்து இருவர் என்பது பெயர்ப் பயனிலை யாதலானும் ‘அவற்றுள்’ என்றதனானும் அஃது அடங்காமையறிக. உண்போம் வருவோம் என்பவை ஏம் ஈற்றின் சிதைவாதலையும் தெரிக.

சூ 211 : யாஅர் என்னும் வினாவின் கிளவி
அத்திணை மருங்கின் முப்பாற்கும் உரித்தே

க-து : யார் என்னும் குறிப்பு வினைச் சொல்லின் இயல்பு கூறுகின்றது.

உரை : யாவர் என்னும் பெயர்ச்சொல்லின் மரூஉவாகிய ‘யார்’ என்னும் சொல் அல்லாத, வினாவினையுணர்த்தி வரும் ‘யார்’ என்றும் வினைக்குறிப்பு முற்றுச்சொல் உயர்திணை யிடத்துள்ள மூன்று பகுதிக்கும் உரியதாகும். முப்பால் என்றது ஆடூஉ, மகடூஉ பல்லோர் என்னும் பிரிவுகளை.

எ-டு : அவன் யார், அவள் யார், அவர் யார் எனவரும். யாஅர் என்னும் அளபு இசைநிறை. வினாவின் கிளவி என வந்த இன் சாரியை அசைப்பொருட்டாய் நின்றது. இதனைக் குறிப்புவினை அதிகாரத்து வையாமல் ஈண்டு வைத்தார் வழுவமைதியாதல் ஒப்புமை நோக்கி என்க.

ஊதை கூட்டுண்ணும் உகுபனியாமத்தெம் கோதை கூட்டுண்ணிய தான் யார்மன் - போதெல்லாம் தாதொடு தாழுந் தார் கச்சி வளநாடன் தூதொடு வாராத வண்டு.என அஃறிணைக் கண்ணும் வந்ததால் எனின் ? 'தூதொடு வாராத வண்டு' என உயர்திணைப் பண்பினை ஏற்றிக் கூறியதனான் அஃது செய்யுள் வழக்காய் வழுவமைதியாகுமென்க.

சூ. 212 : பாலறி மரபின் அம்மூ வீற்றும்
ஆ ஓ வாகலும் செய்யுளுள் உரித்தே [14]

க-து : ஒருசார் வினைச் சொல் ஈறு திரியுமாறு கூறுகின்றது.

உரை : தெற்றெனப் பால் விளங்குமாறு நிற்கும் இயல்பினை உடைய உயர்திணை மூன்று ஈற்றினும் உள்ள ஆகாரம் ஓகார மாதல் செய்யுள் வழக்கிற்குரியதாகும்.

"அம்மூவீறு" என்றது அத்திணைமருங்கின் முப்பால் என்றதனைச் சுட்டி நின்றது. பாலறி மரபின் என்றதனான் அஃறிணையை உளப்படுத்தலான் திரியும் ஆமீறும், ஆ ஓவாகும் என்றதனான் மாரீறும் விலக்குண்டன.

எ-டு : வினவி நிற்றந்தோனே எனவும் நல்லை மன் என நகூப் பெயர்ந்தோளே எனவும், வாடா வள்ளியங் காடிறத்தோரே எனவும் வரும்.

சூ. 213 : ஆய் என் கிளவியும் அவற்றொடு கொள்ளும்

க-து : ஆய் என்னும் முன்னிலை வினையீறும் அவ்விதி பெறுமென்கின்றது.

உரை : ஆய் என வரும் முன்னிலை வினைச்சொல்லீறும் மேற்கூறியவற்றொடு ஒத்து அவ்விலக்கணத்தை ஏற்கும்.

எ-டு : வந்தோய் மன்ற தண்கடற்சேர்ப்ப எனவரும். கூறப்பெற்ற இந்நான் கீற்றுச் சொற்களும் வினையாலணையும் பெயர்ாயவழி "ஆவோ வாகும்" (பெய-41) என்னும் சூத்திரத்துள் அடங்கும். ஒருவழிக்கூறல் என்னும் உத்திபற்றி முன்னிலை ஈற்றினை ஈண்டுக் கூறினார் என்க.

சூ. 214 : அதுச்சொல் வேற்றுமை உடைமை யானும்
கண்ணென் வேற்றுமை நிலத்தி னானும்
ஒப்பி னானும் பண்பி னானுமென்று
அப்பாற் காலங் குறிப்பொடு தோன்றும் (16)

க-து : உயர்திணைக் குறிப்பு வினை ஆகி வருமாறு கூறுகின்றது.

உரை : அதுச்சொல் வேற்றுமையாகிய ஆறாம் வேற்றுமையது உடைமைப் பொருட்கண்ணும், ஏழாம்வேற்றுமையது இடப் பொருட்கண்ணும் ஒப்புப் பொருட்கண்ணும் பண்புப் பொருட்கண்ணும் என்று சொல்லப்பட்ட அப்பொருண்மை பற்றி வரும் சொல்லகத்துக் காலம் குறிப்பான் தோன்றும். என்றது, அச்சொற்கள் அடியாகக் குறிப்புவினை தோன்றிவரும் என்றவாறு.

'இதனதிது' என்னும் ஆறாம் வேற்றுமைக் கிழமைப் பொருட்களுள் நம்பி மகன் (நம்பிக்குமகன்) நங்கை கணவன் (நங்கைக்குக் கணவன்) என உரிமைப் பொருட்டாய் வருவனவற்றை நீக்குதற்காக, "உடைமையானும்" என விதந்தோதினார்.

நாடன், ஊரன், காடன், கோழியான், வஞ்சியான் என்பவை கொடுத்துக் கொள்ளும் பொருளாகக் கருதியவழி உடைமைப் பொருளாம் ஆதலின், உறையும் கருத்துள்ள வழியே அவை ஏழாவதன் பொருளாம் என்பது விளங்க கண்ணென் வேற்றுமை நிலத்தினானும் என்றார்.

காலமும் வினை செய்யிடமும் உடைமையுள் அடங்கும். ஒப்பு என்பது பண்புடைப் பொருளொடு பொருவும், பொருள் வேறுபாடு உடைமைபற்றி வேறு கூறினார். கருமை செம்மை இயற்கை செயற்கை இளமை முதுமை முதலாயினவும் கிழமைப் பொருளாமேனும் பண்புபற்றி வருவன "இன்னதுஇது" எனத்தற் கிழமைப் பொருட்டாயே வருதலின் பண்புப் பெயரைப் பிரித்தோதினார் என்க.

இனி, கச்சினை உடையான் கழலினைப் பூண்டான் என வரும் இரண்டாம் வேற்றுமைத்தொடர்கள் உருபு நீங்கித் தொழிற்றன்மையைத் தன்னுள் அடக்கிப் பால் காட்டும் இறுதிச் சொல்லொடு கூடிக் 'கச்சினன்' கழலினன் என ஒரு சொல்லாய் உடைமைப் பொருள் தோன்றுமிடத்து ஆறாவதற்குரியவாம். அதனான் உடைமை ஆறாவதன் பொருட்டாய் ஓதப்பட்டது என்க.

உடைமையானும், நிலத்தினானும் என ஓதின் "அன்மையின் இன்மையின்" என்பது போல அவ்வொரு வாய்பாடே பற்றி நிற்கும்ஆதலின் இங்ஙனம் பொருள்பற்றி ஓதினார் என்க.

வரலாறு : உடைமைபற்றி வருவன : கச்சினன், கழலினன், பொன்னன் கண்ணன் நடையன், குடியன் (குடி-அருந்துதல்)

எனவரும், நிலம்பற்றி வருவன: அகத்தன், புறத்தன், விண்ணவன், கானவன், வஞ்சியான், கோழியான் ஊரன், எனவரும். வஞ்சி, கோழி, ஊர் என்பவற்றைப் பொருளாகக் கருதின் உடைமையுள் அடங்கும். ஒப்புப்பற்றி வருவன: பொன்னன்னன் உயிரன்னன் என உவம வாய்பபாட்டொடும் புலியன் நரியன் என உவமப் பொருண்மையொடும் வரும். புலி, நரி என்பவை உடைமையாகக் கருதிய வழி உடைமையுள் அடங்கும். பண்புபற்றி வருன: கரியன், வெளியன் (வெள்ளையன்) குறளன் பெரியன்' இனியன், மெய்யன், என வரும். இவையாவும் படர்க்கை ஆடூஉவறிசொற்குரிய காட்டுக்கள் - ஏனை இருபாற்கும் - தன்மையிடத்து இருபாற்கும் இவ்வாறே ஒட்டிக் கண்டு கொள்க. இனி வேனிலான், ஊழியான், காலையான் எனவும் துணங்கையான் எனவும் காலமும், வினை செய்யிடமும் பற்றி வருவன தன்னின முடித்தல் என்பதனான் ஏழாவதன் கண் அடங்கும், அவற்றைப் பொருளாகக் கருதின் உடைமையுள் அடங்கும்.

இனி, பெயர்க்கும் குறிப்பு வினைக்கும் வேறுபாடுயாதெனின் பெயர் எழுவாயாகி நின்று அறுவகைப் பயனிலையும் கொள்ளும். குறிப்புவினை இருதிணைப்பெயர்களையும் பயனிலையாகி நின்று முடிக்கும். எ-டு: பொன்னன் வந்தான் என்புழிப் பொன்னன் என்பது பெயர். சாத்தன் பொன்னன், என்புழிப் பொன்னுடையனானான் என்பது பொருளாதலின் பொன்னன் வினைக்குறிப்பு முற்று.

இனி அறுவகைப்பயனிலையுள் பெயரும் ஒன்றாகலின் பெயர்ப் பயனிலைக்கும் குறிப்பு வினை முற்றிற்கும் வேறுபாடு யாதெனின்? பெயர்ப் பயனிலை முன்றிடத்தும் ஒப்பவரும் இடவேறுபாடுபற்றி ஈறுதிரியாது. குறிப்புவினை இடத்திற்கேற்பத் தெரிநிலை வினைபோலஈறுதிரிந்து நிற்கும். எ-டு:- யான் பொன்னன் - நீ பொன்னன் - அவன் பொன்னன் எனவருபவை பெயர்ப்பயனிலை. இதன் பொருள் பொன்னன் என்று சொல்லப் படுபவன் என்பதாம்.

யான் பொன்னினேன், நீ பொன்னினை, அவன் பொன்னினன், எனச்சாரியை பெற்றும் பொன்னென் எனச் சாரியை பெறாதும் வருபவை குறிப்புவினை - இவற்றின் பொருள் பொன்னுடையேனாயினேன் பொனனுடையை ஆயினை, பென்னுடையனானான் என்பதாம். யான் கரியேன், நீகரியை அவன் கரியன், என இவை சாரியை பெறாது வந்தன.

இனி, சாத்தன் உண்டான் என்றமைபற்றி அத்தொழிலைக் காரணப் பெயராக்கி உண்டவனை அழைக்க உண்டானை அழைக்க என வழங்கும் வினையாலணையும் பெயர் போலச் சாத்தன் பொன்னன் என வந்த குறிப்புவினையும் வினை யாலணையும் பெயராகிப் பொன்னனை அழைக்க, எனவரும். அவ்வழி அஃது எடுத்தலோசையாற் கூறப்படும். பிற அகல உரையுட் கண்டு கொள்க.

**சூ. 215 : அன்மையின் இன்மையின் உண்மையின் வன்மையின்**
அன்னபிறவுங் குறிப்பொடு கொள்ளும்
என்ன கிளவியும் குறிப்பே காலம் (17)

**க-து :** வாய்பாடு பற்றிக் குறிப்புவினை வருமாறு கூறுகின்றது.

**உரை :** அன்மை, இன்மை, உண்மை, வன்மை என்னும் வாய்ப்பாட்டுப் பொருள் பற்றி வருவனவும் அத்தகையன பிறவும் அங்ஙனம் குறிப்புப் பொருண்மையொடு வரும் எத்தகைய சொல்லும் குறிப்பாற் காலமுணர்த்துவனவாம். என்றது, அன்மை முதலாய சொற்பொருள்பற்றி அவற்றினடியாகவும் குறிப்புவினை தோன்றிவரும் என்றவாறாம்.

**எ-டு :** அல்லன், அல்லள், அல்லர் எனவும் இலன் இலள் இலர் எனவும் உளன் உளள், உளர் எனவும் வல்லன், வல்லள், வல்லர் எனவும் படர்க்கைக்கண் வந்தன. அல்லென், அல்லேன், அல்லம், அல்லேம் எனவும் வல்லென், வல்லேம் எனவும் தன்மைக்கண் வந்தன. ஏனையவற்றையும் இவ்வாறே ஒட்டிக் கண்டு கொள்க. இவற்றுள் இன்மைச் சொல் பொருளிலன், பொருளிலள், பொருளிலர் என உடைமைக்கு மறுதலையாகியும் வரும்.

அன்மை இன்மை உண்மை என்பவை பொருளைப் பற்றிய குறிப்புணர்த்தலின் பண்புச் சொற்களாகாமையானும் வன்மை என்பது மென்மையின் எதிர்மறையாகிய பண்புணர்த்தாமல் "நல்ல பல வல்லன் தோளாள்பவன்" என்றாற் போலக் ஆற்றற்குறிப்புணர்த்தலானும் பண்பினானும் என்பதனுள் அடக்காமல் வேறாக எடுத்தோதினார் என்க. நன்மை தீமை முதலியனவும் குறிப்புணர்த்தும்வழிப் பண்புச் சொல்லாகாவென உணர்க.

பண்பிற்கும் குறிப்பிற்கும் வேற்றுமையாதோ எனின் ? பண் பென்பது தனக்கொரு குணமின்றிப் பொருளினிடமாக ஒன்று பட்டிருக்கும் குணம். குறிப்பென்பது தொழிலின் வேறுபட்டுப் பொருளினது நிலையை உணர்த்திநிற்கும் தன்மை.

அன்னபிற என்றதனான் நல்லன் நல்லள் நல்லர் தீயன் தீயள் தீயர் முதலியவை கொள்க. 'என்ன கிளவியும்' என்றதனான் உடையன், உறவினன், முறையன் எனப் பண்பின் வேறுபட்டு வருவனவும் பெருந்தோளன், கரிகாலன் எனப் பண்புகொள் சினைப்பற்றி வருவனவும் பிறவும் காலக்குறிப்பொடு வருவனவெல்லாம் ஓர்ந்தமைத்துக் கொள்க.

சூ. 216 : பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அன்ன மரபிற் குறிப்பொடு வரூஉம்
காலக் கிளவி உயர்திணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபாடிலவே (18)

க-து : இதுகாறும் கூறப்பெற்றவை உயர்திணைக்குறிப்பு வினைச்சொற்கள் என்பதும் மேல் தெரிநிலை வினைக்கோதிய ஈறுகளுள் பொருந்துவன இவற்றிற்கும் பொருந்துமென்பதும் கூறுகின்றது.

உரை : உயர்திணையிடத்து ஈற்றிடைச் சொற்களான் பன்மையும் ஒருமையும் ஆகியபால் அறியவந்த மேற்கூறிய தெரிநிலை வினையொடு மேற்கூறிய மரபினான் குறிப்புப் பொருண்மையொடு வரும் வினைச் சொற்கள் வேறுபடுதலிலவாம்.

உயர்திணைமருங்கின் பன்மையும் ஒருமையும் பாலறிவந்த மேலைக் கிளவியொடு, அன்னமரபிற் குறிப்பொடு வரூஉம் காலக்கிளவி வேறுபாடில'' எனக்கூட்டிப் பொருள் கொள்க.

என்றது : மேல் தன்மையும் படர்க்கையும் பற்றி வரும் தெரிநிலை வினைக்கு ஓதிய ஒருமைக்கும் பன்மைக்கும் உரிய ஈறுகளுள் ஏற்பவை உயர்திணைக் குறிப்பு வினைக்கும் பொருந்திப் பாலும் இடமும் காட்டிநிற்கும் என்றவாறு. ஒக்கும் என்னாது ''வேறுபாடில'' என்றதனான் வேறுபடுவன கொள்ளற்க என்றவாறாம். அவையாவன கும் டும் தும் றும் என்னும் தன்மைப்பன்மை ஈறுகள் நான்கும் கு, டு, து, று, அல் என்னும் தன்மை ஒருமை ஈறுகள் ஐந்தும் ப, மார் என்னும் படர்க்கைப் பன்மை ஈறுகள் இரண்டுமாம். வேறுபடாதன அம், ஆம், எம், ஏம், என், ஏன், அன், ஆன், அள், ஆள், அர், ஆர் என்னும் பன்னிரண்டுமாம்.

எ-டு : கச்சினம், கச்சினாம், கச்சினெம், கச்சினேம்-கச்சினென், கச்சினேன்-கச்சினன், கச்சினான்-கச்சினள், கச்சினாள், கச்சினர், கச்சினார் எனவரும். நிலம் முதலிய பொருள்களொடும் ஒட்டிக் கொள்க. அன்மை முதலியவற்றிற்கு உதாரணம் மேற்காட்டப்பட்டது பிறவும் அன்ன.

சூ. 217 : அ ஆ வ என வருஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவற்றுப் படர்க்கை (19)

க-து : நிறுத்த முறையானே அஃறிணை வினையுணர்த்தத் தொடங்கி இதனான் அஃறிணைப்படர்க்கைப் பன்மை வினை ஆமாறு கூறுகின்றார்.

உரை : அகரமும் ஆகாரமும் வகர உயிர் மெய்யுமாகிய அக்கூற்று மூன்று ஈறுகளையுடையனவே பலவற்றுப்படர்க்கை உணர்த்தும் தெரிநிலை வினைச்சொற்களாம்.

அகர ஈறு மூன்றுகாலமும் பற்றி வரும். அது சாரியையும் கால எழுத்தும் பெறுதற்கண் அன்னீற்றொடு ஒக்கும். ஆகாரம் எதிர்மறைக்கண் வரும். எதிர்மறை வினை கால எழுத்துப் பெறாமல் இலக்கணவகையான் மூன்று காலத்திற்கும் உரியதாய் நிற்கும். வகரம் எதிர்காலம் பற்றி வரும். சாரியை பெறுதற்கண் பகர ஈற்றொடு ஒக்கும். பன்மையொடு காலங்காட்டுதலும் இதனியல்பென அறிக.

எ-டு : வந்தன, வந்த, உண்டன, உண்ட, சென்றன, சென்ற எனவும், அஞ்சின, அஞ்சிய, போயின, போய எனவும் புக்கன புக்க எனவும் இறந்த காலம் பற்றி வரும். உயர்திணை அன்னீறு சாரியை இன்றிவாராது. இவ் அகர ஈறு சாரியை இன்றியும் வரும். இன் இடைச்சொல் னகரம் கெட்டு இகரமாயும் நிற்கும். இகரம் ஒரோர்விடத்து யகரமெய்யாகியும் நிற்கும். உண்ணாநின்றன, உண்ணாநின்ற - உண்கின்றன, உண்கின்ற என நிகழ்காலம்பற்றி வரும். உண்பன, தின்பன உண்குவன, தின்குவன உரிஞுவன எனஎதிர்காலம் பற்றிவரும். காலங் காட்டும் பகர எழுத்தொடு வருதற்கண் சாரியை பெற்றே வரும். சாரியை பெறாத வழிப் பகரமே ஈறாய் உயர்திணை வினையாம் என்பது மேல் விளக்கப்பட்டது.

ஆகார ஈறு உண்ணா-தின்னா, வாரா என எதிர்மறைக்கண் வரும். இவற்றுள் எதிர்மறை உணர்த்தும் ஆகாரம் புணர்ந்து கெட்டது என்பார் ஒரு சாரார். பகர ஈறும் வகர ஈறும் காலத்தொடு பன்மைப்பால் உணர்த்துமாறு போல ஆகார ஈறு எதிர்மறையொடு பன்மையும் உணர்த்திற்று எனக் கோடல் நேரிதாம் என்க. வகர ஈறு : எதிர்காலம் பற்றி, வருவ, செல்வ, எனவும், உரிஞுவ தின்குவ திருமுவ எனவும் உகரமும் குகரமும் பெற்றும் வரும்.

சூ. 218 : ஒன்றன் படர்க்கை தடற ஊர்ந்த
குன்றிய லுகரத்து இறுதி யாகும் [20]

க-து : அஃறிணை ஒன்றன் படர்க்கை வினைச்சொல் வருமாறு கூறுகின்றது.

உரை : தடற என்னும் மெய்யினை ஊர்ந்து துடுறு எனவரும் குற்றியலுகரத்தை ஈறாகஉடைய வினைச்சொற்கள் அஃறிணை ஒன்றன் படர்க்கையை உணர்த்தி வரும்வினைச் சொற்களாம்.

இவற்றுள் தகர உகரம் மூன்று காலத்திற்கும் உரித்தாய் வரும். றகரஉகரம் இறந்தகாலம் பற்றிவரும். இவ்விரண்டும் வினை,வினைக்குறிப்புஇரண்டிற்கும் உரியன. டகரஉகரம்வினைக் குறிப்பே பற்றி வரும். டகரஉகரத்தை வினைக்குறிப்பு ஓதும் வழிக் கூறாது ஈண்டுக் கூறியதற்குக் காரணம், வினைக்குறிப்புப் பாலுணர்த்துமாறு தெரிநிலை வினையொடு மாட்டெறிந்து கூறப் படுதலான் மாட்டேற்றுவகையாற் பாலுணத்துதல் பெறப்படா தொழியுமாதலின் என்க.

குற்றியலுகரம் என ஒன்றாக ஓதப்படாமைக்கும் இம் முறைவைப்பிற்கும் காரணம் கிளவியாக்கத்துட் கூறினாம்.

துவ்வீறு இறந்தகாலம் பற்றி வருங்கால் 'தடறஇ' என்னும் கால எழுத்தொடு அகரச் சாரியை பெற்றுவரும். முற்றுகரம் இரட்டித்து அகரச்சாரியை பெற்றுவரும்.

எ-டு : வந்தது-உண்டது சென்றது-எஞ்சியது போயது எனவும் புக்கது-உற்றதுஎனவும் இறந்தகாலம்பற்றிவரும். நிகழ் காலம்பற்றி வருங்கால் : ஆநின்று கின்று கிறு என்னும் காலஇடை நிலைகளொடு அகரச் சாரியை பெற்று உண்ணாநின்றது-உண் கின்றது, உண்கிறது எனவும் உரிஞ்சுகின்றது - திருமுகின்றது எனவும்வரும்.எதிர்காலம் பற்றி வருங்கால்; பகரமும் வகரமுமாகிய கால எழுத்துக்களொடு அகரச்சாரியை பெற்று உண்பது-வருவது-உரிஞ்சுவது திருமுவது-எனவரும்.

றுவ்வீறு இறந்த காலம் பற்றி வருங்கால் தடற ஒற்றுக்களின் முன் அன் சாரியை பெற்றுவரும். ஒரெழுத் தொருமொழிகளின் முன் சாரியையின்றி 'இன்' என்னும் கால இடைநிலை பெற்று வரும். ஆண்டு இன்னின் னகரம் றகரமாகத் திரிந்தும் நிற்கும் முற்றிய லுகரம் இரட்டித்து அன்சாரியை பெற்று வரும்.

எ-டு : வந்தன்று (வந்தது) உண்டன்று (உண்டது) சென்றன்று (சென்றது) எனவும் கூயின்று, போயின்று எனவும் கூயிற்று, போயிற்று தாயிற்று எனவும் புக்கன்று உற்றன்று எனவும் வரும். இனி வந்தின்று, சென்றின்று உண்டின்று புக்கின்று என்பவை எதிர்மறை வினைகளாம். ஆண்டுத் தறட க்களின் முன்னிற்கும் இ என்பது இல் என்னும் எதிர்மறை இடைச் சொல்லின திரிபென அறிக.

இனி, தாலிகளைந்தன்று மிலனே, வியந்தன்றும் இழிந்தன்று மிலனே (புறம் 77) என்பவை களைந்தது-வியந்தது, இழிந்தது என்னும் தொழிற் பெயர்கள் இசையின்பம் நோக்கித் திரிந்து நின்றன. என்க. நச்சினார்க்கினியர் இவைபற்றி வலிந்து ஒவ்வாவிளக்கங் கூறுவார்

டுவ்வீறு: குண்டுகட்டு, குறுந்தாட்டு என (முக்காலத்திற்கும் உரிய) வினைக்குறிப்புப் பற்றி வரும்.

சூ. 219 : பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அம்மூ விரண்டும் அஃறிணை யவ்வே [21]

க-து : மேற்கூறிய ஈறுகளாறும் அஃறிணைக்குரியவை என்கின்றது.

உரை : பன்மையும் ஒருமையும் ஆகிய பாலுணருமாறு கூறிய ஆறு ஈற்று வினைச்சொற்களும் அஃறிணைக்குரியவையாம். இதனாற்பயன் அஃறிணைச் சொற்கள் ஈற்றுவகையான் ஆறே என்னும் வரையறை பெறுதலாம்.

சூ. 220 : அத்திணை மருங்கின் இருபாற் கிளவிக்கும்
ஒக்கும் என்ப எவன் என் வினாவே [22]

க-து : எவன் என்னும் வினைக்குறிப்பிற்குரியதொரு மரபு கூறுகின்றது.

உரை : வினாவினைக்குறிப்பை உணர்த்தி வரும் எவன் என்னும் சொல் அஃறிணை இடத்துள்ள இருபாலுக்கும் ஒப்பவரு மென்று கூறுவர் புலவர்.

எ-டு : அஃதெவன்? அவை எவன்? எனவரும். னகர ஈறாய் அஃறிணை இரு பாலுக்கும் வருதலின் விதந்து கூறினார்.

சூ. 221 : இன்று இல உடைய என்னும் கிளவியும்
அன்று உடைத்து அல்ல என்னும் கிளவியும்
பண்புகொள் கிளவியும் உளவென் கிளவியும்
பண்பி னாகிய சினைமுதற் கிளவியும்
ஒப்பொடு வருஉம் கிளவியொடு தொகைஇ
அப்பாற் பத்தும் குறிப்பொடு கொள்ளும் (23)

க-து : அஃறிணை வினைக்குறிப்புச் சொற்கள் ஆகிவருமாறு கூறுகின்றது.

உரை :- இன்று இல என்பவை முதலாகக் கூறப்பெற்ற அக் கூறுபாட்டினையுடைய பத்தும் காலம் குறிப்பொடு பொருந்தி வரும் அஃறிணை வினைக்குறிப்புக்களாம்.

இன்று இல உடைத்து உடைய அன்று அல்ல உள என்பவை தம்மை உணர்த்தி ஒருமை பன்மை சுட்டி நின்றன. ஏனையவைபொருள் உணர்த்தி நின்றன. இன்று அன்று என்பவை இலது அலது எனவாரா. உள என்பதன் ஒருமையாக உள்ளது உளது என்பவை சிறுபான்மையாக வழங்கலின் எடுத்தோதாராயினர். அவற்றை உரையிற் கொள்க. உண்டு என்பது பொதுவினை.

வரலாறு : இன்று இல என்பவை முயற்கோடின்று - முயற்கோடில, அஃது இன்று அவை இல எனப்பொருளினது இன்மை குறித்து வரும். அன்று அல்ல என்பவை காய் அன்று (கனி) நரிகள் அல்ல (பரிகள்) அதுவன்று (இது) அவையல்ல (இவை) என மறுதலைப் பொருள்பற்றி வரும். உள என்பது உண்மைத் தன்மை உணர்த்தாமல் அவரிகள் உள மணிகள் உள என உளதாதற் குறிப்புணர்த்தி வரும். இருநோக்கு இவள் உண்கண் உள்ளது. சோறுளது, கறியுளது என ஒருமைக்கண் வருவனவும் குறிப்புப்பற்றியே வரும்.

உடைத்து உடைய என்பவை கண்ணுடைத்து பண்ணுடைத்து, கண்ணுடைய பண்ணுடைய எனக் கிழமைப் பொருள் பற்றி வரும். பண்புகொள் கிளவி : கரிது, பெரிது, பெரிய, நெடிது, நெடிய, இனிது, இனிய, என வண்ணம் முதலிய பண்புடைமை பற்றிவரும். பண்பினாகிய சினைமுதற்கிளவி : குண்டுகட்டு, குறுந்தாட்டு, நெடுஞ்செவிய குறுங்கண்ண, எனப் பண்படுத்த சினையொடு அம்முதற்பொருளைப் பற்றி வரும். வழக்குப் பயிற்சி நோக்கிப் பண்பினாகிய சினை முதற் கிளவி என்றாரேனும் 'துஞ்சாக் கண்ண வடபுலத்தரசே'' என பண்படாது சினைபற்றி வருதலும் அதனாற் கொள்க. ஒப்பொடு வருஉம் கிளவி : பொன்னன்னது, பொன்னன்ன எனப்பொருள் பற்றியும், அன்ன, இன்ன, அற்று, இற்று எனப் பொருள்சுட்டியும் வரும்.

இனி, பொருளும் இடமும் செய்கையும் பற்றி வினைக்குறிப்பு வரும் என்னும் பொருள்பட அமைந்த சூத்திரம் ஒன்று இருந்து கெட்டிருந்தல் வேண்டும். என்னை ? பொருள் பற்றி ஓதிய பின்னரே சொற்களை எடுத்தோதி முடித்தல் இவ்ஆசிரியர் முறைமையாதலானும், அவை இந்நூலுள்ளும் சான்றோர் இலக்கியத்தும், பயின்று வருதலானும் என்க. அதனான் அவற்றை இச்சூத்திரத்தொடு சார்த்தித் தன்னின முடித்தல் என்னும் உத்தியான் அமைத்துக் கொள்க. அவை வருமாறு :

எ-டு : அறிந்தமாக்கட்டு ஆகுக, குழையது, குழையன, கோட்டது, கோட்டன, பெயர்த்து, பெயர,முதற்று,முதல, பாற்று, பால, நீர்த்து, நீர, எனவும் நிலத்தது நிலத்தன, அணித்து, சேய்த்து, புறத்தது, புறத்த, மேற்று, மேல. வடாது, தெனாது, எனவும் நடைத்து - நடைய, ஓடவற்று ஓடவல்ல எனவும் வரும். இங்ஙனம் பிறவாறும் காலக்குறிப்பொடு வருவன வெல்லாம் ஓர்ந்தமைத்துக் கொள்க.

இன்றில உடைய, அன்றுடைத்தல்ல எனச் செவ்வெண் இடைநின்றமையான் அப்பாற்பத்தும் எனத்தொகை கூறியதன்றி வரையறை கூறியதன்றென்க.

சூ. 222 : பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அன்ன மரபிற் குறிப்பொடு வருஉம்
காலக் கிளவி அஃறிணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே [24]

க.து : மேற்கூறப் பெற்றவை அஃறிணை வினைக்குறிப்புச் சொற்கள் என்பதும் அஃறிணைத் தெரிநிலை வினைகட்கு ஓதம்பெற்ற ஈறுகளுள் ஒப்பன குறிப்பு வினைகட்கு வரும் என்பதும் கூறுகின்றது.

உரை : அஃறிணையின் கண் பன்மையும் ஒருமையுமாகப் பாலுணர வந்த மேற்கூறிய தெரிநிலை வினையொடு மேற்கூறிய மரபினான் வரும் குறிப்புப் பொருண்மையொடு வரும் வினைக் குறிப்புச் சொற்கள் (ஈற்றான்) வேறுபாடிலவாம்.

என்றது : மேல் அஃறிணைத் தெரிநிலை வினைக்கு ஓதிய ஈற்றிடைச் சொற்களுள் பொருந்துவன அஃறிணை வினைக் குறிப்பிற்கும் இயைந்து ஒருமையும் பன்மையும் இடமும் காட்டி நிற்கும் என்றவாறு. அவையாவன பன்மைக்கு அகரமும் ஆகாரமும் ஒருமைக்குத் துறுடு என்பனவுமாம்.

எ-டு : நல்ல-நல்லன, கோட்ட, கோட்டன - கதத்த - கதவ எனவும் [கதம் சினம்] பொல்லா எனவும் கரிது; செம்மற்று குறுந்தாட்டு எனவும் வரும்.

அஃறிணை வினைக்குறிப்பு உயர்திணைக்கோதிய பொருள் பற்றி வருமெனக் கொள்ளவையாமல் எடுத்தோதினார், உயர் திணை அதிகாரத்துப் பண்பினாகிய சினை முதற்கிளவி கூறாமை யான் என்க. இதனானும் அஃறிணை வினைக்குறிப்பு வரும் பொருள்பற்றி ஓதிய சூத்திரம் வீழ்ந்திருத்தல் வேண்டும் என்பது புலனாகும்.

சூ. 223 : முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
இன்மை செப்பல் வேறென் கிளவி
செய்ம்மன் செய்யும் செய்த என்னும்
அம்முறை நின்ற ஆ யெண் கிளவியும்
திரிபு வேறுபடூஉம் செய்தியவாகி
இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமைய

க-து : நிறுத்த முறையானே இருதிணைக்கண்ணும் விரவும் பொதுவினைகள் இவை என அவற்றின் பெயரும்முறையும் தொகையும் கூறுகின்றது.

உரை : முன்னிலை வினை முதலாகச் செய்த என்னும் பெயரெஞ்சுகிளவி ஈறாக அம்முறைமையான் ஓதப்பெற்ற அவ் எண் வகைச்சொற்களும் உயர்திணைக்காங்கால் உயர்திணைச் சொல்லாகவும் அஃறிணைக்காங்கால் அஃறிணைச் சொல்லாகவும் திரிந்து வேறுபடும் செயலினை உடையவாகி இருதிணைக்கும் சொல்லாதற்கு ஒத்த உரிமையனவாம்.

சொற்கும் என்னும் உம்மையைத் திணையொடு கூட்டுக. முன்னிலை முதலிய நான்கும் பொருள் பற்றியும், வேறு என்பது அச்சொல்லே பற்றியும் செய்ம்மன முதலிய மூன்றும் வாய்பாடுபற்றியும், ஓதப்பட்டன. இவை எல்லாம் சொல்லின் முடியும் இலக்கணத்தவாய் நிற்றலின் அம்முறை நின்ற ஆயெண் கிளவியும் என்றார். (முறைமை = இயல்பு).

முறை என்பதற்கு வரிசையென்பதும் பொருளாதலின், வினையும் வினைக்குறிப்பும் பற்றி ஒருமையும் பன்மையுமாய் மூன்று காலத்தும் முற்றுவினையாய்ப் பல வாய்பாட்டொடும் வருதலின் முன்னிலை வினை முதற்கண்ணும், முற்றாய் வருதலும் ஏவல்கண்ணுதலும் பற்றி வியங்கோள் அதன்பின்னும், எச்சமாய்ப் பயின்றுவருதலானும் முற்று எச்சமாய் வருதலானும் வினையெச்சம் அதன் பின்னும் இன்மைசெப்பல்வினைக் குறிப்பாயே வருதலின் அதன் பின்னும். முற்றுவாய்பாடாய் அருகிவருதலின் செய்ம்மன என்பது அதன்பின்னும், முற்றாயும் எச்சமாயும் வருதலான் செய்யும் என்பது அதன்பின்னும் எச்சமாயே வருதலின் செய்த என்பது அதன்பின்னும் வைக்கப் பட்டன என்க.

பல்வேறுபட்ட வினைகள் எல்லாம் 'செய்தல்' எனக்கூறுதற்கு ஏற்குமாதலின் 'செய்'தல் என்பது பொதுக்குறியீடாய் நின்றது. பொதுக்குறியீட்டினை வாய்பாடு எனல் இலக்கண மரபு.

முன்னிலை வினையாவது : எதிர்முகமாய் நிற்கும் பொருளின் செயல் பற்றி வரும். அஃது செயல் உணர்த்துவதும் செயற்படுத்துவதும் என இருநிலைமைத்து. செயற்படுத்தலை ஏவல்வினை எனல் வழக்கு. உண்பாய், வருவாய், உண்மின் சென்மின் என்னும் எதிர்காலமுணர்த்தும் முன்னிலை வினைகளே ஓசை வேறுபாட்டான் ஏவற்பொருண்மை உணர்த்திநிற்கும். ஏவுதல் என்பது பொருட்கூறாவதன்றிச் சொல்வகையாகாமை யறிக.

ஏவற்பொருண்மை முன்னிலை வினைக்கண்ணும் வியங்கோட் பொருட்கண்ணும் வரும் என்பதை ஏவல் குறித்த உரையசைமியாவும் (உயிர்மய - 22) எனவும், ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும் (உயிர்-8) எனவும் ஆசிரியர் கூறுமாற்றான் உய்த்துணர்க.

உண்ணாய் தின்னாய் எனவரும் முன்னிலை வினைகளே ஈறுகுன்றி உண் தின் என முதனிலையாக நின்று எடுத்த லோசையான் ஏவற்பொருணர்த்தும் என்க "ஞநம என்னும் புள்ளியிறுதியும் குற்றியலுகரத் திறுதியும் உளப்பட முற்றத் தோன்றா முன்னிலை மொழிக்கே" (தொகை மரபு-10) எனவும் முன்னிலை முன்னர் ஈயும் ஏயும் அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே (எச். 55) எனவும் கூறியவற்றான் முன்னிலை வினை என்பது ஏவற்பொருண்மை சுட்டி வருதலையறிக.

வியங்கோள் வினையாவது: ஒன்றின்பால் ஒருவர்தாம் கருதும் தொழிற்றன்மையை வெளிப்படுத்தலாம். வியம் வெளிப் படுத்தல். கோள் கொள்கை.

வியம் என்பதற்கு உரையாசிரியன்மார் ஏவுதல் என்றே பொருள் கொண்டனர் வி-அம் (வியம்) என்னும் உரியடிகள் அங்ஙனம் பொருள் கோடற்கு இயையுமாறில்லை. இதனை ஏவல் வியங்கொண் டிளையரொடுஎழுதரும் (பதிற்று - 34) எனவும் செல்கம் செலவியங்கொண்மோ (குறுந்-14) எனவும் வினைகடைக் கூட்ட வியங் கொண்டான் (சிலம்பு-9-78) எனவும் வரும் நல்லிசைப்புலவோர் சொல்வழக்கானறிக.

வியங்கோள் ; விழைதல், வெறுத்தல், விதித்தல் என்னும் பொருண்மைத்தாய் வரும். ஆ வாழ்க, மழை பெய்க, நாடு செழிக்க. என்றாற் போல்வன விழைதலாம். பகை நலிக ; அல்லவை கெடுக ; களவு ஒழிக ; என்றாற்போல்வன வெறுத்தலாம், சான்றோன் வருக, சாத்தன் உண்க என்றாற் போல்வன விதித்தலாம்.

ஏவற் பொருண்மை இவற்றுள் விதித்தல் என்பதன்கண் அடங்கும். இதனை ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவி' என்றதனான் உணரலாம். பிற விளக்கங்களை 'அவற்றுள், முன்னிலைத்தன்மை' (வினை - 29) என்னும் சூத்திர உரையுட் கண்டு கொள்க.

வினையெஞ்சு கிளவியாவது; பிறிதொரு வினையை ஒழிபாகக் கொண்டு அதனொடு முடியும் இயல்பினதாய்த் திணைபால் காட்டும் இறுதிகுன்றி நிற்கும் குறைநிலை வினைச்சொல். இன்மை செப்பலாவது: இன்மை நிலையை உணர்த்திவரும் இல்லை, இலை, இல் என வருவனவாம். வேறு என்கிளவியாவது: ஒன்றினின்று ஒன்றனைப் பிரித்தறி விக்கும் குறிப்புச் சொல்லாகும். செய்ம்மன என்பது: மன என்னும் ஈற்றான் நின்று எதிர்காலம் உணர்த்தி வரும் முற்றுச் சொல்லாகும். இதுமுற்றி நிற்கும் என்பதைச் "செய்ம்மன என்னும் தொழிலிறு சொல்லும் "என்பதனான் அறியலாம். செய்யும் என்பது: உம் என்னும் ஈற்றான் நிகழ்கால முணர்த்திவரும் முற்றுவினையாயும் எதிர்காலத்தொடு நிகழ்காலமும் உணர்த்திப் பெயர்ச்சொல்லை ஒழிபாகக் கொண்டு அதனொடு முடியும் எச்சமாயும் வரும். செய்த என்பது: அகர ஈறாய் தடற இன் என்னும் கால எழுத்தொடு வந்து இறந்த கால முணர்த்திப் பெயர்ச்சொல்லை ஒழிபாகக் கொண்டு அதனொடு முடியும் இயல்பினதாய்த் திணைபால் காட்டும் இறுதிகுன்றி நிற்கும் குறைச் சொல்லாகும்.

இவற்றைப்பற்றிய பிறவிளக்கங்களும் எடுத்துக்காட்டும் தத்தம் சிறப்புச் சூத்திரங்களுட் பெறப்படும்.

சூ. **224 :** அவற்றுள்
முன்னிலைக் கிளவி
இ ஐ ஆய் என வருஉம் மூன்றும்
ஒப்பந் தோன்றும் ஒருவர்க்கும் ஒன்றற்கும்

**கு-து :** முன்னிலை வினைச்சொல் வருமாறு கூறுகின்றது.

**உரை :** மேற்கூறிய பொதுவினை எட்டனுள் முன்னிலை வினைச்சொல் ஒருமைக்கண் இகரமும் ஐகாரமும் ஆய் என்னும் இடைச்சொல்லும் ஆகிய ஈறுகளை உடையவாய் வரும் மூன்றும் உயர்திணை ஒருவற்கும், ஒருத்திக்கும் அஃறிணை ஒன்றற்கும் ஒப்பத்தோன்றி நிகழும். அவற்றுள் என்பது அதிகாரச் சூத்திர மாய்ப் பின்வரும் இரண்டு சூத்திரங்களொடும் இயையும்.

அம்மூன்றுனுள் இகரஈறு தடறக என்னும் மெய்களை ஊர்ந்து எதிர்காலம் பற்றி வரும். ஐகாரம் அம்மீற்றொடு ஒத்து எதிர்காலம் பற்றி வரும் 'ஆய்' ஈறு ஆம் ஈற்றொடு ஒத்து மூன்று காலமும் பற்றி வரும்.

எ-டு : உரைத்தி - உண்டி, தின்றி, ஊக்கி என இகரம் எதிர்காலம்பற்றி வந்தது. 'உரைக்கின்றிநன்றுமன்' எனச் சிறுபான்மை நிகழ்காலமுணர்த்தியும் நிற்கும். உண்டனை, உண்ணாநின்றனை, உண்பை, உண்குவை என ஐகாரம் மூன்று காலமும் பற்றி வந்தது. உண்டாய், உண்ணாநின்றாய், உண்பாய் என ஆய் ஈறு மூன்றுகாலமும் பற்றிவந்தது. ஆடு, பாடு, நோக்கு, சேர், செல், காண் என்பவை ஆய் என்னும் ஈறுகுன்றி வந்தன. ஈறுகுன்றுதல் எதிர்காலத்திற்கு மட்டுமே உரித்தாகும்.

சூ. 225 : இர் ஈர் மின்என வருஉம் மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்
சொல்லோ ரனைய என்மனார் புலவர் (27)

க-து : இதுவுமது.

உரை : அவற்றுள் முன்னிலை வினைச்சொல் பன்மைக்கண் இர், ஈர், மின் என்னும் இடைச்சொற்களை ஈறாகவுடையவாய் வரும் மூன்றும், உயர்திணைப் பல்லோரிடத்தும் அஃறிணைப் பலவினிடத்தும் ஒத்தநிலைமையுடைய சொல்லாய் வருமெனக் கூறுவர் புலவர்.

இவற்றுள் இர் ஈறு, அர் ஈற்றினை ஒத்தும். ஈர், ஈறு, ஆர் ஈற்றினை ஒத்தும் மூன்றுகாலமும் பற்றி வரும். மின் ஈறு எதிர்காலம் பற்றி வரும். எ-டு : உண்டனிர், உண்ணாநின்றனிர், உண்பிர், உண்குவிர், எனவும் உண்டனீர் உண்டீர், உண்ணாநின்றனீர், உண்ணா நின்றீர், எனவும் உண்மின் தின்மின் எனவும் வரும். இவற்றுள் எதிர்காலமுணர்த்துவன ஏவற் பொருட்டாயும் வரும்.

இனி, முன்னிலை வினைக்குறிப்பு உயர்திணை வினைக் குறிப்பிற்கு ஓதிய பொருள்பற்றி ஐ, ஆர், இர், ஈர் என்னும் நான்கீறுகளைப் பற்றி வருமெனக் கொள்க. எ-டு : கழலினை, நாட்டை, கரியை, நடையினை, பொன்னன்னை எனவும் கழலினாய், நாட்டாய், கரியாய், நடையினாய், பொன்னன்னாய் எனவும் கழலினிர், நாட்டிர், கரியிர், நடையிர், பொன்னன்னிர்

எனவும் கழலினீர் நாட்டீர், கரியீர் நடையீர் பென்னன்னீர் எனவும் வரும்.

இனி, தெரிநிலைக்கண் வரும் வினைமுற்றுக்களும் எச்சங்களும் உண்டேன், உண்பித்தேன், உண்டான், உண்பித்தான், உண்டாய், உண்பித்தாய், வந்தாய் வருவித்தாய் எனவும் நட, நடப்பி, கொள், கொள்வி எனவும் சென்று, செல்வித்து - சென்ற, செல்வித்த எனவும் பிறபொருளை வினைப் படுத்து நின்றசொற்கள் ஏவற் பொருண்மையைத்தம்முள் அடக்கி நிற்கும். பி. வி. என்னும் இடைச்சொற்கள் ஏவற் பொருண் மையைத்தம்முள் அடக்கி நிற்றலின், பி. வி. என்னும் இடைச் சொற்கள் பிறவினை ஏவற் பொருளுணர்த்தி வரும் என்பதனை உரையிற் கோடல் என்னும் உத்தியாற் கொள்க. மற்றும் முதனிலை வினைகள் பிறவினை ஏவற் பொருட்டாய் வருதற்கண் நடப்பி, காண்பி என வருதலேயன்றி நடத்து, காட்டு எனக் குற்றியலுகர ஈறாக வருதலும், நடத்துவி, நடத்துவிப்பி என இரு மடியாகவருதலும் அதனாற் கொள்க.

இவை எல்லாம் தன்வினையும் பிறவினையுமாய்ப் பொருள் வேறுபட்டனவன்றி ஈற்றுவகையான் பாலுணர்த்தல், இடமுணர்த் துதல் என்னும் இலக்கணத்தான் வேறுபடாமையின் இன்னோ ரன்னவற்றை ஆசிரியர் விதந்தோதாராயினார் என்க.

சூ. 226 : எஞ்சிய கிளவி இடத்தொடு சிவணி
ஐம்பாற்கும் உரிய தோன்ற லாறே [28]

க ரு : முன்னிலை ஒழிந்த ஏனைய பொதுவினைகளின் இயல்பு கூறுகின்றது.

உரை : முன்னிலை வினை தவிர்ந்த பிற ஏழு பொதுவினை களும் தோன்றி நிகழுமிடத்துத் தமக்குரிய இடங்களொடு பொருந்தி (இருதிணைக்கண்) ஐம்பாலுக்கும் உரியவாய் வரும்.

செய்யும் என்னும் முற்றுத் தன்மை, முன்னிலைக்கண் வாரா மையின் மூன்றிடத்தும் என்னாது பொதுப்பட இடத்தொடு சிவணி என்றார்.

எஞ்சிய கிளவி என்றாரேனும் வியங்கோள் வினைக்கும், செய்யுமென்னும் முற்றிற்கும் சிறப்பு விதி மேற்கூறுவார் ஆதலின் அச்சிறப்பு விதி தவிர்ந்த ஏனையவற்றிற்கு ஈண்டு வரலாறு காட்டப்படும்.

எ-டு : வினையெச்சம்: உண்டுவந்தேன், உண்டுவந்தாய், உண்டுவந்தான், உண்டு வந்தாள், உண்டு வந்தார் உண்டு

வந்தது உண்டு வந்தன எனவரும். இன்மை செப்பல்: யானில்லை, நீயில்லை, அவனில்லை அவளில்லை, அவரில்லை அதுவில்லை, அவை இல்லை எனவரும். இது வினைக் குறிப்பாயே நிற்கும். வேறு என்னும் சொல்; யான்வேறு நீ வேறு, அவன் வேறு, அவள் வேறு, அவர் வேறு, அது வேறு அவை வேறு எனவரும். இதுவும் வினைக்குறிப்பாயே நிற்கும்.

செய்ம்மன என்னும் வாய்ப்பாட்டு முற்றுச்சொல்: யானுண் மன நீயுண்மன அவன் உண்மன, அவள் உண்மன, அவர் உண்மன, அது உண்மன, அவையுண்மன எனவரும். இதற்கு உண்பேன், உண்பாய் உன்பான் என இடத்திற்கும் பாலிற்கும் ஏற்ப எதிர் காலப் பொருள் கொள்க.

செய்யும் என்னும் வாய்ப்பாட்டுப் பெயரெச்சம்: இது யான் வாழும் இல், அதுநீ வாழுமில், அவன் வாழுமில் அவள் வாழும் இல் அவர் வாழும்இல் எனவும், அது, (யானை), வாழும்காடு அவை வாழும் காடு எனவும்வரும். செய்த என்னும் வாய்ப்பாட்டுப் பெயரெச்சம்: இது யான் உண்டஊண், நீ உண்ட ஊண் அவன் உண்ட ஊண், அவள் உண்ட ஊண், அவர் உண்ட ஊண், அது உண்ட ஊண், அவை உண்ட ஊண் எனவரும். யாம்-நாம்- நீயிர் என்னும் பன்மையொடும் இவ்வாறே ஒட்டிக் கொள்க.

இவற்றுள் வினையெச்சம் காலம்பற்றி வருமாறு அதன் வாய்ப்பாடும் ஈற்றிடைச் சொல்லும் ஓதும்வழிப் பெறப்படும். இன்மை செப்பலும், வேறு என் கிளவியும் மூன்று காலத்திற்கும் உரியவாய் வரும். செய்ம்மன என்பது எதிர்காலம் பற்றி வரும். செய்யும் என்னும் எச்சம் எதிர்காலமும் சிறுபான்மை நிகழ் காலமும் பற்றி வரும். செய்த என்னும் எச்சம் இறந்த காலம் பற்றி வரும்.

சூ. 227 : அவற்றுள்
முன்னிலை தன்மை ஆயீ ரிடத்தொடும்
மன்னா தாகும் வியங்கோட் கிளவி (29)

க-து : வியங்கோட் கிளவிக்குரிய இயல்பும் மரபும் கூறுகின்றது.

உரை : எஞ்சிய கிளவி என்றவற்றுள் வியங்கோள் பற்றி வரும் வினைச் சொல் முன்னிலையும் தன்மையுமாகிய அவ் இரண்டிடத்துச்சொல்லாகி நிலைபெறாது. யாண்டுவரினும் படர்க்கைச் சொல்லாயே நிற்கும்.

அஃதாவது யான் வாழ்வேன், நீ வாழ்வாய், அவன் வாழ் வான் என இடத்திற்கேற்ப ஏனை வினைமுற்றுச் சொற்கள்

ஈற்றிடைச் சொல்லான் வேறுபட்டு வருதல்போல, வியங்கோட் கிளவி பொருள் விரியுமிடத்து ஈறுவேறுபடாது யான் வாழ்க, நீ வாழ்க, அவன் வாழ்க, எனப்படர்க்கைச் சொல்லாயே நிற்கும் என்றவாறு.

வந்தேன் வந்தாய் வந்தான் என ஏனை வினைமுற்றுக்கள் எழுவாய் குன்றிவரினும் தம்வடிவான் இடமுணர்த்தி நிற்பதையும்; வளர்க; பொலிக! வாழ்க! என்னும் வியங்கோள்வினை எழுவாயின்றித் தன் வடிவான் இடமுணர்த்தி நில்லாமையும் நோக்கி அது சொல்லமைப்பினாற் படர்க்கைச் சொல்லே என்பதை உணர்த்துவான் வேண்டி "முன்னிலைத்தன்மை ஆயீரிடத்தொடும் மன்னாதாகும்" என அதன் இயல்பு கூறினார் என்க.

அங்ஙனமாயின் செய்ம்மன என்னும் முற்றுச்சொல்லும் ஐம்பால் மூவிடத்தினும் ஈறுதிரியாமல் வருதலின் அதனைவிதந்து கூறாதது என்னை எனின்? செய்ம்மன என்னும் சொல் ஈறு திரியாது நிற்பினும் யான் உண்மன நீயுண்மன அவனுண்மன என்பவை பொருள்விரியுங்கால் யானுண்பேன், நீயுண்பை அவனுண்பான் என விரியும். யான் வாழ்க, நீ வாழ்க, அவன் வாழ்க என்னும் வியங்கோட்கிளவி பொருள் விரியுங்கால் யான் வாழ்வேனாகுக நீ வாழ்வாயாகுக அவன்வாழ்வானாகுக என (ஆகுக) படர்க்கைக்குரியவாயே விரிதலன்றி யான் வாழ்வேன் நீ வாழ்வாய் அவன்வாழ்வான் என விரியாமையின் என்க.

மற்று வியங்கோட்கிளவி ஐம்பால் மூவிடத்திற்கும் உரியவாய் வருமென்பதனான் எஞ்சிய கிளவி இடத்தொடு சிவணி ஐம்பாற்கும் உரிய எனப் பொதுவிதி கூறி அது, சொல்வடிவான் படர்க்கை இடத்ததாயே நிற்றலை ஓர்ந்து அதன் சிறப்புத் தன்மையைச் சுட்டி முன்னிலை தன்மை ஆயிரிடத்தொடும் மன்னாதாகும் என்றார். (மன்னுதல் சொல்வடிவான் நிலை பெறுதல்) அன்றேல் இதனை எஞ்சிய கிளவி என்னும் சூத்திரத்திற்கும் முன்னர் வைத்து ஓதியிருப்பார் என்க. எனவே வியங்கோட்கிளவி சொல்லாற் படர்க்கை சொல் என்பதும் வியங்கொள்ளுதற்கண் ஐம்பால் மூவிடத்திற்கும் வந்துவிரவும் என்பதும் புலனாம்.

தமிழ்மொழி அமைவினையும் தொல்காப்பிய நெறியினையும் ஊன்றிக் காணாமல் உரையாசிரியன்மாரும் இடைக்கால நூலாரும் இக்கால ஆய்வாளரும் தத்தமக்குப் பட்டவாறெல்லாம் விளக்கங் கூறுவாரும் அமைதி கூறுவாருமாயினர். அவர் தம் கருத்துக் களை எல்லாம் ஆராய்ந்துரைக்கப்புகின் விரியுமாதலின் மாணாக்கர் ஊன்றி நோக்கி உண்மையுணர்க.

எ-டு: யான் வாழ்க, யாம் வாழ்க, நீ வாழ்க, நீயிர் வாழ்க, அவன் வாழ்க, அவள் வாழ்க, அவர் வாழ்க, அது வாழ்க, அவை வாழ்க, எனவரும். "பேரமர் உண்கண் இவளினும் பிரிக" இது தன்மை "கடாவுகபாகநின் கால்வல் நெடுந்தேர்" இது முன்னிலை "கொடாமை வல்லர் ஆகுக", இது படர்க்கை. எனவரும்.

மெலிகோல் செய்தேனாகுக (புறம் - 71) குடிபழி தூற்றுங் கோலேனாகுக (புறம்-72) எனத்தன்மைகண் வந்த வியங்கோள் படர்க்கைச் சொல்லாயே நிற்குமாறும் - பழைய உரையாசிரியர் படர்க்கையாகவே பொருள் கூறியுள்ளவாறும் கண்டு கொள்க. இவை எல்லாம் சான்றோர் செய்யுளாதல் அறிக. பிறவும் நல்லிசைப் புலவோர் இலக்கியத்துட் மூவிடத்தும் வியங்கோள் பயின்று வருமாறுங் கண்டு தெளிக.

வியங்கோளீறு பாலுணர்த்தும் பயத்தவாய் வாராமையின் அவற்றை ஆசிரியர் விதந்து கூறாமல் உடம்பொடு புணர்த்தியும் சான்றோர் வழக்கு நோக்கியும் கொள்ள வைத்தார் என்க. அவையாவன: ககர உயிர் மெய்யும், இகரமும், அல், ஆல், அர், ஆர், இய, இயர், முதலிய இடைச்சொற்களுமாம்.

எ-டு: வாழ்க அந்தணர், ஆவாழி, வழாஅல் ஓம்பல், மரீஇயது ஒரால், வசைதீர்ந்த என் நலம் வாடுவது அருளுவார். மன்னியபெரும, உணீஇயர், எனவரும்.

"இது செயல் வேண்டும்" என விழைவுப் பொருட்டாய் வரும் உம் ஈறும் வியங்கோளாய் நின்றலின் உம்மீறும் கொள்க.

புணர்ச்சி இலக்கணமரபின் வண்ணம் உயிர்மெய்யீறு உயிரீறாக (ஓசை கருதி)க் கொள்ளப்படுதலின் "ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்" என்புழி ஆசிரியர் அகர ஈறாக வைத்து விதி கூறியதன்றி அகரம் வியங்கோள் வினையின் இறுதியிடைச் சொல் என்பதன்று என உணர்க. அல்லீறு வெறுப்பின்கண் எதிர் மறைப்பொருளுணர்த்தியும் ககர ஈறு மா என்னும் முன்னிலையசைச் சொல்லொடு கூடியும் வரும்.

எ-டு: 'பயனில் சொல் பாராட்டுவானை மகனெனல்!' [குறள்] 'உப்பின்றுபுற்கை உண்கமா கொற்கையோனே.' 'ஓர்கமா தோழியவர்தேர் மணிக்குரலே!' எனவரும்.

"இனி வாழிய என்னும் செய்கென் கிளவி" (எழுத்-211) என்னும் சூத்திரப்பாடத்தைச் 'செயவென்' கிளவி எனப்பிழை

யாக ஓதி; வர, வாழ, என்றாற் போல்வனவற்றை வியங் கோளாக மயங்குவாரும் உளர். அவை எவ்வாற்றானும் வியங்கோளாகா என்க.

மற்று உரைக்க கேட்க என்னும் வியங்கோள் முற்று வினை யெச்சமாயும் நின்றலின் செயவெனெச்சம் முற்றாய் வியங்கோட் பொருள் தருமால் எனின்? அற்றன்று; வியங்கோள் வேறு செயவெனெச்சம் வேறு. கேட்க உரைக்க எனவரும் வழி வியங்கோளாயின் ககர உயிர்மெய் அதன் ஈற்றிடைச் சொல்லாகும். வினை எச்சமாயின் எதிர்காலம் காட்டும் ககர மெய்யினை ஊர்ந்த அகரம் ஈற்றிடைச் சொல்லாகும் என்க.

மற்று வியங்கோள் வினையும் ஏவல் வினையைப் போலப் பொருள்பற்றியதாகலின் இதனை மட்டும் வினைச் சொல்லின் வகையாக விதந்து கூறியது என்னை யெனின்? வியங்கோள் வினை ஈற்றான் இடமும் பாலும் உணர்த்தாமையானும், மூன்று காலத்திற்கும் ஒப்ப வருதலானும், படர்க்கைக்குரியதாய் அமைந்து ஏனை ஈரிடத்தும் தன்பொருள் வழாதுவருகின்றமை யானும், ஐம்பாற்கும் உரித்தாய் வருதலானும், விழைதல் வெறுத்தல், விதித்தல் என்னும் பொருட்கூறுபடுதலானும் இதனை எடுத்தோதினார் என்க.

ஏவல் வினை முன்னிலைக்கண் அடங்கலான் விதந்து கூறா ராயினார் என்க. வினைச் சொற்கள் இடம்பற்றியே வகைப் படுத்தப் பெற்றுள்ளமையை "அவ் ஆறென்ப முற்றியன் மொழியே" (எச்-31) என்றதனானும் அறிக.

சூ. 228 : பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழும் காலத்துச்
செய்யு மென்னும் கிளவியொடு கொள்ளா

க-ரு : செய்யுமென்னும் வாய்ப்பாட்டு முற்றுச் சொற்கு எய்தியவற்றுள் சில வற்றை விலக்குகின்றது.

உரை : எஞ்சிய கிளவி என மேலே, ஏழற்கும் பொது வகையான் ஓதிய ஐம்பால் மூவிடங்களுள், பல்லோரைக் குறித்து வரும் படர்க்கை இடமும், தன்மையிடமும், முன்னிலையிடமும், ஆகியவை நிகழ்காலமுணர்த்துதலுடைய செய்யுமென்னும் வாய்பாட்டு முற்றுச் சொல்லொடு பொருந்தி வாரா.

எனவே, படர்க்கை இடத்து ஒருவன் ஒருத்தி ஒன்று, பல என்னும் நான்கு பாலுக்கு மட்டுமே பொருந்தி வருமென்றவாறு.

அவ்வயின் என்றது எஞ்சிய கிளவிகட்கு ஓதிய இடமும் பாலுமாகிய பொருட்கண் என்றவாறு. நிகழுங்காலத்துச் செய்யுமென் கிளவி என அதன் காலமுணர்த்தும் இயல்பு கூறியவாறு. அதனான் செய்யுமென்னும் எச்சம் எதிர் காலத்திற்கும் நிகழ்காலத்திற்கும் உரித்தாதல் பெறப்படும்.

ள்-டு : அவன் உண்ணும், அவள் உண்ணும், அது உண்ணும் அவையுண்ணும் எனவரும்.

சூ. 229 : செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின் செய செயற்கென
அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி

க-து : நிறுத்த முறையானே வினையெஞ்சு கிளவியின் இலக்கண மாமாறு கூறத்தொடங்கிக் காலத்தானும் பொருள்நிலையானும் வேறுபட்டு வரும் அதன் இயல்பினை வாய்பாட்டான் வகுத்துக் கூறுகின்றது.

உரை : செய்து முதலாய ஒன்பது வாய்பாட்டுச் சொல்லும் வினையெச்சச் சொற்களாம்.

இறுதிநிலையான் வேறுபடுதலின் அவ்வகை ஒன்பது என்றார். செய்யூ என்பது செய்யா எனவும் வரும். இதனைச் செய்யா என்னும் வினையெஞ்சு கிளவியும் (உயிர்மய-20) என்பதனான் அறியலாம். ஒருசாரார் செய்யா என்பதனைத் தனியொரு வாய்ப்பாடாகக் கருதினர். அது பொருந்தாது என்பதனை 'நிகழூஉ நின்ற பலர்வரை கிளவியின்' (பெயர்-19) என்பதனான் அறியலாம்.

இவற்றிற்குரிய கால எழுத்துக்களை மேலே முற்றுவினைக்குக் கூறியாங்கு அவ்வவற்றிக்கு ஏற்ப அறிந்து அமைத்துக் கொள்க.

வரலாறு : செய்தென்பது இறந்தகாலம் பற்றிப் பயின்று வரும். எ-டு : ஒத்துநின்றான் உண்டுவந்தான் கற்றுவந்தான் - இவை தடற என்னும் ஒற்றுக்களான் இறந்தகாலங்காட்டித் திரியாது வந்தன. உரிஞ்சி நின்றான் ஓடி வந்தான் கூய்ச் சென்றான் போய் நின்றான். என இவை ஈறுவேறுபட்டு வந்தன. இத்திரிபுகளை உகரத்தின் திரிபென்பார் சேனாவரையார். அது பொருந்தாது என்பதை நச்சினார்க்கினியர் மறுப்புரை யானறியலாம்.

செய்து என்னும் வாய்ப்பாட்டுள் காலம் காட்டும் உறுப்புத் தகர மெய்யாகும் இகரமும் அதன் திரிபாகிய யகரப்புள்ளியும்

இறந்த காலம் காட்டும் எழுத்தாகலின் முதனிலைகட்கேற்ப அவ்வவ்வெழுத்துக்களைப் பெற்று வருமெனக் கொள்ளுதல் தகும்.

செய்து என்னும் வாய்பாடு பெரும்பான்மையும் ஈரெழுத்தொருமொழி தொடர் மொழிகளை முதனிலையாகக் கொள்ளுமிடத்துத் திரியாமலும் சில முற்றுகர மொழிகளையும் குற்றொற்று மொழிகளையும் முதனிலையாகக் கொள்ளுமிடத்து இகர ஈறாயும் ஓரெழுத்தொரு மொழிகளை முதனிலையாகக் கொள்ளுமிடத்து யகர ஒற்றீறாயும் நிற்கும்.

இனி, செய்து என்னும் வாய்ப்பாட்டுப் பொருள்பட வரும் இகரமும் யகரப்புள்ளியுமாகிய இவ் இறுதி இடைச் சொற்கள் செய்யுளின்கண் அகவல் முதலாய பாவோசை நயங்கருதி முதனிலைத் தொழிற் சொற்களை விகாரப்படுத்தித் தன் வடிவு திரியாமல் செய்யுள் வழக்காக வரும்.

எ-டு : நசைஇ - நடைஇ கடைஇ தழீஇ உடீஇ நிறீஇ கொளீஇ எனவும் விராஅய், பராஅய் உலாஅய் எனவும் வரும்.

செய்யூ : என்பது பின்வரும் தொழிற்கு முன்னர் வினையின் இடையீடின்மை உணர்த்தி இறந்தகாலம் பற்றி, உண்ணூ வந்தான், படுமகன் இடைக்கை காணூஉ பெரிது வந்தனளே, நிலம்பூடையூஉ எழுதரும் வலம்படுகுஞ்சரம். எனவரும். இவ் ஊகார ஈறு ஆகாரமாய் வேறுபட்டு, 'நிலங்கிளையா நாணி நின்றோள்', 'கல்லாக்களிப்பர்', எனவும் வரும்.

செய்பு : என்பது முடிக்குஞ் சொற்பொருளொடு ஒருங்கு நிகழ்வதாய் அதற்குரிய காலம்பற்றி, உரிஞுபு வந்தான், கற்குபு வந்தான், தெரிபு தெரிபு குத்தின ஏறு, புலராப் பச்சிலை இடையிடுபு தொடுத்து - வாக்குபு தரத்தர உண்டு என வரும்.

செய்தென : என்பது முடிக்குஞ் சொல்லான் உணர்த்தப் படும் பொருட்குத் தன் முதனிலைத் தொழில் காரணம் என்பதுபட உண்டெனப் பசி தீர்ந்தது - மருந்து தின்றென நோய் நீங்கிற்று, எனவரும்.

செய்யியர், செய்யிய : என்பவை எதிர்காலம் பற்றி ஏதுப் பொருட்டாய், உண்ணியர் வந்தான், உண்ணிய வந்தான் எனவரும்.

செயின் : என்பது எதிர்காலம் பற்றிக் காரணப் பொருட்டாய் மழை பெய்யின் குளம் நிறையும், அறிம்புரியின் புகழ் எய்தும்

எனவரும். இவ்வாய்ப்பாடு சிறுபான்மை, ''நனவிற்புணர்ச்சி நடக்கலும்'', ''(கலி-39) அற்றால் அளவறிந்துண்க'', என வேறு பட்டும் வரும்.

செய : என்பது காரணப் பொருட்டாய் இறந்தகாலம் பற்றியும் காரியப் பொருட்டாய் எதிர்காலம் பற்றியும், இது நிகழா நிற்ப இது நிகழ்ந்தது என்பதுபட நிகழ்காலம் பற்றியும் வரும். மழை பெய்யக் குளம் நிறைந்தது. உண்ண வந்தான், ஞாயிறுபட வந்தான் என முறையே கண்டு கொள்க.

இனி, காரணப்பொருட்டாய் இறந்த காலம் பற்றியும் காரியப் பொருட்டாய் எதிர்காலம் பற்றியும் இது நிகழாநிற்ப இது நிகழ்த்தது என்பது பட நிகழ்காலமுணர்த்தியும் வரும் 'செய' என்னும் வாய்பாட்டு வினையெச்சத்தை ஈறு கெட்டு நிற்கும் தொழிற் பெயரெனவும் செயவென் எச்சம் வியங்கோட் பொருளிலும் வருமெனவும் ஒருசாரார் மயங்கிக் கூறுவர். அவன் என்னைக் காணவிரும்பினான், யான் அவனைக் காண விரும்பினேன் எனவருவனவற்றுள் காண என்பது காணல் என்னும் தொழிற் பெயர் எனக் கூறுவர் அவர். காணல் என்பது காலத்தொடு புணராது நிற்றலின் அதனை வினையெச்சம் எனக் கருதுதல் திரிபுணர்ச்சியாகும். அதனைக் காண்பான் விரும்பினான் என விரித்தலே நூல் நெறிக்கொத்ததாகும். காணல் விரும்பினான் எனப்பொருள் கொள்ளின் ஐயுருபு தொக்க செயப் படுபொருட் சொல்லாகக் கோடல் வேண்டும். வினைகொண்டு முடிதல் ஒன்றையே கருதி அங்ஙனம் வருவனவற்றை வினையெச்சமெனின் வினைகொண்டு முடியும் வேற்றுமை யுருபேற்ற பெயர்கள் யாவும் வினையெச்ச மெனப்பட்டு வழுவாகும்.

நீவாழ நீஓங்க எனச் செயவெனெச்சம் வியங்கோட் பொருளில் வந்தனவாக இக்கால மொழியியலறிஞர் சிலர் மயங்குவர். வாழிய வாழியர் வாழ்க வாழிஎன்றாற்போல இயர், இய என்னும் ஈறுகளானும் ககர உயிர்மெய்யீற்றானும் இகர உயிரீற்றானும் வேண்டல், வைதல் வாழ்த்தல் (ஆசி) என்னும் பொருள்பற்றித் தற்குறிப்பாக வருவனவே வியங்கோளாகும். ஏவலுணர்த்திவரின் முன்னிலை வினையாகும். முன்னிலை ஏவலைத் தொல்காப்பியம் ஏவல் கண்ணிய வியங்கோட்கிளவி என விதந்து கூறும். அஃது, வழாஅலோம்பல், மரீஇயதொராஅல் மகனெனல் மக்கட் பதடிஎனல், என அல், ஆல் ஈறாக வரும். ஆதலின் வாழ, யோக, சாவ என்பவை அகர ஈற்றனவாய் வினையெச்சமாயே நிற்கும். இவற்றுள் போக என்பது

வியங்கோட்பொருளும் தரும் அவ்வழி அது ககர உயிர்மெய் யீறாகும் எனத் தெளிதல்வேண்டும். ஏவல் கண்ணாத வியங்கோள் என்பது ஆவாழ்க அந்தணர் வாழ்க என்றாற்போலத் தன் விருப்பத்தைப் புலப்படுத்தி நிற்கும். வியங்கொளுவப்பட்ட பொருள் அதனை ஏற்றுச் செயல்பட வேண்டுவதின்று, செயல் படற்கு இயலாததாகவே அஃதமையும், நீவாழ்க நீசாகீ, நீஒழிக எனவரும். இவற்றை ஏற்று அம்முன்னிலைப் பொருள் அவ்வாறே செயற்பட்டதாயின் அவை ஏவல் கண்ணிய வியங்கோளாகி விடும்.

இங்ஙனம் தெரிபு வேறு நிலையலும் குறிப்பிற்றோன்றலுமாக ஆக்கம்பெற்றுப் பொருள் உணர்த்தி வரும் மொழியமைதியை நுணுகி நோக்காமல் தத்தமக்குத் தோன்றியவாறெல்லாம் விளக்கஞ்செய்து கூறுதல் மொழியியலுக்கு மாசாகும் என்க.

செயற்கு : என்பது இன்னதற்கு என்னும் பொருள்பட எதிர் காலம் பற்றி உணற்கு வந்தான், தினற்கு வந்தான் எனவரும். உணற்கு, தினற்கு என்பவற்றைத் தொழிற்பெயர் நான்கனுருபு ஏற்று நின்றனவாகக் கொள்ளாமோ ? எனின், கொள்ளாம். என்னை ? தொழிற்பெயர் நான்கனுருபு ஏற்றுவந்த சொல்லாயின் அது கோடற் பொருட்டாய் நிற்கும். அஃதாவது தன்னைப்பிறிது ஒரு பொருள் உண்ணுதற்குத்தான் உணவாக வந்தான் என்பது பொருள், வினையெச்சமாயின் காரணப்பொருட்டாய் வரும். அஃதாவது தான் உணவை உண்ணுவதற்காக வந்தான் என்பது பொருள். ஆதலின் வினைஎச்சமீ வேறு நான்கனுருபேற்ற தொழிற் பெயர்வேறெ‌ன அறிக.

இனி, பொருந்து மாற்றான் இவ்வாய்பாடுகளைத் தழுவிக் குறிப்புவினைகள் வரும் அவற்றை ஓர்ந்து அமைத்துக் கொள்க. விருந்தின்றி உண்டபகல், நாளன்று போகி, எனசி செய்து என்னும் வினையெச்சக்குறிப்பாயும், அவா உண்டேல் உண்டாம் சிறிது எனச் செயின் என்னும் வினைஎச்சக் குறிப்பாயும் வரும். பிறவும் சான்றோர் வழக்கினுள் வருமாறு அறிந்து அமைத்துக் கொள்க.

## வினைஎச்சம் பெயரெச்சம் பற்றியதொரு சிறு குறிப்பு

வினையெச்சம் : வினை என்பது ஒரு பெயர்ப் பொருளின் செயல் குறித்த சொல்லாகும். செயலின் குறியீடு உணர்த்தின் அது தொழிற்பெயராம். அது காலத்தொடு காலஇடைச்சொல், (காலக்குறிப்பு) கூடி ஒருவினை முதலுக்குப் பயனிலையாக

ஆகிவரின் வினைச்சொல்லாம். அஃதாவது; உண்ணுதல் என்னும் சொல் அத்தொழிலை உணர்த்தி நிற்குமளவில் அது தொழிற் பெயர், அஃது ஒருவினை முதலின் தொழிலாகிக் காலத் தொடுபுணர்ந்து சாத்தன் உண்டான், உண்ணாநின்றான் உண்பான் எனவரின் வினைச் சொல்லாம்.

அவ் வினைமுதல் உண்ணுதல், உறங்குதல் எழுதல், வருதல் எனப்பல தொழில்களை செய்திருப்பின் சாத்தன் உண்டான், சாத்தன் உறங்கினான், எழுந்தான், வந்தான் என வரும். இவையாவும் சாத்தன் தொழில்களேயாதலின் அவற்றை ஒருங்கு கூட்டி ஒருதொடராகக் கூறுங்கால். சாத்தன் உண்டு உறங்கி எழுந்து வந்தான் எனவரும். இத்தொடருள் வந்தான் என்பது தவிர ஏனையவை ஈறுகுறைந்து எச்சமாய் நிற்றலைக் காணலாம். அவ்எச்சங்கள் உண்டு உறங்கி எழுந்து எனத் தனியே நிற்குமிடத்துக் காலந்தவிர, திணை பால் இடம் ஆகிய வற்றை காட்டாமல் வந்தான் என்பதனொடு முடிந்தவழிக் காட்டி நிற்பதையும் அறியுலாம்.

உண்டு முதலியவை வந்தான் என்னும் முற்றுவினையுள் வருதல் தொழிலை அவாவாமல் ஆன் என்னும் பால்காட்டும் ஈற்றிடைச்சொல்லையே அவாவி நின்றன. எனினும் அவ்ஈறு அவ்வினைப்பகுதி (வருதல்) யொடு கூடி நின்றல்லது திணை முதலியவற்றைக் காட்டும் ஆற்றலுடையதன்றாலின் முழுமையாக அவ்வினை முற்றுச் சொல்லை அவாவி நின்றது எனக்கூறுதல் இலக்கண மரபாகும்.

பெயரெச்சம் : ஒருவினை முதல் என்னென்ன செய்தது என்பதை நோக்கிக் கூறுதல் வினையெச்சத்தின் இலக்கண மாகும். அவ்வாறின்றி இன்னின்ன தொழிலைச் செய்த வினை முதல் யாது என்பதை நோக்கிக் கூறுதல் பெயரச்சத்தியல்பாகும் அஃதாவது உண்டவன் சாத்தன், உறங்கினவன் சாத்தன், எழுந்தவன் சாத்தன் எனக் கூறுதல். இவற்றை ஒரு தொடராக்குதற்கண் உண்ட உறங்கின எழுந்த சாத்தன் எனவரும்.

இவற்றுள் உண்ட முதலிய குறைச் சொற்கள் சாத்தன் என்னும் பெயர்க்கண்உள்ள 'அன்' என்னும் பால்காட்டும் ஈற்றிடைச் சொல்லை அவாவி நின்றன எனினும் அவ் ஈறு அப்பெயரொடு கூடியல்லது திணை முதலியவற்றை உணர்த்தும் ஆற்றலுடையதன்றாகலின் முழுமையாக அப்பெயர்ச் சொல்லை அவாவி நின்றதெனக் கூறுதல் இலக்கணமரபாகும்.

இனி இவ்விருவகை எச்சங்களும் சென்று முடியும் சொற்கள் அவற்றை முடிக்குஞ் சொற்களாகும். இரண்டற்கும் எழுவாய் பெயராகவே நிற்கும். வினையெச்சத்திற்கு வினைச்சொல் பயனிலையாயும் பெயரெச்சத்திற்குப் பெயர்ச்சொல் பயனிலையாயும் நிற்கும். அஃதாவது, சாத்தன் உண்டு வந்தான். இவன் உண்ட சாத்தன், எனவரும். எனவே பெயரெச்சத்தொடர்க்கு எழுவாய் சுட்டுப்பெயர், வினாப் பெயராயே நிற்கும். வினையெச்சம் முற்றாங்கால்வினைச் சொல்லாக முற்றும். பெயரெச்சம் முற்றாங்கால் பெயராக (வினையாலணையும் பெயராக) முற்றும் என்பதை அறிதல் வேண்டும். அதனான் வினையெச்சம் என்பது வினைமுற்றினது குறையாயும் பெயரெச்சம் என்பது பெயரினது (வினையாலணையும் பெயர்) குறையாயும் நிற்கும் என்பது தோன்ற வினையெஞ்சு கிளவி என்றும், பெயரெஞ்சு கிளவி என்றும் இரட்டுறமொழிதல் என்னும் உத்தியாற் குறியீடு செய்தார் ஆசிரியர்.

இங்ஙனம் வினை ஒழிபாகவும் பெயர் ஒழிபாகவும் நின்ற குறைச் சொற்கள் தம்மை முடிக்கும் வினைச்சொல், பெயர்ச் சொல்லுக்குரிய கருத்தாவின் செயல்களேயாதலின் அவையாவும் முற்றிய சொற்களாயமைந்து பின்னர் குறைக்கப்பட்டவை என்பதும் புலனாகும். அவ்வாற்றான் முற்றுச் சொற்களே எச்சமாகும் என்பதனை அறியலாம்.

உண்டு தின்று என்னும் குறைச்சொற்களே அன் ஆன் முதலியஇடைச்சொற்களோடு கூடி முற்றி நிற்கும் எனச் சொல் வடிவத்தை அடிப்படையாகக் கொண்டு எச்சமே முற்றாக மாறும் என்பாரும் உளர். உண்தின் முதலாய முதனிலைகள் ஒருவினை முதலானன்றிக் காலத்தொடுபுணரா என்பதையும் அவ்வினை முதல்அத்தொழிலைப்பற்றிய அளவில் அது வினைச் சொல்லாய் நிறைதலையும்அவர் ஓர்ந்திலர்.

'முற்று', 'எச்சம்', என்பவை தொழில் முற்றுப் பெற்று நிற்றலையும் முடியாது நிற்றலையும் பற்றியவை அல்ல. சொற் பொருள் பற்றியவை என்பதை உண்பான், உண்ணான் என்னும் எதிர்கால வினையானும் எதிர்மறை வினையானும் அறிக. இவற்றுள் தொழில் நிகழாமை தேற்றமாம். அவ்வாற்றான் இவ்விருவகை எச்சமும் முற்றுச் சொல்லின் திரிபுகளாய் வகைப் பட்டனவன்றி வினைச் சொற்களின் வகையாகாமை உணர்க.

முற்றி நிற்பதும் எஞ்சி நிற்பதும் பால் முதலியவற்றை உணர்த்தும் ஈறுகளேயாதலின் ஆசிரியர் செய்து செய்யூ

செய ...... செயற்கு எனவும் (செய்யும்) செய்த எனவும் ஈறு குன்றியுள்ளமை தெற்றெனப் புலப்படும் வாய்பாடுகள் வாயிலாக அவற்றின் இலக்கணங்களை ஓதுவாராயினார் என்க.

மொழியியல்பும் தொல்காப்பிய நெறியும் ஓராத வழி நூலாசிரியன்மார் இவ் எச்சங்களை வினைச் சொல்லின் வகையாகக் கூறிச் சென்றனர். பவணந்தியார், அவைதாம், முற்றும் பெயர் வினை எச்சமுமாகி ஒன்றற்குரியவும் பொதுவுமாகும் (நன் - 322) என்றும் காலமும் செயலும் தோன்றிப் பாலொடு செய்வதாதி அறுபொருட் பெயரும் எஞ்சநிற்பது பெயரெச்சம்மே (நன் - 340) என்றும் தொழிலும் காலமும் தோன்றிப் பால்வினை ஒழிய நிற்பது வினையெச் சம்மே (நன் - 342) என்றும் கூறிப் போந்தோர். அவை இடமும் உணர்த்தா என்பதைக் கருதினாரில்லை. பிற வேறுபாடுகளையும் விரிக்கின் பெருகும்.

சூ. 230 : பின்முன் கால்கடை வழி இடத் தென்னும்
அன்ன மரபிற் காலங் கண்ணிய
என்ன கிளவியும் அவற்றியல் பினவே (32)

கு-து : ஈறுபற்றி வரும் ஒருசார் வினையெஞ்சு கிளவிகள் வருமாறு கூறுகின்றது.

உரை : பின் முன் கால் கடை வழி இடத்து என்னும் அத்தகைய மரபினான் காலத்தைக் கருதி நின்ற எவ்வகைச் சொற்களும் மேற் கூறப்பெற்ற வினையெச்சச் சொற்களின் இயல்பினவாகும்.

செய்து செய்யூ முதலியவை முதனிலை வகையான் வாய்பாடாயினாற் போல இவை இறுதிநிலையான் வாய்பாடொப்ப நிற்கும் வினையெச்சம் என்பார் அவற்றியல்பினவே என்றார்.

பின்முன் முதலியவையே சொல்லாயின் அவை பெயராவதல்லது வினையெச்சமாகாமையான் அவை இறுதிநிலைகளே என்பதும் முதனிலைகள் வேறுள என்பதும் பெறப்படும். அம்முதனிலைகள் பெயர் வடிவாகவோ வினைமுற்று வடிவாகவோ வினையெச்சவடிவாகவோ நிற்றற்கு ஒவ்வா ஆதலின் அவை பெயரெச்சவடிவாகிய சொல்லாக அமைதல் வேண்டுமென்பது உய்த்துணரப்படும். அங்ஙனம் அமையும் முதனிலைச் சொல்லும் இவ்இறுதிநிலைச் சொல்லும் தம்முள் பிளவுபடாமல் ஒன்றுபட்டு ஒருசொல் நீர்மைத்தாய் நின்றபின் அவை பெயரெச்சப்பொருளும் பெயர்ப்பொருளும் உணர்த்தாமல் வினையை அவாவி வினையெச்சமாய் நிற்றலின் இவற்றை வேறு கூறினார் என்க.

அவை : கற்றபின், தின்னாமுன், நாடுங்கால், வந்தக்கடை, ஆடுவழி காழ்த்தவிடத்து, என ஒரு சொல் நீர்மைத்தாய் நிற்குங்கால் அவற்றின் முதனிலைகள் காலமுணர்த்தாமல் இறுதி நிலைகளே காலமுணர்த்தலின் "அன்னமரபிற்காலங்கண்ணிய என்ன கிளவியும்" என விளங்கக் கூறினார்.

எ-டு : பின் : நீயிர் பொய் கூறியபின் மெய்கூறுவார் யார் - நீயிர் பொய்கூறாநின்றபின் மெய் கூறுவார் யார். கற்றபின் நிற்க அதற்குத்தக எனப் 'பின்' ஈற்று வினையெச்சம் மூன்று காலமும் உணர்த்திவரும்.

முன் : மருந்துதின்னாமுன் நோய் தீர்ந்தது-மருந்துதின்னா முன் நோய்தீரும். நீயிர் எம்மூர்க்கு வருமுன் எதிர் கொள்வேன் என 'முன்' ஈற்றுவினையெச்சம் மூன்றுகாலமும் உணர்த்திவரும்.

கால் : வணங்கி நாம் விடுத்தக்கால், அகன்றவர் திறத்தினி நாடுங்கால் எனக் 'கால்' ஈற்று வினையெச்சம் இறப்பும் எதிர்வும் உணர்த்தி வரும்.

கடை : தொடர்கூரத் துவ்வாமை வந்தக்கடை - எனக் கடையீற்று வினையெச்சம் இறந்தகாலம் உணர்த்தி வரும்.

வழி: "விடுவழி விடுவழிச் சென்றாங்கவர் தொடுவழித்தொடு வழி நீங்கின்றாற் பசப்பே" எனவும் உரைக்கும் வழிக் காண்மின் எனவும் "அவள் ஆடுவழி ஆடுவழி அகலேன் மன்னே," எனவும் 'வழி' என்னும் ஈறு மூன்று காலமும் உணர்த்தி வரும்.

இடத்து : களையுநர் கை கொல்லும் காழ்த்தவிடத்து எனவும் உற்றவிடத்துதவுவார் நல்லோர் எனவும், வருமிடத்துக் காண்மின் எனவும் "இடத்து" என்னும் ஈறு மூன்றுகாலமும் உணர்த்தி வரும்.

அன்ன மரபின் காலங்கண்ணிய கிளவியாய்வருவன : வான், பான், ஆல், மல், மை முதலியவாம். எ-டு : கொளீவான் கொடித்தானை கொண்டெழுந்தான், அலைப்பான் பிறிதுயிரை ஆக்கலும் குற்றம், அற்றால் அளவறிந்துண்க எனவும் கூறாமற் குறித்ததன் மேற்செல்லும் கடுங்கூளி எனவும் கூறாமை நோக்கிக் குறிப்பறிவான் எனவும் வரும். மையீறு மே எனத்திரிந்தும் வரும்.

"புணர்தரு செல்வம் தருபாக்குச் சென்றார்" எனவரு மிடத்துப் பாக்கு என்பதை வினையெச்ச ஈறாகக் கொள்வர் ஒருசாரார். அதனைச் செயற்கு என்பதன் திரிபாகக் கோடலே நேரிதென்க.

இனி, காணுமேற் கூறும் வருமேற் காணுதும் எனவரும் 'ஏல்' என்பதனை அன்னமரபின்பாற் படுத்துக் கொள்க. ஏல் என்பது எனின் என்பதன் மருவாகிய ஏன் என்பதன் திரிபாய்ச் செயின் என்னும் வாய்பாட்டினுள் அடங்கும். அது வழக்கின் கண் உண்பானேனும், வருவானேனும் என முற்றுச் சொல்லின் பின் உம்மையடுத்தும், காண்பானேல், காணுமேல் என லகர ஈறாகத் திரிந்தும் வரும்.

இனி என்ன கிளவியும் என்றதனான் அல்லது அல்லால் அல்லாமல் எனவரும் குறிப்பு வினையெச்சங்களும் கொள்க. இவற்றை 'அன்றி' என்பதன் திரிபாகக் கோடலே நேரிதாம். எ-டு: அதுவல்லது ஊதியமில்லை உயிர்க்கு. [குறள்-231] "தனக்குவமையில்லாதான் தாள்சேர்ந்தார்க்கல்லால் மனக் கவலை மாற்றலரிது" எனவரும். பிறவும் சான்றோர் வழக்கு நோக்கிக் கொள்க.

சூ 231 : அவற்றுள்
முதனிலை மூன்றும் வினைமுதல் முடிபின

க-து: வினையெச்ச வாய்பாடுகளுள் முதல் மூன்றற்கும் முடிக்கும் பொருள் ஆமாறு கூறுகின்றது.

உரை: மேற் கிளந்தோதப் பெற்ற பதினைந்து வினை யெச்ச வாய்பாடுகளுள் முதல் நின்ற செய்து செய்யூ செய்பு என்னும் மூன்றும் தம்வினை முதலுக்குரிய முற்று வினையொடு முடியும் இயல்பினவாம்.

வினைமுதல் முடிபின என்றதனான் இவ்விதி முடிக்குஞ் சொல் பற்றியதன்று சென்று முடியும் பொருள் பற்றியதென்பது புலனாகும்.

எ-டு: சாத்தன், உண்டுவந்தான் - உண்ணூவந்தான், உண்குபுவந்தான் எனவும், கற்றுவல்லனாயினான் கல்லூவல்லனா யினான் கற்குபு வல்லனாயினான் எனவும் வரும்.

'செய்து' என் எச்சக்குறிப்பாக வரும் அன்றி இன்றி என்பவையும் "தொல்லெழில் வரைத்தன்றி வயவு நோய் நலிதலின்" எனவும், "தம்மின்றமையா நந்நயந்தருளி" எனவும் வரும்.

சூ. 232 : அம்முக் கிளவியும் சினைவினை தோன்றின்
சினையொடு முடியா முதலொடு முடியினும்
வினையோ ரனைய என்மனார் புலவர் (34)

க-து : மேலதற்கொரு புறனடை கூறுகின்றது.

உரை : மேல் வினைமுதல் முடிபின எனப் பெற்ற அம்மூன்று வினையெச்சச் சொற்களும் சினைவினை பற்றியவாகத் தோன்றின், அச்சினைவினையொடு முடியாமல் அதன் முதல் வினையொடு முடியினும் சினை வினையொடு முடியும் முடிபிற்கு ஒத்த தன்மையவாமெனக் கூறுவர்புலவர். என்றது, சினையாவது முதற் பொருளின் கூறேயாதலின் முதலுக்குரிய வினை சினைக்கு உரித்தாம் என்றவாறு.

உயர்திணைச்சினையாயின் முதல் வினைக்கும் சினை வினைக்கும் எழுத்து வேறுபாடுள்ளமையின் அம்முடிபு மரபினவாய் வருதல் தோன்ற என்மனார் புலவர் என்றார். முடியினும் என்னும் உம்மை சினையொடு முடிதலே பெரும் பான்மை என்பது உணர்த்தி நின்றது. அஃறிணைச் சினைக்கும் முதற்கும் எழுத்துவேறுபாடின்மையான் இவ்விதி உயர்திணைச் சினை பற்றிய தென்பது உய்த்துணரப்படும்.

எ-டு : சாத்தன் கையிற்று வீழ்ந்தான்-கையிறூவீழ்ந்தான், கையிறுபு வீழ்ந்தான் எனவரும். கை, சாத்தனின் வேறன்மை யின் இம்முடிபு வழுவாகாமை உணர்க.

உம்மையான், சாத்தன்கையிற்று வீழ்ந்தது - கையிறூ வீழ்ந்தது, கையிறுபு வீழ்ந்தது எனவும் வரும். இந்நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் கூறும் ஒவ்வாவிளக்கங்களைஓர்ந்து விலக்குக.

சூ. 233 : ஏனை எச்சம் வினை முதலானும்
ஆன்வந் தியையும் வினை நிலையானும்
தாமியல் மருங்கின் முடியும் என்ப [35]

க-து : ஏனைய பன்னிரண்டு எச்சவினைகளும் முடிபு கொள்ளுமாறு கூறுகின்றது.

உரை : மேற்கூறிய மூன்றுமல்லாத "செய்தென" என்பது முதலாக "இடத்து" என்பதிறாக நின்ற பன்னிரண்டு வினை யெச்சங்களும் தத்தம் வினைமுதல்வினையானும் ஆண்டுவந்து இயையும் பிற வினைமுதல்வினையானும் தாம் இயலுமிடத்து வரைவின்றி முடியும் எனக்கூறுவர் ஆசிரியர்.

'வினை முதலானும்' என்றது வினைமுதல் வினையானும் என்றவாறு. வினைநிலையானும் என்றது பிறவினை முதல் வினையானும் என்றவாறு. இயல் மருங்கென்பது வினைத் தொகை. அதனான் சான்றோர் வழக்கு இஃதென உணர்த்தியவாறாம்.

எ-டு : செய்தென : மழை பெய்தெனப் புகழ்பெற்றது, மழை பெய்தென மரங் குழைந்தது எனவும், செய்யியர் : மழை பெய்யியர் எழுந்தது, மழை பெய்யியர் பலி கொடுத்தனர் எனவும், செய்யிய : மழை பெய்யிய முழுங்கும், மழை பெய்யிய வான் பழிச்சுதும் எனவும், செயின் : மழை பெய்யின் புகழெழுந்தும், மழை பெய்யின் குளம் நிறையும் எனவும், செய : மழை பெய்யப் புகழ் பெற்றது, மழை பெய்ய மரங்குழைந்தது எனவும், செயற்கு : மழை பெய்தற்கு முழங்கும், மழை பெய்தற்குக் கடவுள் வாழ்த்ததும் எனவும், பின் : தலைவனைப் பிரிந்தபின் தலைவி வருந்தினாள், தலைவன் இனிதுண்டபின் தலைவி உவந்தாள் எனவும், முன் : கடுத்தின்னாமுன் நாதுவர்ந்தது, கடுத்தின்னா முன் நோய் தீர்ந்தது எனவும், கால் : உரைத்தக்கால் உரைபல்கும், வணங்கி விடுத்தக்கால் இன்னே வருவர் எனவும், கடை : நல்வினைதான் உற்றக்கடை உதவும், நல்வினைதான் உற்றக்கடை தீவினை சேரா எனவும், வழி : நல்வினை உற்றவழி உதவும், நல்வினை உற்றவழி தீவினை வாரா எனவும், இடத்து : நல்வினை உற்றவிடத்துதவும், நல்வினை உற்ற விடத்துத் தீவினைமாயும் எனவும் வரும். இவ்வாறு தாமியல் மருங்கின் வருவன நோக்கிக் கொள்க.

சூ. 234 : பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி
சொன்முறை முடியாது அடுக்குந வரினும்
முன்னது முடிய முடியுமன் பொருளே [36]

க-து : வினைஎச்சங்கட்காவதொரு சிறப்பு விதி கூறுகின்றது.

உரை : கூறப்பெற்ற வினையெச்சங்கள் சொல்தொறும் முடிக்குஞ் சொல்லைப் பெறாமல் ஒத்தவாய் பாட்டானும் வேறு வேறு வாய்ப்பாட்டனும் அடுக்கினவாகவரினும் முன்னின்றது பின் னிற்பதனொடு முடியத் தொடர்ந்து சென்று பொருள் முடி வெய்தும்.

அடுக்குநவரினும் என்றது, உண்டு சென்று கண்டு என அடுக்குதல். சொன்முறை முடியாதுவரினும் என்றது, சாத்தன்

உண்டுவந்தான், சென்றுவந்தான்; கண்டுவந்தான் எனமுடியாமல் சாத்தன் உண்டு சென்று கண்டு வந்தான் எனவருதலும் சாத்தன் உண்டு சென்று காணூ வந்தான் எனவருதலுமாம்.

முன்னது முடிய முடியுமன் பொருளே என்றது. அத்தொடரின் கண் சாத்தன் உண்டான் என்பது எச்சமாய், உண்டு சென்றான் எனவும், சென்றான் என்பது எச்சமாய் உண்டு சென்று கண்டான் எனவும், கண்டான் என்பது எச்சமாய்க் கண்டு வந்தான் எனவும், ஒன்று ஒன்றனொடு முடிந்து இறுதியாக வந்தான் என்பதனொடு பொருள் முற்றி நிற்றலாம்.

முன்னது முடிய என்றதன்றி வினைமுற்றால் முடிய எனக் கூறாமையின், பறந்து வந்து பாடிய கிள்ளை, என்புழிப் பறந்து என்னும் விவையெச்சம் வந்து என்னும் வினைமுற்றுக்குன்றிய வினைஎயச்சத்தொடு முடிந்து, வந்து என்னும் வினையெச்சம் பாடிய என்னும் வினையாலணையும் பெயர் குன்றிய பெயரெச்சத்தொடு முடிந்து, பாடிய என்னும் பெயரெச்சம்தான் கொண்டு முடிந்த பறவை என்றும் பெயரொடு பொருள்முற்றி நிற்பினும், சாத்தன் ஆண்டுச் சென்று கண்டுவருதல் நலம், எனத் தொழிற் பெயரொடு (வருதல்) முடிந்து, நலம் என்பதனொடு பொருள் முற்றினும் முன்னது முடிய முடிந்து நின்றவாறாம் எனக் கொள்க.

இங்ஙனம் பின்னிற்கும் எச்சங்களை முற்றுப் பொருள்படக் கொண்டு முடிந்து தொடர்தலின் 'மன்' ஆக்கத்தின்கண் வந்தது. பிறவும் இவ்வாறே ஓர்ந்து அமைத்துக் கண்டு கொள்க. மற்றுச் சாத்தன் உண்டு செல்லக் காணின் வந்தான் என்பனவும் அடுக்கி வந்தன வேனும் முன்னதுபின்னதனொடு முடிதற்கு இயைபில்லாமையின் இங்ஙனம் வருவனமுடியா வென்பது விளங்க "முன்னது முடிய முடியுமன் பொருளே" என்றார்.

எனவே, பொருளும் காலமும் ஒத்து இயையும் வாய்பாடுகளே அடுக்கிவரும் என்பதும் இயைபில்லாதவை அடுக்கி வாரா என்பதும் புலனாம். இதனானும் வினையெச்சங்களின் பொருள் முடிபு வேறுபாடுகளே ஈண்டுக் கூறுதல் புலனாகும். முடிக்குஞ் சொல்பற்றிய இலக்கணம் எச்சவியலுள் பெறப்படும்.

இங்ஙனம் வினைஎஞ்சு கிளவி அடுக்கி வந்து கொள்ளும் முடிபு கூறியாங்குப் பெயரெச்சம் அடுக்கி வந்து முடிபு கோடல் பற்றிப பெயரெச்சத்து அதிகாரத்து ஆசிரியர் கூறியிருத்தல் வேண்டும். அவ் இலக்கணச் சூத்திரம் ஆண்டுக் காணப் பெறாமையான் மறைந்து போயிருத்தல் வேண்டும். ஆதனான்

இச்சூத்திரத்தொடு சார்த்தி மொழிந்த பொருளொடு ஒன்ற மொழியாததனையும் முட்டின்று முடித்தல் என்னும் உத்தியான் பெயரெச்சங்களும் அடுக்கி வரும் என்றும், வரினும் முன்னது பின்னதனொடு முடியாமல் இறுதிநிற்கும் பெயரொடு முடியு மென்றும் அடுக்கிவருங்கால் ஒத்தவாய்பாடே அடுக்கி வரும் என்றும் கொள்க.

எ-டு: இது பறக்கும் இருக்கும் பேசும் கிள்ளை எனவும் இது பறந்த பேசிய கிள்ளை எனவும் வரும். பிறவும் இவ்வாறே கண்டு கொள்க.

சூ. 235 : நிலனும் பொருளும் காலமும் கருவியும்
வினைமுதற் கிளவியும் வினையும் உளப்பட
அவ்வறு பொருட்கும் ஓரன்ன உரிமைய
செய்யும் செய்த என்னும் சொல்லே (37)

க-து : ஆயென்கிளவி என நிறுத்த பொதுவினைகளுள் இறுதி நின்ற இரண்டும் காலவேறுபாடுடையவை எனினும் கொண்டு முடியும் பொருளான் ஒத்து நிற்றலின் அவை இரண்டும் கொண்டுமுடியும் பொருளாமாறு கூறுகின்றது.

உரை : செய்யும் செய்த என்னும் வாய்ப்பாட்டு விரவு வினைச்சொற்கள், நிலமும், செயப்படுபொருளும் காலமும் கருவியும் வினைமுதற்கிளவியாகிய பொருட்சொல்லும் வினைப் பெயரும் உட்பட அவ் அறுவகைப் பொருளையும் ஏற்று முடிதற்கு ஒத்த உரிமை உடையனவாகும்.

மேல் வினைஎச்சத்திற்குப் பொருள் முடிபு கூறி இச்சூத்திரத் தான் பெயரெச்சத்திற்குப் பொருள்முடிபு கூறுதல் தோன்ற "அவ்வறு பொருட்கும்" என்றார். தொழில் முதனிலை எட்டனுள் "இன்னதற்கு-இது பயனாக" என்னும் பொருள் பற்றிப் பெயரெச்சம் தோன்றி வருதல் சிறுபான்மையாகலின் ஏனை ஆறு பொருளையும் விதந்தோதினார்.

வினையெச்சம் பெயரெச்சம் வேறுபாடுகள்.

வினையெச்சம் : வினைஎச்சத்திற்கு இருவகை வினை முற்றுக்களும் தொழிற்பெயரும் பெயரெச்சச் சொல்லின் முதனிலை யும் முடிபாக வரும். தனது வினைமுதல் வினையொடும் பிற வினை முதல் வினையொடும் முடியும். விரிப்பின் வினைமுற்றாக விரியும். பல்வகைப் பெயரும் எழுவாயாக (முடிக்கப்படும் சொல்லாக) வரும். எழுவாயின்செயல் என் ? என்னும் வினா விற்குச் செப்பாகவரும்.

எ-டு : சாத்தன் உண்டுவந்தான். சாத்தன் கற்றுவருதல் இலக்கணநூல். சாத்தன் படித்துமுடித்த நூல் - சாத்தன் காண வந்தான் - சாத்தன்காணக்காட்டினேன் - என்றாற்போல வரும்

பெயரெச்சம் : பெயரெச்சத்திற்கு அறுவகைப் பெயர்களே முடிக்குஞ் சொல்லாக வரும். முடிக்குஞ் சொல்லாகிய பெயர்ப் பயனிலைக்களுக்குரிய எழுவாய் சுட்டுப் பெயராக நிற்கும். பெயரெச்சத்தைை விரிப்பின் வினையாலணையும் பெயராய் விரியும். முடிக்குஞ் சொல்லாகிய பெயர்ப் பயனிலைக்கு இஃது அடையாக நிற்கும். தொழிலுக்குரிய கருத்தா அவாய்நிலையான் வந்து, அதுவும் அடையின் பயத்ததாய் நிற்கும். அவ் எச்சத்தை வினைமுற்றாகமாற்றினால் அவாய் நிலையான் வந்தகருத்தாவே எழுவாயாக மாறி நிற்கும். வினைமுதற்கிளவியைக் கொண்டு முடியும் பெயரச்சத்தொடர்க்கு அவ்வினை முதற்கிளவியே கருத்தாவாக வரும், யாது, யார், என்னும் முடிக்குஞ் சொல்லின் நிலைமை, என்? என்னும் வினாவிற்குச் செப்பாக வரும். பிறவேறுபாடுகளையும் இங்ஙனம் ஓர்ந்து கொள்க.

எ-டு : வாழும் இல்லம் - வாழ்ந்த இல்லம், இவை விரியுங் கால், இது சாத்தன் வாழ்வதாகும் இல்லம் - வாழ்ந்ததாகிய இல்லம் என விரியும். இது என்பதுஎழுவாய், இல்லம் என்பது பெயர்ப்பயனிலை, சாத்தன் அத்தொழிற்குரிய கருத்தா. இவற்றை வினை முற்றுத்தொடராக மாற்றின் சாத்தன் இவ் இல்லத்துள் வாழ்வான் - வாழ்ந்தான் எனவரும். வாழ்தலாகிய நிகழ்ச்சி இடம்பற்றிய தாகலின் - வாழும் வாழ்ந்த என்னும் எச்சங்கள் இடப்பொருளொடு முடிந்ததாம். வாழும் என்னும் எச்சம் இல்லத்திற்கு விளக்கந்தரும் அடையாக நிற்றலையும், அத் தொழிலுக்குரிய கருத்தா அவாய் நிலையான் வந்து அதுவும் அடையாக நிற்றலையும் கண்டு கொள்க.

வாழும்-வாழ்ந்த என்பவை வாழ்வது, வாழ்ந்தது என்னும் வினையாலணையும் பெயராக விரிந்துநிற்குமாறும் அறிக. வினையாலணையும் பெயர் கலங்கட்டும் என்பது வேற்றுமை யியலுள் கூறப்பட்டது. பின்வருவனவற்றைவும் இவ்வாறே விரித்தறிந்து கொள்க.

செயப்படுபொருள் : கற்கும் நூல் - கற்றநூல் - என்பவை விரியுங்கால் இது சாத்தன் கற்பதாகும் நூல்-கற்றதாகிய நூல் எனவரும். இவற்றின் வினை முற்றுத்தொடர் : சாத்தன் இந் நூலைக் கற்பான் கற்றான் என்பவையாம்.

காலம் : துயிலும்காலம்—துயின்றகாலம் என்பவை விரியுங்கால் இது சாத்தன் துயில்வதாகுங்காலம் துயின்றதாகிய காலம், எனவாம். சாத்தன் இக்காலத்துத் துயில்வான்—துயின்றான் என்பவை முற்றுத்தொடர்.

கருவி : வெல்லும் வேல்—வென்றவேல். இது சாத்தன் வெல்வதாகும்வேல் — வென்றதாகிய வேல் எனவிரியும் — சாத்தன் இவ்வேலான் வெல்வான், வென்றான் என்பவை வினை முற்றுத்தொடர் (வேல்—படைக்கருவி)

வினைமுதற்கிளவி : நிலம் முதலாகிய ஐந்தும் அல்லாத பொருளாம். செய்வது, எழுவாய், வினைமுதல், என்பவை ஒத்த பொருளனவாம். வினைமுதலாகிய பொருள் குறித்து வரும் சொல் என்றவாறு அஃது, ஓதும் பார்ப்பான், ஓதிய பார்ப்பான் எனவும், பாடும் குயில் பாடிய குயில் எனவும் ஐம்பாலும் பற்றி வரும். ஓதும் பார்ப்பான் என்பது இவன் ஓதுபவனாகும் பார்ப்பான் எனவும் ஓதிய பார்ப்பான் என்பது இவன் ஓதியவனாகிய பார்ப்பான் எனவும் விரியும். இப்பார்ப்பான் ஓதுவான் ஓதினான் என்பவை வினை முற்றுத்தொடர்.

வினை : வினை என்றது தொழிற்பெயரை : அது காணும் காட்சி, கண்டகாட்சி, எனவரும். இவை, சாத்தன் காண்பதாகும் காட்சி கண்டதாகிய காட்சி எனவிரியும். சாத்தன் இக்காட்சியைக் காண்பான்—கண்டான் என்பவை வினை முற்றுத்தொடர்.

இது செயப்படுபொருளுள் அடங்குமாயினும் தொழிற் பெயராக வருதலின் பிரித்தோதினார், தொழிலே தொழிற்குச் செயப்படுபொருளாதல் சிறப்பு நோக்கி என்க. எனவே வினைமுதற் பொருட்பெயரும், இடப்பெயரும், காலப்பெயரும், கருவிப் பெயரும், தொழிற் பெயரும் அல்லாத ஏனைய பொருட்பெயரும் பண்புபெயரும் சினைப் பெயரும் ஈண்டு செயப்படுபொருட்குரியவாக வரும் என்பதுபெறப்படும்.

இனி இப் பெயரெச்சங்கள் செய்யுள் வழக்கின்கண் சிறுபான்மை வேறுபட்டும், குறிப்பெச்சமும் இசையெச்சமுமாகிய சொற்கள் தொக்கும் வரும். அவற்றை இடத்திற்கும் பொருளுக்கும் ஏற்ப விரித்துணர்தல் வேண்டும். அவற்றுள் சிலவருமாறு :-

நோய் தீரும்மருந்து. இது நோயைத் தீர்த்தற்கு ஆகும் மருந்து எனவிரியின் கருவியாம். நோயைத் தீர்க்கும்மருந்து என்பதன் விகாரமாயின் இம்மருந்து நோயைத் தீர்க்கும் என்னும்

பொருள்பட நிற்றலின் வினைமுதற்கிளவியாம். நின் முகம் காணும் மருந்தினேன் என்பது நின் முகம் காணுதலை மருந்தாக உடையேன் எனவிரியின் காட்சியை மருந்தாக உருவகம் செய்தமையின் வினைப்பெயர் கொண்டதாம். ஆறு சென்றவியர் என்பது ஆற்றின்கண் சென்றமையான் தோன்றிய வியர்வை என விரியின் காரண காரியப்பொருட்டாய்க் கருவியின்கண் அடங்கும். கலந்த மயக்கம் (மரபியல்-91) என்பதும் அது. உண்ட இளைப்பு எனவும் வரும்.

பொச்சாவாக்கருவி என்பது (கருவி - மனம்) பொச்சாவாமையை உடைய மனம் என விரியின் செயப்படு பொருளின் பாற்படும். நிலம்பூத்தமலர் (பூத்தல்-பொலிதல்) நிலம் பொலிவுறுதலைச் செய்த மலர் என விரியின் செபப்படுபொருளாம் - நிலத்தின்கண் பொலிவு பெற்றமலர் எனவிரியின் வினைமுதற் கிளவியாம்.

குண்டு சுனை பூத்த வண்டுபடு கண்ணி, என்பது பூத்த பூக்களை உடைய கண்ணி என விரியின் செயப்படு பொருளாம்- பூத்த பூக்களாற்றொடுத்த கண்ணி என விரியின் கருவியாம். இங்ஙனம் வரும் ஏனையவற்றையும் இவ்வாறே எச்சச் சொல்லிற்கும் முடிக்கும் சொற் பொருட்கும் உள்ள உறவினை ஓர்ந்து ஓதப்பட்டவற்றுள் அடக்கிக் கொள்க.

இனி "அவ்வறு பொருட்கும் ஓரன்ன உரிமைய" என்றதனான் ஓரன்ன உரிமையின்றிச் சிறுபான்மையாக வரும் இன்னதற்கு இது பயனாக என்பவை ; அரசன் ஆ கொடுக்கும் பார்ப்பான் - கொடுத்த பார்பான் எனவும் சாத்தன் ஆடை ஒலிக்கும் கூலி ஒலித்த கூலி எனவும் வருதலும்; நிலம்பற்றி நின்று நீக்கற் பொருள்தோன்ற பழமுதிரும் கோடு, பழமுதிர்ந்த கோடு என வருதலும் கொள்க.

இனி, 'செய்த என்னும் வாய்பாடுபற்றி "இன்னதன்மையின் அருமையின்" எனவும் அன்னதன்மையும் அறிந்தீயார் எனவும் கரிய மலர் நெடுங்கண் - செய்ய கோல் எனவும், பெயரெச்சக் குறிப்பாய் வருவனவற்றையும் கண்டு கொள்க.

சூ. 236 : அவற்றொடு வருவழிச் செய்யுமென் கிளவி
முதற்கண் வரைந்த மூவீற்று முரித்தே [38]

க-து : பல்லோர் படர்க்கை (வினை - 30) என்னும் சூத்திரத்துச் செய்யும் என்னும் வாய்ப்பாட்டுச் சொல்லை "நிகழுங்காலத்து செய்யுமென்னும்

கிளவி'' என பொதுவாகக் கூறினமையின் அவ்விதி செய்யும் என்னும் முற்று வினைக்கு என்பது பெறப்பட வைத்துச் செய்யும் என்னும் எச்சம் ''எஞ்சிய கிளவி'' (வினை - 28) என்னும் சூத்திரவிதியே பெறும் என்கின்றது. 'செய்யும்' என்னும் வாய்ப்பாட்டுச் சொல் பற்றிய ஐயமகற்றுதலுமாம்.

**உரை :** செய்யுமென்னும் வாய்பாட்டுச் சொல் மேற்கூறிய அறுவகைப் பொருளொடு முடியும் தன்மைத்தாய் எச்சமாய் வருதற்கண் ''பல்லோர்படர்க்கை', என்னும் சூத்திரத்தின்கண் நீக்கப்பெற்ற பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை ஆகிய மூன்று பகுதியொடும் வருதற்குரியதாகும்.

**எ-டு :** அவர் வாழும் ஊர்-நீ வாழும் ஊர், நீயிர் வாழும் ஊர் யான் வாழும்ஊர், யாம் வாழும் ஊர், நாம் வாழும்ஊர். எனவரும் இனி, செய்யும்என்னும் முற்றிற்கும் செய்யும் என்னும் எச்சத்திற்கும் வேறுபடாவது : முற்றாயின் ஓர்எழுவாய்க்குப் பயனிலையாகி நிற்கும் - எச்சமாயின் ஒரு எழுவாயின் பெயர்ப் பயனிலைக்கு அடையாகி நிற்கும்.

**சூ. 237 :** பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும்
எதிர்மறுத்து மொழிநும் பொருள்நிலை திரியா (39)

**க-து :** செய்யும் செய்த எனவும், செய்து செய்யூ செய்பு எனவும் பெயரச்ச, வினையெச்ச இயல்புகளை விதிவாய்பாட்டான் ஓதினமையின் அவை எதிர்மறையாய் வருமிடத்துத் தாம் எச்சமாய் நின்று அவ்வவ்விலக்கணங் களை எற்றிலிற்றிரியா என அவற்றின் கண் நிகழ்வதோர் ஐயமகறு கின்றது.

முற்றுவினைகளின் இலக்கணத்தை ஈறுபற்றி ஓதினமையான் அவை விதி வினைக்கும் மறைவினைக்கும் ஒக்குமென்க. பெயரெச்சம் அதிகாரப்பட்டு நின்றமையின் பெயரெச்சகிளவி முற்கூறப்பட்டது.

**உரை :** செய்யும் செய்த என ஓதப் பெற்ற பெயரெச்சச் சொற்களும் செய்து முதலாக ஓதப் பெற்ற வினையெச்சச் சொற்களும் எதிர் மறுந்துக் கூறினும் தம் எச்சப் பொருண்மை யிலின்று திரியா.

பொருள் நிலையாவது பெயரெச்சம் நிலம் முதலாய பொருட் குரியவாய் முடிதலும் வினையெச்சம் தன்வினைமுதல் வினையொடும் பிறவினைமுதல் வினையொடும் முடிதலுமாம்.

**எ-டு :** உண்ணா இல்லம், உண்ணாச் சோறு, உண்ணா நாள், வனையாக்கோல் ஓதாப்பார்ப்பான், நடவா நடை

எனவரும். இவை, செய்யும் செய்த என்னும் இருவகை எச்சத்திற்கும் எதிர்மறையாம். எதிர்மறை மூன்று காலத்திற்கும் உரித்தாய் நிற்கும்.

உண்ணாத, வனையாத, ஓதாத என ஈறு கெடாமல் வருபவை செய்த என்பதற்குச் சிறந்தும் செய்யும் என்பதற்குச் சிறவாதும் நிற்கும். வினையெச்சத்துள், உண்ணாது நின்றான், என்பது, செய்து செய்யூ செய்பு என்பவற்றிற்கு எதிர் மறையாய் வரும். செய்தென என்பதற்கும் இஃது ஏற்கும். உண்ணாமைக்கு வந்தான் என்பது உண்ணியர், உண்ணிய, உணற்கு என்பவற்றிற்கு எதிர் மறையாய் வரும். இஃது உண்ணாமை, உண்ணாமே, உண்ணாமல் என ஈறுவேறுபட்டும் நிற்கும். உண்ணாதேல், உண்ணாவிடின் என்பவை உலகவழக்கிற் குரியவாய்ச் சிறுபான்மை வரும்.

பின் முன் கால் கடை வழி இடத்து என்னும் ஈற்று வினை எச்சங்கள் எதிர்மறையாங்கால் அவற்றின் முதனிலைகளே எதிர்மறைவடிவாகத் திரியும்.

எ-டு: உண்ணாதபின், உண்ணாதமுன், (உண்ணாமுன்) உண்ணாக்கால், உண்ணாக்கடை, உண்ணாத வழி (உண்ணாவழி) உண்ணாவிடத்து எனவரும். எதிர்மறை யாகாரம் இடையே புணர்ந்துவரும் எனினும் ஒக்கும்.

பிறஎச்சங்கள் அவ்வாய்பாடு திரியாமல், கொள்வான் வந்திலன் உண்பான் வந்திலன் எனப் பிறஎதிர்மறைச் சொல்லொடு கூடிவரும். ஒன்றென முடித்தல் என்பதனான் 'செய்யும்' என்னும் முற்று எதிர்மறுத்துக் கூறவருங்கால் தனது எழுவாய்க்கேற்ப ஈறுதிரிந்து செய்யான், செய்யாள், செய்யாது, செய்யா எனவரும். செய்யும் என்னும் முற்றினை ஈறுபற்றி ஓதினமையான் ஈண்டு அடக்கப்பட்டதென்க.

சூ. 238: தத்தம் எச்சமொடு சிவணும் குறிப்பின்
எச்சொல் லாயினும் இடைநிலை வரையார்.

க-து: இருவகை எச்சத்திற்கும் உரியதொரு மரபு கூறுகின்றது.

உரை: இருவகை எச்சங்களும் முடிக்குஞ் சொல்லொடு இடையீடின்றி முடிதலேயன்றித் தமக்கு ஒழிபாக நிற்கும் வினை முற்றொடும்., பெயரொடும் இயைந்து முடியும் குறிப்பினவாய் வரின் அவை எவ்வகைச் சொல்லாயினும் இடையே நிற்றலைத் தவிரார் ஆசிரியர்.

**எ-டு :** சாத்தன் உழுது ஏரொடு வந்தான். உழுது சாத்தன் வந்தான் எனவும். இது கொல்லும் காட்டுள் யானை-இது கொன்ற காட்டுள் யானை எனவும் வரும்.

சிவணும் குறிப்பின வரையயார் எனவே சிவணாக்குறிப்பின வரையப்படும் என்பதாயிற்று. அவை : உண்டு விருந்தொடு வந்தான், என்றும், வல்லமெறிந்த நள்ளிளங்கோசர் தந்தை மல்லல் யானைப் பெருவழுதி என்றும் கவர் பொருள் தருவனவாய் வருவன, உண்டு பின்னர் விருந்தொடுவந்தான் என்பதும் வல்ல மெறிந்த பெருவழுதி என்பதும் விருந்தொடு உண்டு வந்தான் எனவும் வல்லமெறித்தகோசர் எனவும் பொருள்தரற்குரியவாய் நின்று கவர்தலின் வரையப்படும் என்க. எச்சொல்லாயினும் என்றதனான். உழுது விரைந்து வந்தான்-கவளங்கொள்ளாக் களித்தயானை என-எச்சங்கள் இடைநிலையாக வருதலும் கொள்க.இவ்விடை நிலைகளை இடைப்பிறவரல் எனவும்கூறுவர்.

**சூ. 239 :** அவற்றுள்
செய்யும் என்னும் பெயரெஞ்சு கிளவிக்கும்
மெய்யொடும் கெடுமே ஈற்றுமிசை உகரம்
அவ்விடன் அறிதல் என்மனார் புலவர் (41)

**க-து :** செய்யும் என்னும் சொல் வடிவு திரிந்து வரும் மரபு கூறுகின்றது.

**உரை :** மேற்கூறிய எச்சவாய்பாடுகளுள், செய்யும் என்னும் பெயரெச்சச் சொற்கண்ணும் (உம்மையான்) செய்யுமென்னும் முற்றுச் சொற்கண்ணும் ஈற்றுமிசை உகரம் தான் ஊர்ந்து நிற்கும் மெய்யொடும் (உம்மையான்) மெய்யொழித்தும் கெடும். அங்ஙனம் கெடுமிடங்களை அறிந்து கொள்க. என்று கூறுவர் புலவர். கிளவிக்கு என்றது உருபுமயக்கம்.

ஏற்புழிக்கோடல் என்பதனான், மெய்யொடுங்கெடுதல் எச்சத்திற்கும் மெய்யொழித்துக் கெடுதல்முற்றிற்கும் கொள்க.

**எ-டு :** வாவும் புரவி, ஆகும் பொருள் என்பவை வாம்புரவி ஆம்பொருள் எனவரும். இவை பெயரெச்சம். அம்பலூரும் அவனொடு மொழியுமே என்பது மொழிமே என்றும் கட்சியுட் காரி கலுழும் என்பது கலுழ்ம் என்றும் வரும். இவை முற்று. ஆடும், கூடும், வாழும், அளிக்கும், வழங்கும் என்றாற் போல்வன கெடா ஆகலின் 'அவ்விடனறிதல' என்றார்.

கிளவிக்கும் என்னும் உம்மை வருமொழி நோக்கிக் குன்றியது.

சூ. 240 : செய்தென் னெச்சத்து இறந்த காலம்
எய்திட னுடைத்தே வாராக் காலம் [42]

க-து : 'செய்து' முதலாய வினை எச்சங்களுள் சில "தம்மரபினவாய்" காலம் மயங்கி வருமாறு கூறுகின்றது.

உரை : செய்து என்னும் எச்சத்தினது இறந்தகாலம், எதிர் காலத்தொடு பொருந்தி வரும் இடனும் உடைத்தாகும்.

எ-டு : சாத்தன் (நாளை) உண்டு வருவான். என்றவழி செய்து என்னும் எச்சம் வருவான் என்னும் எதிர்காலத்துச் சொல்லொடு பொருந்தி வந்தவாறு காண்க.

உண்ணுதல் தொழில் வருதற்கு முன் நிகழுமேனும் நாளை உண்டு வருவான் என்புழி உண்ணுதல் தொழில் நிகழாமையும் உண்ணுதலும் வருதலும் எதிர்காலத்தவாய் நிற்கின்றமையும் நோக்கி 'எய்திடன் உடைத்தே வாராக்காலம்' என்றார்.

இச்சூத்திரத்தான் 'செய்து' என்பது இறந்தகாலத்திற் குரியது என்பதை உணரவைத்து அது மயங்கும் என்பதும் கூறப் பட்டது. கொடி ஆடித்தோன்றும் எனச் சிறுபான்மை நிகழ் காலஞ் சுட்டி வருமிடமும் உடைத்தெனக் கொள்க.

'ஒன்றென முடித்தல் தன்னினமுடித்தல்' என்பதனான் செய்யூ-செய்பு என்பவற்றிற்கும் இறந்த காலம் பற்றி வரும் ஏனைய வாய்பாட்டு எச்சங்கட்கும் இம்மயக்க விதி கொள்க.

சூ. 241 : முந்நிலைக் காலமும் தோன்றும் இயற்கை
எம்முறைச் சொல்லும் நிகழுங் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொல் கிளத்தல் வேண்டும்

க-து : செய்யுமென்னும் முற்றுச்சொல் காலம் மயங்கி வருமாறு கூறுகின்றது.

உரை : மூவகையாகிய காலத்தினும் மாறுபாடின்றி நிகழத் தோன்றும் இயல்புடைய எவ்வகைப் பொருளையும், நிகழ் காலத்தினது பொருள் நிலைமை உடைய பொதுச் சொல்லாகிய "செய்யும்" என்னும் சொல்லலாற் கிளந்து கூறுக.

முந்நிலைக் காலத்தும் தோன்றும் இயற்கைப் பொருளாவன நாள் கோள்களின் இயக்கமும் பொருட் பண்புகளுமாம். எ-டு : ஞாயிறு இயங்கும், தீச்சுடும், மலைநிற்கும், யாறுஒழுகும் எனவரும்.

ஒருசார் பாலிடங்களுக்குப் பொதுவாய் வருதலின் செய்யும் என்னும் சொல்லைப் பொதுச் சொல் என்றார். செய்யும் என்னும் எச்சம் நிகழ்வும் எதிர்வுமேயன்றி இறந்த காலந்திற்கு ஏலாமையின் ஈண்டுக்கூறப் பெற்றது முற்றுச்சொல் என்பதை உணர்த்த மெய்ந்நிலைப் பொதுச்சொல் என்றார். இச்சூத்திரத்தான் நிகழ் காலத்திற்குரிய செய்யுமென்னும் முற்றுச்சொல் ஏனை இரண்டு காலத்தொடும் மயங்குமாறு கூறப்பெற்றது.

சூ. 242 : வாராக் காலத்தும் நிகழுங் காலத்தும்
ஓராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி
இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள என்மனார் புலவர் [44]

க-து : காலமயக்கம் அதிகாரப்பட்டமையின் ஏனை முற்றுச்சொற்களும் காலம் மயங்கி வருமாறு கூறுகின்றது.

உரை : எதிர்காலத்தும் நிகழ்காலத்தும் வரும் வினைச்சொற் பொருண்மைகளை ஒருபடித்தாகஇறந்தகாலக்குறிப்பொடுகூறுதல் விரைவு பொருளைக் கருதியவாறாம் என்று கூறுவர் புலவர்.

வினைச்சொற்கிளவி என்றது வினை நிகழ்பொருளை. ஓராங்கு இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல் எனக் கூட்டிப் பொருள் கொள்க.

வரலாறு : சோறுண்ணச் செல்வான் ஒருவனை அழைத்துச் செல்லவந்த ஒருவன் இன்னும் உண்டிலையோ? என்ற வழி, அவன் உண்டேன், வந்தேன், என்று கூறும். உண்ணா நிற்பவனும் அவ்வாறே கூறும். அவ்வழி எதிர்காலத்திற்குரிய வினை இறந்தகாலத்தாற் கூறப்பட்டமைகாண்க. 'மலர்மிசை ஏகினான்' [குறள் - 3] என்பதுமது.

இங்ஙனம் செப்புவோன் இறந்தகாலச் சொல்லாற் கூறினும் கேட்போன் அத்தொழில் விரைந்துநிகழும் என்பதை உணர்தலின் "குறிப்பொடு கிளத்தல்" என்றார். வாராக்காலம் நிகழ் காலம் ஆகிய இரண்டினையும் கிளத்தலின் 'விரைந்த பொருள' என்றார். இச்சூத்திரத்தான் இறந்தகாலச்சொல் ஏனைய இரண்டினொடும் மயங்குமாறு கூறப்பட்டது.

சூ. 243 : மிக்கதன் மருங்கின் வினைச்சொற் சுட்டி
அப்பண்பு குறித்த வினைமுதற் கிளவி
செய்வ தில்வழி நிகழுங் காலத்து
மெய்பெறத் தோன்றும் பொருட்டா கும்மே

க-து : முந்நிலைக் காலமும் தோன்றும் இயற்கைப் பொருளேயன்றி ஒருசார் தொழிற் பண்புணர்த்தும் சொற்களும் செய்யு மென்னும் முற்றினை ஏற்று வரும் என்கின்றது.

பொருள் : ஒன்றன்கண் சிறப்புடைத்தாக நிகழும் பாங்கினையுடைய வினைச்சொல்லை நோக்கிச் செயல் குறியாமல் அச்செயற் பண்பினைக் குறித்து நிற்கும் வினை முதலாகிய சொல், செய்யும் பிற கருத்தா இல்லாத இடத்து நிகழ் காலத்திற்குரிய செய்யும்மென்னும் சொல்லொடு தோன்றி வரும்.

அஃதாவது : ஈதல், ஓதல், கற்றல், ஆற்றுதல், ஒழுகுதல், முதலிய தொழிற் சொற்கள் வினை நிகழ்வை உணர்த்தாமல் ஈகை முதலிய பண்புகளை உணர்த்தி வருங்கால் அவை ஒரு கருத்தாவைப்பற்றி வாராமல் தாமே எழுவாயாக நின்று பயனிலை கோடற்கண் செய்யுமென்னும் முற்றினை ஏற்றுவரும் என்பதாம்.

"நிகழும் காலத்து மெய்" என்றது செய்யும் என்னும் முற்றுச் சொல்லை, அதனை "நிகழுங்காலத்து மெய்ந்நிலைப் பொதுச் சொல்" (சூ. 241) என மேற் கிளந்தமையான் ஈண்டு" நிகழுங் காலத்து மெய்" எனச் சுட்டிக் கூறினார்.

எ-டு : நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம் என்றும் இடும்பை தரும். என்புழி, ஒழுக்கம் என்னும் பண்பு குறித்து நிற்கும் ஒழுகுதல் என்னும் வினைச்சொல் எழுவாயாக நின்று, தரும் என்னும் முற்று வினையை ஏற்று முக்காலத்திற்கும் ஒப்ப நின்றவாறு காண்க. ஈதல் இசைபரப்பும் — கற்றல் அறிவு நல்கும் — ஆற்றல் இன்பந்தரும் என்றாங்கு வருவனவும் அன்ன.

இன்ன செயல் என எடுத்துக் கூறுதற்கண் என்பார் "மிக்கதன் மருங்கின் வினைச் சொற் சுட்டி" என்றும், அவ் வினைச் சொற்கள் வினை உணர்த்தும் வழி 'ஈதல் இசை பரப்பிற்று' என ஏனைமுற்றுச் சொல்லானும் முடியுமாகலின் "அப்பண்பு குறித்த" என்றும், வினைமுடிபு கொள்ளுதல் அதுவே யாதலின் "வினை முதற் கிளவி" என்றும், செய்வதாகிய கருத்தாவொடுவரின் தீயொழுக்கத்தான் கெட்டான்—கெடுவான் எனப் பிற வினைச் சொற்களானும் முடியுமாதலின் 'செய்வதில் வழி' என்றும், கருத்துவகையான் அம்முடிபுச்சொல்எதிர்காலத்திற் குரித்தாலின் "நிகழுங்காலத்து மெய்பெறத் தோன்றும் பொருட் டாகும்மே" என்றும் கூறினார். அன்பு இன்பு வாய்மை தூய்மை முதலாய பண்புச் சொற்களை நீக்குதற்கு "வினைச் சொற் சுட்டி அப்பண்பு குறித்த கிளவி" என்றார்.

அற்றேல் அன்பு அறம்பயக்கும் எனப் பண்புச்சொல்லும் செய்யுமென்னும் முற்றான் முடிதலின் செயற் பண்பினைச் சுட்டிக்கூறிய தென்னை எனின். அன்புடைமை அறம் பயக்கும் எனக்குறிப்பு வினை ஆண்டுத் தொக்கு நின்றல்லது அங்ஙனம் முடியாதென அறிக. என்னை? பண்பாவது ஒருபொருளின்கண் கிடப்பதல்லது தான் செயல்படாதாகலின் என்க. அதனானன்றே 'அழுக்காறு தீயுழி உய்த்துவிடுமென்னாது" அழுக்காறென ஒருபாவி என உருவகப்படுத்தோதினார் பொய்யாமொழியார் என்க.

இச்சூத்திரத்தான் ஒருசார் பொருள்பற்றிய நிகழ்காலச்சொல் ஏனைய இரண்டு காலத்தொடும் மயங்குமாறு கூறப்பட்டது. இச்சூத்திரம் முந்நிலைக்காலமும் (வினை - 43) என்னும் சூத்திரத்தின் பின் இருத்தல் வேண்டும்.

இச்சூத்திரத்திற்கு உரையாசிரியன்மார் கூறும் உரையும் விளக்கமும் இன்னோரன்ன இன்றியமையா இலக்கணக்கூறு களைப் பெறப்படச் செய்யாமையை உணர்க.

சூ. 244 இதுசெயல் வேண்டும் என்னும் கிளவி
இருவயின் நிலையும் பொருட்டா கும்மே
தன்பா லானும் பிறன்பா லானும் (46)

**க-து :** செய்யும் என்னும் வாய்ப்பாட்டின் பாற்படும் "வேண்டும்" என்னும் சொல்லினது பொருள் நிலை வேறுபடுமாறு கூறுகின்றது.

**உரை :** "இது செயல் வேண்டும்" என்னும் வாய்ப்பாட்டான் வரும் "வேண்டும்" என்னும் சொல், தன்பாலும் பிறன்பாலுமாகிய இரண்டன்பாலும் நிலைபெறும் பொருண்மைத்தாகும்.

கிளவி என்பது 'இது செயல் வேண்டும்' என்னும் தொடர்க்குப் பொதுவாய் நின்றதேனும், இருவயின் நிலையும் பொருட்டாதற்கேற்பது வேண்டும் என்னும் சொல்லேயாகலின் வேண்டுமென்னும் வாய்பாடே கொள்ளப்படும்.

(தன்) தான் என்பதும் படர்க்கையே ஆதலின் இருவயின் என்றது அவ் விரண்டன்பாலும் என்றவாறாம்.

"இருவயின் நிலையும் பொருட்டாகும்" என்றது இதுவென்று சுட்டப்படும் பொருட்பெயர்க்கும் அதுவல்லாத பிறபொருட் பெயர்க்கும் பயனிலையாக நிற்றலை. 'இது' என்பது வினை

முதல். 'செயல்' என்பது 'வேண்டு' மென்னும் பயனிலைக்குச் செயப்படுபொருட்பயத்தவாய் நிற்கும் தொழில், இம்மூன்றும் வாய்பாடுகளேயாம். இது என்பது வாய்பாடாதலை இதனினிற்றிது - இதனதிது என வருவனவற்றான் அறிக. வேண்டும் என்பதும் செய்யும் என்னும் வாய்பாடே ஆயினும், செய்யும் என்னும் வாய்பாடு எல்லா வினையின் கண்ணும் வருமாதலின் அதனை நீக்கித் தொழிற் பெயரொடு வருதற்கேற்ற ஒருசார் வினைகளைச் சுட்டியுணர்தற்கு "வேண்டும்" என்னும் வாய்பாட்டாற் கூறினார் என்க.

எ-டு : சாத்தன் ஓதல் வேண்டும். மயில் ஆடல் நோக்கும் மன்னன் வேறல் கருதும் என்றாங்கு வரும்.

சாத்தன் தான் ஓதலை விரும்பும் எனவும் சாத்தன் ஓதலை ஆசிரியன் விரும்பும் எனவும், மயில்தான் ஆடலை நோக்கும் (எண்ணும்) எனவும் மயில் ஆடலை மந்தி நோக்கும் எனவும் மன்னன் தான் வேறலைக்கருதும் எனவும் மன்னன் வெல்லுதலைப்படைகள் கருதும் எனவும், வேண்டும் என்னும் வாய்பாட்டுச் சொல் இருவயின் நிலையும் பொருட்டாய் நிற்றலைக்கண்டு கொள்க.

இதனைச் "செய்யும்" என்னும் வாய்பாடுபற்றிய விதி கூறும் அதிகாரத்து, "மிக்கதன் மருங்கின்" என்னும் சூத்திரத்துப்பின் வைத்தமை யான் இதுவே இச்சூத்திரத்தின் கருத்தாதல் அறியலாம். உரையாசிரியன்மார் கூறும் கருத்தே இச்சூத்திரக்கருத்தாயின் இதனைக்கிளவியாக்கத்துட் கூறுதலன்றி ஈண்டுக்கூறார் ஆசிரியர் என்க. செயல்வேண்டும் வரல் வேண்டும் என்பவற்றைச் செய்யவேண்டும் வரவேண்டும் என வழங்குதல் பிழைபட மருவி வந்த வழக்கென அறிக.

சூ. 245 : வன்புற வருஉம் வினாவுடை வினைச்சொல்
எதிர்மறுத் துணர்த்தற் குரிமையும் உடைத்தே

க-து : வினாவொடு வரும் வினைச்சொல் பற்றியதோரியல்பு கூறுகின்றது.

உரை : ஒன்றினை வற்புறுத்துதற் பொருட்டு வினாவொடு கூடிவரும் வினைச்சொல் எதிர் மறுத்துணர்த்தற்கும் உரிமை யுடைத்தாகும்.

வரலாறு : ஒருவன் தன் மகனை அச்சுறுத்துதற் பொருட்டு ஒறுப்பானாய் இனி இதனைச் செய்வாயா? இதனை எடுப்பாயா?

என்னுமிடத்து அவ்வினாவொடு கூடிய வினைச் சொற்கள் இலிச் செய்யாதே, எடுக்காதே என்னும் எதிர்மறைப் பொருள்பற்றி நிற்குமாறும், ஒருவன் பலருக்கு வரிசையோ பொருளோ நல்குமிடத்துப் பெறாதான் ஒருவன் எனக்கு ஈக என்று இரப்புழி அளிப்போன் நீ பெற்றாய் என, அவன் பெற்றேனே? பெற்றேனே? என்னும் ஆண்டவ் வினாவுடை வினைச்சொல் பெற்றிலேன் என்னும் பொருள்பற்றி நிற்குமாறும், காண்க.

ஓகாரவினா எதிர்மறைப் பொருள் பற்றி வருதல் இடைச்லோத்தினுள் பெறப்படுமாகலின் அஃதொழிந்த ஏனை ஆகார ஏகார வினாக்களையே ஈண்டுக் கொள்க.

சூ. 246 : வாராக் காலத்து வினைச்சொற் கிளவி
இறப்பினும் நிகழ்வினும் சிறப்பத் தோன்றும்
இயற்கையும் தெளிவும் கிளக்குங் காலை

கு-து : ஒருசார் பொருள்பற்றி வினைச் சொற்கள் காலம் மயங்குமாறு கூறுகின்றது.

உரை : எதிர்காலத்துக்குரிய வினைச்சொற் பொருண்மை இயற்கைபற்றியும் தெளிவு பற்றியும் கிளத்து கூறுமிடந்து இறந்த காலத்தொடும் நிகழ்காலத்தொடும் விளங்கத் தோன்றி வரும்.

இயற்கை (இயலுகை) என்றது பெரும்பான்மையும் வேறுபடாது நிகழும் வழக்காறு பற்றி வருவது. தெளிவு என்பது காட்சி அளவையானும், நூலளவையானும் கொள்ளுதற்கண் மாறுபடாது நிகழ்ந்து வருவது.

எ-டு : இக்காட்டுள்போகின் கூறை கோட்பட்டான்-கூறை கோட்படும் எனவும் எறும்பு முட்டை கொண்டுதிட்டையேறின் மழை பெய்யும் எனவும் வருதல் இயற்கை.

ஒருவன் நஞ்சுண்ணின் இறந்தான்-இறக்கும். எனவும், களவு செய்யின் கையறுப்புண்டான் - அறுப்புறும் எனவும் வருதல் தெளிவாம். எறும்பு முட்டை கொண்டு திட்டை ஏறின் மழை பெய்தது என்பதனைத் தெளிவுக்கு உதாரணமாகக் காட்டுவர். அஃது ஒரோவழி நிகழாமையின் இயற்கையெனலே நேரிதாம்.

இச்சூத்திரம் இறந்தகாலமும் நிகழ்காலமும் எதிர்காலத்தொடு மயங்குமாறு கூறியதாம்.

சூ. 247 : செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபே

க-து : வழக்கின்கண் வினைச்சொல் பற்றி நிகழ்வதொரு மரபு கூறுகின்றது.

உரை : செயப்படு பொருள் வினையாகக் கிளத்தலை வினைமுதல் வினை போலத் தொழிற்படச் சொல்லுதலும் பரவை வழக்கின்கண் நிகழும் மரபாகும். உம்மையான் அங்ஙனம் கிளவாமை பெரும்பான்மை என்பதாம்.

எ-டு : திண்ணை மெழுகிற்று - சோறு அட்டது எனவரும். மெழுகப்பட்டது - அடப்பட்டது எனச் செயப்படுபொருள் வாய் பாட்டாற் கூறாமல் வினைமுதல், வாய்பாட்டாற் கூறப்பட்டவாறு காண்க.

இனி, மரம் வெட்டியது என்றாற் போலவன்றி மரம் வீழ்ந்தது எனவரின் அது செயப்படு பொருளுக்குரித்தாகாமையின் செயப் படு பொருள் எனற்கு ஏற்ற தொழிலாற் கிளக்க வேண்டுமென்பார் தொழிற்படக் கிளத்தலும் என்றார்.

"வழக்கியன் மரபே" என்றதனான், இவ்வாள் வெட்டிற்று, இவ்எழுத்தாணி எழுதியது எனக் கருவியைச் செய்தது போலக் கிளத்தலும் கொள்க.

"வல்புறவருஉம்" என்னும் சூத்திரமும் இச்சூத்திரமும் எச்சவியலுள் இருத்தல் வேண்டும்.

சூ. 248 : இறப்பே எதிர்வே ஆயிரு காலமும்
சிறப்பத் தோன்றும் மயங்குமொழிக் கிளவி

க-து : இறந்தகாலச் சொல்லும் எதிர்காலச் சொல்லும் மயங்குமாறு கூறுகின்றது.

உரை : இறப்பும் எதிர்வுமாகிய காலமுணர்த்தும் அவ்விரு சொற்களும் மயங்குமொழிப் பொருளவாய்ச் சிறப்பத் தோன்றி வரும்.

இம்மயக்கம் காலப்பெயரும் வினைச் சொல்லுமாய் வந்தலின் "மயங்குமொழிக் கிளவி" என்றார். [காலப்பெயர் : நெருநல் - நாளை முதலியவை]

எ-டு : இவர் பண்டுஇப் பொழிலகத்து விளையாடுவார் எனவும், நாளை அவன் வெகுண்டு வாளொடு வந்தான் நீ என் செய்குவை ? எனவும் வரும்.

**சூ. 249 :** ஏனைக் காலமும் மயங்குதல் வரையார் [51]

**க-து :** நிகழ்காலச் சொல்லும் அங்ஙனம் மயங்கும் என்கின்றது.

**உரை :** இறப்பும் எதிர்வுமேயன்றி நிகழ்காலமும் அவ்விரு காலச் சொற்களொடு மயங்குதலை நீக்கார் ஆசிரியர்.

**எ-டு :** இவள் பண்டு இப்பொழிலகத்து விளையாடும் எனவும், இவன் நாளை வரும் எனவும் வரும். இவை மேலன போலப் பயின்று வாராமையின் பிரித்துக் கூறினார். இம் மயக்கங்கள் ஏற்புழியல்லது வாராமையின் சிறப்பத் தோன்றும் என்றும் - மயங்குதல் வரையார் என்றும் கூறினார்.

**வினையியல் முற்றியது**

## 7. இடையியல்

இடைச்சொற்களின் இயல்புணர்த்துதலின் இஃது இடையியல் எனப்பட்டது. அவற்றின் இயல்புணர்த்துமாற்றான் அவை வகைப்படுமாறும் பெறப்பட வைத்து அவற்றுள் ஒரு சாரன இந்நூலகத்து முன்னும் பின்னும் பெறப்படுதலின், அவைதவிர்ந்த மற்ற வற்றிற்குரிய சிறப்பிலக்கணமும் அவை பற்றியமரபும் இவ்வியலின்கண் கூறுகின்றார் ஆசிரியர்.

**இடைச்சொல்லாவது:** பெயர்ப்பொருளையும் வினைப் பொருளையும் வேறுபடுத்தும் இயல்பினதாய் அவற்றின் வழிமருங்குதோன்றி அவற்றொடு ஒருங்கு நடைபெற் றியல்வ தாகும். அவற்றுள் ஒரு சாரன பெயரும் வினையுமாகிய சொற்களினின்றுதிரிந்தும், சிதைந்தும், சுருங்கியும் இலக்கணக் குறியீடாக அமைந்து இடுங்கிய சொற்களாக வருதலானும், ஒரு சாரன பெயருமாகாமல் வினையுமாகாமல் அவற்றிற்கு இடைப் பட்டனவாக வருதலானும், ஒருசாரன திணைபால் இடம் கால முதலியவற்றைக்காட்டுதற்குரிய உறுப்பாக இடப்படுதலானும், இடைச்சொல் என்னும் காரணக்குறியீடு பெற்றன. ஆதலின், இடை, என்னும் சொல் இடுங்குதல் இடை நிகர்த்தல், இடப்படுதல் என்பவற்றிற்குப் பொதுவாக நின்றது.

புணரியல் நிலையிடைப் பொருள்நிலைக் குதவுவனவாய் வரும் சாரியைகளுள் பலவும், வேற்றுமையுருபுகளுள் பலவும் பெயர், வினைகளின் இடுங்கிய சொற்களாயும். கொன், தஞ்சம் அந்தில் முதலியவை பெயர்ப்பொருட்டாயும் வினைப் பொருட்டா

யும், உவம உருபிடைச் சொர்கள் வினைப்பொருட்டாயும் ஏ, ஓ, மன், தில் முதலியவை பெயர்வினைகட்கு இடைப் பட்டனவாயும் அமையும். அம், ஆம், அன், ஆன், முதலிய ஈற்றிடைச் சொற்கள் திணைபால் இடம் ஆகியவற்றையும் உம், க, உ, இன், முதலிய ஈற்றிடைச் சொற்கள் காலம், இடம், ஆகிய வற்றையும் த்ட்ற் முதலிய இடைநிற்கும் இடைச்சொற்கள் காலத்தையும் காட்டற்கு இடப்படுவனவாகும்.

பெயரையும், வினையையும் இடமாகக் கொண்டு தோன்றுத லின், இடச்சொல் என்பதே இடைச்சொல் என்பதாயிற்று என்பார் ஒரு சாரார். பெயர்ச்சொல் வினைச்சொற்களுக்கு அடிப்படையாகிய குறைச்சொற்கள் [நிரம்பா உரிச் சொற்கள்] உருவுதிரிந்தும் திரியாமலும் நிரம்பிப் பெயர்-வினைகட்கு முதனிலையாய் நிற்குங்கால் அவையாவும் உரிச்சொற்களேயாகும். அவை திணைபால் இடம்காலம் காட்டும் இடை சொற்களொடு புணர்ந்து முழுமை பெற்ற பின்னரே பெயர்ச் சொல் என்றும் வினைச்சொல் என்றும் குறியீடு பெறும். இடைச் சொற்கள் புணாதநிலையில் முதனிலைச்சொற்களைப் பெயர்ச்சொல் வினைச் சொல் எனக்கூறுதலும் அவற்றை இடமாகக் கொண்டு இடைச்சொற்கள் தோன்றி வரும் என்பதும் மொழி இயல்புக்கும் இந்நூல் நெறிக்கும் பொருந்தா என்க. அதனானன்றே ஆசிரியர் பெயரினும் வினையினும் நடைபெற்றியலும் என்னாது "பெயரொடும் வினையொடும்" நடைபெற்றியலும் என உடனிகழ்வதாக ஓதுவாராயினார் என்க.

**சூ.250 : இடையெனப் படுவ பெயரொடும் வினையொடும்**
**நடைபெற் றியலும் தமக்கியல் பிலவே (1)**

**க-து :** இடைச்சொற்களின் பொதுவியல்பாமாறு கூறுகின்றது.

**உரை :** இடைச்சொல் என்று கூறப்படுபவை பெயரொடும் வினையொடும் வழங்குதலைப் பெற்றியலும், அவைதாமாக நடக்கும் இயல்பில்லாதன.

பால் முதலியவற்றைக் காட்டும் இடைச் சொற்களொடு கூடாமல் நிற்கும் முதனிலைச் சொற்கள் யாவும் உரிச் சொற்களே யாயினும் ஆ, கா, பூ என்றாற் போலவும் வா, போ, கா என்றாற் போலவும் வருமிடத்து வினைமுதற் பொருள்தரும் இடைச் சொல்லும், ஏவற் பொருள்தரும் இடைச்சொல்லும் குன்றிப் பெயராயும், வினையாயும் ஓரெழுத்து ஒருமொழியாய் வரும் சொற்கள் இருவகை வழக்கினும் நடை பெறுத

லானும், தத்தம் பொருளவாய் வரும் இடைச் சொற்களும் வேற்றுமை உருபுகளும், பெயர் வினைகளைச் சார்ந்து வருதலானும் பொதுப்படப் பெயரொடும் வினையொடும் என்றார். இதனை ஆசிரியர் “அவ்வச் சொல்லிற் கவையவை பொருளென் மெய்பெறக் கிளந்த இயல வாயினும் வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித் திரிந்து வேறு படினும் தெரிந்தனர் கொளலே” (இடை-47) எனக் கூறுதலான் அறியலாம்.

பெயரொடும் வினையொடும் நடைபெறுதலாவது அவற்றிற்கு உறுப்பாகி ஒருங்குஇயலுதலும் அவற்றைச் சார்ந்து இயலுதலுமாம் “தமிக்கியல்பிலவே” என்றது தனித்து நின்றுதம் பொருள் உணர்த்தா என்றவாறாம்.

பெயரொடும் வினையொடும் என்றது வழிமொழிதல். அஃதாவது இடைச் சொற்கிளவியும் உரிச்சொற் கிளவியும் அவற்றுவழி மருங்கிற்றோன்றும் என்ப (பெயரியல் - 5.) என்றதனான் இக்கருத்துப் பெறப்படுமாயினும் அவற்றொடு ஒருங்குவரும் என்பதும் ஈற்றினும் இடையினும் அவற்றிற்கு உறுப்பாக வருமென்பதும் பெறப்பட வைத்தல் இதன் பயனாகும். அன்றியும் அச்சூத்திரம் இடைச்சொல் பெயரொடும் உரிச்சொல் வினையொடும் வரும் என நிரனிறையாகப் பொருள் கோடற்கும் ஏற்பநிற்றலான் அதன் பொருள் புலப்பட ஈண்டு விதந்தோதினார் என்க. அன்றியும் இடைச் சொற்களின் தலையாய இலக்கண மாகிய தாமாகநடக்கும் இயல்பில என்பதற்கும் “பெயரொடும் வினையொடும் நடைபெற்றியலும்” என்பது அவாய் நிலையாக நிற்றலின் இங்ஙனம் கூறுதல் கடப்பாடாதலையும் அறிக.

எ-டு: அதுகொல் தோழி காமநோயே - கொன்னே கழிந்தன் றிளமை என இவை பெயரொடும் வினையொடும் சார்ந்து வந்தன. மலையன், உண்டான், கரியன் என இவை அவற்றிற்கு உறுப்பாய் வந்தன. பிறவும் அன்ன.

சூ. 251 : அவைதாம்
புணரியல் நிலையிடைப் பொருள்நிலைக்குதநவும்
வினைசெயல் மருங்கிற் காலமொடு வருநவும்
வேற்றுமைப் பொருள்வயின் உருபா குநவும்
அசைநிலைக் கிளவி ஆகி வருநவும்
இசைநிறைக் கிளவி ஆகி வருநவும்
தத்தங் குறிப்பிற் பொருள்செய் குநவும்
ஒப்பில் வழியாற் பொருள்செய் குநவும் என்று
அப்பண் பினவே நுவலுங் காலை [2]

க-து : இடைச் சொற்களின் வகை கூறுகின்றது.

உரை : மேற்சொல்லப் பெற்ற இடைச் சொற்கள்தாம் நுவலுங்காலை நிறுத்த சொல்லும் குறித்துவருகிளவியும் புணர்ந்தியலும் நிலைமைக்கண் அவற்றின் பொருள் நிலைமை உணர்தற்கு உதவுவனவும், வினைப்பெயர் வினைச் சொல்லாகி இயக்கமுணர்த்துமிடத்துக் காலங்காட்டுதலொடு வருவனவும், வேற்றுமைப்பொருள் விரியுமிடத்து உருபாக வருவனவும், அசைநிலை என உணர்த்தும் சொல்லாக ஆகிவருவனவும், இசை நிறைக்கும் சொல்லாக ஆகிவருவனவும், கூறுவோர்தாம் குறித்த குறிப்பிற்கேற்பப் பொருள் இயன்று வருவனவும், ஒக்கும் என்னும் ஒத்தற்பொருள் இல்லாத வழியும் அவ்வொப்புப் பொருளை உணரச் செய்வனவும் என்று சொல்லப்படும் அவ் ஏழு இயல்பினவாகும்.

அப்பண்பினான் அவை ஏழுவகைப்படும் என்றவாறு. பண்பென்றது ஈண்டு 'இயல்பு' என்னும் பொருட்டாய் நின்றது.

1) புணரியல் நிலையிடைப் பொருள்நிலைக் குதநவும் என்பதனைப் புணரியல் நிலைக்கு உதநவும், பொருள் நிலைக்குதநவும் எனப் பிரித்துக் கூட்டிப் பொருள் காண்க. அவையாவன; இருமொழிப் புணர்ச்சியுள்ளும், ஒரு மொழிப் புணர்ச்சியுள்ளும் வரும் சாரியைகளாம்.

எ-டு : மரத்துக்கிளை - அவற்றுக்கோடு - வண்டின் கால், பதிற்றகல் எனவரும். இவ் இரு மொழிப் புணர்ச்சியுள் 'அத்து, வற்று, இன்' என்பவையும், கண்டனம், கண்டனன் எனவரும் இவ் ஒரு மொழிப் புணர்ச்சியுள் அன் என்பதும் புணரியல் நிலைக்குதவின. எல்லவற்றையும், எல்லாநம்மையும் எனவரும் இவற்றுள் வற்றுச் சாரியை நிலை மொழிப் பொருள் அஃறிணை என்பதும் நம்முச்சாரியை நிலைமொழிப் பொருள் உயர்திணை என்பதும், சித்திரையாற் கொண்டான், சித்திரைக்குக் கொண்டான் என வருபவற்றுள் ஆன் சாரியை நிலைமொழி நாட்பெயர் என்பதும் இக்குச் சாரியை நிலைமொழி திங்கட் பெயர் என்பதும் உணரப் பொருள்நிலைக்குதவின. பிறவும் இவ்வாறே கண்டு கொள்க.

2) வினைசெயல் மருங்கிற் காலமொடுவருநவும் :- திணையும் பாலும் இடமும் காட்டும் இறுதி இடைச் சொற்களும், காலங்காட்டும் இடைச் சொற்களுமாம். இதனை வினை செயல் மருங்கின் வருநவும் காலமொடு வருநவும் எனப்பிரித்துக் கூட்டிப் பொருள் கொள்க,

வினைச்சொற்கள் ஒருமொழிப்புணர்ச்சியாகலின் அவற்றை நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியுமாக வைத்துப் புணர்த்தற்கு இயலாமையின் கால இடைநிலைகளை அம்மாம் முதலிய பால்காட்டும் இறுதி இடைச் சொற்களொடு உடனாக வைத்தும், உம்-மன முதலியவற்றை ஈற்றின் கண் வைத்தும் உணருமாறு ஓதினார். அதனான் காலமுணர்த்தும் எழுத்துக் களும் அசைகளும் இடைச்சொற்களே என உணரவைத்தார். இறுதி இடைச் சொற்கள் வினையியலுள் ஓதப்பெற்றன. குறிப்புவினை கால இடைநிலையொடு வாராமையின், வினை மருங்கின் என்னாது "வினைசெயல் மருங்கின்" என்றார். காலம் காட்டும் இவ்இடைச் சொற்கள் சொல்லின் இடையினும் ஈற்றினும் ஏற்றபெற்றியாய் வருமென்க.

எ-டு : உண்டனன், உண்டான், உண்ணாநின்றனன், உண்ணாநின்றான், உண்பான், எனவரும்.இவற்றுள் அன், ஆன் என்பவை பால்காட்டும் இறுதியிடைச் சொற்கள், ட், ஆநின்று, ப் என்பவை காலக்குறிபபிடைச் சொற்கள்.

காலமொடு வருநவும் எனப் பொதுப்படக்கூறியதனான் உண்ணா-உண்ணான், எனவரும் 'ஆ' கார எதிர் மறையும், வாழ்க, வாழிய எனவரும் வியங்கோளீறுகளும், 'செய்யும்' என்னும் உம் ஈறும், மன என்னும் முற்றீறும், ஒருசார் வினை யெச்ச ஈறுகளும் பிறவும் கொள்க.

3) வேற்றுமைப் பொருள்வயின் உருபாகுநவும்:- ஐ ஒடு கு இன் அது கண் என்பவை பெயர்ப் பொருள் வேறுபாடுற்றமையை உணர்த்தும் உருபிடைச் சொற்களாம். உருபும் என்னாது 'ஆகுநவும்' என்றதனான் இன்னும் ஆனுமாகிய மாற்றுருபுகளும் மாறு-உளி, உடைய எனவரும் சொல்லுருபுகளும் கொள்ளப்படும். எ-டு : வேற்றுமையியல் உரையுள் கண்டு கொள்க.

4) அசைநிலைக்கிளவி : என்பது பிற பொருளுணர்த்தாமல் செய்யுள் வழக்குப் பற்றிச் சீர்க்கு உறுப்பாகவும் சீராகவும் ஓசை நிரப்புதற்கு வரும் சொல்லுறுப்புக்களை. இதனை "இசை திரிந்தசைப்பினும் இயையுமன் பொருளே அசைதிரிந்திசையா என்மனார் புலவர்" (பொருளியல்-1) என்பதனானும் அறிக. செய்யுள் அமைப்பு நோக்கிப் புலவரான் ஆக்கிக் கொள்ள படுதல் தோன்ற "ஆகிவருநவும்" என்றார். அசையாகித் துணை புரிதலே இதன் பொருளாதும், இசைநிறைக் கிளவிக்கும் இஃதொக்கும்,

எ-டு: அந்திற் கச்சினன் கழலினன் (அகம்-79) "ஆங்கக் குயிலும் மயிலுங்காட்டி" என்பவை சீராக அசைத்து அடிநிரப்பி நின்றன. 'அதுமற் றவலங் கொள்ளாது நொதுமற்கலுழும்' உரைமதி வாழியோ வலவ, என்பவை சீர்க்கு உறுப்பாய் அசைத்து வந்தன. "பழமுதிர் சோலை மலைகிழவோனே" ஏகாரம் ஈற்றசையாய் சீர்நிறைத்து நின்றது-

5) இசைநிறைக் கிளவி: என்பது சார்ந்த சொல்லின் பொருட்குத் துணையாகச் செய்யுட்கண், சீர் நிறைத்து ஓசை பற்றி வரும். எ-டு: ஏஎ இஃதொத்தன் என்பெறாஅன் கேட்டைக்காண் எனவும் "அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே" எனவும் வரும்.

7) தத்தங் குறிப்பிற் பொருள் செய்குநவும்: இது பல நிலைகளில் வரும். எ-டு: கூரியதோர் வாள்மன்-வருகதில் அம்மவெம் சேரி சேர - சாத்தனும் வந்தான், கொன்னூர் துஞ்சினும், என வரும். இவை இடம் நோக்கிப்பொருள் தருவன ஆதலின் "தத்தங் குறிப்பின்" என்றார். சாரியை இடைச்சொல் முதலியன பொருள் தருதலும் "குறிப்பே" எனினும் அவை ஓராற்றான் வரையறைப்படுதலின் அவை ஒழிந்த ஏனையவற்றிற்கே இக் குறியீடு செய்தார் என்க.

7) ஒப்பில் வழியாற் பொருள் செய்குந: உவமவியலுள் பெறப்படும். எ-டு: எரியகைந்தன்ன தாமரை - யாழ்கெழு மணிமிடற்றந்தணன் - "குறுந்தொடி ஏய்க்கும் மெலிந்து வீங்கு திவவின்" விண் பொருபுகழ் விறல் வஞ்சி, மகன்றாயாதல் புரைவதாலெனவே" என உவமச்சொல் இடைச்சொல்லாக வரும். பிறவும் உவமவியலுரையுட் கண்டு கொள்க. இதனைத் தத்தங்குறிப்பிற் பொருள் செய்குநவற்றின் பின் வைத்தமையான் இவையும் தத்தங்குறிப்பின் பொருள் செய்வனவாம்.

ஈண்டு வகைப்படுத்திய ஏழனுள் முதல்நின்ற மூன்றும் மேலே உணர்த்தப்பட்டமையின் முன்வைக்கப் பெற்றன, ஒப்பில் வழியாற் பொருள் செய்வன இனி உவமவியலுள் உணர்த்தப் படுதலின்பின் வைக்கப்பட்டது. ஏனைய மூன்றும் இவ்வியலுள் உணர்த்தப்படுதலின் இடையே வைக்கப்பட்டன.

சூ. 252: அவைதாம்
முன்னும் பின்னும் மொழியடுத்து வருதலும்
தம்மீறு திரிதலும் பிறிதவண் நிலையலும்
அன்னவை யெல்லாம் உரிய என்ப (3)

க-து : இடைச் சொற்கள் பெயர் வினைகளை அடுத்து வரும் முறைமையும் பிற இயல்புகளும் ஆமாறு கூறுகின்றது.

உரை : மேல் வகைப்படுத்தப் பெற்ற இடைச் சொற்கள் பெயரொடும் வினையொடும் நடைபெறுங்கால் அவற்றின் முன்னர் வருதலும், பின்னர் வருதலும், தம் ஈறுதிரிந்து வருதலும் பிறிதோ ரிடைச்சொல் அவண்வந்து இணைய நிற்றலுமாகிய அத்தகைய இயல்புகளெல்லாம் உறுதற்குரிய, எனக் கூறுவர் ஆசிரியர்.

எ-டு : பண்டுகாடுமன் - கேண்மியா; இவை முன்னடுத்து நின்றன. கொன்னூர் - ஓஒ இனிதே; இவை பின்னடுத்தன. உடனுயிர் போகுகதில்ல - தில் என்பது ஈறுதிரிந்து வந்தது. வருகதில்லம்மஎம் சேரிசேர - பிறிதவண்வந்து இணைந்து நின்றது.

"அன்னவையெல்லாம்" என்றதனான், மன்னைச் சொல், தில்லைச்சொல் எனத் தம்மை உணரநின்ற வழியும் ஈறுதிரிதலும், னகாரை என எழுத்துச் சாரியை ஈறுதிரிதலும் வேற்றுமை யுருபுகளுள் காவலோனக்களிறஞ்சும்மே என ஐகாரம் முழுவதும் திரிதலும் பிறவும் கொள்க.

சூ. 253 : கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவியென்று
அம்மூன் றென்ப மன்னைச் சொல்லே (4)

க-து : இவ்வியலுள் உணர்த்தப்படும் மூவகை இடைச் சொற்களுள் தத்தங் குறிப்பிற் பொருள் செய்வன பொருணர்த்தும் சிறப்பும் அவற்றின் பன்மையும் நோக்கி அவற்றை முதற்கண் உணர்த்தத் தொடங்கி இச்சூத்திரத்தான் 'மன்' என்னும் இடைச்சொல் பெற்று வரும் பொருட் குறிப்பு இவை எனக் கூறுகின்றார்.

உரை : 'மன்' என்னும் இடைச்சொல், செயற்கழிவும் ஆக்கமும், எச்சமாக ஒழிந்து நிற்கும் பொருண்மையும் என்று சொல்லப்பட்ட அம்மூன்று பொருட் கூறுபாட்டினை உடைய தென்று கூறுவர் புலவர்.

எ-டு : சிறியகள் பெறினே எமக்கீயுமன்னே : இது கழிந்த பொருள் சுட்டி நின்றது. பண்டுகாடுமன் (இப்பொழுது வயலாயிற்று) இது ஆக்கங்குறித்து நின்றது. கூரியதோர் வாள்மன் (இம்பொழுது திட்பமின்று) இது ஒழிந்த சொற் பொருண்மை சுட்டி நின்றது.

சூ. 254 : விழைவே காலம் ஒழியிசைக் கிளவி என்று
அம்மூன் றென்ப தில்லைச் சொல்லே [5]

க-து : தில் என்னும் இடைச்சொல்லின் பொருட்குறிப்பு இவை என்கின்றது.

உரை : தில் என்னும் இடைச்சொல் விழைவும், காலமும், ஒழிந்து நிற்கும் சொற்பொருண்மையும் என்று சொல்லப்பட்ட அம்மூன்று பொருட்கூறுபாட்டினை உடையதென்று கூறுவர் புலவர்.

எ-டு: சின்மொழி அரிவையைப் பெறுகதில் அம்மயானே : இது பெறுதல் வேண்டும் என்னும் விழைவு குறித்து நின்றது. பெற்றாங்கறிகதில்லம்மவிவ்வூரே - இது காலங்குறித்து நின்றது. வருகதில் லம்மவெம்சேரிசேர' - இது வரின் இன்னது செய்வல் எனஒழியிசைப் பொருண்மை குறித்து நின்றது.

சூ. 255 : அச்சம் பயமிலி காலம் பெருமையென்று
அப்பால் நான்கே கொன்னைச் சொல்லே

க-து : 'கொன்' என்பதன் பொருட்குறிப்பு இவை என்கின்றது.

உரை : 'கொன்' என்னும் இடைச்சொல் அச்சம், பயனின்மை, காலம், பெருமை, என்றுசொல்லப்படும் அந்நான்கு பொருட் கூறுபாட்டினை உடையதாம்.

எ-டு : கொன்முனையிரவூர் (குறு - 91) கொன்னே கழிந்தன்றிளமை (நால - 55) கொன்வரல் வாடை நினதெனக் கொண்டேனோ - கொன்னூர் துஞ்சினும் யாந்துஞ்சலமே (குறு - 138) எனமுறையே அப்பொருள் நான்கினும் வந்தமை கண்டு கொள்க.

சூ. 256 : எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கமென்று
அப்பால் எட்டே உம்மைச் சொல்லே [7]

க-து : உம்மை இடைச் சொல்லின் பொருட்குறிப்பு இவை என்கின்றது.

உரை : உம் என்னும் இடைச்சொல் எச்சமும், (இழிவும் உயர்வும் குறித்து வரும்) சிறப்பும், ஐயமும், எதிர்மறையும், முழுமையும், எண்ணும், ஆய்வுநிலையும், ஆக்கமும் என்று சொல்லப்படும் அவ் எட்டுப் பொருட்கூறுபாட்டினையுடையதாம்.

எ-டு: 1) சாத்தனும் வந்தான், இது முன்னர்க் கொற்றன் வந்தமையைக் குறித்து நிற்றலின் இறந்தது தழுவிய எச்சஉம்மை. 2) யானைக்கும் அடிசருக்கும் என்பது உயர்வு சிறப்பும்மை. இவ்வூர்ப் பூசையும் புலால் தின்னாது என்பது இழிவுசிறப்பும்மை. 3) ஒன்று இரப்பான்போல் எளிவந்தும் சொல்லும், உலகம் புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன் வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போல் நல்லார்கண் தோன்றும் அடக்கமுமுடையன் ...அன்னான் ஒருவன் (கலி-47) இஃது இன்னான் எனத் துணியப்படாமையின் ஐயவும்மை. 4) மறப்பினும் ஒத்துக்கொளலாகும்[குறள்-134]என்புழி மறத்தற் கூடாது எனப் பொருள் தந்து நிற்றலின் இஃது எதிர்மறையும்மை. "மற்றது தள்ளினும் தள்ளாமை நீர்த்து - கற்றிலனாயினும் கேட்க" எனவருவனவும் அது. சாத்தன் வருதற்கும் உரியன் என்பது வாராமைக்கும் உரியன் எனப்பொருள் தருமிடத்து எதிர்மறையும்மை, வந்து உண்ணுதற்கும் உரியன் பேசுதற்கும் உரியன் எனப் பொருள்தரின் எச்சவும்மையாம். 5) முத்தமிழுங் கற்றான் என்பது முற்றும்மை. 6) நிலனும் நீரும் தீயும் வளியும் காயமும் எனப்பூதமைந்து என்பது எண்ணும்மை 7) இருநிலம் அடிதோய்தலின் திருமகளும் அல்லள், அரமகளும் அல்லள் இவள் யாராகும்; என ஆய்வின்கண் வருதல் தெரிநிலை உம்மை. ஆய்வின்பயன் பின்னர் மானிடமகளே எனத்துணிதலாம் 8) செந்தமிழால் வையினும் உவக்கும் சேயோன், என்புழி வைதலை வாழ்த்தாக எண்ணிக் கோடலின் ஆக்க உம்மையாம். "செப்பே வழீஇ யினும் வரை நிலையின்றே" என்பதும் அது.

சூ. 257: பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன் றென்ப ஓகா ரம்மே [8]

க-து: ஓ என்னும் இடைச் சொல்லின் பொருட்குறிப்பு இவை என்கின்றது.

உரை: ஓ என்னும் இடைச் சொல்; பிரிநிலையும், வினாவுதலும், எதிர்மறையும், ஒழியிசையும், தெரிநிலைச் சொல்லும், சிறப்புப் பொருள்தரும் சொல்லொடும் கூடி அவ்ஆறு பொருட் கூறுபாட்டினது என்று கூறுவர் புலவர்.

எ-டு: 1) யானோ தேறேன் அவர் பொய்வழங்கலரே, என்பது பிறர்தேறின் தேறுக எனத் தேறுவாரினின்று தன்னை வேறுபடுத்தலின் பிரிநிலையாம். 2) சாத்தன் உண்டானோ? என்பது வினா ஓகாரம். 3) யானோ கொள்வேன் - என்பது கொள்ளேன் என்னும் பொருள் தருதலின் எதிர்மறையாம்

4) கற்கவோ வந்தான்? என்பது விளையாடற்கு வந்தான் எனத்தான் கருதிய பொருள் தருதலின் ஒழியிசை ஒகாரமாம். 5) திருமகளோ அல்லள் - அரமகளோ அல்லள் இவள் யார்? என்பது ஆய்வின்கண் வருதலின் தெரிநிலை ஓகாரமாம். 6) ஓஒ பெரியன் என்பது பெருமையைவிதந்து கூறுதலின் சிறப்பு ஓகாரமாம். இவ்ஓகாரம் அளபெடுத்தே வரும் எனப் பின்னர்க் கூறுவார்.

சூ 258 : தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே
ஈற்றசை இவ்வைந் தேகா ரம்மே [9]

க-து : ஏகார இடைச் சொல்லின் பொருட்குறிப்பு இவை என்கின்றது.

உரை : ஏ, என்னும் இடைச்சொல் தெளிவும், வினாவும், பிரிநிலையும் எண்ணுதலும் ஈற்றசையும் என ஐந்து பொருட் கூறுபாட்டதாகும்.

எ-டு : உண்டேஎ மறுமை, வாய்மையேஎ வெல்லும், என வரும் இவை தேற்றேகாரம். நீயே கொண்டாய்? என்பது வினா ஏகாரம். இவனே வலியன் - என்பது பிரிநிலை ஏகாரம். நிலனே, நீரே, தீயே, வளியே என எண்ணுதற்கண்வரும் ஏகாரம் எண்ணேகாரம். வாடாவள்ளியங்காடிறந்தோரே - எனச் சீர் இறுதிக்கண் வரும் ஏகாரம் ஈற்றசை ஏகாரம். ஈறு என்பதற்குச் செய்யுளீறு எனப் பொருள் கூறின்ஒன்றக் கூறலாம் என்க. ஏகாரம் அசையாக முதற்கண்ணும் வருமாதலின் ஈற்றசை என்றார். பொருட்குறிப்புக்களொடு அசைநிலையையும் உடன் ஓதினார். "கூற்றுவயின் ஓரளபாக இசைத்தலும் உரித்" தெனப் பின்னர் எடுத்து விதத்தலைக் கருதி என்க. ஏகார இடைச் சொல்லின் இயல்புபற்றி ஒருங்கு கூறினார் எனினும் அமையும்.

சூ. 259 : வினையே குறிப்பே இசையே பண்பே
எண்ணே பெயரோ டவ்வறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே எனவென் கிளவி [10]

க-து : 'என' என்னும் இடைச் சொல்லின் பொருட்குறிப்பு இவை என்கின்றது.

உரை : என என்னும் இடைச்சொல், வினைப்பொருண்மையும் - குறிப்புப் பொருண்மையும், இசைப் பொருண்மையும், பண்புப்பொருண்மையும் எண்ணுதற் பொருண்மையும், பெயர்ப் பொருண்மையும் ஆகிய ஆறும் குறித்த சொற்பொருளைக் கருதி வரும் நிலைமையதாகும்.

வினை முதலிய அறுவகைப் பொருள்தரும் சொற்களைப் பொருந்தி அவற்றையே தன்பொருளாகக் கொண்டு வருமென்பார் ''அவ்வறு கிளவியும் கண்ணிய நிலைத்தே'' என்றார்.

எ-டு: 1) மலைவான் கொள்கென உயர்பலிதூஉய் எனவும் 2) துண்ணெனத் துடித்தது மனம் எனவும் 3) ஒல்லென ஒலிக்கும் கடல் எனவும் 4) வெள்ளென விளர்த்தது வானம் எனவும் 5) நிலனென நீரெனத் தீயென வளியென வானெனப் பூதம் ஐந்து எனவும் 6) அழுக்காறெனவொரு பாவி எனவும் முறையே வந்தவாறு கண்டு கொள்க. எனல் என்பதன் அடியாகப்பிறந்த 'என' என்னும் செயவென்னெச்சம் வேறு இவ்இடைச் சொல்வேறு என அறிக.

சூ. 260: என்றென் கிளவியும் அதனோ ரற்றே [11]

க-து: 'என்று' என்னும்இடைச்சொற்பொருட்குறிப்பும்அவையேஎன்கின்றது.

உரை: 'என்று' எனப்படும் இடைச்சொல்லும் மேற்கூறிய 'என' என்பதன் பொருளொடு ஒருங்கு ஒத்ததேயாகும்.

எ-டு: நரைவரும் என்றெண்ணி' என்பது வினைப் பொருண்மைபற்றி வந்தது. விண்ணென்று விசைத்தது வான் என்பது குறிப்புப்பொருண்மை. ஒல்லென்றொலிக்கும் ஒலி புனலூரன் என்பது இசைப் பொருண்மை. பச்சென்று பசந்தது பயிர் என்பது பண்புப்பொருண்மை. நீரென்று தீயென்று ...ஐந்து- என்பது எண்ணுதற் பொருண்மை. பாரி பாரி என்று ஒருவனுளன் என்பது பெயர்ப் பொருண்மை. என்று என்னும் செய்தென் எச்சம் வேறு இவ்இடைச்சொல் வேறென அறிக.

சூ. 261: விழைவின் தில்லை தன்னிடத்தியலும் [12]

க-து: தில் என்பதற்கு எய்தியது ஒருமருங்கு விலக்குகின்றது.

உரை: விழைவுப் பொருண்மை பற்றி வரும் 'தில்' என்னும் இடைச்சொல் தன்மைக்கண் வரும். ஏனையிடத்து வராது என்றவாறாம். எ-டு: மேற்காட்டப்பட்டது.

சூ. 262: தெளிவின் ஏயும் சிறப்பின் ஓவும்
அளபின் எடுத்த இசைய என்ப. (13)

க-து: ஏகார ஓகார இடைச்சொற்கு ஓதிய பொருள்களுள் ஒன்றற்கு மரபு கூறுகின்றது.

உரை: தெளிவுகுறித்து வரும் ஏகாரமும், சிறப்புக்குறித்து வரும் ஓகாரமும் அளபெடுத்தலான் ஓங்கிய இசையை உடையவாய் வருமெனக் கூறுவர் புலவர். எடுத்துக் காட்டுக்கள் மேற்காட்டப் பெற்றன. (சூ - 9. 8.)

சூ. 263 : மற்றென் கிளவி வினைமாற் றசைநிலை
அப்பாலிரண்டென மொழிமனார் புலவர் [14]

க-து: மற்று என்தபன் பொருட்கூறு இவை என்கின்றது.

உரை: மற்று என்னும் இடைச்சொல், வினைமாற்றாதலும், அசை நிலையாதலும் என அதன்பொருட்பகுதி இரண்டெனக் கூறுவர் புலவர்.

எ-டு: மற்றறிவாம் நல்வினை யாம் இளையம்" என்றவழி நல்வினை பின்னர் இயற்றுவாம் என மாற்றுதலின் வினைமாற்றா யிற்று. அதுமற் றவலங் கொள்ளாது நொதுமற்கலுழும், என்பது அசைநிலையாய் வந்தது.

சூ. 264 : எற்றென் கிளவி இறந்த பொருட்டே (15)

க-து: எற்று என்னும் இடைச் சொற்பொருள் இதுவென்கின்றது.

உரை: எற்று என்னும் இடைச்சொல் காலச் செலவினை உணர்த்தும் பொருட்டாய்வரும்.

எ-டு: எற்றென் உடம்பின் எழில்நலம்: என்றவழி முன்னர் எழிலுடையதாக இருந்த உடம்பு இப்பொழுது எழில் குன்றியமையைப் புலப்படுத்தலின் காலக் கடப்பினை உணர்த்தி நிற்றல் காண்க. என் நலம் இறந்தது எனின் அது கழிவுப் பொருட்டாம் என்க.

சூ. 265 : மற்றையது என்னும் கிளவி தானே
சுட்டுநிலை ஒழிய இனங்குறித் தன்றே (16)

க-து: 'மற்றை' என்னும் இடைச்சொல்லின் பொருண்மை கூறுகின்றது.

உரை: மற்றை' எனும் இடைச்சொல் யாதானும் ஒரு பொருளைச் சுட்டும் நிலைமையைத் தவிர்த்து எடுத்த ஒரு பொருளிற்கினமான பொருளைக் குறித்து வரும்.

இச் சொல் பெரும்பான்மையும் யாதானும் ஒரு பால் பற்றிய சுட்டுப்பெயரோடிணைந்து வருமென்பதறிவித்தற்கு 'மற்றையது' என ஓதினார்,

எ-டு : இவ்ஆடை கொள்க. என்றவழி மற்றையது கொள்வேன் எனின் அச்சுட்டு பிறிதொரு ஆடையையே சுட்டி நிற்குமாறு காண்க. இவ்வீரன் தக்கானோ என்றவழி மற்றையவன் தக்கான் எனின் அச்சுட்டுப்பிறனொரு வீரனையே சுட்டுதலும் பரிமறவர் பொருவரோ என்புழி மற்றையவர் பொருவர் எனின், கரிமறவர், தேர்மறவர் ஆகியோரையே சுட்டுதலும் கண்டு கொள்க. சிறுபான்மை மற்றை ஆடை கொள்வேன், மற்றைவீரன் தக்கான், மற்றை மறவர் பொருவர் எனப் பொருட் பெயரொடும் வரும். எவ்வாறு வரினும் இனக் குறிப்பைத் தருவது ''மற்றை'' என்னும் இடைச் சொல்லேயாதல் அறிக.

என என்பது செயவெனச்சப் போலியாய் நிற்குமாறு போல மற்றை என்பது பெயரெச்சப் போலியாய் நிற்குமோர் இடைச் சொல்லாதலின் இது மற்று என்பதன் விகாரமன்று என்க. மற்று என்னும் இடைச்சொல் வினையொடு முடியும் இயல்பினதா தலையும் அறிக.

சூ. 266 : மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும் (17)

க-து : மன்ற என்னும் இடைச்சொல்லின் பொருண்மை கூறுகின்றது.

உரை : 'மன்ற' என்னும் இடைச்சொல் தெளிவு பொருண்மை குறித்து வரும்.

எ-டு : ''கடவுளாயினும் ஆக மடவைமன்ற வாழியமுருகே'' (நற்-34) எனவரும். தேற்றம் என்பது ஈண்டு உறுதி செய்தலைக் கருதிற்று.

சூ. 267 : தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே (18)

க-து : தஞ்சம் என்னும் இடைச்சொல்லின் பொருண்மை கூறுகின்றது.

உரை : தஞ்சம் என்னும் இடைச்சொல் எளிமைப் பண் புணர்த்தாமல், எளிதாதற் குறிப்புப் பொருள் பற்றி வரும்.

எ-டு ''ஈயென இரக்குவாராயின் சீருடை முரசுகெழு தாயத்து அரசோ தஞ்சம்'' (புறம்-73) அரசைப் பெறுவது எளிது என்பது பொருள். அடைக்கலம் என்னும் பொருள் தரும் 'தஞ்சம்' என்னும் பெயர்ச்சொல் வேறு இவ்இடைச்சொல் வேறு.

தஞ்சு என்பது இதன் முதனிலை, தஞ்சாவூர் (தஞ்சு ஆவூர்- தஞ்சாவூர்) என்பது இதனடியாகப் பிறந்த பெயராம். வளங் காரணமாக எண்மையான ஊர் என்பது கருத்து.

சூ. 268 : அந்தில் ஆங்க அசைநிலை கிளவியென்று
ஆயிரண் டாகும் இயற்கைத் தென்ப (19)

க-து : அந்தில் என்னும் இடைச்சொல்லின் பொருண்மை கூறுகின்றது.

உரை : அந்தில் என்னும் இடைச்சொல் ஆங்கு என்னும் இடக்குறிப்பும் அசைநிலையும் எனப்படும் அவ்விரண்டு இயல்பின தாகும் என்று கூறுவர் புலவர். ஆங்கு என்பது பாவோசை கருதி ஆங்க என விகாரமாய் நின்றது.

எ-டு : வருமே, சேயிழை அந்திற் கொழுநற் காணிய (குறு - 293) என்பது இடக்குறிப்பு. அந்திற் கச்சினன் கழலினன் (அகம் - 79) என்பது அசைநிலை.

சூ. 269 : கொல்லே ஐயம் (20)

க-து : 'கொல்' என்னும் இடைச் சொற்பொருண்மை கூறுகின்றது.

உரை : கொல் என்னும் இடைச்சொல் ஐயப் பொருட்டாய் வரும்.

எ-டு : சாத்தன் வருங்கொல்? எனவரும். இவ் இடைச்சொல் குற்றி கொல்லோ மகன்கொல்லோ எனவினா எழுத்தொடும் வரும்.

சூ. 270 : எல்லே இலக்கம் (21)

க-து : 'எல்' என்னும் இடைச் சொற்பொருண்மை கூறுகின்றது.

உரை : 'எல்' என்னும் இடைச்சொல் அசைந்திலங்குதல் பொருட்டாகும்.

எ-டு : எல்வளை மகளிர் (புறம் - 24) எனவரும். அசை தலையுடைய வளை யணிந்த மகளிர் என்பதுபொருள்.

இலக்கம் என்பது இலங்குதல், விளங்குதல், துலங்குதல் என்னும் பண்பு குறியாது, தொழிற்குறிப்புணர்த்தி நிற்றலின் இடைச்சொல்லாயிற்று என்க. 'எல்' என்பது ஞாயிற்றினைக் குறிக்குங்கால் பெயராயும் எல்லினன் பெரிது - எல்லிற்றுப் போது என ஒளிர்தலைக்குறிக்குங்கால் வினையாயும் எல்லொளிமதியம் எனப் பண்பினைக்குறிக்குங்கால் உரிச்சொல்லாயும் நிற்கும். அசைதற்குறிப்புணர்த்தும் வழி இடைச்சொல்லா மென்க,

சேனாவரையர் இலக்கம் என்பதற்கு விளங்கித் தோன்றுதல் என்னும் பண்புப் பொருள் கொண்டு உரிச்சொல் நீர்மைத்து

என்றார். வளைகள் அசைந்து இலங்கும் நிலைமையைச் சுட்டுதற் கண் அஃது இடைச்சொற்குறிப்பாதல் நோக்கி ஆசிரியர் இடையியலுள் வைத்தாரென அறிக.

இவ்இடைச்சொல்லின் பொருண்மை ஓராமல் எல்லே இயக்கம் எனவும் எல்லே விளக்கம் எனவும் பாடங்கொண்டு உரை கூறுவாரும் உளர். இவை பாடமாயின் அஃது உரிச் சொல்லேயாமென்க.

சூ. 271 : இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி
பலர்க்குரி எழுத்தின் வினையொடு முடிமே

க-து : ஆர் என்னும் இடைச் சொல்லின் பொருண்மை கூறுகின்றது.

உரை : ஆர் என்னும் இடைச்சொல் இயற்பெயற்களின் முன்னர் அவற்றைச் சார்ந்து வந்து பல்லோரறியுஞ் சொல்லுக் குரிய ரகார ஈற்றுப் பெயர் போல உயர்திணைப் பன்மை வினை யான் முடியும்.

எ-டு : சாத்தனார் வந்தார் முடத்தாமக்கண்ணியார் வந்தார். - கொற்றனார் வந்தார் எனவரும்.

ஆர் என்னும் பலுணர்த்தும் இறுதி இடைச்சொல்லை நீக்குதற்கு இயற்பெயர் முன்னர் ஆரைக்கிளவி என்றார். பலர்க்குரிஎழுத்தின் வினையொடு முடிமே என்றதனான் அவை ஒருமையீற்றுப் பெயர்கள் என்பதும், அஃது உயர்த்தற் பொருட்டாய் வரும்மென்பதும் பெறப்படும். தம்மீறுதிரிதலும் என்றதனான் ஆர் - ஆரை, எனத் திரிந்துநின்றது. 'எழுத்தின்' என்பதனுள் இன் உவம உருபாய் நின்றது. தன்னின முடித்தல் என்னும் உத்தியான் தந்தையார் வந்தார் மகனார் வந்தார் எனமுறைப்பெயர்க்கண் வருதலும் கொள்க. அஃறிணை இயற்பெயர் பலர்க்குரியெழுத்தான் முடியாமையின் இயற்பெயர் என்றது உயர்திணை விரவுப் பெயர் என்பது பெறப்படும்.

இனி, நரியார் வந்தார் - யானையார் வந்தார் என அஃறிணைக்கண்ணும் வருமால் எனின் அவை 'தம்மரபினவாய்' வந்த "வழக்கினாய உயர் சொற்கிளவி" என்பது கிளவி யாக்கத்துட் கூறப்பட்டது. நம்பியார் நங்கையார் என்பனவும் ஒருவரைக்கூறும் பன்மைக்கிளவியாய் அச்சூத்திரத்துள் அடங்கு மென்க. அதனான் இச்சூத்திரம் திணைவழுவும் பால் வழுவும் அமைத்ததாகக் கூறுதல் பொருந்தாமையறிக.

சூ. 272 : அசைநிலைக் கிளவி ஆகும்வழி யறிதல் [23]

க-து : இதுவுமது

உரை : மேற்கூறப்பெற்ற ஆரைக்கிளவி அசைநிலைக் கிளவியாயும் வரும், அங்ஙனம் வருமிடம் அறிந்து கொள்க.

இதனானும் ஆரைக்கிளவியின் பொருட்குறிப்புணர்த்துதலே மேலைச் சூத்திரத்தின் நோக்கென்பது தெளியலாம். ஆகும் என்னாது "வழியறிதல்" என்றதனான் அசைநிலையாதல் இயற்பெயர் முன்னரன்றி ஏனைச் சொற்களின் முன்னர் வருமிடத்தேயாம் என்க.

எ-டு : "எல்லா உயிரொடும் செல்லுமார் முதலே" (எழு-61) "பெயரினாகிய தொகையுமாருளவே" (சொல் - 61)எனவரும்.

சூ. 273 : ஏயுங் குரையும் இசைநிறை அசைநிலை
ஆயிரண் டாகும் இயற்கைய என்ப [24]

க-து : ஏ-குரை, என்னும் இடைச் சொற்குரிய பொருண்மை கூறுகின்றது.

உரை : ஏ என்னும் இடைச்சொல்லும் - குரை என்னும் இடைச்சொல்லும் (ஒவ்வொன்றும்) இசை நிறையும், அசை நிலையும் என அவ்விரண்டியல்பின என்று கூறுவர் புலவர்.

இயற்கையாவது பொருட்கூறுபாடு. பொருளான் ஒத்து வருதலின் ஏயும் குரையும் ஒருங்கு கூறினார். இவ்ஏகாரம் தொடர்மொழியின் முதற்கண் தனித்து வருதலின் "தேற்றம் வினாவே"என்றதனொடு கூறாராயினார் என்க.

எ-டு : 'ஏஎ இஃதொத்தன் என் பெறான் கேட்டைக்காண்' (கலி-61) இஃது இசைநிறை. ஏஎ என் சொல்லியவாறு? இஃதசைநிலை. 'அளிதோதானேயது பெறலருங் குரைத்தே' (புற-5) இஃது இசைநிறை. 'பல்குரைத் துன்பங்கள் சென்றுபடும்' (திருக்குறள்-1045. ) என்பதும் அது. அசைநிலையாய் வருதல் வந்துழிக்கண்டு கொள்க.

சூ. 274 : மா என் கிளவி வியங்கோ ளசைச்சொல் .

க-து : மா என்னும் இடைச்சொற்குரிய பொருண்மை கூறுகின்றது.

உரை : மா என்னும் இடைச்சொல் வியங்கோளின்கண் அசை நிலையாய் வரும்.

எ-டு : "உப்பின்று புற்கை உண்கமா கொற்கையோனே" எனவரும்.

சூ. 275 : மியாஇக மோமதி இகும்சின் என்னும்
ஆவயின் ஆறும் முன்னிலை யசைச்சொல்

க-து : முன்னிலைக்கண் அசைநிலையாம் இடைச்சொற்கள் இவைஎன்கின்றது.

உரை : மியா, இக, மோ, மதி, இகும், சின், என்னும் ஆறும் முன்னிலையாகிய அவ்விடத்து அசைச் சொல்லாய் வரும். சின்என்றதுஇசின் என்பதன் முதற்குறையாகும். "இகுமிசின்" எனப் பாடங்கோடலுமாம்.

எ-டு : கேண்மியா கொற்றா. கண்பனி ஆன்றிக என்றி தோழி-காமஞ் செப்பாதுகண்டது மொழிமோ-உரைமதி வாழியோ வலவ.மெல்லம்புலம்ப கண்டிகும். காப்பும் பூண்டிசின் கடையும் போகலை. எனவரும்.

சூ. 276 : அவற்றுள்
இகுமும் சின்னும் ஏனை யிடத்தொடும்
தகும் நிலை உடைய என்மனார்புலவர் (27)

க-து : மேலனவற்றுள் இரண்டற்கு எய்தியதன்மேற் சிறப்பு விதிகூறுகின்றது.

உரை : மேற்கூறிய ஆறனுள் இகும் இசின் என்னும் இடைச் சொற்கள் முன்னிலையேயன்றித் தன்மையும் படர்க்கையுமாகிய இடங்களொடும் வரத்தகும் இயல்பினை உடைய, என்று கூறுவர் புலவர்.

எ-டு : கண்டிக்கும் அல்லமோ எனவும், கண்ணும் படுமோ என்றிசின்யானே எனவும், தன்மைக்கண் வந்தன. புகழ்ந் திகுமல்லமோ பெரிதே எனவும், யாரஃதறிந்திசினோரே எனவும் படர்க்கைக்கண் வந்தன.

சூ. 277 : அம்ம கேட்பிக்கும் [28]

க-து : அம்ம என்னும் இடைச்சொல்லின் பொருட்குறிப்புக் கூறுகின்றது.

'உரை : அம்ம என்னும் இடைச்சொல் கேட்பாய் என்னும் பொருட்குறிப்பொடு நிற்கும். கேட்பிக்கும்' எனக் கருவி கருத்தா வாக ஓதப்பட்டது. எ-டு : அம்ம வாழி தோழி ! எனவரும்.

சூ 278 : ஆங்க உரையசை (29)

க-து : ஆங்க என்னும் இடைச் சொல்லின் தன்மை கூறுகின்றது.

உரை : ஆங்க எனும் இடைச்சொல் உரையசையாக வரும்.

எ-டு : "ஆங்கக் குயிலும்மயிலும் காட்டிக் கேள்வனை விடுத்துப் போகியோளே" எனவரும். உரையசையாவது பொருள்காணுமிடத்துப் பொருள் இன்றி நிற்றல்.

சூ. 279 : ஒப்பில் போலியும் அப்பொருட்டாகும் (30)

க-து : போலும் என்னும் இடைச்சொல்லின் தன்மை கூறுகின்றது.

உரை : ஒப்புமை உணர்த்தாது வரும் போலும் என்னும் இடைச்சொல்லும் ஆங்க என்னும் இடைசொற் போல உரையசை யாக வரும்.

எ-டு : மங்கலம் எல்பதோர் ஊர் உண்டுபோலும். எனவரும் தெளிவின்றி ஒரு கருத்தை உணர்ந்து கொள்ளுதற்கண் இவ் இடைச்சொல் வருதலின் "அப்பொருட்டாகும்" என்றார். இதனான் அசைநிலையும் ஓராற்றான் பொருள்குறித்து நிற்கும் என்பதுணர்த்தினார்.

சூ. 280 : யாகா
பிறபிறக்கு அரோபோ மாதென வரூஉம்
ஆயேழ் சொல்லும் அசைநிலைக் கிளவி [31]

க-து : பொதுவாகவரும் அசைநிலை இடைச்சொற்கள் இவை என்கின்றது.

உரை : யா, கா, பிற, பிறக்கு, அரோ, போ, மாது எனச் சொல்ல வரும் அவ் ஏழு இடைச் சொற்களும் அசைநிலையாய் வரும்.

எ-டு : யா பன்னிருவர் மாணாக்கர் அகத்தியனார்க்கு எனவும் புறநிழற்பட்டாளோ இவளிவட்காண்டிகா எனவும், தான் பிற வரிசையறிதலின் தன்னுந்துாக்கி எனவும் நசைதரவந்தோர் நசை பிறக்கொழிய எனவும், நோதக இருங்குயில் ஆலுமே அரோ எனவும், பிரியின் வாழா தென்போ தெய்ய எனவும், விளிந்தன்று மாதவர்த் தெளிந்தவென் நெஞ்சே எனவும் வரும்.

சூ 281 : ஆக ஆகல் என்பது என்னும்
ஆவயின் மூன்றும் பிரிவில் அசைநிலை [32]

க-து : பிரிவின்றிவந்து அசைநிலையாகும் இடைச்சொற்கள் இவை என்கின்றது.

உரை : ஆக, ஆகல், என்பது, என்னும், அம்மூன்றும் அம் மூன்று சொற்களினிடத்தும் இணைந்து வந்து அசைநிலையாகும்.

என்றது; ஒருவன் ஒரு கருத்தைக் கூறுங்கால் பிறனொருவன் அதனை உடன்படுதற் கண்ணும், வற்புறுத்துதற் கண்ணும் கூறுமிடத்து, வியங்கோட்பொருள் பட வரும் 'ஆக' 'அகல்' என்னும் சொற்களும், வினைமுற்றுப் பொருள்பட வரும், 'என்பது' என்னும் சொல்லுந் தனித்து வாராமல் அடுக்கி வருங்கால் அவற்றுள் ஒன்று பயனிலையாய் நின்று பொருள்தர ஒன்று அசைநிலையாய் நிற்கும் என்றவாறு.

அம்மூன்று சொற்களும் வினைமுற்றாய் நிற்றலின் ஆவயின் என்றும், இரட்டித்தவழி ஒன்று இடைச் சொல்லாய் அசைத்து நிற்றலின் அம்மூன்றும் என்றும் விளங்கக் கூறினார். அகரச்சுட்டு விகாரத்தான் தொக்கது.

வரலாறு :- ஒருவன் மழை வேண்டி மக்கள் வான் பலிதரல் வேண்டும் என்று கூறியவழி அதனை உடன்படுவான் ஒருவன் ஆக ஆக ! என்றோ, ஆகல் ஆகல் ! என்றோ கூறும். அவ்வழி அவற்றுள் ஒருசொல் அங்ஙனம் ஆவதாக என்னும் பொருள்தர ஏனையது அசைநிலையாக நின்றவாறு காண்க. ஒருவன் நல்லாறு எனினும் கொளல்தீது என்றவழி அதனை வலியுறுத்தும் ஒருவன் 'என்பது என்பது' என்னும். ஆண்டு ஒரு சொல், என்று சொல்லுதல்தகவினது என்னும் பொருள்தர ஏனையது அசைநிலையாய் நிற்றலைக் காண்க. பொருள்நிலைச்சொல்லும் அசைச்சொல்லும் வடிவான் ஒற்றுமைப்பட்டு நிற்றலின் பிரிவில் அசைநிலை என்றார்.

இவற்றை அடுக்கெனக் கொள்ளலாம் எனின் அடுக்கி வரும் சொற்கள் பொருளுணர்த்துவதல்லது அசைநிலையாக வாரா என்க. இச்சூத்திரத்திற்கு உரையசிரியன்மார் கூறும் உரையும் விளக்கமும் அவரவர் கருத்துக்கட்கே முரண்படுதலின் ஒவ்வாமை யறியலாம்.

சூ. 282 : ஈரள பிசைக்கும் இறுதியி லுயிரே
ஆயியல் நிலையும் காலத் தானும்
அளபெடை நிலையும் காலத் தானும்
அளபெடை யின்றித் தான்வருங் காலையும்
உளவென மொழிப பொருள் வேறுபடுதல்
குறிப்பின் இசையான் நெறிப்படத்தோன்றும்

க-து : 'ஔ' என்னும் ஓரெழுத்தொருமொழி இடைச்சொல்லாய்ப் பொருட் குறிப்புணர்த்தி வருமாறு கூறுகின்றது.

உரை : இரண்டு மாத்திரை யளவிற்றாயிசைக்கும் மொழி யிறுதியாகி வருதலில்லாத உயிரெழுத்தாகிய ஔகாரம், மேற் கூறிய இடைச் சொற்களைப் போல இரட்டித்து நிற்குமிடத்தும் அளபெடுத்து நிற்குமிடத்தும் அளபெடாது தனித்து நிற்கு மிடத்தும், குறிப்பானும் இசையானும்நெறிப் படத்தோன்றுதலான் அதன் பொருள்வேறுபடுதல் உளவென்று கூறுவர் புலவர்.

இஃது இடைச்சொல்லாய்ப் பொருள் குறித்து நிற்கும் என்றலின் ஆயியல் நிலையும் காலத்தானும் என்றது பிரிவின்றி இணைந்து வரும் நிலையை மட்டுமே சுட்டிற்றென அறிக.

கௌ, வௌ என்னும் உயிர்மெய்களை நீக்குதற்காக இறுதி யில் உயிரே என்றும், எகர ஒகரங்களை நீக்குதற்காக ஈரளபிசைக்கும் என்றும் கூறினார்.

இங்ஙனம் இவ் ஔ காரம் இணைந்தும் அளபெடுத்தும் தனித்தும் வருங்கால் ஒன்றற்கொன்று ஓசையான் வேறுபடுதலின் 'குறிப்பின், இசையான், நெறிப்படத் தோன்றும்' என்றார்.

வரலாறு : ஔஔ இவன் தவஞ் செய்தவாறு" என்னுமிடத்து வியப்பும், ஔஉ இவன் போர் செய்தவாறு என்புழிச் சிறப்பும், ஔ இனி வெகுளல் என்னுமிடத்து மாறுபாடும் குறிப்பானுணர்த்தி நிற்குமாறு அறிக. பிறபொருள் குறித்து வருமேனும் கண்டுகொள்க. இவ் ஔ காரமே இக்காலத்து ஓகாரமாக வழங்குகின்றதுபோலும்.

சூ. 283 : நன்றீற் றேயும் அன்றீற் றேயும்
அந்தீற் றோவும் அன்னீற் றோவும்
அன்னபிறவும் குறிப்பொடு கொள்ளும் (34)

க-து : ஒருசார் குறிப்பிடைச் சொற்கள் ஆமாறு கூறுகின்றது.

உரை : நன்றே, அன்றே எனவரும் சொற்களும், அந்தோ, அன்னோ எனவரும் சொற்களும் அவைபோல்வனவாய்வரும் பிறவும் இடைச் சொற்களாய்க் குறிப்புப் பொருள்பற்றி வரும்.

அம்முதனிலைகளொடு கூடியல்லது குறிப்புப்பொருள் தாரா என்பதறிய நன்றீற்றேயும் அன்றீற்றேயும் அந்தீற்றோவும் அன்னீற்றோவும் எனவிதந்து கூறினார். அதனான் இவற்றை வேறு கூறினார் என்க. இவை தனித்தும், ஒரோவழி இரட்டித்தும் வருதலின் பிரிவிலசைநிலை கூறிய அதிகாரத்து வைத்து ஓதினார் என்க.

வரலாறு: தவறு செய்த ஒருவன் தான் செய்ததனை மறுத்துக்கூறும் வழி அதனை உள்ளத்தான் வெறுப்பான் ஒருவன் நீ செய்தது நன்றே நன்றே என்ற வழித் 'தீது' என்னும் குறிப்புத் தோன்றுமாறு காண்க. நலஞ் செய்து துன்புறுவானை நோக்கி ஒருவன் இஃது ஊழன்றே வருந்தற்க, என்புழி ஊழ் நுகர்வியாது செல்லாது என்னும் குறிப்புணர்த்துமாறு காண்க. அந்தோ எந்தை அடையாப் போரில் (புறம்-261) என்பதும் அன்னோ என்னாவதுகொல் தானே (புறம்-345) என்பதும் இரங்கற் குறிப்புணர்த்தி நிற்குமாறு காண்க.

அன்னபிறவும் என்றதனான் என்னே! எனவும் அச்சோ! எனவும் ஐயோ, எனவும் வருவன இரக்கம், அவலம், முதலிய குறிப்புணர்த்தி நிற்குமாறும், ஒக்கும் ஒக்கும் என்பது ஐயக்குறிப் புணர்த்தி நிற்குமாறும் கண்டு கொள்க.

இன்னும் அதனானே அஆ இழந்தான் என்று எண்ணப்படும் எனவும் அம்மம்மா இனிப்பொறேன் எனவும் சிறுபான்மை ஆகார ஈற்றினவாய்க் குறிப்புணர்த்தி வருவன பிறவும் சான்றோர் வழக்கு நோக்கிக் கண்டுகொள்க.

**சூ. 284 :** எச்ச உம்மையும் எதிர்மறை உம்மையும்
தத்தமுள் மயங்கும் உடநிலை இலவே (35)

**க-து:** எஞ்சுபொருட் கிளவியான் முடியும் உம்மை இடைச்சொல்பற்றியதோ ரியல்பு கூறுகின்றது.

**உரை:** ஒரு தொடரின்கண் எச்சவும்மையும், எதிர்மறை யும்மையும் தத்தமக்குள் ஒருங்கு மயங்குதல் இல. என்றது; பாணன் பாடுதற்கும் உரியன் என்புழி எச்சப் பொருள் கருதியவழி வாயிலாதற்கும் உரியன் எனவும், எதிர்மறைப் பொருள்கருதிய வழிப் பாடாமைக்கும் உரியன் எனவும் வருமன்றே. ஆண்டு யாதேனும் ஒருபொருள் பற்றியல்லது இரண்டு பொருளும் ஒருங்குவாரா என்றவாறாம்.

சாத்தனும் வந்தான் என்னும் தொடர் எதிர்மறைப் பொருள் தருதற்கும், மறப்பினும் ஒத்துக் கொளலாகும் என்னும்தொடர் பிற எச்சப் பொருள்தருதற்கும் ஏலாமையின் இன்னோரன்ன தொடர்களை நீக்கிச், சாத்தன் உண்ணுதற்கும் உரியன் என்றாற் போல இரு பொருளும் மயங்குதற்கு ஏற்ற தொடர்க்கண்ணது இவ் ஆராய்ச்சி என்பது தோன்ற "உடனிலைஇல" என்றார். எச்ச உம்மை எச்சவும்மையொடும் எதிர்மறை உம்மை எதிர் மறை உம்மையொடும் மயங்குதற்கு உரியவாகலின் "தம்முள்" என்னாது "தத்தம்முள்" என்றார்.

உரையாசிரியன்மார் இரு தொடர்களைக் காட்டி விளக்கங் கூறுதலும் அமைதி கூறுதலும் ஆசிரியர் கருத்திற்கும் நூல் நெறிக்கும் ஏலா என்க.

சூ. 385 எஞ்சுபொருட் கிளவி செஞ்சொல் லாயின்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல் (36)

க-து : எச்ச உம்மைக்காவதொரு மரபு கூறுகின்றது.

பொருள் : எச்ச உம்மையான் தழுவப்படும் எஞ்சுபொருட் கிளவி உம்மையின்றிச் செஞ்சொல்லாக நிற்பின் அதனை உம்மையொடுநின்ற தொடருக்குப் பிற்கூறாது முற்கூறுவாராக.

எ-டு : சாத்தன் வந்தான் கொற்றனும் வந்தான் எனவும் அடகுபுலால்பாகு பாளிதமும் உண்ணான் கடல் போலும் கல்வியவன் எனவும் வரும்.

சூ. 286 : முற்றிய உம்மைத் தொகைச் சொன் மருங்கின்
எச்சக் கிளவி உரித்து மாகும் (37)

க-து : முற்றும்மைக்காவதொரு மரபு கூறுகின்றது.

உரை : முற்றுமையடுத்துத் தொகை குறித்து நிற்கும் சொல்லின்கண் எச்சக்கிளவி வருதற்கும் உரியதாகும்-அஃதாவது தொகைகுறித்து நிற்கும் முற்றுமை எச்சப் பொருள்பட வருதலும் ஆகும் என்றவாறு. உம்மை எதிர்மறையாதலின் முற்றுப் பொருள் தருதலே பெரும்பான்மை என்பதாம். தொகை என்றது எண்ணுத்தொகுதியை

எ-டு : பத்துங் கொடாதே என்றவழிச் சில எஞ்சக்கொடு என்றும் ஒரோவழிப் பொருள் தருதல் காண்க. 'தொகை' எனப் பொதுப்படக் கூறியவதனான் எல்லாவற்றையும் கொடாதே', அனைத்தும் கொடால் எனவருதலும் கொள்க.

எச்சப் பொருள் தருதல் பெரும்பான்மையும் எதிர்மறை வினைக்கண்ணே வரும். பொன் பத்தும் கொடு என்றவழி அதற்குரிய தனிசும் (வட்டியும்) கொடு எனச்சிறுபான்மை விதி வினைக்கண்ணும் வரும்.

சூ. 287 : ஈற்றுநின் றிசைக்கும் ஏயென் இறுதி
கூற்றுவயின் ஓரள பாகலும் உரித்தே (38)

க-து : ஈற்றசை ஏகாரத்திற் கொரு சிறப்பு இயல்பு கூறுகின்றது.

உரை : சொல்லிறுதிக்கண் நின்று அசையாக இசைக்கும் ஏ என்னும் ஈற்றசை, வழக்கின்கண் ஒருமாத்திரையளவிற்றாதலும் உரித்தாகும். உம்மையான் ஈரளவிசைத்தலே பெரும்பான்மை என்பதாம்.

வரலாறு : முன்னின்றாரை நோக்கி ஒருவர் உரையாடுங் கால், கண்டேனே, பார்த்தேனே, உண்டேனே என்ற வழி கண்டேனெ, பார்த்தேனெ, உண்டேனெ என இறுதிகுன்றி இசைத்தலை வழக்காற்றினானறிக.

'கூற்றுவயின்' என ஆசிரியர் விதந்து கூறுதலின் இஃது உரைநடை வழக்கிற்கே என்பது போதரும்.

சூ 288 : உம்மை எண்ணும் எனவென் எண்ணும்
தம்வயின் தொகுதி கடப்பா டிலவே (39)

க-து : எண்ணிடைச் சொற்களுள் இரண்டற்கு ஆவதொருமரபு கூறுகின்றது.

உரை : உம்மையான் வரும் எண்ணும், என் என்று வரும் எண்ணும் முடிபின்கண் தொகை பெற்றுவருதலாகிய கடப் பாடுடையவல்ல, தொகை பெற்றும் வரும், பெறாதும் வரும்.

எ-டு : "உயர்திணைக்குரிமையும் அஃறிணைக்குரிமையும் ஆயிருதிணைக்கும் ஓரன்ன உரிமையும் அம்மூவுருபின தோன்ற லாறே "என உம்மை எண்ணும், நிலனெனத் நீரெனத் தீயென வளியென நான்கும், என, எனவென் எண்ணும் தொகைபெற்று வந்தன. "இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி" என உம்மை எண்ணும் உடலென, உயிரென இன்றியமையா, என எனவென் எண்ணும் தொகைபெறாது வந்தன. 'என்று' என்னும் இடைச்சொல் என என்பதனொடு பொருளான் ஒத்ததாகலின் 'என்று' என்பதற்கும் இவ்விதி ஒக்குமெனக் கொள்க. இஃது உரையிற் கோடல் என்னும் உத்தி.

சூ. 289 : எண்ணேகாரம் இடையிட்டுக் கொளினும்
எண்ணுக் குறித் தியலும் என்மனார் புலவர்

க-து : ஏகார எண்ணிடைச் சொற்குச் சிறப்பு விதி கூறுகின்றது.

உரை : எண்ணுக்குறித்துவரும் ஏகாரம் சொற்றொறும் வாராமல் இடையிட்டு வரினும் செவ்வெண்ணாகநின்ற சொற்கள் எண்ணுதற் பொருட்டாயே நடக்கும் என்று கூறுவர் புலவர்.

எ. டு: மலைநிலம் பூவே துலாக்கோலென்றின்னர், எனவும் தோற்றம் இசையே நாற்றம் சுவையே உறலோ டாங்கைம் புலனென மொழிப, எனவும் வரும்.

சூ. 290 : உம்மை தொக்க எனாவென் கிளவியும்
ஆ வீறாகிய என்றென் கிளவியும்
ஆயிரு கிளவியும் எண்ணுவழிப்பட்டன [41]

க-து : எனா, என்றா என்னும் இடைச் சொற்கட்காவதொரு மரபு கூறுகின்றது.

உரை : உம்மை தொக்குவரும் எனா வென்னும் இடைச் சொல்லும் ஆகார ஈற்றதாகிய என்றா என்னும் இடைச்சொல்லும் ஆகிய இரண்டு இடைச் சொற்களும் எண்ணுதற் பொருளினவாம்.

"ஆ ஈறாகிய என்று" என்பது 'என்றா' என்னும் இடைச் சொல்லாம். இவை முறையே என, என்று என்பவற்றின் திரிபாயினும் எண்ணுப்பொருள் பற்றியல்லது இவை வாராமையின் வேறாக ஓதப்பட்டன. எனா - என்றா என்பவை 'என்று சொல்லப்படுவன' என்னும் பொருளினவாதலின் அவற்றுள் எண்ணும்மை மறைந்து நின்று எண்ணுப் பொருள் தரும் என்பது தோன்ற "உம்மை தொக்க எனா என்கிளவியும் .... என்றென் கிளவியும்" என்றார். உம்மை தொக்க வழி அவை வினைப் பொருள் ஒழித்து எண்ணுப் பொருள் மட்டுமே பயந்து நிற்றலின் "எண்ணு வழிப்பட்டன" என்றார்.

எ. டு. : நிலனெனா நீரெனாத் தீயெனா வளியெனா வானெனாப்பூதம் ஐந்து, எனவும் நிலனென்றா நீரென்றா தீயென்றா வளியென்றா வானென்றாப் பூதமைந்து, எனவும் வரும். 'எண்ணுவழிப்பட்டன' என்றதனான் இடையிட்டு வருதலும் கொள்க. யாத்தசீரே அடியாப்பெனா எனவும், ஒப்பும் உருவும் வெறுப்பும் என்றா எனவும் வரும்.

சூ. 291 : அவற்றின் வரூஉம் எண்ணின் இறுதியும்
பெயர்க்குரி மரபின் செவ்வெண் இறுதியும்
ஏயின் ஆகிய எண்ணின் இறுதியும்
யாவயின் வரினும் தொகையின் றியலா [42]

க-து : தொகை பெற்று வரும் எண்ணிடைச் சொற்கள் இவை என்கின்றது.

உரை : மேற்கூறிய எனா, என்றா என்பவற்றான் வரும் எண்ணின் இறுதியும் பெயர்க்கு உரியவாய் இம்மரபினான்

வரும் பெயர்ச்செவ்வெண் இறுதியும் ஏகார இடைச் சொல்லானாகிய எண்ணின் இறுதியும் எவ்விடத்து வரினும் அவை தொகையின்றி நடவா. தொகை பெற்றே முடியும் என்றவாறு. யாவயின் என்றது வழக்கும் செய்யுளுமாகிய இடங்களை.

எ-டு : "மாத்திரை எழுத்தியல் அசை வகை எனாஅ ... ... ... ... ஆறுதலையிட்ட அந்நாலைந்தும்" எனவும் உயர்திணை என்றா அஃறிணை என்றா ஆயிரெண்டென்ப திணைநிலை வகையே எனவும் படைகுடி கூழமைச்சு நட்பரணாறும் உடையா னரசருள் ஏறு எனவும் தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே ஈற்றசை இவ்வைந் தேகா ரம்மே எனவும் வரும்.

இனி "கண் கால் அகம்புறம்" (வேற்-20) என்னும் சூத்திரத்துள் எனா என்பதும், "ஒப்பும் உருவும்" (பொருளி-53) என்னும் சூத்திரத்துள் எனறா என்பதும். "நிலப்பெயர், குடிப்பெயர்" (பெய-11) என்னும் சூத்திரத்துள் ஏகாரமும் தொகைபெற்றிலவால் எனின்? அவைமுறையே, அன்னபிறவும் எனவும் - எல்லாம் எனவும் அனைத்தும் எனவும் தொகைப் பொருண்மைத்தாகிய சொற்களைக் கொண்டு முடிந்தமையான் தொகைபெற்றனவேயாம்.

மற்றுச், செல்லல் இன்னல் இன்னா மையே (உரி - 7) எனச் செவ்வெண் தொகை பெற்றிலதால் எனின் ? இன்னோரன்ன செய்யுள் விகாரத்தான் தொக்கன எனவே படும். என்னை ? "யாவயின் வரினும் தொகையின்றியலா" என ஆசிரியர் யாப்புறுத்தமையான் என்க.

சூ. 292 : உம்மை எண்ணின் உருபு தொகல் வரையார்

க-து : உம்மை என்னின்கண் வேற்றுமை உருபு தொக்கும் வருமென்றது.

உரை : எண்ணும்மயின்கண் வேற்றுமை உருபு தொக்கு வருதலை நீக்கார் ஆசிரியர்.

எ. டு : புலியும், வில்லும் கெண்டையும் நாட்டினான் எனவும் யானையும் குதிரையும் தேரும் எறிந்தான் எனவும் இசையினும் குறிபபினும் பண்பினும் தோன்றி எனவும் வரும். உருபெனப் பொதுப்படக் கூறினாராயினும் ஏற்புழிக்கோடல் என்பதனான் இரண்டாவதும் ஏழாவதுமே தொகுமெனக் கொள்க.

செவ்வெண்ணின்கண் உருபுதொக்குவருதல் "பிறிது பிறிதேற்றலும் உருபுதொக வருதலும்" (வேற்-மய-௨1) என்பதனாற் பெறப்பட்டமையின் "குன்றி கோபம் கொடிவிடு வளம்" என்றாற் போல்வனவற்றை ஈண்டு உதாரணமாகக் காட்டுதல் பொருந்தாதென்க.

பிறஎண்ணின்கண் உருபு தொகுதல் வரையப்படும் என்பது அறிவித்தற்கு இதனை வேற்றுமையியல்களுட் கூறாது ஈண்டுக் கூறினார் இடைச் சொல்லாதல் ஒற்றுமையான் என அறிக.

சூ 293 : உம் உந்தாகும் இடனுமா ருண்டே (44)

க-து: உம் ஈறுதிரிந்து நிற்கும் இடனுமுண்டு என்கின்றது.

உரை : வினைச்சொல்லிறுதியாய் நிற்கும் உம்மீறு உந்து என வடிவு திரிந்து நிற்கும் இடனும் உண்டு. உம்மை எதிர்மறை-ஆரும் ஏயும் அசைநிலை.

எ-டு : "நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து" -- "நாரரி நறவின் நாண் மகிழ்தூக்குந்து" - எனவரும்.

இவ்வும்மை வினைசெயல்மருங்கின் காலமொடு வரும் இடைச் சொல்லாகும். 'இடனுமாருண்டே' என்றதனான் திரியுமிடம் சிறுபான்மையாதல் புலப்படும். 'இவ் உம்மை செய்யும் என்னும் வாய்ப்பாட்டுப் பெயரெச்சத்தினது என்பது ஏற்புழிக் கோடலான் உணரப்படும்.

பொருள் வேறுபடாமல் வடிவுமட்டும் வேறுபடுதலின் "தம்மீறு திரிதலும்" என்னும் விதிபற்றி இடையியலுள் இதனை வைத்தார். எண்வகைப் பொருட்குறிப்பு ஏற்றுவரும் உம்மை இடைச்சொல் வேறு வினைசெயன்மருங்கிற் காலமொடு வரும் இவ்உம்மை இடைச்சொல் வேறெ‌ன அறிக.

சூ. 294: வினையொடு நிலையினும் எண்ணுநிலை திரியா
நினையல் வேண்டும் அவற்றவற் றியல்பே

க-து : எண்ணிடைச்சொற்கள் வினையொடும் வருமென்கின்றது.

உரை : எண்ணிடைச் சொற்கள் பெயரொடு வருதலேயன்றி வினைச்சொல்லொடு கூடி நிற்பினும் எண்ணுதலாகிய தம் இலக்கணத்திற்றிரியா, ஆண்டு அவ்வவற்றின் இயல்பினை ஆராய்ந்து கொள்ளுதல் வேண்டும்.

"நினையல் வேண்டும்" என்றதனான் ஏகார இடைச்சொல் வினையொடு வருதல் அரிது என்பதும், ஏனையவும் தெரிநிலை வினையுள் பெயரெச்சத்தினொடும் முற்றினொடும் நில்லா என்பதும் குறிப்பு வினையுள் முற்றொடு மட்டுமே வருமென்பதும். பெயரொடு வந்து தொகை பெறுவன வினையொடுவரின் தொகை பெறா என்பதும் பிறவும் சான்றோர் வழக்கு நோக்கிக் கொள்க.

எ. டு : உண்டும் தின்றும் பாடியும் மகிழ்ந்தான் - எனவும் உண்ணவெனத் தின்னவெனப் பாடவென வந்தான் எனவும் வளிநடந்தன்ன வாச்செலல் இவுளியொடு கொடிநுடங்கு மிசைய தேரினரெனாஅக் கடல் கண்டன்ன ஒண்படைத் தானையொடு மலைமாறு மலைக்கும் களிற்றின ரெனாஅ ........... வியத்தலோ இலமே (புறம் 197) எனவும் நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும் பேணாமை பேதை தொழில் (குறள் - 833) எனவும் வரும்.

சூ. 295 : என்றும் எனவும் ஒடுவுந் தோன்றி
ஒன்றுவழி உடைய எண்ணினுட் பிரிந்தே

க-து : இடையிட்டு வந்து ஒன்றி நிற்கும் எண்ணிடைச் சொற்கள் இவை என்கின்றது.

உரை : என்று-என-ஒடு என்னும் இவ் எண்ணிடைச் சொற்கள் ஒரோவோர் சொல்லின்கண் தோன்றி நின்று பிரிந்து பிற சொற்களொடும் பொருந்தி வரும் நெறியினை உடையவாம்.

எ. டு : இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் லென்று அனைத்தே செய்யுளீட்டச் சொலே (எச் - 1) எனவும் யாகா பிற பிறக்கு அரோ போ மாதென வரூஉம் ஆயேழ்சொல்லும் (இடை - 31) எனவும் பொருள் கருவி காலம் வினையிட னொடைந்தும் இருள்தீர எண்ணிச் செயல் (குறள் - 675) எனவும் வரும்.

ஒடு என்பதோ ரெண்ணிடைச்சொல் உண்டு என்பது ஆசிரியர் உடம்பொடு புணர்த்துக் கூறலாற் கொள்க.

சூ. 296 : அவ்வச் சொல்லிற் கவையவை பொருளென
மெய்பெறக் கிளந்த இயல வாயினும்
வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித்
திரிந்து வேறுபடினும் தெரிந்தனர் கொளலே

க-து : தத்தங்குறிப்பிற் பொருள் செய்வனவற்றிற்கு ஓதப்பெற்ற பொருளினின்று அவை ஒரோ வழி வேறுபட்டு வருமென்பதும் வேறு படுதற்குச் சார்பும் கூறுகின்றது.

உரை : மேற்கூறிய இடைச் சொற்கள், அவ்வச் சொற்கு அவையவை பொருளென அவ்வப்பொருள் கொள்ளுமாறு கிளந்து கூறப்பெற்ற இலக்கணத்தனவாயினும் ; அவையவை மூன்னும் பின்னும் வரும் வினைச்சொல்லொடும் பெயர்ச் சொல்லொடும் வைத்து ஆராய்ந்து உணருமாறு தோன்றித் திரிந்து வேறுபட்டு வரினும், அவ்வேறுபாட்டினைத் தெரிந்து பொருத்துமாறு அமைத்துக் கொள்க.

முன்னர்ப் "பெயரொடும் வினையொடும் நடைபெற்றியலும்" என்றது எல்லா இடைச்சொற்கும் அவை வரும் இடம் கூறும் முகத்தான் பொது விலக்கணம் கூறியவாறாம். ஈண்டு "வினையொடும் பெயரொடும் நினையத்தோன்றி" என்றது தத்தம் பொருளவாய் வரும் இடைச்சொற்கள் பல்வேறு பொருள் குறித்து நிற்பதற்குக் காரணங் கூறுமுகத்தான், தத்தம் பொருளவாய்வரும் இடைச்சொற்களுக்குப் புறனடை கூறிய வாறாம். அதனான் அவ்வேறுபாடு தோன்ற ஈண்டு வினை முற்கூறப்பட்டதென்க.

எ. டு : சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ" என ஓகாரம் ஈற்றசையாக வந்தது. "அதுமன் கொண்கன் தேரே" மன் அசைநிலையாக வந்தது. "ஊரெனப்படுவது உறையூர்" என என்பது சிறபபின்கண் வந்தது. "ஒக்கல் வாழ்க்கை தட்குமாகாலே" மா அசைநிலையாக வந்தது. "படர்ந் தோர்க்குக் கண்ணும்படுமோ என்றிசின் யானே" உம் அசை நிலையாக வந்தது. பிறவும் அவ்வாறு வருவனவற்றை ஓர்ந்தமைத்துக் கொள்க.

சூ. 297 : கிளந்த வல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே

க-து : இவ் இயலுக் காவதொரு புறனடை கூறுகின்றது.

உரை : மேற் கிளந்துகூறப்பெற்றவையன்றி வேறுபிறவாக இடைச் சொற்கள் தோன்றிவரினும் மேற்கூறப்பெற்ற இலக்கண நெறியான் அவற்றைத் தெரிந்தமைத்துக்கொள்க.

கிளந்த இயல்பாவது, பெயரொடும் வினையொடும் நடை பெற்றியலுதலும், வினையொடும் பெயரொடும் நினையத்

தோன்றித் திரிந்து வேறுபடவருதலுமாம். அவ்வாற்றான் அவை வருமிடமும் சார்பும், கூறுவோன் குறிப்பும் பற்றி, இவை புணரியலுக்குதவ வந்தன - இவை பால் காட்டவும் - இவை உருபின் பொருட்டாயும் - இவை காலங்குறித்தும் வந்தன. இவை அசை நிலையாயும் இவை இசை நிறையாயும், இவை தத்தம் பொருளவாயும் வந்தன என அறிக என்றவாறு. ஒப்பில் வழியாற் பொருள் செய்வன உவமவியலுள் பெறப்படும்.

எ-டு: "சொல்லென் தெய்ய நின்னொடு பெயர்ந்தே" "சிறிதுதவிர்ந் தீகமாள நின் பரிசிலர் உய்ம்மார்" "அறிவார் யாரஃதிறுவுழி இறுகென" "பணியுமாம் என்றும் பெருமை" "ஈங்காகுநவால் என்றிசின் யானே" "செலீஇயர் அத்தைநின் வெகுளி" "செய்வினை மருங்கின் செலவயர்ந் தியாழநின் கைம்முனை வல்வில் ஞாணுளர் தீயே" என இங்ஙனம் வந்தன வற்றுள், தெய்ய - மாள - என - ஆம் - ஆல் - ஒரும் - அத்தை - யாழ என்பவை அசைநிலையாய் வந்தன.

"குன்றுதொறாடலும் நின்றதன்பண்பே" எனத் தொறு என்பது சார்ந்த பொருளைப் பன்மைப்படுத்து நின்றது. "அஆ இழந்தானென் றெண்ணப்படும்" என ஆகாரம் இரக்கக் குறிப்புணர்த்தி நின்றது, இவ் ஆகாரம் "ஆ! இஃதறிந்தவாறு" என வியப்புணர்த்தியும் வரும். பொள்ளென ஆங்கேபுறம் வேரார்" இதன் கண் என என்பது விரைவுணர்த்தி நின்றது. "கொம்மென" என்பது பெருக்கங் குறித்து நின்றது. எப்பொருளாயினும்" எனவும் "எவ்வயிற்பெயரும்" எனவும் வருமிடங்களுள் எகரம் எஞ்சாமைக் குறிப்புணர்த்தி நின்றது. எக்கடல், எவ்வீடு, எந்நூல் என்னுமிடத்து எகரம் வினாப் பொருள் குறித்து நின்றது.

பிறவும் இவ்வாறு சான்றோர் வழக்கினுள் வருவனவற்றை எல்லாம் ஓர்ந்து அமைத்துக் கொள்க.

இடையியல் முற்றியது

## 8. உரியியல்

உரிச்சொல்லின் இயல்பாமாறு கூறுதலின் இவ்வியல் உரியியல் என்னும் பெயர்த்தாயிற்று. பெயராதற்கும் வினையாதற்கும் உரியதாகலின் உரிச்சொல் எனப்பெற்றது. உரிச்சொல் - உரியதாகிய சொல் என விரியும்.

ஒருசொல் இருதிணைப் பொருளுள் ஒன்றை இடமாகக் கொண்டு தோன்றுங்கால் அப்பொருள்பற்றி உள்ளத்தின்கண் நிகழும் குறிப்பும் புலன்களினிடமாக நிகழும் இசையும் பண்பும் ஆகியவற்றின் அடிப்படையில் வடிவு நிரம்பாமல் உயிரீறாகவோ புள்ளியீறாகவோ முகிழ்த்து ஒருநெறிப்பட வாராமல் குறையாக நிற்கும் நிலையே உரிச்சொல்லின் அடிப்படை நிலையாகும். இதனை ஆசிரியர் 'உயிரும் புள்ளியும் இறுதியாகிக் குறிப்பினும் பண்பினும் இசையினும் தோன்றி நெறிப்பட வாராக்குறைச் சொற்கிளவி' (எழுத் - 482) எனக்கூறுமாற்றான் அறியலாம். குறைச்சொல்லாவது நிரம்பா உரிச்சொல்.

இசை என்பது செவிப்புலனுக்குரியது. ஏனைய மெய்வாய் கண்மூக்கு ஆகியவற்றிற்குரிய உணர்வுகள் பண்பு என அடங்கும். மொழி என்பது செவிப்புலனுக்குரிய பொருளாகலின் அச்சிறப்பு நோக்கி இசை பிரித்துணர்த்தப்பட்டது.

அக் குறைச்சொற்கள், பெயர்ச்சொல், வினைச்சொற்களுக்கு முதனிலையாதற்கேற்ற எழுத்தொடு கூடிப் பொருள் தருதற்கு ஏற்ப நிற்கும்நிலை நிரம்பிய உரிச்சொல்லாகும். இதனைப் பகுதி என்றும் முதனிலை என்றும் கூறுவர். அங்ஙனம் உருப் பெற்று நிரம்பிய சொற்கள் இசை, குறிப்பு, பண்பு என்பனவற்றுள் ஏற்புடையவற்றைச் சார்ந்து பால் காட்டும் இடைச்சொற்களொடு கூடிப் பெயர்ச் சொல்லாயும், பாலொடு காலங்காட்டும் உறுப்புக் களொடு கூடி வினைச்சொல்லாயும் முழுமை பெறும். பால் முதலியவற்றைக் காட்டும் உறுப்புக்களொடு கூடாத வழி அவை பெயரினும் வினையினும் தன்வடிவு (உருபு) தடுமாறுதற்குரிய வாய்ப் பொதுப்பட நிற்கும். அந்நிலைமைக்கண் ஓர் உரிச் சொல் பலபொருட்கும், பல உரிச்சொற்கள் ஒரு பொருட்கும் உரிமை தோன்ற நிற்கும்.

இவ்வியல்புகளை, 'பன்முறையானும் பரந்தன வருஉம் உரிச்சொல் எல்லாம் பொருட்குறை கூட்ட இயன்ற மருங்கின்' ..................(உரி-100) எனவும் உரிச்சொற்கிளவி விரிக்குங் காலை இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப் பெயரினும் வினையினும் மெய்தடுமாறி ஒருசொல் பலபொருட்குரிமை தோன்றினும் பலசொல் ஒரு பொருட்குரிமை தோன்றினும் (உரி-1) எனவும் ஆசிரியர் கூறுமாற்றான் அறியலாம்.

குறைச்சொற்களவிகள் பொருட் குறைகூட்ட இயன்ற மருங்கின் (உரி-100, உருப்பெற்று எழுவாய கி வேற்றுமை யுருபுகளை ஏற்கும் நிலைமைக்கண் வினைப்பெயர்களாம்,

வேற்றுமைகோடற்கும் காலங்காட்டற்கும் இயலாமல் திரிபுற்றுப் பெயர்ப்போலியாயும் வினைப்போலியாயும் நிற்கும் நிலைமைக் கண் அவைஉ ரிச்சொற்கள் எனப்படும்.

எ-டு : "உற்" என்னும் குறைச்சொல் உறு-உற என நிற்றல் நிரம்பிய நிலையாம். உறவு உறவை உறவொடு உறவுக்கு எனவரின் பெயராம். உற்ற, உற்று - உறல், உறுதல் எனவரின் வினையாம். உறுபொருள், உறுகால் எனஅடையாகவரின் உரிச்சொல்லாம். பிறவிளக்கங்களைப் பின்னர்க்காண்க.

வேற்றுமை கோடற்கும் காலங்காட்டற்கும் இயலாமல் திரிந்து நிற்கும் நிலைமைக்கண் அவை பெயரையும் வினையை யும் சார்ந்து தம் பொருள் உணர்த்தியும், பெயர்வினைகளின் மருங்காகவந்து அவற்றின் பொருளைச் சிறப்பித்தும் நிற்கும். இதனை ஆசிரியர் :- 'இடைச் சொற்கிளவியும் உரிச்சொற் கிளவியும் அவற்றுவழி மருங்கிற்றோன்றும் என்ப' (பெய - 5) 'உரிச்சொன்மருங்கினும் உரியவை உரிய' (எச் - 60) எனக் கூறுமாற்றான் அறியலாம். அங்ஙனம் தனித்துத் தம்பொருள் உணர்த்தி வருங்கால் அவை பெயரை ஒத்தும் வினையை ஒத்தும் நிற்கும். அவற்றை உரையாசிரியன்மார் பெயர்ப்போலி எனவும் வினைப்போலி எனவும் குறிப்பிட்டு வழங்குவர்.

பெயர்வினைகளைச் சிறப்பித்து அவற்றிற்கு அடையாக வருங்கால் பெரும்பான்மையும் பண்புணர்த்தும் சொற்களே வரும், சிறுபான்மை ஏனையவும் வரும்.

இனி "உயிரும் புள்ளியும் இறுதியாகி நெறிப்படவாராக் குறைச் சொற்கிளவி"களுள் உயிரீறாக வருவன ஓரெழுத்துச் சொல்லாகவே முகிழ்த்து நிற்கும், ஆதலின் பொருட் குறை நிரப்பப் பிற எழுத்துக்களைக் கூட்டும் நிலை பெரும்பான்மையும் அவற்றிற்கின்மையான் நெறிப்பட வாராமை ஒன்றே அவற்றிற்கு இலக்கணமாகச் செல்லும். புள்ளியீற்றுச் சொற்கள் ஓரெழுத்துச் சொல்லாக வருதற்கு ஏலாமையான் அவை ஈரெழுத்து முதலாக வந்து பொருட்குறை கூட்டத்தக்க பிற எழுத்துக்களொடு கூடி நிரம்பி நிற்கும். இவற்றுள்ளும் ஒருசாரன பிற எழுத்தொடு கூடாமல் தாம் தோன்றிய நிலையானே பொருள் நிரம்பி நிற்கும். ஓரெழுத்துச் சொல்லாய் நிரம்பி வரும் ஆ, ஈ, ஊ, நீ கா வீ என்பன போன்ற உயிரீற்றுச் சொற்களின் பொருள் தெற்றெனப் புலப்படுமாறு போல உற் - கட் - பச் எனக் குறைச் சொல்லாக நிற்கும் புள்ளியீற்றுச் சொற்களின் பொருட்காரணங்கள் தெற்றெனப் புலப்பட நில்லா ; எனினும் எல்லாச் சொற்களும்

வரலாற்று முறைமையான் பொருட்காரண முடையனவேயாகும். இதனை ஆசிரியர் 'மொழிப் பொருட்காரணம் விழிப்பத் தோன்றா' (உரி - 96) எனக் கூறுமாற்றான் உணரலாம். வெளிப்படையாகத் தோன்றா என்றதனான் ஆழ்ந்து நோக்கின் தோன்றும் என்பது ஆசிரியர் கருத்தாதலையும் அறியலாம்.

அடிச்சொற்களாக நிற்கும் புள்ளியீற்றுச் சொற்கள் ஏற்புடைய பிற எழுத்துக்களொடு கூடி நிரம்பி நிற்பனவாயினும் அங்ஙனம் கூட்டப்பெற்ற எழுத்துக்களைப் பிரித்து அவற்றை முதனிலை இறுதிநிலைகளாக வைத்துப் புணர்த்தல் உரிச் சொற்களின்மாட்டு மரபாகாது. இதனை ஆசிரியர் "எழுத்துப் பிரிந்திசைத்தல் இவணியல் பின்றே" (உரி-97 ) எனக் கூறுமாற்றான் அறியலாம். உரிச்சொற்கு இங்ஙனம் இலக்கணம் கூறியவதனான் பெயர்ச்சொல் வினைச்சொற்களை ஏற்றபெற்றி பிரித்துக்காணலாம் என்பது 'சொல்வரைந்தறியப் பிரித்தனர் காட்டல்' (எச்ச.67) "இருதிணை மருங்கின் ஐம்பாலறிய ஈற்றிலின் றிசைக்கும் பதினோரெழுத்தும்" என்றவற்றான் உணரலாம். அவற்றைப் பிரித்துணரலாம் என்றதன்றி நிலைமொழி வருமொழியாக வைத்துப் புணர்ச்சி விதி நோக்குதல் கூடாது. இதனை 'அன்னவையெல்லாம் மருவின் பாத்திய புணரியல் நிலையிடை உணரத்தோன்றா' (எழுத்482) என்பதனான் அறியலாம்.

ஆசிரியர் இவ்வியலுள் உரிச்சொற்களின் ஒருசார் பொது விலக்கணமும் ஒருசொல் பலபொருட்கும் பலசொல் ஒரு பொருட்கும் உரிமையாய்த், தனித்தும், பெயர் வினைகட்கு அடையாயும் வருவன பற்றிய இலக்கணமும் உணர்த்துவார். சிறுபான்மை ஒவ்வோரெழுத்து வேறுபாட்டினான் பொருள் வேறு பட்டுவரும் உரிச் சொற்களுள் சிலவற்றையும், வழக்குப் பயிற்சி குறைவான சில முதனிலை உரிச்சொற்களையும் தெளிவு கருதி, எடுத்துக்காட்டாக உடன் கூறுகின்றார்.

உரிச்சொற்களின்மாட்டு அமைந்து நிற்கும் மேற்கூறிய இலக்கணங்களைப் பின்வரும் எடுத்துக்காட்டு விளக்கங்கள் புலப்படுத்தும்.

**எ-டு :** ஆ என்னும் ஓரெழுத்துச் சொல், குறிப்படியாகத் தோன்றிப் பெற்றத்தை உணர்த்திப் பொருட் பெயராய் நின்றது. அதுவே மெய் தடுமாறி முதனிலையாக(ஆகு) ஏவலாயும் - தல் என்னும் இறுதியொடு கூடி வினைப்பெயராயும் இன்-ஆன் என்னும்காலஇடைநிலை, இறுதிநிலைகளொடு கூடி ஆயினான்

என வினைச்சொல்லாயும், ஆ ! இனி என் செய்யும், என இரங்கற் குறிப்புணர்த்தி இடைச் சொல்லாயும் நின்றது.

'கா' என்னும் ஓரெழுத்து உயிரீற்றுச் சொல், குறிப்படியாகத் தோன்றிச், சோலையையும், காவுதடியையும் உணர்த்திப் பொருட் பெயராயும், உகர இறுதியொடு கூடியும் கூடாதும் ஏவல் வினையாயும், த்தல் என்பதனொடுகூடி தொழில் பெயராயும், த் ஆன் என்பவற்றொடுகூடிக் காத்தான் என வினைச் சொல்லாயும் நின்றது.

'மா' என்னும் ஓரெழுத்து உயிரீற்றுச்சொல் பண்படியாகத் தோன்றி மாமரத்தையும் குதிரையையும், பெருமையையும் நிறத்தையும் ; இசையடியாகத் தோன்றி விலங்கையும், வண்டினையும் ; குறிப்படியாகத் தோன்றித் திருமகளையும் உணர்த்திப் பொருட்பெயராய் நின்றது. உப்பின்றுபுற்கை உண்க மா என இடைச்சொல்லாயும் நின்றது. இதனடியாக வினைச்சொல் தோன்றுமேற் கண்டுகொள்க.

'ஆர்' என்னும் புள்ளியீற்றுச் சொல் குறிப்படியாகத் தோன்றி ஆத்திமரத்தையும், கொன்றையையும் வண்டிச்சக்கரத்தின் உறுப்பினையும், அம் என்னும் இறுதியொடு கூடிச் சாந்த மரத்தையும் உணர்த்திப் பொருட் பெயராய் நின்றது. தல் என்பது சேரத் தொழிற் பெயராயும், க என்பது சேர வியங்கோள் வினையாயும்; 'ந்த் ஆன்' என்னும் இடைநிலை இறுதி நிலைகளொடு சேர வினை முற்றாயும் நின்றது.

இஃது பண்படியாகத் தோன்றுங்கால் ஆர்வம், ஆர்வலர் என்பவற்றிற்கு முதனிலையாயும் ஆராய்வு என்னுமிடத்துப் பெயரடையாயும், இசையடியாகத் தோன்றுங்கால் ஆர்த்தான் ஆரித்தான் என்பவற்றிற்கு முதனிலையாயும் ஆரவாரம் என்னுமிடத்துப் பெயரடையாயும் நின்றது. இதுவே நெறிப்பட வாராமல் அல் என்பதனொடு கூடி 'ஆரல்' என நின்று கார்த்திகை மீனைக் குறித்துப் பெயராயும், சேந்தனார், செல்லுமார் முதலே' என இடைச்சொல்லாயும் நின்றது.

'வள்' என்னும் நெறிப்படவாராக் குறைச்சொல், குறிப்படியாகத் தோன்றிப் பொருட்குறை எழுத்துக் கூட்ட, வளி-வளம், வளார், வள்ளம், வள்ளி வள்ளை, வளவன் என்னும் பெயர்ச் சொற்களின் அடிநிலையாயும், வளை, வளைவு, வளைதல், வளர், வளர்க, வளர்ந்தான், வளர்த்தான் என்னும் வினைச் சொற்களின் அடிநிலையாயும் வள்வார் முரசு எனப் பெயரடை

யாயும் வள்வள் எனக் குரைத்தது என்புழிக் குறிப்பிடைச் சொல்லாயும் வட்டு, வட்டம், என்பவற்றிற்கு மூலமாயும் நின்றது.

உரு (உர் + உ - உரு) என்னும் நிறையுரிச் சொல் குறிப்படியாகத் தோன்றிப் பெயராயும், உருபு, உருவம் என்பவற்றிற்கு முதனிலையாயும், உருத்தான், உருத்து என்னும் வினைகட்கு முதனிலையாயும், உருகெழு கடவுள் எனப் பெயரடையாயும், உருவம் எனப் பெயர் முதலாயும் நின்றது.

'சால்' என்னும் சொல் குறிப்படியாகத் தோன்றிப் (மிடா) பொருட் பெயராயும்; சால்பு, சான்றோன், சான்று எனப் பெயர்க்கு முதனிலையாயும்; சாலும், சான்றான், என வினைக்கு முதனிலையாயும், சாலச்சிறந்தான் என வினையடையாயும் நின்றது.

'பரவ்' --'பழிச்' என்பவை உகரம் பெற்று நிரம்பிப், பரவு, பழிச்சு, என ஏவலாயும், பரவல், பழிச்சல் எனத் தொழிற் பெயராயும் பரவினான், பழிச்சினான் என வினைக்குமுதல் நிலையாயும் நின்றன. பரவு என்பது பராவு எனத் திரிந்தும் வரும். பரவு, பழிச்சு என்புழி இறுதிநிலை உகர எழுத்துப்பிரித்திசையாமையும் கண்டு கொள்க. பரவை (கடல்) என்பதற்கும் பரப்பு (நிலம்) என்பதற்கும் முதனிலை 'பர' என்பதாகும் பரப்பினான் என்னும் வினைக்கும் பர என்பதே முதனிலையாம். இவ்வாறே ஏனையவற்றையும் ''வழிநனி கடைப்பிடித்துப் பாங்குற உணர்ந்து'' கொள்க.

சூ. 298 : உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப்
பெயரினும் வினையினும் மெய்தடு மாறி
ஒருசொல் பலபொருட்கு உரிமை தோன்றினும்
பலசொல் ஒருபொருட்கு உரிமை தோன்றினும்
பயிலாத வற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்தம் மரபின் சென்றுநிலை மருங்கின்
எச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல்

க-து : ''பொருட்குறை கூட்ட இயன்ற மருங்கின் - பன்முறையானும் பரந்துபட்டு வரும் உரிச்சொல்லெல்லாம் இனைத்தென அறியும் வரம்பு தமக்கின்மையின் ஒம்படையாணையிற் கிளந்தவற்றியலான் பாங்குற உணர்ந்து.'' அவற்றின் பொருளுணர்த்துமாறு கூறுமுகத்தான் உரிச்சொற்களுக்காவதொரு பொது விலக்கணம் உணர்த்துகின்றது.

**உரை :** நால்வகைச் சொற்களுள் உரிச்சொற்களை விரித்துணர்த்துமிடத்து இசையும் குறிப்பும் பண்பும் ஆகிய பொருண்மைக்கண் முகிழ்த்துப், பெயரின் கண்ணும் வினையின் கண்ணும் தம்வடிவு தடுமாறி ஒருசொல் பலபொருட்கு உரிமையுடையதாய்த் தோன்றுதற்கண்ணும் பலசொல் ஒருபொருட்கு உரிமையுடையவாய்த் தோன்றுதற்கண்ணும், தத்தம் மரபொடு வந்து தனித்தும் பெயர் வினைகட்கு அடையாயும் நிலை பெறுமிடத்து அவை எச்சொல்லாயினும் வழக்கின்கண் பயின்று வாராத சொற்களைப் பயின்ற சொற்களொடு சார்த்திப் பொருள் வேறுபாடு தெரியுமாறுகிளந்து கூறுக.

"உயிரும் புள்ளியும் இறுதியாகிக் குறிப்பினும் பண்பினும் இசையினும் தோன்றி" (எழுத்து-482) என எழுத்ததிகாரத்துட் கூறியது நெறிப்படவாராக் குறைச்சொற் கிளவிக்குரிய இலக்கணமாம். ஈண்டுக் 'கூறியது பொருட்குறை கூட்ட இயன்ற மருங்கின்' (உரிச் - 98) நிரம்பி நிற்கும் உரிச்சொற்கிளவிக்குரிய இலக்கணமாம். ஆண்டுப் பொருளுணர்ச்சிக்கு அடிப்படையாகிய குறிப்பினை முற்கூறியதும், ஈண்டுச் சொல்லுணர்ச்சிக்கு அடிப்படையாகிய இசையினை முற்கூறியதும் அக்கருத்தானேயாகும். ஆதலின் கூறியது கூறிற்றாகாமை அறிக. இதன்பயன், ஆண்டுக்கூறிய குறைச்சொற் கிளவிகளே பிற எழுத்துக்களொடு கூடி உரிச்சொற்களாக முற்றி வரும் என உணர்த்துதலாகும்.

பெயரினும் வினையினும் மெய்தடுமாறும் என்றது, பெயரியலுள் அவற்றுவழி மருங்கிற்றோன்றும் (பெய-5.) எனப் பொதுப்படக்கூறிய இலக்கணம் உரிச்சொற்கண் இவ்வாறு அமையும் என அதனை விளக்கியவாறாம். மெய்தடுமாறல், இசை குறிப்பு பண்பு ஆகியவற்றிற்கும் ஒக்கும்.

ஈண்டு "தத்தம் மரபின் சென்று நிலை மருங்கின் எச்சொல்லாயினும்" என்றது, பெயர் வினைகட்கு முதனிலையாக வருபவை பெயர்ச்சொல்லாகவும் வினைச்சொல்லாகவும் வேறு பிரிந்து சென்றுவிடுதலின், தனித்தும், பெயர்வினைகட்கு அடையாயும் நிற்கும் உரிச்சொற்களையேயாம். உரிச்சொற்கள் பெயர்வினைகட்கு முதனிலையாயும் பெயர் போலவும் வினை போலவும், தனித்தும், அவற்றிற்கு அடையாயும் வந்து, இயற்சொல் முதலாய நால்வகைச் சொற்களாக நிற்குமாதலின் "எச்சொல்லாயினும்" எனக் கூறினார்.

ஒருசொல் பலபொருளையும் பல சொல் ஒரு பொருளையும் குறித்து வரும்திரிசொல் இலக்கணம், பெயர், வினை, இடை, உரி

என்னும் நால்வகைச் சொற்கும் பொதுவாகும். திரிசொற்கள் வேறுபடுவினையானும் இனத்தானும் சார்பானும் தம்பொருளை வரையறுத்துணர்த்தும் ஆதலின் அது தொடர் மொழிக்கண் எய்தும் இலக்கணமாகும். அதனான் பலபொருளொரு சொல் லாகிய அவற்றைப்பற்றிக் கிளவியாக்கத்துட் கூறினார், ஈண்டுக் கூறும் "ஒருசொல் பல பொருட்குரிமை தோன்றினும், பலசொல் ஒரு பொருட்குரிமை தோன்றினும்" என்பது உயிரும் புள்ளியும் இறுதியாகிப் பொருட்குறை கூட்ட நிரம்பிப் பெயரினும் வினையினும் மெய்தடுமாறி வரும் நிலைமைக்கண் அம்முதனிலைத் தனிச் சொற்கள் எய்தும் இலக்கணமாம் என்க.

அஃதாவது குறைச்சொல்லாகத் தோன்றிய ஓர் உரியடிச் சொல், பெயராகவும், வினையாகவும், தனித்தும், பெயர் வினைகட்கு அடையாகவும் உருப்பெற்று நிரம்பிப், பொருட் குரிமையாகும் சொல் நிலைமையாம். அதனான் பொருள்குறித்து வருதல் வேறு பொருட்குரிமையாதல் வேறு ஆதலின் பொருட் குரிமையாதலையே உரிச்சொற்குரிய இலக்கணமாக ஓதினார் ஆசிரியர் என்க.

**வரலாறு :** உறு என்னும் இவ் உரிச்சொல் குறிப்பு அடிப்படையாக முகிழ்த்த 'உற்' என்னும் குறைச்சொல் உகர எழுத்துப் பெற்று நிரம்பி, மிகுதி என்னும் பொருள் பட நிற்கும். அஃது உறுபுனல் - உறுவளி, எனப் பெயரடையாய் வரும்.

இனி, இவ் 'உற்' என்பது உறுதுணை - உறுவ - உறுதி உறுகண் - உறுப்பு - உறவு - உறுதல், உறீ, உறீஇ - உறை என வேறுவேறு எழுத்துப் பெற்றும், உற்று-உற்றார், உற்ற என இரட்டித்தும், உறற்க எனப் பிறிதேற்றும் வருங்கால் பெயர்க்கும் வினைக்கும் முதனிலையாய் நின்று பல்வேறு பொருட்கு உரிமை பூண்டு நிற்கும். இங்ஙனம் உறு என்பது, பெயர் - வினைகட்கு முதனிலையாய் நிற்குங்கால் பொருந்துதல் - அடைதல், செல்லுதல், சேர்தல், மோதுதல், வருந்துதல் முதலாய பொருள்களையும் - உரிச்சொல்லாகிப் பெயரடையாக நிற்குங்கால் 'மிகுதி' என்னும் ஒரே பொருளையும் தந்து நிற்றல் காண்க. மற்றும் உரிச்சொல்லாக நிற்குங்கால் முதனிலையின் பொருள் வேறுபட்டு நிற்றலையும் காண்க.

'தட' என்னும் உரிச்சொல், 'தட்' என்னும் குறைச்சொல்லடி யாகப் பிறந்ததாகும். இது தடந்தோள் தடமருப்பெருமை என உரிச்சொல்லாய் நிற்குங்கால் பெருமை-வளைவு என்னும் பொருள்களை உணர்த்தி அடையாக நிற்கும். இது தடம், தடா,

தடி., தடு (தடுமாற்றம்) என வேறு எழுத்துக்களைப் பெற்றுப் பெயராகவும் தடவு, தடவி, தடவும்-தடி, தடிந்தான் தடித்தான், தடிக என வேறு எழுத்துப்பெற்று வினையாகவும், தட்டு. தட்டி எனப்பெயர் வினைகட்குப் பொதுவாகவும் தடதட எனக்குறிப் பிடைச் சொல்லாகவும் நிற்குமாறு கண்டு கொள்க.

இங்ஙனம் உரிச்சொற்கள் பல்வேறு நிலைகளாக வருதலின், "இனைத்தென அறியும் வரம்பு தமக்கின்மையின்" என்றும் "ஓம்படையாணையிற் கிளந்தவற்றியலான் பாங்குற உணர்தல்" (உரி - 98) என்றும், "எச்சொல்லாயினும் பொருள் வேறு கிளத்தல்" (உரி - 1) என்றும் கூறினார் என்க.

சூ. 299 : வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா உரிச்சொல் மேன (2)

க-து : "எச்சொல்லாயினும் பொருள்வேறு கிளத்தல்" என்றதனான் எல்லாச் சொற்களும் கிளந்து கூறப்படல் வேண்டுமென மேல்நின்ற விதிக்கு ஒரு புறனடை கூறுகின்றது.

பொருள் : பன்முறையானும் பரந்துபட்டு வரும் உரிச் சொற்களுள் திரிபின்றிப் பொருள் தருபவை கிளத்தல் வேண்டாதன ஆதலின், கிளத்தல், வெளிப்பட வாரா உரிச்சொற்களின் மேலனவாம். அவையாவன : உரிச்சொற்களுள் பெயர் வினைகட்கு முதனிலையாகவரினும் தனித்துவரினும் பொருள் வேறுபடாமல் வருபவை வெளிப்படு சொற்களாம். பெயர் வினைகட்கு முதனிலையாக வருங்கால் ஒரு பொருளும், தனித்து வருங்கால் ஒரு பொருளும், தந்து திரிவுபடுபவை வெளிப்பட வாராத சொற்களாம்.

எ-டு : 'கொள்' என்பது குறிப்படியாகத் தோன்றியதொரு நிரம்பிய உரிச்சொல், இதன்பொருள் ஏற்றல், அகப்படுத்தல், இது கொள்கை - கொள்ளல், கொள்ளி, கொள்ளை, கொளு முதலிய பெயர்கட்கும் கொண்டான், கொள்ளான் முதலியவினைகட்கும் முதனிலையாய் நிற்றற்கண்ணும், குறிக்கோள் மாறு கோள் கோள்வல்லார் எனத்தனித்து நிற்றற்கண்ணும்ஒத்த பொருளே தருதலின் இன்னோரன்ன வெளிப்படு சொற்களாம்.

உற் (உறு) என்பது குறிப்பு அடிப்படையாகத் தோன்றிய தொரு குறைச்சொற் கிளவி. அஃது உகர முதலிய எழுத்துப் பெற்று நிரம்பி உறுதி உறுவர் உறவு என்னும் பெயர்கட்கு முதனிலையாக நிற்றற்கண் அடைதல் என்னும் பொருளும், உறுகண் என்புழித்

துன்பம் என்னும் பொருளும், உற்றான்-உற்று-உற உறுக என்னும் வினைகட்கு முதனிலையாக நிற்றற்கண் பொருந்துதல் கூடுதல் அடைதல் என்னும் பொருள்களையும் தந்து நின்றது. இச்சொல் தனித்துப் பெயர்கட்கு அடையாய் வருமிடத்து உறுகால் உறுபுனல் என மிகுதிப் பொருள் தந்து நின்றது. ஆதலின் இன்னோரன்ன வெளிப்பட வாராத சொற்களாம்.

ஆசிரியர் இவ்வியலின்கண் பெரும்பான்மையும் தனித்தும் பெயர் வினைகட்கு அடையாயும் வருவனவற்றுள் வெளிப்பட வாராத சிலவற்றை எடுத்துக்காட்டாகக் கூறி உரிச்சொல்லின் இயல்புகளைப் புலப்படுத்துகின்றார். ஒருசில வெளிப்படு சொற்களையும் ஒரோவோர் பயன் கருதிக் கூறுகின்றார். அவை பற்றி ஆண்டாண்டு விளக்கப்பெறும்.

இங்ஙனம் தனித்தும் பெயர்வினைகட்கு அடையாயும் வருதற்கண் உரிச்சொல் என்பதொரு வகைப்பட்டு நிற்கும் கிளவிகள், பொருள் வேறுபட்டு நிற்றல் முதலாய இயல்புகளை விளக்கச் சில சொற்களை ஆசிரியர் விதந்தெடுத்துச் சூத்திரஞ் செய்து உணர்த்துதலை ஓராத இடைக்கால நூலாசிரியன்மாரும் உரையாசிரியன்மாரும் அச்சூத்திரங்கள் அருஞ்சொற் பொருள் விளக்குவனவாகவும், இசை குறிப்பு பண்பு என்னும் பகுபாட்டிற்கு எடுத்துக் காட்டாக வந்தனவாகவும் கூறிச் சென்றனர். இக்கால ஆய்வறிஞர் பலர் அவ்வாறே கருதி அகராதி அமைப்பிற்குத் தொல்காப்பியரே முதற்கண் அடிகோலியவர் என்பர். இங்ஙனம் தமிழ் மொழியின் நுண்மை சான்ற இலக்கணங்கள் பல காலத்தான் திசைமாறியுள்ளமையை ஓர்ந்து உண்மை தேறுதல் மாணாக்கர் கடனாகும்.

**சூ. 300 :** அவைதாம்
உறுதவ நனியென வருஉம் மூன்றும்
மிகுதி செய்யும் பொருள என்ப (3)

**குறிப்பு:** 'அவைதாம்' என்றது வெளிப்படவாரா உரிச்சொற்களைச் சுட்டி அதிகாரச் சூத்திரமாய் நின்றது. (தெய்வச்சிலையார் உரையுள் இக் கூன்காணம்பெறவில்லை)

**உரை :** உறுதவநனி எனக் குறிப்புரிச் சொல்லாக வரும் மூன்றும் மிகுதியை உணர்த்தும் பொருளின எனக் கூறுவர்

**எ-டு :** உறுகால் ஒற்ற ஒல்கி ஆம்பல் (நற்-300) எனவும் ஈயாது வீயும் உயிர்தவப் பலவே (புறம்-236) எனவும், வந்துநனி

வருந்தினைவாழியென் நெஞ்சே (அகம்-19) எனவும் வரும். இவை மூன்றும் தனித்து வினைப் போலியாக வரும். 'உறு' பற்றிய விளக்கம் மேற்கூறப் பெற்றது. தவ என்பது தவம், தவல் எனப் பிற எழுத்துப் பெற்றன்றிப் பெயர்வினைகட்கு முதனிலையாக வாராது. 'நனி' என்பது நன் என்னும் குறைச்சொல் இகரம் பெற்று நிரம்பியதாகும். இது நன, நனை எனப்பிற எழுத்துப்பெற்றன்றிப்பெயர் வினைகட்கு முதனிலையாகவராது. நல் என்னும் பண்பு உரிச்சொலடி வேறு இதுவேறென்றறிக. இவை மூன்றும் மிகுதிப்பொருள்பற்றித் தனித்து வரும் உரிச் சொற்கள் என்பது புலனாகும்.

**சூ. 301 :** உருவுட் காகும் - புரையுயர் பாகும் (4)

**குறிப்பு:** இதனை இரண்டுசூத்திரமாகக் கோடலே நூல் நெறிக்கொத்தது.

**உரை :** உரு என்னும் குறிப்புரிச் சொல் அச்சம் என்னும் பொருட்கு ஆகிவரும். புரை என்னும் குறிப்புரிச்சொல் உயர்தல் என்னும் பொருட்கு ஆகிவரும்.

**எ-டு :** உருகெழு கடவுள், (உர் + உ = உரு) உருவம், உருத்தல், உருப்பம், உருத்தான் உருகு என்னும் பெயர் வினைகட்கு முதனிலையாகி வரும் 'உரு' என்னும் உரிச்சொல், வடிவு சினவு மெலிவு முதலிய பொருள்தருதலின் இது அவற்றின் வேறாய்த் தனித்துவரும் உரிச்சொல், இது பெயர்ப்போலியாக வரும். புரையமன்ற புரையோர் கேண்மை (நற்-1) எனவரும். ஒத்தல், பழுது, குற்றம் குடில் என்பவற்றிற்கு முதனிலையாக வரும் புரை என்பது வேறு இதுவேறு. இது வினைப் போலியாய்த் தனித்து வரும் உரிச்சொல்.

**சூ. 302 :** குருவும் கேழும் நிறனாகும்மே (5)

**குறிப்பு:** "குருவும் கெழுவும்" என்பது உரையாளர் கொண்ட பாடம்,

**உரை :** குரு - கேழ், என்னும் இவ்இருபண்புரிச் சொற்களும் நிறம் என்னும் பொருட்காகி வரும்.

**எ-டு :** குருமணித்தாலி எனவும் நறுஞ்சாந்தணிந்த கேழ்கிளர் அகலம் (அகம் - 26) எனவும் வரும்-

"கெழு" என்பது கெழுதகை - கெழுமிய, கெழுமும், கல்கெழு நாடன், என்றாற்போல வினை முதனிலையாகவன்றி நிறம் என்னும் பொருட்டாய் வராமையின் 'கெழு' என்னும் பாடம்

ஏடெழுதுவோரான் நேர்ந்த பிழையாதல் தெளியலாம். உரையாசிரியன்மார் கெழு என்பது 'கேழ்' என நீண்டுவருமென அமைதி கூறினர். நிறப்பொருளில் நீளாது வருமிடம் ஒன்றேனும் இன்மையின் அது பொருந்தாமையறிக. பொருந்துதல் என்னும் பொருட்டாய் வரும் கெழுவென்னும் உரிச்சொல்லே நீண்டுவரும் என்க. 'கெழு' என்பது வெளிப்படு சொல்லாகலின் அதனை விடுத்துக் 'கேழ்' என்பதனையே ஆசிரியர் விதந்தோதினார் என்க. குர்-குரு என்னும் குறைச்சொல் குரீஇ, குரா, என வேறு எழுத்துப் பெற்றன்றிப் பெயராக வாராது. எனவே, குரு என்பது பெயரடையாக வரும் உரிச்சொல்லாயிற்று. கேழ் என்பது பெயர்ப் போலியாய் வந்து உரிச் சொல்லாயிற்று.

சூ. 303 : செல்லல் இன்னல் இன்னா மையே (6)

உரை : செல்லல் இன்னல் என்னும் குறிப்புரிச் சொற்கள் இன்னாமை என்னும் பொருள் பற்றி வரும்.

எ-டு : மணங்கமழ் வியன்மார்பு அணங்கிய செல்லல் (அகம்-22) எனவும், வெயில்புறந்தரூஉம் இன்னல் இயக்கத்து (மலைபடு-374) எனவும் வரும். செல்-இன் என்னும் குறைச் சொற்கள் அல் என்னும் ஈற்றொடு கூடியே இப்பொருள் உணர்த்தும் என்றறிக. 'செல்' என்பது சென்றான் செலவு செல்க எனவும், இன் என்பது இனி, இன்பு, இனம் எனவும் வரும் வழி வேறு பொருளுணர்த்தலின் இவை இன்னாமைப் பொருள் தந்து தனித்துப் பெயர்ப்போலியாய் வருதற்கண் உரிச் சொல் லாகும் என்க.

சூ. 304 : மல்லல் வளனே (7)

உரை : மல்லல் என்னும் குறிப்புரிச்சொல் வளம் என்னும் பொருள் பற்றிவரும். இதுவும் மேலன போல அல் என்னும் ஈறு பெற்றே வரும்.

எ. டு : மல்லல் மால் வரை (அகம் - 52) (மல்லல்-செழுமை) இதன் முதனிலையாகிய 'மல்' என்பது, மலை, மலி, மலர் மல்கு எனப் பெயர்வினைகட்கு முதனிலையாய் வருங்கால் பொருள் வேறுபடும் ஆதலின் இது பெயர்ப் போலியாய் வந்து உரிச்சொல்லாயிற்று.

சூ. 305 : ஏ பெற்றாகும் (8)

உரை : ஏ என்னும் குறிப்புரிச்சொல் 'பெற்று' என்னும்

பொருட்டாய் வரும். (பெற்று - செல்வம் - பாக்கியம் என்னும் பொருளது) பெற்று என்பதனடியாகப் பிறந்ததே "பெற்றம்" (ஆன்) என்பதாகும். பெற்று என்பதற்குப் பெருக்கம் எனப் பொருள் கூறுவார் சேனாவரையார். அது பொருந்துமாறில்லை என்க.

எ-டு: ஏகல்லடுக்கம் (நற்-116) எனவரும். இது பெயரடையாக வந்து உரிச்சொல்லாயிற்று.

சூ. 306 : உகப்பே உயர்தல், உவப்பே உவகை (9)

குறிப்பு : இஃது இரண்டு சூத்திரமாக அமைதல் வேண்டும்.

உரை: உகப்பு என்னும் குறிப்புரிச்சொல் உயர்தலாகிய பொருளுணர்த்தி வரும். உவப்பென்னும் குறிப்புரிச் சொல் உவகை என்னும் பொருளுணர்த்தி வரும்.

எ-டு: 1) விசும்புகந்தாடாது இரைதேர்ந்துண்ணாது, எனவரும். இஃது உக் என்னும் குறைச் சொல்லடியாகப் பிறந்த உகுதல், உகுத்தான், உகுத்து - உக என்பவற்றினின்று பொருள் வேறுபட்டு வினைப் போலியாய் நின்று உரிச் சொல்லாயிற்று. 2) உவந்துவந்து ஆர்வ நெஞ்சமொடு ஆய்நலனளைஇ (அகம்-35) எனவரும். இது வெளிப்படு சொல்லாயினும் உகரத்தின் பின்வரும் ககர வகரங்கள் வெவ்வேறு பொருளின என்பதும் அவை மயங்கல் கூடா என்பதும் அறிவித்தற்கு இவற்றை எடுத்தோதினார். இனி, இங்ஙனம் வரும் சுளிப்பு-சுழிப்பு துகைப்பு-துவைப்பு முதலாயவற்றையும் ஓர்ந்து கொள்க.

சூ. 307 : பயப்பே பயனாம் (10)

உரை: பயப்பு என்னும் குறிப்புரிச் சொல் பயன் என்னும் பொருட்டாய் வரும்.

எ. டு: ஐயுணர்வெய்தியக் கண்ணும் பயமின்றே (குறள்-354) எனவரும். இனி விளைவு என்னும் பொருள்தரும் 'பய' என்பதனடியாகப் பயத்தல், பயந்தாள், பயக்கும், பயவாக்களரனையர் எனவரும் உரியடி வேறு இது வேறு. இது தனித்துப் பெயர்ப்போலியாக வரும்.

சூ. 308 : பசப்பு நிறனாகும் (11)

உரை: பசப்பு என்னும் பண்புரிச்சொல் நிறனாகிய பொருட்காகிவரும்.

எ. டு: மையில் வாண்முகம் பசப்பூரும்மே (கலி-7) என வரும். பசுமைவேறு பசப்பு வேறு என்று உணர்க. யகரமும் சகரமும் மயங்கல் கூடாஎன்பதற்காக இவற்றை எடுத்தோதினார். இயைபு இசைப்பு என்பவற்றிற்கும் இவ்விளக்கம் ஒக்கும்.

சூ. 309 ; இயைபே புணர்ச்சி (12)

உரை ; இயைபென்னும் குறிப்புரிச் சொல் புணர்ச்சியாகிய பொருளுணர்த்தி வரும். எ-டு: இயைந்த கேண்மை இல்லாகியரோ (புறம் 190) எனவரும்.

சூ. 310 : இசைப்பு இசையாகும் (13)

உரை : இசைப்பு என்னும் இசையுரிச் சொல் (நாதமாகிய) இசைபொருட்டாய் வரும். எ-டு : வாயிற்றோன்றி யாழிசையூஉப் புக்கு எனவரும்

சூ 311 : அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி (14)

உரை : அலமரல் - தெருமரல் என்னும் குறிப்புரிச் சொல்லாகிய அவ்விரண்டும் சுழல்தல் என்னும் பொருள்பற்றி வரும்.

இவை வினைக்கு முதனிலையாதற்கண் அலந்தான், தெருமந்தான் என வடிவு வேறுபட்டு வருதலின் அல் ஈறுபெற்றுத் தனித்து வரும் வழி உரிச்சொல்லாய்ப் பெயர்ப்போலியாய் நிற்கும் என்பது உணர்த்தற்கு எடுத்தோதினார்.

எ-டு : அலமரலாயம் (ஐங்-64) எனவும் தெருமரல் உள்ளமொடு அன்னை துஞ்சாள் எனவும் வரும். ஏக்கற்ற உலமரல்போற்றாய் (அகம்-39) என்பதும் அப்பொருட்டாய்வரும்

சூ. 312 : மழவும் குழவும் இளமைப் பொருள (15)

உரை : மழ-குழ என்னும் குறிப்புரிச் சொற்கள் இளமை என்னும் பொருட்குரியவாய் வரும்.

எ-டு : மழகளிறு (புற-38) எனவும், குழக்கன்று-(புறம்:103) எனவும் வரும். இவற்றின் அடியாக மழலை, குழவி என்னும் ஓரொருபெயரன்றிப் பிற பெயர் வினைகள் பிறவாமையின் எடுத்தோதினார் என்க. இவை பெயரடையாக வரும். குழகன் குழமகன் என்பவை இடைக்கால வழக்கு. மழவன் என்பது மழு என்னும் கருவிப் பெயரடியாகப் பிறந்தது. மழபாடி என்பது மழவர் பாடி என்பதன் மரூஉவாகும்,

சூ. 313 : சீர்த்தி மிகுபுகழ் (16)

உரை : சீர்த்தி என்னும் குறிப்புரிச்சொல் 'மிக்கபுகழ்' என்னும் பொருளுணர்த்தி வரும். சீர் என்பது தொழிற்பெயராய காலை, சீர்த்தான் சீர்த்தது என வேறு பொருள் உணர்த்தி வருதலின் எடுத்தோதினார். எ.டு : வயக்கஞ்சால் சீர்த்தி - எனவரும்.

சூ. 314 : மாலை இயல்பே [17]

உரை : மாலை என்னும் குறிப்புரிச் சொல் இயற்கை (தன்மை) என்னும் பொருள்பற்றி வரும்.

எ-டு : இரவரன் மாலையன் (குறிஞ்சி - 232) எனவரும். மால் என்பதனடியாகப்பிறந்து நெடுமை, மயக்கம் பொழுது முதலியபொருளுணர்த்திவரும் சொல்வேறு இதுவேறு.

சூ. 315 : கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும் [18]

உரை : கூர்ப்பு கழிவு என்னும் குறிப்புரிச் சொற்கள் தம்மை அடுத்து நிற்கும் பொருளைச் சிறப்பித்துவரும்.

எ. டு : துனிகூரெவ்வம் (சிறுபா - 36) எனவும் "சினனே காமம் கழிகண் ணோட்டம்" எனவும் வரும். இவை வினைப் போலியாய்ப் பெயரடையாக வரும். இவ்வுரிச்சொற்கள் மிகுதிப் பொருள் தருவதாக மயங்கியுரைப்பார் பவணந்தியார். மிகுதி வேறு உள்ளது சிறத்தல் வேறு என அறிக.

சூ. 316 : கதழ்வும் துணைவும் விரைவின் பொருள. (19)

உரை : கதழ் - துணை என்னும் குறிப்புரிச் சொற்கள் விரைதலாகிய பொருள் உணர்த்தி வரும். எ-டு : கதழ்பரி நெடுந்தேர் (நற்-223) எனவும் "துணைபரிநிவக்கும் புள்ளின் மான" எனவும் வரும்.

சூ. 317 : அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கஞ் செய்யும் (20)

உரை : அதிர்வு விதிர்ப்பு என்பவை நடுங்குதலாகிய குறிப்புப் பொருளைத் தரும்.

எ. டு : அதிரவருவதோர் நோய் (குறள்-429) எனவும் விதிர்ப்புற வறியா ஏமக் காப்பினை (புறம்-20) எனவும் வரும்.

இச்சூத்திர 'உரையுள் அதிழ் வெனப்பாடமோதி அதிழ்கண் முரசு என்று உதாரணம் காட்டுவாருமுளர்' எனச் சேனாவரையர் குறித்துள்ளமையின் இதன் உண்மைப்பாடம், அதிழ் வென்பதே எனத்துணியலாம். என்னை? அதிர்வென்பது பெயர்வினைகட்கு முதனிலையாகவரினும் தனித்துவரினும் பொருள்வேறு படாமை யின் அஃது பாடாமாதற்கியையாமை யறியலாம். பொருள் ஒற்றுமை பற்றி விதிர்ப்பும் உடனோதப்பட்டதென்க.

சூ. 318 : வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்
நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள [21]

**உரை :** வார்தல்-போகல் ஒழுகல் (வார்-போகு-ஒழுகு) என்னும் குறிப்புரிச்சொல் மூன்றும் நேர்தலும் நெடுமையுமாகி பண்புணர்த்தும் பொருளினவாகும். வார்தல்-வரிசையாதல், நேர்தல்-நிரலாதல்.

**எ-டு :** வார்ந்திலங்கும் வை ஏயிற்றுச் சின்மொழி அரிவை (குறு-14) எனவும் தெள்ளறல்தழிஇய வார்மணலடைகரை (அகப்-34) எனவும் போகுகொடி மருங்குல் "எனவும் திரிகாய் விடத்தரொடு காருடை போகி (பதிற்-13) எனவும் 'ஒழுகுகொடி மருங்குல்' எனவும் 'மால்வரை ஒழுகிய வாழை' - (சிறுபாண்-21) எனவும் வரும். இவை குறிப்புப் பொருளின் நீங்கிப் பண்புணர்த்தி வருதலின் எடுத்தோதினார் என்க.

சூ. 319 : தீர்தலும் தீர்த்தலும் விடற் பொருட்டாகும்[22]

**உரை :** தீர்தல் தீர்த்தல் என்னும் இரண்டின் முதனிலை யாகிய 'தீர்' என்னும் குறிப்புரிச் சொல் விடுதல் என்னும் பொருட்குரித்தாய் வரும். முதனிலை இரண்டற்கும் ஒன்றாதலின் விடற்பொருட்டு என ஒருமையாற் கூறினார்.

**எ-டு :** கலையே பிணைவயின் தீர்தலும் அஞ்சி (புறம்-320) எனவும் வல்லன் எந்தை பசிதீர்த்தல் என, (புறம்- 379) எனவும் வரும். ஆர்தல், ஆர்த்தல்-வார்தல், வார்த்தல் என்றாற் போல ஒற்று மிகுதலான் பொருள் வேறுபடுவனவும் உளவாதலின் இன்னோரன்னவை ஒற்றுமிகுதலான் தன்வினையும் பிறவினையு மாக வரும் வேறுபாடன்றிப் பொருள் வேறுபடா என்ப தறிவித்தற்கு எடுத்துக்காட்டாக தீர்தலும் தீர்த்தலும் என இவற்றை எடுத்தோதினார் என்க.

சேர்தல் சேர்த்தல், வீழ்தல், வீழ்த்தல், போன்றவை இத்தகையன. இவை வினைப் போலியாக வந்த உரிச்சொற்கள் என அறிக. துணையிற்றீர்ந்த கடுங்கண்யானை என்பது பெயரெச்ச வினையாதலன்றி உரிச்சொல்லாகாமையான் இத்தகையன காட்டாதற்கு ஒவ்வா என்க.

சூ 320 : கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு (23)

உரை : கெடவரல், பண்ணை எனவரும் அவ்விரு குறிப்புரிச் சொற்களும் விளையாட்டு என்னும் பொருள் பற்றி வரும்.

எ-டு : ‘‘கெடவரலாயமொடு’’ எனவும் ‘‘பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும்’’ எனவும் வரும். இவை தனித்துப் பெயர்ப்போலியாய் வரும். ‘விளையாட்டு’ என்றது அத்தொழிற்பண்பினைச் சுட்டி நின்றது.

சூ. 321 : தடவும் கயவும் நளியும் பெருமை [24]

உரை : தட கய நளி என்னும் பண்புரிச் சொற்கள் பெருமை என்னும் பொருள்பற்றி வரும் (பெருமை - பெருக்கம்)

எ-டு வலிதுஞ்சு தடக்கை (புறம்-394) எனவும் கயவாய்ப் பெருங்கையானை (அகம்-118) எனவும் நளிமலை நாடன் நள்ளி (புறம்-150) எனவும் வரும்.

சூ. 322 : அவற்றுள்
தடவென் கிளவி கோட்டமும் செய்யும் [25]

உரை : மேற்கூறிய மூன்றனுள் தட வென்னும் சொல் பெருமையாகிய பண்புணர்த்தலேயன்றி ? வளைவு என்னும் பண் புணர்த்தியும் வரும். எ-டு : தடமருப் பெருமை (நற்-160) எனவரும்.

சூ. 323 : கயவென்கிளவி மென்மையும் செய்யும் [26]

உரை : கயவென்னும் உரிச்சொல் பெருமையேயன்றி மென்மைப் பண்புணர்த்தியும் வரும். எ-டு : கயந்தலை மடப்பிடி (நற்-137) எனவரும்.

சூ. 324 : நளியென் கிளவி செறிவு மாரும் [27]

உரை : நளி என்னும் உரிச்சொல் பெருமைப்பண்பேயன்றிச் செறிவு என்னும் குறிப்புணர்த்தியும் வரும். எ-டு : நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி (புறம்-66) எனவரும்.

"தட" முதலாய மூன்றும் பெயரடையாக வந்து உரிச்சொல்லாயின. நளிந்தனைவருதல் உடன்றனளாகி (பதிர்-52) என்பதன்கண் வந்த நளிந்தனை என்பது நளிய என்னும் உவம உருபிடைச் சொல்லடியாகப் பிறந்த வினைச்சொல் என அறிக.

சூ. 325 : பழுது பயமின்றே (28)

உரை : பழுது என்னும் குறிப்புரிச் சொல் பயனின்மைப் பொருட்டாய் வரும்.

எ-டு : பழுதுகழி வாணாள் எனவரும். இது தனித்துப் பெயர்ப் போலியாய் வரும் உரிச்சொல், ஈண்டு வினைக்குறிப்புப் பொருள்பட நின்றது.

சூ. 326 : சாயல் மென்மை (29)

உரை : சாயல் (சாய்) என்னும் பண்புரிச்சொல் மென்மைத் தன்மை உணர்த்திவரும். சாயன் மார்பு நனியலைத்தன்றே (பதிற் - 16) எனவரும். இதுவும் பெயர்ப்போலியாய்த் தனித்து வரும்.

சூ. 327 : முழுது என் கிளவி எஞ்சாப் பொருட்டே (30)

உரை : 'முழுது என்னும் குறிப்புரிச் சொல் எஞ்சாமையாகிய பொருட்குரியதாய் வரும்.

எ-டு : மண்முழுது ஆண்டநின் முன்னோர்போல' என வரும். முழுமை என்னும் பண்புப்பெயர் வேறு இவ்உரிச்சொல் வேறென்க. இது பெயர்ப் போலியாய்த் தனித்துவரும்.

சூ. 328 : வம்பு நிலையின்மை [31]

உரை : வம்பு என்னும் குறிப்புரிச் சொல் நிலையின்மையாகிய பொருள் குறித்து வரும். எ-டு : வம்பமாரியைக்காரென மதித்தே (குறு - 66) என வினைப் போலியாய் வரும்.

சூ. 329 : மாதர் காதல் (32)

உரை : மாதர் என்னும் குறிப்புரிச் சொல் காதல் என்னும் பொருட்டாய் வரும் (காதல் - கவர்ச்சி) எ-டு : மாதர் கொள் மானோக்கின் மடநல்லாய் (கலி - 56, எனவரும். இது பெயர்ப் போலியாய்த் தனித்து வரும்.

சூ. 330 : நம்பும் மேவும் நசையா கும்மே (33)

உரை : நம்பு-மே என்னும் குறிப்புரிச் சொற்கள் நசை என்னும் பொருட்குரியவாய் வரும் (நசை - விருப்பம்)

எ-டு : நயந்து நாம்விட்ட நன்மொழி நம்பி (அகம் - 198) எனவும் பேரிசை நவிரம் மேஎய் உறையும் (மலைபடு - 72) எனவும் வரும். இவை வினை எச்சத்திற்கு முதனிலையாகவன்றித் தனித்து வராமை கருதி எடுத்தோதினார் போலும். நம்பன், நம்பி என்பவை நம்பு என்பதனடியாகப் பிறந்தவையாகும்

சூ 331 : ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம் [34]

உரை : ஓய்தல் (ஓய்) ஆய்தல் (ஆய்) நிழத்தல் (நிழத்து) சாய் என்னும் குறிப்புரிச்சொல்லிடத்தவாகிய நான்கும் தாம் அடுத்து நிற்கும் சொற்பொருளின் நுணுக்கத்தை உணர்த்திவரும் (நுணுக்கம்-மெலிவுறுதல்)

எ-டு : வேனில் உழந்த வறிதுயங்கு ஓய்களிறு (கலி - 7) எனவும், பாய்ந்து ஆய்ந்ததானைப் பரிந்தானாமைந்தினை (கலி - 96) எனவும், நிழத்தயானை மேய்புலம்படர (மதுரை-303) எனவும், கயலறல் எதிரக் கடும்புனல் சாஅய் (நெடுநல் - 18) எனவும் வரும். [ஆய்ந்ததானை - நுணுகியதுகில்.] இவை பெரும்பான்மையும் வினைப்போலியாய்ப் பெயரடையாக வரும்.

சூ. 332: புலம்பே தனிமை (35)

உரை : புலம்பு என்னும் குறிப்புரிச்சொல் தனிமை என்னும் பொருள் உணர்த்தி வரும். எ-டு : புலிப்பற்கோத்தபுலம்பு மணித்தாலி (அகம் -7) எனவரும். இது பெயர்ப் போலியாக வரும்.

சூ. 333 : துவன்று நிறைவாகும் (36)

உரை : துவன்று என்னும் குறிப்புரிச்சொல் நிறைவு என்னும் பொருட்காகி வரும். எ-டு : ஆரியர்துவன்றிய பேரிசையிமயம் (பதிற்-11) எனவரும். இஃது வினைப்போலியாக வரும்.

சூ. 334 : முரஞ்சல் முதிர்வே [37]

உரை : முரஞ்சு என்னும் குறிப்புரிச்சொல் முதிர்தல் என்னும் பொருள் குறித்து வரும். எ-டு : கோடுபல முரஞ்சிய கோளிஆலத்து (மலைபடு-268) என வினைப்போலியாக வரும்.

சூ. 335 : வெம்மை வேண்டல் (38)

உரை : வெம்மை என்னும் பண்புரிச் சொல் வேண்டல் என்னும் பொருள் குறித்து வரும். [வேண்டல் - விருப்பம்]

எ-டு : ஏமவெங் காமம் இயைவ தாயினும் (அகம் - 15)இது பெயர்ப் போலியாய் வரும்.

சூ. 336 : பொற்பே பொலிவு (39)

உரை : பொற்பு என்னும் குறிப்புரிச் சொல் பொலிதல் என்னும் பொருள்பற்றி வரும். எ-டு : பெருவரையடுக்கம் பொற்பச் சூர்மகள் (அகம் - 15) எனவரும். (பொலிவு - விளங்குதல்) இது வினைப் போலியாய் வரும். அழகென்னும் பண்புப் பெயராகிய பொற்பு வேறு இவ்வுரிச்சொல் வேறு.

சூ. 337 : வறிது சிறிதாகும் (40)

உரை ; வறிது என்னும் குறிப்புரிச் சொல் சிறிது என்னும் பொருட்காகி வரும். எ-டு : வறிது வடக்கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி (பதிற் - 14) எனவரும். இது பெயர்ப் போலியாய்த் தனித்து வரும்.

சூ. 338 : ஏற்றம் நினைவும் துணிவு மாகும் (41)

உரை : ஏற்றம் (ஏற்று) என்னும் குறிப்புரிச் சொல் நினைதலும் துணிதலும் ஆகிய பொருள்கட்கு ஆகிவரும்.

எ-டு : கானலஞ் சேர்ப்பன் கொடுமை ஏற்றி (குறு - 145) எனவும், ஏற்றமிலாட்டி என்ஏமுற்றாள் (கலி - 144) எனவும் வரும். இது வினைப்போலியாக வரும்.

சூ. 339 : பிணையும் பேணும் பெட்பின் பொருள (42)

உரை : பிணை என்னும் குறிப்புரிச் சொல்லும் பேணு என்னும் குறிப்புரிச் சொல்லும் பெட்பு என்னும் சொல்லுக்குரிய புறந்தருதல், விரும்புதல், என்னும் பொருளினவாய் வரும்.

எ-டு : "அரும்பிணை யகற்றி வேட்ட ஞாட்பினும்" எனவும் "யானும் பேணினல்லனோ மகிழ்ந" எனவும் வரும். பிணை என்னும் வெளிப்படவாரா உரிச்சொல் உணர்த்துவார் அப்பொருட்டாகிய பேண் என்னும் வெளிப்படு சொல்லையும் உடன் ஓதினார். பிணை என்பது பெயர்ப்போலியாக வரும்.

சூ. 340 : பணையே பிழைத்தல் பெருப்பு மாகும் (43)

உரை : பணை என்னும் குறிப்புரிச்சொல் பிழைத்தலும் பெருத்தலுமாகிய பொருள்கட்காகி வரும். எ-டு : பணைத்து வீழ் பகழி (நற்-165) எனவும் வேய்மருள் பணைத்தோள் (அகப்-1) எனவும் வரும். இது வினைப்போலியாய் வரும்.

சூ. 341 : படரே உள்ளல் செலவு மாகும் (44)

உரை : படர் என்னும் குறிப்புரிச் சொல் உள்ளுதலும் செலவும் ஆகிய பொருள்கட்காகி வரும். (உள்ளுதல்-ஊன்றி நினைதல்) எ-டு : வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற்போகி. (புறம்-47) எனவும் கறவை கன்றுவயிற் படர (குறு-108) எனவும் வரும். இதுவும் வினைப்போலியாக வரும்.

சூ. 342 : பையுளும் சிறுமையும் நோயின் பொருள (45)

உரை : பையுள்-சிறுமை என்னும் குறிப்புரிச் சொற்கள் நோயின் பொருளவாகிய துன்பம் வருத்தம் முதலிய பொருளின வாய் வரும்.

எ-டு : படர்சுமந்தெழுதரும் பையுள் மாலை (குறு-195) எனவும் மெல்லிய நெஞ்சு பையுள் கூர (கலி-137) எனவும் சிறுமையுறுப செய்பறியலரே (நற்-1) எனவும் நசைபழுதாகப் பெருங்கையற்றவென் சிறுமை (நற்-222) எனவும் வரும். இவை பெயர்ப்போலியாய்த் தனித்து வரும். சிறுமை என்னும் பண்புப் பெயர் வேறு இவ்வுரிச் சொல் வேறு.

சூ. 343 : எய்யா மையே அறியா மையே (46)

உரை : எய்யாமை என்னும் குறிப்புரிச் சொல் அறியாமை என்னும் பொருள் குறித்துவரும்.

பெயர் வினைகட்கு முதனிலையாக வரும் 'எய்' என்னும் சொல் எய்தல், எய்தான், எய்த்தல், எய்த்தான் எனச் செலுத்துதல், இளைத்தல் என்னும் பொருளில் வெளிப்படு சொல்லாக வரும். எய்வான், எய்யான், என விதி மறை இரண்டன்கண்ணும் வரும்.

எய்யாமை என்னும் உரிச்சொல் அவற்றினின்றும் பொருள் வேறுபட்டு அறியாமை என்னும் பொருள்குறித்து வருதலின் இதனை எடுத்தோதினார். இவ்வுரிச்சொல் 'எய்' என்பது முதனிலையாகப் பிறந்ததே எனினும் அறிதல் என்னும்

பொருளில் எய்வு, எய்தல் என்றாற் போல உடன் பாட்டின்கண் வாராமையான் 'எய்யாமை' என்னும் சொல்லை மட்டும் விதந்தோதினார் ஆசிரியர்.

எ-டு : நன்றும் எய்யாமையின் ஏதில பற்றி (ஐங்-119) எய்யாமையொடு இளிவுதலைத் தருமென (நற்-284) எனவரும் இது வினைப்போலியாய் வரும். வெளிப்படவாரா உரிச்சொல் என்பதன் பொருளைப்பிறழ உணர்ந்தமையான் இச்சூத்திரத்திற்குத் தமக்குத் தோன்றிவாறெல்லாம் உரையாசிரியன்மார் உரையும் விளக்கமும் கூறிச்சென்றனர்.

சூ.344 : நன்று பெரிதாகும் (47)

**உரை :** நன்று என்னும் குறிப்புரிச் சொல் பெரிது என்னும் பொருட்டாய்வரும். எ-டு : நன்றும் அரிதுதுற்றனையாற் பெரும (அக-10) எனவரும். இது நன்மை என்னும் பண்புப் பொருள் உணர்த்தாமையின் உரிச்சொல்லாயிற்று. இது வினைப் போலியாய் வரும்.

சூ 345 : தாவே வலியும் வருத்தமு மாகும் (48)

**உரை :** தா என்னும் குறிப்புரிச் சொல் வலிதாதலும் வருந்துதலுமாகிய பொருள்கட்காகிவரும். எ-டு : தா வில் நன்பொன் தைஇயபாவை (அகம்-212) எனவும் கருங்கண் தாக்கலை பெரும்பிறி துற்றென (குறு-69) எனவும்வரும். இது பெயர்ப்போலியாக வரும்.

சூ. 346 : தெவுக் கொளற் பொருட்டே (49)

**உரை :** தெவு என்னும் குறிப்புரிச் சொல் கொள்ளுதற் பொருட்டாய்வரும் (கொள்ளுதல்-நிரம்புதல்)

எ-டு : நீர்த்தெவ்வும் நிறைத்தொழுவர் (மதுரை - 90) இச்செய்யுள்அடியுள் தெவும் என்பது தெவ்வும் எனவிகாரமாய் நின்றது. என்னை நீர்த்தெவும் என நிற்பின் அது பாதிரியாய் வஞ்சி யோசை பயவாமை அறிக. இது வினைப்போலியாக வரும். இச் சொல் இக்காலத்துத் 'தேவை' எனத்திரிந்து வழங்குகின்றது.

சூ. 347 : தெவ்வுப் பகையாகும் (50)

**உரை :** தெவ் என்னும் குறிப்புரிச்சொல் பகைமை என்னும் பொருட்டாய் வரும். எ-டு : தெவ்வுப்புலம் எனவரும். இது பெயர்ப் போலியாய்த் தனித்துவரும்,

சூ. 348 : விறப்பும் உறப்பும் வெறுப்பும் செறிவே (51)

உரை : விறப்பு உறப்பு வெறுப்பு என்னும் குறிப்புரிச் சொற்கள் செறிவு என்னும் பொருள் பற்றி வரும்.

எ-டு : விறந்த காப்பொடு உண்ணின்று வலியுறுத்தும் எனவும், உறந்த இஞ்சி உயர்நிலை மாடத்து எனவும், வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க்கபிலன், எனவும் வரும். இவை வினைப் போலியாக வரும்.

சூ. 349 : அவற்றுள்
விறப்பே வெரூஉப் பொருட்டு மாகும் (52)

உரை : மேற்கூறிய மூன்றனுள் விறப்பென்னும் உரிச்சொல் செறிவேயன்றி வெருவுதற் பொருட்டாயும் வரும். எ-டு: அவ லெறி உலக்கை பாடு விறந்தயல (பெரும்பா-226) எனவரும்.

சூ. 350 : கம்பலை சும்மை கலியே அழுங்கல்
என்றிவை நான்கும் அரவப் பொருள (53)

உரை : கம்பலை, சும்மை, கலி, அழுங்கல் என்று சொல்லப்படும் இவை நான்கு இசையரிச் சொற்களும் அரவம் என்னும் பொருளினவாம். அரவம் = குழுவொலி = ஆரவாரம்.

எ-டு : கம்பலை மூதூர் (புறம்-54) எனவும், கலிகொள் சும்மை ஒலி கொள் ஆயம் (மதுரை - 263) எனவும், கலி கொள்ளாயம் மலிபுதொகு பெடுத்த (அகம் - 11) எனவும், உயவுப் புணர்ந்தன்றிவ் வழுங்க லூரே (நற் - 203) எனவும்வரும். இவை பெயர்ப் போலியாய் வரும்.

சூ. 351 : அவற்றுள்
அழுங்கல் இரக்கமும் கேடும் ஆகும் (54)

உரை : மேற்கூறியவற்றுள் அழுங்கல் என்னும் உரிச்சொல் அரவமேயன்றி இரக்கமும் கேடும் ஆகிய பொருள்கட்கும் ஆகி வரும்.

எ-டு : பழங்கண்ணோட்டமும் நலிய அழுங்கினனல்லனோ (அகம் - 66) எனவும் குணனழுங்கக் குற்றம் உழைநின்று கூறும் சிறியவர்கட்கு (நாலடி - 353) எனவும் வரும். இவை இப்பொருட்கண் பெயர்வினைகட்கு முதனிலையாய் வெளிப்படு சொல்லாய் வரும்.

சூ 352 : கழுமென் கிளவி மயக்கம் செய்யும் (55)

உரை : கழும் என்னும் குறிப்புரிச்சொல் மயங்குதல் என்னும் பொருள்பற்றி வரும். மயக்கம் - கலப்பு. எ-டு : கழுமிய ஞாட்பினுள் (களவழி - 11) எனவரும். இது வினைப்போலியாக வரும்.

சூ. 353 : செழுமை வளனும் கொழுப்பு மாகும் (56)

உரை : செழுமை என்னும் குறிப்புரிச் சொல் வளனும் கொழுப்புமாகிய பொருள்கட்காகி வரும். வெளிப்படவாராத கொழுப்பென்னும் பொருள் உணர்த்துவார் வெளிப்படு சொல்லாகிய வளனும் பாகுபாடு கருதி உடனோதினார்.

எ-டு : செழும்பல் குன்றம் எனவும் செழுந்தடிதின்ற செந்நாயேற்றை எனவும் வரும். இது வினைப் போலியாக வரும்.

சூ 354 : விழுமம் சீர்மையும் சிறப்பும் இடும்பையும் (57)

உரை : விழுமம் என்னும் குறிப்புரிச் சொல் சீர்மை, சிறப்பு, இடும்பை என்னும் பொருள்பற்றி வரும்.

எ-டு - விழுமியோர், காண்டொறும் செய்வர் சிறப்பு (நாலடி - 159) எனவும் வேற்றுமை இல்லா விழுத்திணைப் பிறந்து (புறம் -27) எனவும் நின்னுறு விழுமம் களைந்தோன் (அகம் - 170) எனவும் வரும். இவை தெரிநிலை வினைக்கு முதனிலையாகாமல் குறிப்புவினைபற்றி வருதலின் எடுத்தோதினார்.

சூ. 355 : கருவி தொகுதி (58)

உரை : கருவி என்னும் குறிப்புரிச் சொல் தொகுதி குறித்து வரும் (தொகுதி = பல்பொருட் கூட்டம்)

எ-டு : கருவி வானம் கதழுறை சிதறி (அகம்-4) வான் என்றது முகிலை. அது மின்னு, முழக்கு, காற்று ஆகியவற்றொடு தொக்கு நிற்குமாறுணர்க. இது பெயர்ப் போலியாய் வரும்.

சூ 356 : கமம் நிறைந்தியலும் (59)

உரை : கமம் என்னும் குறிப்புரிச் சொல் நிறைதற் பொருட்டாய் வரும். எ-டு : கமஞ்சூல் மாமழை (அகம்-43) எனவரும். இதுவினைப் போலியாய் வரும்.

சூ. 357 : அரியே ஐம்மை (60)

உரை : அரி என்னும் குறிப்புரிச் சொல் ஐம்மை என்னும் பொருள் பற்றிவரும். (ஐம்மை-நொய்ம்மை-அழகுமாம்) இதுவும் வினைப் போலியாய் அடையாக வரும். எ-டு : அரிமயிர்த்திரள் முன்கை (புறம்-11) எனவரும்.

சூ. 358 : கவவு அகத்திடுமே (61)

உரை : கவவு என்னும் குறிப்புரிச் சொல் அகத்திடுதலாகிய பொருள் பற்றி வரும். (அகத்திடுதல்-அகப்படுத்தி நிற்றல்) எ-டு : கழூஉ விளங்காரம் கவைஇய மார்பே (புறம்-9) எனவரும். இது வினைப்போலியாய் வரும்.

சூ. 359 : துவைத்தலும் சிலைத்தலும் இயம்பலும் இரங்கலும்
இசைப்பொருட் கிளவி என்மனார் புலவர் (62)

உரை : துவை(த்தல்) சிலை(த்தல்) இயம்(பல்) இரங்கு (அல்) என்னும் இசையுரிச் சொற்கள் நான்கும் ஓசையும் ஒலியும் ஆகிய இசை குறித்து வரும் உரிச் சொற்கள் எனக்கூறுவர் புலவர்.

எ-டு : முரசு கடிப்பிகுப்பவும் வால்வளை துவைப்பவும் (புறம் - 158 எனவும், ஆமாநல்லேறு சிலைப்ப (முருகு - 315) எனவும், கடிமனை இயம்ப (புறம் - 36) எனவும் ஏறிரங் கிருளிடை இரவினிற் பதம்பெறாஅன் (கலி - 46) எனவும் வரும். துவைத்தலும், சிலைத்தலுமாகிய வெளிப்படவாராதனவற்றை உணர்த்துவார் பொருள் ஒத்து வருதல்பற்றி இயம்பலும் இரங்கலும் உடன் ஓதினார் என்க. இவை பெயர், வினைகட்கு முதனிலையாய் வரும்.

சூ. 360 : அவற்றுள்
இரங்கல் கழிந்த பொருட்டு மாகும் (63)

உரை : மேற்கூறியவற்றுள் இரங்கல் என்பது கழிந்தநிலை உணர்த்துங் குறிப்புரிச் சொல்லாயும் வருதற்காகும். எ-டு : செய்திரங்காவினைச் சேண்விளங்கும் புகழ் (புறம்-10) எனவரும்.

சூ 361 : இலம்பாடு ஒற்கம் ஆயிரண்டும் வறுமை (64)

உரை : இலம்பாடு - ஒற்கம் என்னும் குறிப்புரிச் சொற்கள் இரண்டும் வறுமை என்னும் பொருள் குறித்து வரும்.

எ-டு : இலம்பாடொக்கற் றலைவற்கோர் கரம்பைச் சீறூர் நல்கினனெனவே (புறம்-285) எனவும், ஒக்கல் ஒற்கம் சொலியத் தன்னூர் (புறம்-327) எனவும் வரும். இவை இரண்டும் பெயர்ப் போலியாய் வரும். இவற்றுள் 'இலம்பாடு' என்பது ஒருசொல். இவ்வுரிச் சொல் 'பாடு' என்னும் இறுதிநிலை கெட்டு இலம் எனப் பண்புக்குறிப்பாய் நின்று படு (படுதல்) என்னும் குறித்து வருகிளவியொடு புணர்ந்து வருதலும் உண்டு, என்பதனை "இலமென் கிளவிக்குப் படுவருகாலை நிலையலும் உரித்தே செய்யுளான" என (எழு சூ. 316) விதந்து கூறியதனான் அறிக.

சூ 362 : ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தற் பொருள (65)

உரை : ஞெமிர்தல் பாய்தல் என்னும் குறிப்புரிச்சொற்கள் பரவுதலாகிய பொருளினவாய் வரும்.

எ-டு : தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து (நெடு-90) எனவும் புண்ணுமிழ்குருதி முகம்பாய்ந்திழிதர (குறிஞ்சி-172) எனவும்வரும். இவை வினைப்போலியாக வரும்.

சூ. 363 : கவர்வு விருப்பாகும் (66)

உரை : கவர்வு என்னும் குறிப்புரிச் சொல் விரும்புதல் என்னும் பொருட்காகி வரும். எ-டு : 'கவர்நடைப் புரவி' எனவரும். இதுவும் வினைப் போலியாகவரும்.

சூ. 364 : சேரே திரட்சி [67]

உரை: சேர் என்னும் குறிப்புரிச் சொல் திரட்சியாகிய பொருள் குறித்துவரும். எ-டு : சேர்ந்து செறிகுறங்கு (நற்-170) திரண்டு செறிந்ததுடை என்பது இதன் பொருள். இது வினைப் போலியாக வரும்.

சூ. 365 : வியல் என் கிளவி அகலப் பொருட்டே (68)

உரை : வியல் என்னும் குறிப்புரிச்சொல் அகலமாகிய பொருள்குறித்து வரும். எ-டு : வியலுலகம்" என வரும் (அகலம்-பரப்பு) இதுவினைப்போலி.

சூ. 366 : பேம் நாம் உரும் என வரூஉம் கிளவி
ஆமுறை மூன்றும் அச்சப் பொருள (69)

உரை : பேம், நாம், உரும் எனக்குறிப்புரிச் சொல்லாய் அம் முறையான் வரும் மூன்றும் அச்சமென்னும் பொருளினவாம்.

எ-டு : மன்ற மராஅத்த பேஎ முதிர் கடவுள் (குறு - 87) எனவும் நாமநல்லராக் கதிர்பட உமிழ்ந்த எனவும் உருமில் சுற்றமொடு (பெரும்பாண் - 447) எனவும் வரும் "ஆமுறை' என்றதனான் பேம் என்பது மகரங்கெட்டு யகரமேற்றுப் பேய் எனப் பெயராக வருதலும் நாம் என்பது நாம எனத் திரிந்து நிற்றலும் கொள்க, இவை பெயர்ப் போலியாக வரும்.

சூ. 367 : வய வலியாகும் (70)

உரை : வய என்னும் குறிப்புரிச் சொல் வலி என்னும் பொருட்டாய் வரும். எ-டு : துன்னருந்துப்பின் வயமான் (புறம் - 44) எனவரும்.

சூ. 368 : வாள் ஒளியாகும் (71)

உரை : வாள் என்னும் பண்புரிச் சொல் ஒளி என்னும் பொருட்டாய் வரும். எ-டு வாள்முகம் (புறம் - 6) எனவரும்.

சூ. 369 : துயவென் கிளவி அறிவின் திரிபே (72)

உரை : துய என்னும் குறிப்புரிச்சொல் அறிவு திரிந்தமை யாகிய பொருள் குறித்துவரும். எ-டு : 'துயவுற்றேம் யாமாக' எனவரும். இவை மூன்றும் பெயர்ப்போலியாய் வரும்.

சூ. 370 : உயாவே உயங்கல் (73)

உரை : உயா என்னும் குறிப்புரிச்சொல் உயங்குதல் என்னும் பொருள்குறித்து வரும் (உயங்கல்-துயர்கூர்தல்) எ-டு : பருந்திருந்து உயாவிளி பயிற்று மியாவுயர் நனந்தலை (அகம்-19) எனவரும்.

சூ. 371 : உசாவே சூழ்ச்சி (74)

உரை : உசா என்னும் குறிப்புரிச் சொல் சூழ்தலாகிய பொருள் பற்றி வரும். எ-டு : உசாத்துணை (குறு-207) எனவரும்.

சூ. 372 : வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம் (75)

உரை : வயா என்னும் குறிப்புரிச் சொல் வேட்கைப் பெருக்க மாகிய பொருள் பற்றி வரும். எ-டு : வயவுறு மகளிர் (புறம்-20) வயா என்பது செய்யுள் விகாரமாய் 'வய' என நின்றது. இவை மூன்றும் பெயர்ப் போலியாகவரும்.

சூ: 373 : கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள (76)

**உரை :** கறுப்பு-சிவப்பு என்னும் இரண்டும் குறிப்புரிச் சொற்கள். அவை வெகுளுதற் பொருளினவாய் வரும்.

**எ-டு :** 'நிற் கறுத்தோ ரரும்கடிமுனை யரண் போல்' (நின்னைவெகுண்டோர் இழக்கும் காவலமைந்தமதிலைப் போல என்பதிதன் பொருள்) எனவும், நீ சிவந்திறுத்த நீரழிபாக்கம் (பதிற்-13) எனவும் வரும். இவை வினைப் போலியாகவரும்.

சூ. 374 : நிறத்துரு உணர்த்தற்கும் உரிய என்ப (77)

**உரை :** மேற்கூறிய கறுப்பு - சிவப்பு என்னும் உரிச் சொற்கள் பண்படியாகத் தோன்றின், நிறமாகிய உருவுணர்த்தற்கும் உரியவாம் என்று கூறுவர் புலவர்.

**எ-டு :** 'கறுத்த காயா' எனவும், சிவந்த காந்தள் எனவும் வரும். இவை வெளிப்படு சொல்லாயினும் தெரிநிலை வினைக்கு முதனிலையாதற்கண் குறிப்புரிச் சொல்லாயும் குறிப்புவினைக்கு முதனிலையாதற்கண் பண்புரிச் சொல்லாயும் தோற்றம் வேறுபடுதலின் இவ்வாறு வருவனவும் உள என்பதறிவித்தற்கு இவற்றை எடுத்தோதினார் என்க. நிறமுணர்த்தி வரும் கருமை - செம்மை என்னும் பண்புப் பெயர் வேறு கறுப்பு - சிவப்பு என்னும் இச் சொற்கள் வேறு என அறிக

சூ. 375 : நொசிவு நுழைவு நுணங்கு நுண்மை (78)

**உரை :** நொசிவு நுழைவு நுண்ங்கு என்னும் பண்புரிச் சொற்கள் நான்கும் நுண்மையாகிய பொருள் பற்றி வரும். எ-டு : நொசிமட மருங்குல் (கலி-60)எனவும் நுழைநூற் கலிங்கம் (மலைபடு-561) எனவும் நுணங்கு துகில் நுடக்கம் போல (நற்-15) எனவும் வரும். இவை பெரும்பான்மையும் பெயரடையாக வரும்.

சூ. 376 : புனிறென் கிளவியின் றணிமைப் பொருட்டே (79)

**உரை :** புனிறு என்னும் குறிப்புரிச் சொல் (கருவினை) ஈன்ற அணிமைநிலையை உணர்த்திவரும். எ-டு : புனிற்றாப் பாய்ந்தெனக்கலங்கி (அக-56) எனவரும். இது பெயர்ப் போலியாக வரும்.

சூ. 377 : நனவே களனும் அகலமும் செய்யும் (80)

உரை : நன என்னும் குறிப்புரிச் சொல் இடமாகிய களத்தையும் அகலப் பரப்பினையும் உணர்த்தி வரும்.

எ-டு : நனவுப் புகு விறலியிற்றோன்றும் நாடன் (அகம்-82) எனவும் நனந்தலையுகம் எனவும் வரும். இது பெயர்ப் போலியாகத் தனித்து வரும்.

சூ. 378 மதவே மடனும் வலியு மாகும் (81)

உரை : மத என்னும் குறிப்புரிச் சொல் மடனும் வலியுமாகிய பொருட்காகி வரும்.

எ-டு : பதவுமேய்ந்த மதவுநடை நல்லான் (அக-14) எனவும், கயிறிடு கதச்சே போல மதமிக்கு (அக-36) எனவும் வரும்.மடப்பமும் வன்மையுமாகிய பண்புச் சொற்கள் வேறு. இவை மதர்த்தலும் செருக்குமாகிய குறிப்பினவாம். இது பெயரடையாகப் பெயர்ப் போலியாக வரும்.

சூ. 379 : மிகுதியும் வனப்பும் ஆகலும் உரித்தே (82)

உரை : மேற்கூறிய 'மத' என்னும் சொல் மிகுதியும் வனப்புமாகிய பொருட்காகிவருதலும் உரியதாகும்.

(மிகுதி - ஊக்கம். வனப்பு - கதிர்ப்பு) உம்மை சிறு பான்மையை உணர்த்தி நின்றது. அதனால் பிரித்துக் கூறினார். அஃது இப்பொருளில் வினைப் போலியாக வருதலின் பிரித்துக் கூறினார் எனினுமாம். எ-டு : 'மதவிடை' எனவும், மாதர் வாண்முகம் மதைஇய நோக்கே எனவும் வரும்.

சூ. 380 : புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி [83]

உரை : யாணர்என்னும் குறிப்புரிச் சொல் புதிய நிலைமையினை உணர்த்திவரும். இது பெயர்ப் போலியாகத்தனித்து வரும். எ-டு : மீனொடு பெயரும் யாணர் ஊர (நற்-210) எனவரும்.

சூ. 381 : அமர்தல் மேவல் [84]

உரை அமர்தல் என்னும் குறிப்புரிச் சொல் மேவுதலாகிய பொருள் குறித்து வரும். மேவுதலாவது - விரும்பிச் சேறல். எ-டு : அகனமர்ந்து செய்யாள் உறையும் (குறள்-84) இது வினைப்போலியாய் வரும். இருத்தல் என்னும் வெளிப்படு சொல்லாகிய அமர் என்னும் தொழிற் பெயர் வேறு இது வேறு.

சூ. 382 : யாணுக் கவினாம் [85]

உரை : யாண் என்னும் குறிப்புரிச் சொல் கவின் என்னும் பொருட்காகி வரும். எ-டு : யாணது பசலை (நற்-50) எனவரும். யாணு என்பதனுள் 'உகரம்' சாரியை. இது பெயர்ப் போலியாக வரும்.

சூ. 383 : பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள [86]

உரை : பரவுதல், பழிச்சுதல் என்னும் குறிப்புரிச் சொற்கள் வழுத்துதல் என்பதன் பொருளாகிய வழிபடுதல் என்னும் பொருளினவாம்.

எ-டு : நெல்லுகுத்துப் பரவும் கடவுளுமிலவே (புறம்-335) எனவும், கைதொழூஉப் பழிச்சி (மதுரை-194) எனவும் வரும். இது வெளிப்படு சொல்லாயினும் தொழிற் பெயர்ப் பொருளி னின்று வேறுபட்டு வருதலின் எடுத்தோதினார்.

சூ. 384 : கடியென் கிளவி
வரைவே கூர்மை காப்பே புதுமை
விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே
அச்சம் முன்றேற்று ஆயீ ரைந்தும்
மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே

உரை : கடியென்னும் குறிப்புரிச்சொல் வரைவு முதலாகிய பத்துப் பொருளாகத் தோன்று பெர்ருட்டன்மையுடையதாகும்.

எ-டு : கடிந்த கடிந்தாரார் செய்தார்க்கு (குறள்-658) வரைவு. கடிநுனைப் பகழி கூர்மை. கடிமரம் தடியுமோசை (புறம்-36 காப்பு. கடவுட் கிட்ட செழுங்குரல் (குறுந்-105) புதுமை. கடுந்தேர் குழித்த ஞெள்ளல் (புறம்-15) விரைவு. கடும்பகல் ஞாயிறு (கலி-145 விளக்கம். கடுங்கால் ஒற்றலின் (பதிற்றுப்-25) மிகுதி. கடு நட்பு சிறப்பு. கடியையால் நெடுந் தகை செருவந்தானே அச்சம். கொடுஞ்சுழிப்புகார் தெய்வம் நோக்கிக் கடுஞ்சூள் தருகுவன் நினைக்கே (அகம்-110) முன்றேற்று. முன்றேற்று - முன்னிலையாக வைத்துத் தெளி வித்தல். இவ்வுரிச்சொல் பெயர் வினைகட்கு முதனிலையாக வருங்கால் வெளிப்படு சொல்லாயினும், ஏனை நிலைகளும் கூறு வாராய் உடன் ஓதினார். மெய் பெறத் தோன்றும் என்றதனான் கடிஎன்பது கடும் என (7-8) ஈறுதிரிதலும் கொள்க. கடி-கடித்தல் என்னும் தொழிற்பெயர் வேறு இதுவேறென அறிக.

சூ. 385 : ஐயமும் கரிப்பும் ஆகலும் உரித்தே (88)

உரை : மேற்கூறிய கடி என்னும் சொல் ஐயமும் கரிப்பும் ஆகிய பொருள்கட்காகிவருதலும் உரித்தாகும். ஐயம் குறிப்புரிச் சொல். கரிப்பு பண்புரிச் சொல். எ-டு : 'கடுத்தனள் அல்லளோ அன்னை" எனவும் "கடிமிளகு தின்ற கல்லா மந்தி எனவும் வரும். "கடா" என்பது இதனடியாகப் பிறந்த பெயராகும் (கடா-ஐயவினா).

சூ. 386 : ஐ வியப்பாகும் (89)

உரை : ஐ என்னும் குறிப்புரிச்சொல் வியப்பென்னும் பொருட்காகி வரும் எ-டு : ஐதே காமம் யானே...(நற்-143) எனவரும்- இதுபெயர்ப்போலியாக வரும்

சூ. 387 : முனைவு முனிவாகும் [90]

உரை : முனைவு என்னும் குறிப்புரிச் சொல் முனிதலென்னும் பொருட்காகி வரும். எ-டு : சேற்று நிலை முனைஇய செங்கட் காரான் (அகம்-46) எனவரும். முனை-முன்னர்-முனைந்தான்-முற்பட்டான் எனவரும் பெயர்-வினைகள் வேறு இது வேறு.

சூ. 388 : வையே கூர்மை (91)

உரை : வை என்னும் குறிப்புரிச் சொல் கூர்மை என்னும் பொருள்பற்றி வரும். எ-டு : வைந்நுனைப்பகழி (முல்லை-73) எனவரும். இது பெயர்ப் போலியாகவரும்.

சூ. 389 : எறுழ் வலியாகும் [92]

உரை : எறுழ் என்னும் குறிப்புரிச் சொல் வலிமை என்னும் பொருட்காகிவரும். எ-டு : போரெறுழ் திணி தோள் (பெரும்பாண்-63) எனவரும். இது பெயர்ப் போலியாகவரும்.

சூ 390 : மெய்பெறக் கிளந்த உரிச்சொல்லெல்லாம்
முன்னும் பின்னும் வருபவை நாடி
ஒத்தமொழியாற் புணர்த்தனர் உணர்த்தல்
தத்தம் மரபிற் றோன்றுமன் பொருளே [93]

க-து : பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்தி......எச்சொல்லாயினும் பொருள் வேறு கிளத்தல் (உரி-1) என்னும் நூற்பா உரிச் சொற்குப் பொருளுணர்த்துமாறு கூறிற்று. இச்சூத்திரம் ஓர் உரிச்சொல் பல பொருட்கும் பல உரிச்சொற்கள் ஒரு பொருட்கும் உரிமைபெற்று வருங்கால் அவ்வுரிச்சொற்களை இருவகை வழக்கினும் ஒருவன் வழங்குமாறு கூறுகின்றது.

உரை : குறிப்பினும் பண்பினும் இசையினும் தோன்றி நெறிப் படவாராக் குறைச் சொற்கிளவிகளை, எழுத்துக்களைக் கூட்டி முதனிலைச் சொல்லாக வடிவமைத்து இதுகாறும் கிளந்து ஓதப் பெற்ற உரிச்சொற்கள் எல்லாவற்றையும், கூறுவோன் அவற்றிற்கு முன்னும் பின்னும் வருவனவற்றை ஆராய்ந்து திரிபுபடாது பொருள் தருதற்கு ஒத்தமொழிகளொடு கூட்டி உணர்த்துக. அங்ஙனம் உணர்த்தின் கேட்போர்க்குமுறையானே தத்தம் பொருள் விளங்கித்தோன்றும்.

என்றது ; இவ் உரிச்சொற்களைத் தொடர்மொழியுள் அமைத்துக் கூறுவோன் கேட்போர்க்குப் பொருள் திரிபின்றி விளங்குமாறு அவற்றின் முன்னும் பின்னும் ஏற்புடைய சொற்களை அமைத்துக் கூறுக என்றவாறு. உரிச்சொல் பெயரினும் வினையினும் மெய்தடுமாறும் நிலை நீங்கி ஒன்றற் குரித்தாகவும் பெயர் வினைகட்கு முதனிலையாகவும், அடை யாகவும் தனித்தும் வருவனவாகும் என மேற்கூறப்பட்டமை தோன்ற ''மெய்பெறக் கிளந்த உரிச்சொல் எல்லாம்'' என்றார்.

தத்தம் மரபிற் பொருள் தோன்றுமென்றது ''தத்தம்மரபின் சென்று நிலை மருங்கு'' என முதற்சூத்திரத்துக்கூறிய நிலை யினையாம். ''ஒத்தமொழியாற் புணர்த்தனர் உணர்த்தல்'' எனப் பொதுப்படக் கூறினாரேனும் ஏற்புழிக் கோடலான் ஒரு சொல் பலபொருட்காகி வரும் என்றவற்றையே கொள்க.

உணர்த்தும் முறைமையாவது: 'தட' என்னும் உரிச்சொல் பெருமை-கோட்டம் என்னும் பொருள்கட்கு உரியது. அவற்றுள் பெருமை என்னும் பொருளை உணர்த்தக்கருதின் தடந்தோள்வீரன், தடக்கை முருகன், தடமலை என்றும், கோட்டம் என்னும் பொருளை உணர்த்தக் கருதின். தடந்தாள் நாரை, தடமருப்பெருமை . என்றும், பின்வரும் சொற்களைப் பொருந்த அமைத்தும் அவ்வாறே செல்லல் என்னும் சொல் தொழிற்பெயராயும், முன்னிலை வினையாயும் உரிச்சொல்லாயும் வருதலின் கருதிய பொருள் விளங்கித்தோன்ற, வள்ளியோர்பாற் செல்லல் நன்று என்றும், மதியாதார் முற்றம் மறந்தும் நீ செல்லல்! என்றும், மணங்கமழ் வியன்மார்பு அணங்கிய செல்லல் என்றும் முன்னும்பின்னும் பொருந்தும் சொற்களைக்கூட்டியும் உணர்த்தலாம். பிறவும் இவ்வாறே கூறல் வேண்டுமென்க.

சூ. 391 : கூறிய கிளவிப் பொருள்நிலை யல்ல
வேறுபிற தோன்றினும் அவற்றொடுங்கொளலே (94)

க-து : மேல் விதந்து கூறிய உரிச்சொற்களின் பொருள்பற்றியதொரு புறனடை கூறுகின்றது.

உரை : உரு என்பது முதலாக எறும் என்பதீறாகக் கூறப் பெற்ற உரிச்சொற்களுக்கு ஓதிய பொருள் நிலை அல்லாதனவாய் வேறுபிற பொருள் சான்றோர் வழக்கிற் றோன்றிவரினும் அவற்றையும் கூறப்பட்டனவற்றொடு கொள்க. சொல்லாக்கம் உயர்ந்தோர்மாட்டாய்க் காலந்தொறும் அமைந்து வருதலின் ''தோன்றினும்'' என எதிர்கால வாய்பாட்டாற் கூறினார்.

எ-டு : ''புரைதீர் கேள்வி'' என்புழிப் புரைஎன்பது குற்றம் என்னும் பொருள் குறித்து நின்றது. கழுமமுடித்த கண்கூடுகூழை என்புழிக் கழுமம் என்பது திரட்சி என்னும் பொருள் குறித்து நின்றது. 'நுணங்கு நுண் கொடிமின்னார்' என்புழி 'நுணங்கு' என்பது நுடக்கம் என்னும் குறிப்புணர்த்தி நின்றது. கடிநாறுபூந்துணர் என்புழிக் கடி என்பது மணத்தல் என்னும் குறிப்புணர்த்தி நின்றது. கடிமுரசு என்புழி ஆர்த்தல் என்னும் இசைப்பொருள் உணர்த்தி நின்றது. பிறவும் பிறபொருள் பற்றிவரின் இவ்வாறே கண்டுகொள்க.

## சூ. 392 : பொருட்குப் பொருள் தெரியின் அதுவரம்பின்றே (95)

க-து : ''எச்சொல்லாயினும் பொருள் வேறு கிளத்தல்'' (உரி 1) எனவும் ''ஒத்த மொழியாற் புணர்த்தனர் உணர்த்தல்'' (சூ-90) எனவும் 'கிளத்துரைக்க', எனவும் 'உணர்ந்து உணர்த்துக' எனவும் கூறிய உரிச்சொற்களை உணர்த்தும் மரபு கூறுமுகத்தான் பொருட்குப் பொருள் தெரிதல் கடை போகாதென சொற்பிறப்பாய்வுக்கு வரையறை கூறுகின்றது. இச்சூத்திர முதலாக ஐந்து சூத்திரங்கள் உரிச்சொற்களைப் பற்றிய ஒழிப்பிலக்கணமாகும்.

உரை : நெறிப்படவாராக் குறைச் சொற்கள் இசை குறிப்பு பண்பு என்னும் அடிப்படையிற்றோன்றிப் பொருட்குறை (ஏற்ற எழுத்தினைக் கூட்ட உரிச் சொல்லாய் நிரம்பியவழிப் பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்தி உணர்த்துங்கால், ஓர் உரிச்சொல்லின் பொருளாக உரைக்கப் பெற்ற சொல்லின்பொருள் யாதெனத் தொடர்ந்து ஆராயப்புகின் அவ் ஆராய்ச்சிக்கு வரம்பின்றாம்.

பொருளுணர்த்தும் சொல்லைப் பொருள் என்றார். ஒரு சொல்லின் பொருள்நிலையைப் பிறிதொரு சொல்லான் உணர்த்தியவழி உணர்த்திய சொல்லின் பொருள் யாதென வினவின் பிறிதொரு சொல்லான் உணர்த்தல் வேண்டும்,

அங்ஙனம் மேலும் மேலும் கூறும் சொற்களின் பொருளை ஆராய்ந்து கொண்டே செல்லின் அவ்வினாவிற்கோர் எல்லையின்றாகும் என்பார் "வரம்பின்றே" என்றார். இதனான் சொல்லாராய்ச்சி ஒரு வரம்பிற்கு உட்பட்டதாக அமைதல் வேண்டும் என உணர்த்தப்பட்டது.

## சூ. 393 : பொருட்குத் திரிபில்லை உணர்த்த வல்லின்

க-து : சொற்பொருள் உணர்த்துவோன் உணர்த்தும் திண்மையுடையனாதல் வேண்டும் என்கின்றது.

உரை : பொருட்குப் பொருள்தெரியும் நிலைமை நேர்வது ஓர் உரிச்சொல்லின் பொருளைப் பிறிதொரு சொல்லால் உணர்த்தியவழிக் கேட்போற்கு அதுவும் புலனாகாத போதன்றே? ஆதலின் உணர்த்துவோன் கேட்பவன் உணரும் வாயிலறிந்து உணர்த்தவல்லனாயின் தான் கூறிய சொற்பொருட்குத் திரிபின்றாம். எனவே, கேட்போன் திரிபின்றி உணரும் என்றவாறு.

உணர்த்தும் வன்மையாவது: உறுகால் என்பதற்கு மிகுதி என்னும் பொருள் கருதிக் கூறுமிடத்துக் கேட்போன் மிகுதி என்னும் சொற்பொருளை அறியான் எனத் தெரியின், மிகுந்த காற்று எனவாளா கூறாமல் மரங்கள் சாயுமாறு வீசும் மிகுந்த காற்று எனத் தொடர்மொழியான் உணர்த்தலும், புயல் போலும் மிகுந்த காற்று என உவம வாயிலாக உணர்த்தலும், அவன் திரிபின்றி உணர்தற்கேற்ற பிற வாயிலான் உணர்த்தலுமாம். தொடர் மொழியாற் கூறுதலாவது மிகுதி என்னும் ஒரு சொல்லாற் கூறாமல் 'அளவு கடந்த' என்றாற்போலப் பல சொற்களைக் கூட்டிக் கூறுதலாம்.

## சூ. 394 : உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே

க-து : உணர்த்தல் வன்மை வேண்டுமென்பதற்கோர் ஏதுக் கூறுகின்றது.

உரை : சொற்பொருள் உணர்த்துங்கால் அதனை உணர்வோரது உணரும்வாயில் அவரது அறிவு நிலையை வலியாக உடையதாகும்.

என்றது; உணர்வோரது அறிவுவன்மைக்கேற்ப உணர்த்தல் வேண்டும் என்பதும், அங்ஙனம் உணர்த்தின் உணர்த்தும் பொருட்குத் திரிபில்லை என்பதும் கூறியவாறு.

சூ. 395 : மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா (98)

க-து : சொற்பொருளை, வல்லோன் உணர்ந்து உணர்த்தல் வேண்டும் என்பதற்குக் காரணங் கூறுகின்றது.

உரை : உரிச்சொல்லாகி வரும் மொழியினது பொருட்கு ஓதப்பெற்ற காரணங்கள் கண்கூடாக (விழிப்ப)த் தோன்றுதல் இலவாகும். [கண்கூடாதல்-வெளிப்படையாக விளங்குதல்.]

வெளிப்படையாகத் தோன்றா எனவே கருதல் முதலிய அளவைகளான் தோன்றுமென்பதாயிற்று. ஓரெழுத்துமொழி முதலாகிய மூன்றும் பொருளான் முழுமை எய்திய வழியே அவை மொழி எனப்படுமாதலின் மொழி என்பது காரணக்குறியீடாதல் தேற்றம். நிரம்பிய உரிச்சொற்கள் குறைச்சொற்களின் பொருட் குறை கூட்ட முழுமை பெற்றுத் நிகழ்வனவாதாலின் அந்நுண்மை தோன்றச் சொற்பொருட்காரணம் என்னாமல் மொழிப்பொருட் காரணம் என்றார். அக்காரணங்கள் இசையும் குறிப்பும் பண்பு மாகிய மூன்றென ஓதப்பட்டமையான் தோன்றா எனப் பன்மையாற்கூறினார்.

இந்நான்கு சூத்திரங்களும் உரிச்சொல்லுக்குரியவாய் ஓதப் பெற்றனவாயினும் இம்மரபுகள் ஏனைய சொற்களுக்கும் உரியவாகும். என்னை? எல்லாச் சொற்களுக்கும் அடிமனை உரிச்சொற்களேயாதலின் என்க.

உறுகால் என்புழி 'உறு' என்னும் சொல் குறிப்பு அடிப்படை யாகத் தோன்றியதென்பதனை இயல்பான காற்று மிகாது சலிக்கும் நிலைமையொடு ஒட்டியும் உற் என்னும் உணர்வை ஒட்டியும் உணரவேண்டுதலானும், "மையில் வாண்முகம்பசப் பூரும்மே" என்புழிச் 'பசப்பு' என்னும் சொல் நிறவேறுபாட்டினை உணர்த்தும் பண்பு, பாசிலை என்பது போல வெளிப்படத் தோன்றாமல் முகத்தின் இயல்பாகிய ஒளிமாறி வேறு பட்டு நிற்கும் நிலையினைக் கண்டும் 'பச்' என்னும் அதன் வேர் நிலையை உணர்ந்தும் அறிய வேண்டுதலானும், கம்பலை மூதூர் என்புழிக் 'கம்பலை' என்னும் சொல் அரவப் பொருள் உணர்த்து தற்குரிய இசைக் காரணத்தை அச்சொல் அவ்விடத்து வேறு பொருட்கு இயைபின்றி நிற்கும்நிலைகண்டும் கம் அல் ஐ-(கம்பலை) என்னும் மூன்றுவேர்நிலையொடு நிற்பதைஓர்ந்தும் உணரவேண்டுதலானும் "பொருட் காரணம் விழிப்பத்தான்றா" என ஆசிரியர் கூறியதன் கருத்து விளங்கும்.

இவ்ஆராய்ச்சி இருதிணைப் பொருளையும் இடமாகக் கொண்டு தோன்றும் உரிச்சொற்கள், அங்ஙனம் தோன்றுதற் குரிய மூவகைக் காரணங்களை பற்றியதன்றிச் சொல்லுக்கும் பொருளுக்கும் உள்ள தொடர்பு பற்றியதன்று என அறிக. ஆதலின், இச்சூத்திரத்திற்கு உரையாசிரியன்மார் கூறும் விளக்கமும் இக்கால ஆய்வாளர் தரும் விளக்கமும் ஈண்டைக்கு ஏற்புடையனவல்ல எனவிடுக்க. இச்சூத்திரம் சொல்லுக்கும் பொருளுக்கும் உள்ள தொடர்பு பற்றிய ஆராய்ச்சியாயின் ஆசிரியர் இதனை ஈண்டுக் கூறாமல் "எல்லாச் சொல்லும் பொருள்குறித்தனவே" என்றதன்பின் அமைத்தோதியிருப்பார் என உணர்க.

சூ. 396 ; எழுத்துப் பிரிந்திசைத்தல் இவணியல் பின்றே

க-து உரிச்சொற்கள் முதனிலையும் இறுதிநிலையுமாகப் பிரிந்திசைத்தல் மரபன்று என்கின்றது.

உரை : (உரிச்சொற்களின் பொருட்காரணங்களை நுணுகி நோக்குமிடத்தும் நெறிப்படவாராக் குறைச்சொற்கிளவிகளின் பொருட்குறை நீக்க எழுத்துக்களைக் கூட்டி நிரப்புமிடத்தும் அவை முதனிலையும் இறுதிநிலையுமாக அமைந்து பின்னர்க்கூடி நிற்றலின் அங்ஙனம் இயைந்துள்ள முறைமையான் அவை பிரிந்து இசைக்குங்கொல் எனக் கருதற்க, உரிச்சொல்லின்கண் நிற்கும் எழுத்துக்கள் முதனிலையும் இறுதி நிலையுமாகப் பிரிந்திசைத்தல் இலக்கண நெறியின்றாம்.

என்றது; உரிச்சொற்களைப்பிரித்துப்புணர்ச்சி விதிகாணுதல் கூடாது என்றவாறாம். 'இவண் இயல்பின்றே' என்றதனான் ஏனைப் பெயர்வினைகளிடத்துப் பிரித்துக்காணுதல் இயல்பாம் என்பது உய்த்துணரப்படும். ஈண்டுப் பெயர் என்றது ஒட்டுப் பெயர்ச்சொற்களை, இதனைச் "சொல்வரைந்தறியப் பிரித்தனர் காட்டல்" என்பதன் பாற்படுத்துக் கண்டு கொள்க.

அங்ஙனமாயினும் ஒரு சொல்லாக நிற்கும் பெயர்ச்சொல், வினைச்சொற்கள் நிறுத்த சொல்லும் குறித்து வருகிளவியுமாகப் புணர்ச்சிவிதிகாணுதற்கு ஏலா என்பதை ஆங்கந்நான்கே மொழி புணரியல்பே (எழுத்து புணர்-6) என்பதனான் அறிக. அவை பிரிந்திசைக்கும் என்பதனை "னஃகான் ஒற்றே" (கிளவி-5) "அம்மாம் எம்மேம் என்னும் கிளவியும்" (வினை-5) என்பவை முதலாக ஓதிய சூத்திரங்களான் உணர்க.

சில எடுத்துக் காட்டுக்கள் : உறு என்னும் உரிச்சொல் உற் என்னும் குறைச்சொல் உகரம் பெற்று நிரம்பியதாயினும் அது புணரியல்விதிப்படி உற்று என ஆகாமையுணர்க. உரு நனி முதலியனவும் அன்ன. (எறு + ஊழ்) ஏறுழ் என்றாற் போல்வன மருவி நின்றனவாம். இங்ஙனம் பெயர்களுள்ளும் நிலம் (நில் + அம்) கனி (கன் + இ) மரம் (மரு + அம்) கொடி (கொடு + இ) மங்கலம் (மண் + கலம்) எனப் புணரியல் விதிகட்கு மாறாயும் மருஉவாயும் அமைந்தன. வினைகளுள்ளும் செய (செய் + அ) உள (உள் + அ) கண்டு (காண் + து) கொணா (கொண்டு + வா) என வந்தனவும் அன்ன.

இனி, பிரிந்திசைப்பன வருமாறு : நாடன் (நாடு + அன்) ஊரன் (ஊர் + அன்) மலையன் (மலை + அன்) கொள்பவன் (கொள் + ப் + அன்) காண்பான் (காண் + ப் + ஆன்) அரசன் (அரசு + அன்) ஆயன் (ஆ + அன்) எனவரும். (யகரம் உடம்படுமெய்)

சூ. 397 : அன்ன பிறவும் கிளந்தன அல்ல
பன்முறை யானும் பரந்தன வரூஉம்
உரிச்சொல் எல்லாம் பொருட்குறை கூட்ட
இயன்ற மருங்கின் இனைத்தென அறியும்
வரம்புதமக் கின்மையின் வழிநனி கடைப்பிடித்து
ஓம்படை ஆணையிற் கிளந்தவற் றியலான்
பாங்குற உணர்தல் என்மனார் புலவர் [100]

இதனைப், பொருட்குறை கூட்டஇயன்ற மருங்கின், கிளந்தன அல்ல அன்னபிறவும் பன்முறையானும் பரந்தன வரூஉம் உரிச்சொல்லெல்லாம், இனைத்தென அறியும் வரம்பு தமக்கின் மையின், ஓம்படை ஆணையிற் கிளந்தவற்றியலான் வழிநனி கடைப்பிடித்து பாங்குற உணர்தல் என்மனார் புலவர் எனக் கூட்டிப் பொருள் கொள்க.

**கு-து :** உரிச்சொற்களுக்கெல்லாம் ஆவதொரு புறனடை கூறுகின்றது.

**உரை :** நெறிப்படவாராக் குறைச் சொற்கள் பொருள் நிரம்புதற்கேற்பப் பிறஎழுத்துக்களைக் கூட்டலான், அச்சொற் களின் வடிவமும் பொருளுமநிரம்பி உரிச்சொல்லாக இயலுமிடத்து, மேற்கிளந்து கூறிய சொற்கள் அல்லாத பிறவுமாய்ப் பல்வேறு நிலையிற் பரந்துபட்டு வரும், அவ் உரிச்சொற்களெல்லாம் ஒவ்வொன்றும் இத்தன்மைத்து என அறிந்து கொள்ளும் எல்லை அவைதமக்கின்மையான், தொன்னூலார் ஓம்படையாணையாற்

கிளந்து கூறிய, இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றுதலும் பெயரினும் வினையினும் மெய்தடுமாறுதலும் ஆகிய நெறியினை நன்கு கடைப்பிடித்து அவ் இலக்கணத்தான் அவற்றின் பாங்கினைப் பொருந்த உணர்ந்து கொள்க எனக் கூறுவர் புலவர்.

கிளந்தன அல்ல அன்னபிறவுமாய் வருவனவற்றுட் சிலவருமாறு : 'இரும் (இருமை) என்பது கருமையும், பெருமையுமாகிய பண்புணர்த்தி வருதலும், 'சேண்' என்பது சேய்மையாகிய குறிப்புணர்த்தி வருதலும் 'நொறில்' என்பது நுடக்கமாகிய குறிப்பும், 'தெவிட்டல்' என்பது அடைதலாகிய குறிப்பும் 'மலிதல்' என்பது நெருங்குதலாகிய குறிப்பும் உணர்த்தி வருதலும் பிறவுமாம்.

பொருட்குறை கூட்ட நிரம்புதலாவது ;- உற்-உர்-குர் முதலாய புள்ளியீற்றுக் குறைச் சொற்கள் உகர எழுத்தைக் கூட்டலான் உறு, உரு, குரு எனவும், பய், பச் என்பவைகளை ஓர் அகரத்தைக் கூட்டலான் பய-பச (பயப்பு-பசப்பு) எனவும் உச், வய் முதலியவை ஓர் ஆகாரத்தைக் கூட்டலான் உசா, வயா, எனவும் பிண்-பண் என்பவை ஓர் ஐகாரத்தைக் கூட்டலான் பிணை, பணை எனவும் புலம், நம் என்பவை ஓர் உயிர் மெய்யைக் கூட்டலான் புலம்பு - நம்பு எனவும் 'சீர்' என்பது 'ந்தி' என இரண்டெழுத்தைக் கூட்டலான் சீர்த்தி எனவும் சொல்வடிவும், பொருள் நிலையும் நிரம்பி நிற்றலாம். செல், இன், சாய், மல், முதலியவை அல் என்னும் ஈரெழுத்தாலாகிய ஓர் அசையினைக் கூட்ட, செல்லல், இன்னல், சாயல், மல்லல் எனவும் 'பட்' என்பது அர் என்னும் அசையைக் கூட்ட, படர் எனவும் இலம் என்பது பாடு என்னும் அசையைக் கூட்ட இலம்பாடு எனவும் பொருள் நிறைந்து நின்றமை காண்க.

இனி; கூர் வார், வாள், தெவ், முதலியவை பிற எழுத்துக் கூட்ட வேண்டாது நின்றாங்குநின்று வடிவும் பொருளும்நிரம்பி அமைந்தனவாம். ஏ, வை, ஐ, கழ, மழ எனவரும் உயிரீற்றுச் சொற்களும் அவ்வாறே பிற எழுத்து வேண்டாது நிரம்பி நின்றனவாம். பையுள் (பை + உள்) அலமரல் (அலம் + அர் + இல்) தெருமரல் (தெரும் + அர் + அல்) கம்பலை (கர் + ப் + அல் + ஐ) கெடவரல் (கெட + வர் + அல்) என்பவை, ஒன்றும் பலவுமாகிய எழுத்தும் அசையும் கூடி நிரம்பிநின்றனவாம். உரிச்சொற்கள் இங்ஙனம் ஓரெழுத்துமொழி வடிவாகவும், பெயர் வடிவாகவும், தொழில்முதனிலை வடிவாகவும், தொழிற்பெயர் வடிவாகவும், எச்சவினை வடிவாகவும் பல்வேறு நிலையில் நிரம்பி வருதலின்

'பன்முறையானும் பரந்தன வருஉம்' என்றும் அங்ஙனம் வரையறையின்றி வருதலின் "வரம்புதமக்கின்மையின்" என்றும் கூறினார்.

வழிநனி கடைப்பிடித்தலாவது; நெறிப்படவாராக் குறைச்சொற் கிளவி குறிப்பினும் பண்பினும் இசையினும் தோன்றி நிரம்பிப் பெயரினும் வினையினும் மெய்தடுமாறி ஒரு சொல் பல பொருட்கும் பலசொல் ஒரு பொருட்கும் உரிமைபெற்று நல்லிசைப் புலவோர்தம் வழக்கினுள் வருவனவற்றை முன்னும் பின்னும் வரும் சொற்களையும் 'சென்று நிலை மருங்கினையும்' அறிந்துணர்தலாம்.

ஓம்படையாணையாவது: 'பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்திப் பொருள் வேறு கிளத்தல்' எனவும், 'ஒத்தமொழியாற் புணர்த்தனர் உணர்த்தல்' எனவும் கூறியவற்றையாம். புலவர் என்றது தொன்னூலாசியன்மாரை. நிரம்பியும் நிரம்பாதும் வரும் உரிச்சொற்களின் முதனிலைகளே (வேர் அல்லது அடி) எல்லாச் சொற்களுக்கும் அடிமணையாதலின் உரிச்சொல்லின் அமைதியினையும் இயல்பினையும் பல்வேறு எடுத்துக் காட்டுக் களொடு இங்ஙனம் ஆசிரியர் விரித்து ஓதுவாராயினார்.

இவ்வியலிற் கூறப்பெற்ற இலக்கண நுண்மைகளையும் ஒண்மைகளையும் உரையாசிரியன்மாரும் இடைக்கால நூலாசிரியன்மாரும் ஓராமல் நெகிழவிட்ட மையான் சொல்லாய்வு முறை திசைமாறிய தென்க.

உரியியல் முற்றியது

## 9. எச்சவியல்

எச்சமாவது எஞ்சி நிற்கும் பொருள். அஃது ஈண்டுச் சொல்லிலக்கணம் பற்றி இது காறும் கூறியவற்றுள் எஞ்சிநின்ற இலக்கணமரபுகளை ஆகுபெயரான் உணர்த்தி நின்றது.

அவையாவன: செய்யுளாக்கத்தின்கண் பெயர் முதலாய நால்வகைச் சொற்களும் பொருள்விளக்கும் முறைமையான் வேறு பெயர்பெற்று வழங்குமாறும் அவற்றின் இயல்புகளும் அவை செய்யுட்கண் கிடக்குங்கால் அவற்றை இயைத்துப் பொருள் காணுமாறும், தனிச் சொற்கள் இரண்டு முதலாகக் கூடித் தொகையாயும் அடுக்காயும் நின்று பொருள் உணர்த்துமாறும்,

சொற்கள் அவாய்நிலைபட எச்சப்பட்டு நின்றும், முடிந்தும் பொருள் உணர்த்துமாறும் நால்வகைச் சொற்களும் பல்வேறு குறிப்புக்களான் பொருள்தருமாறும் பற்றிய இலக்கணங்களும் இவ்வதிகாரத்திற்குரிய புறனடையுமாம்.

சூ. 398 : இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே (1)

க-து : நால்வகைச் சொற்களும் கருவியாகப் ''பாட்டுரைநூல்'' [செய்யு -75] முதலாய எழுவகைச் செய்யுட்களைப் புனைந்து கூறுங்கால் ஆண்டு மாத்திரை முதலாய உறுப்புக்களமையச் சொற்கள் ஈட்டப்படுதலின் அச்சொற்கள் பொருள் விளக்கும் முறைமையானும் இனக்கூறு பாட்டானும் அவை வேறு குறியீடுகளைப் பெறுமாறும் அவற்றின் இலக்கணமும் கூறத் தொடங்கி, இச் சூத்திரத்தான் செய்யுட் குறியீடாக வரும் சொற்களின் பெயரும், முறையும், தொகையும் கூறுகின்றார்,

உரை : செய்யுளீட்டத்திற்குரிய சொல் இயற்சொல் திரிசொல், திசைச் சொல், வடசொல் எனப்படும் அவ்வளவிற்றே யாம். 'சொல்' என்றது இன (சாதி) ஒருமை, அதனான் அனைத்தே என்றார்.

சூ. 399 : அவற்றுள்
இயற்சொற் றாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை இசைக்கும் சொல்லே

க-து : இயற்சொல்லின் இயல்பும் அது வழங்குமிடமும் கூறுகின்றது.

பொருள் : மேற்கூறிய செய்யுட்சொல் நான்கனுள் இயற் சொல் எனப்பட்டவைதாம் செந்தமிழ் நிலத்து மக்கள் வழங்கும் வழக்கொடு பொருந்தி ஏனைய நிலத்தும் தம்பொருள் திரியாமல் உணர்த்தும் சொல்லாகும்.

பிறசொற் கொணர்ந்து பொருளுணர்த்த வேண்டாது கற்றோர்க்கும் மற்றோர்க்கும் ஒப்ப இயல்பாகப் பொருள் விளங்க நிற்றலின் ''இயற்சொல்'' எனப்பட்டது (நிலம் - ஆகுபெயர்) தம்பொருள் வழாமை என்றது, திரிபின்றி யாண்டும் ஒருபொருளே உணர்த்தி நிற்றலையாம்.

இனி, பாயிரத்துள் செந்தமிழியற்கை சிவணிய நிலம் என்றது செய்யுளிலக்கியத்தையும் ஈண்டுச் செந்தமிழ் நிலம் என்றது நாட்டினையும் குறிக்குமாறென்னை எனின்? பாயிரத்துள் ''செந் தமிழியற்கை சிவணிய நிலத்தொடு முந்துநூல் கண்டு'' என்புழி

நிலத்தொடு என்னும் ஒடுச்சொல் முந்துநூல்களைத் தழுவிநிற்ற லின் முந்து நூலாகிய இலக்கண நூல்களொடு ஒப்ப எண்ணுதற் குரியவை செய்யுள் இலக்கியங்களேயாம். நிலம் என்பது செய்யுளைக் குறிக்கும் என்பதனைப் "பாட்டுரைநூலே வாய் மொழி பிசியே அங்கதம் முது சொலொடு அவ்வேழ் நிலத்தும் (செய்யு-75) என்பதனான் அறிக. ஈண்டுநாட்டினைக் குறித்து நிற்றலைப்பின்னர் திசைச்சொல்லை விளக்குமிடத்துச் செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும், தங்குறிப்பினவே திசைச்சொற்கிளவி என மட்பரப்பாகிய நிலத்தொடு சேர்த்துக் கூறுதலானறிக.

நிலந்தருதிருவிற் பாண்டியன் புரப்ப நூலோர் அவை அமைந்துள்ளதும் தொல்காப்பியம் அரங்கேறியதும், நல்லிசைப் புலவோர் கூடிச் செந்தமிழ் ஆய்வதும் ஆக்குவதும் நிகழும் நாடாதலின் பாண்டிநாடு செந்தமிழ்நாடு எனப்பட்டது. "வட வேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகம்", 'தண்பொழில் வரைப்பின் வண்புகழ் மூவர்க்கும்' (செய்-75) உரியதாய் முல்லை முதலாக ஐவகை நிலக்கூறுகளும் அமைந்த தாகலின் அவ்வந்நிலத்துக் கருப்பொருள்களும் இயற்கை யமைப்பும் மக்கள் ஒழுகலாறும் ஆட்சி உரிமையும் பற்றித் தமிழகம் பதின்மூன்று பகுதிகளாக வழங்கப் பெற்றுள்ளது. அவற்றுள் நல்லிசைப்புலவோர் கூடித் தமிழாராயும் அவையம் (கூடல்-சங்கம்) அமைந்திருந்த சிறப்பான் பாண்டி நாடு செந்தமிழ் நிலம் எனப்பட்டது என்க.

ஏனைய நிலங்களாவன: (1) தென்பாண்டி நாடு (2) குட்ட நாடு (3) குடநாடு (4) கற்கா நாடு (5) வேணாடு (6) பூழிநாடு (7) பன்றிநாடு (8) அருவாநாடு (9) அருவாவடதலை நாடு (10) சீதநாடு (11) மலைநாடு (12) புனல்நாடு என்பனவாம்.

தொல்காப்பியம் அரங்கேறிய நிலந்தருதிருவிற் பாண்டியன் காலத்து அமைந்திருந்த செந்தமிழ் நிலஞ் சேர்ந்த பன்னிரு நிலங்களை வரைந்தறிதற்கு முழுமையான சான்றுகள் இற்றைக்குக் கிட்டாமையான் மேற் கூறிய விளக்கம் சங்க இலக்கியங்களொடு ஒருவாறு ஒப்பநோக்கிக் கூறப்பட்டது.

இயற்சொல்லுக்கு எடுத்துக்காட்டுக்கள் வருமாறு ;- நம்பி-நங்கை, புலவர், மக்கள், அன்னை மகன் வடுகன், நாகன், கண்ணன், - நிலம், நீர், மலை, மா, மரம், பறவை, மீன், நாடு, நகர், நாள், காலை, மாலை, வேனில், கண், கால், வாய். கருமை, செம்மை, வட்டம், கோணம், இருத்தல், கிடத்தல் எனவரும் பெயர்ச் சொற்களும். உண்டான், சென்றான், கரியன்,

பொன்னன், காணும், கேட்கும், வாழ்க, உண்டு, இல்லை எனவரும் வினைச் சொற்களும் அவை போல்வன பிறவுமாம். இடையும் உரியும் பெயர் வினைகளுள் அடங்கும் என மேற்கூறிய விளக்கத்தைக் கடைப்பிடிக்க:

இவற்றுள் மாலை என்பது பொழுதையும் அலங்கலையும் குறிக்குங்கால் இயற்சொல்லாம், மயக்கம், இயல்பூ முதலிய பொருள் குறித்து வருங்கால் திரி சொல்லாம். இங்ஙனம் சொல்லின் பொருள் வரவிற்கேற்ப இயற்சொல் திரிசொல் என்பவை தம்முள் மயங்குமென அறிக.

சூ, 400 : ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
இருபாற் றென்ப திரிசொற் கிளவி (3)

க-து : திரிசொல்லின் இயல்பும் வகையும் கூறுகின்றது.

உரை : அந்நான்கனுள் திரிசொல் எனப்படும் செய்யுட் சொல் ஒரு பொருளைக் குறித்த வேறு வேறு சொல்லாகியும், வேறு வேறு பொருளைக் குறித்த ஒரு சொல்லாகியும் வருதலாகிய இரண்டு பாகுபாட்டினது என்று கூறுவர் ஆசிரியர்.

திரிசொல் என்பது இயற்சொல் என்பதன் மறையாகலின் இயற்சொல்லுக்கு ஓதிய இலக்கணத்தை மறுத்துக் கொள்வது இதன் இலக்கணம்என்பது அப்பெயரானே புலப்படுதலான் அதன் பாகுபாடுமட்டுமே விரித்துக் கூறப்பட்டதென்க. இஃது உய்த்துணர வைப்பென்னும் உத்தியின் பாற்படும். எனவே, இயற்சொல்போல யாண்டும் ஒருபொருளேதாராமல் ஒருகால் ஒரு பொருளையும் பிறிதொருகால் வேறு பொருளையும் இடம் நோக்கித் தந்து அரிதுணர நிற்றல் இதன் இலக்கணம் என்பது புலனாம்.

திரிதல் என்றது யாவரும் உணரப் பொருள் விளங்க நிற்கும் இயல்பினின்று வேறுபடுதலை உணர்த்தி நின்றது. இதனைப் "பொருட்குத்திரிபில்லை உணர்த்தவல்லின்" (உரி-94- ) என்பதனானும் அறிக.

ஒருசார் உரையாளர் திரிதல் என்பதற்குச் சொல் வடிவு திரிதல எனப் பொருள் கொண்டு, உறுப்புத் திரிதலும் - முழுதும் திரிதலும் எனத்திரிபு இரு வகைப்படும் எனக்கூறுவர். அவர் மாற்று நிலைச்சொற்களை (பரியாயப் பெயர்; முழுதுந்திரிந்தன

வாகக் கூறுவர். அவ்விளக்கம் மொழியியலுக்கும் இந்நூல் நெறிக்கும் ஒவ்வொமையை ஓர்ந்து தெளிக.

திரிசொற்களுக்குச் சில எடுத்துக் காட்டு வருமாறு : வெற்பு, விலங்கல், ஓங்கல் என்பவை, மலை என்னும் ஒருபொருள் குறித்து வந்தன. ஏறு, ஏற்றை, போத்து என்பவை ஆண்பால் என்னும் ஒருபொருள் குறித்து வந்தது, வண்டு என்பது அறுகாற்சிறுபறவை -வளையல். தேர்உருள் முதலிய பலபொருள் குறித்து வந்தது. இவை பெயர்பற்றி வந்ததிரி சொற்கள். பிணித்தான், யாத்தான், வீக்கினான் என்பவை கட்டினான் என்னும் ஒரு பொருள் குறித்து வந்தன. வரைந்தான் என்பது எழுதினான், மணந்தான் வரையறுத்தான் நீங்கினான் என்னும் பலபொருள் குறித்து நின்றது. இவை வினைச் சொல் பற்றி வந்த திரி சொற்கள்.

இனி; கொங்கு, இறால், அளகு, நெய்த்தோர், அதோளி போன்ற பெயற்சொற்களும், உண்கு, காண்கு, வந்தித்தை, சென்றித்தை, என்றிசினோர், கண்டிசினோர், போன்ற வினைச் சொற்களும் இயல்பாக யாவரும் பொருள் உணர நில்லாது அரிதுணர் பொருளவாய்க் கற்றோர்க்கே விளங்க நிற்றலின் அவைபோல்வன திரிசொல்லின் பாற்படுமென்க. உண்ணாய் என்பது உடன்பாடும் எதிர்மறையும் ஒருங்குபற்றி நிற்றலும் செய்யும் என்னும் முற்று நான்கு பாலும் பற்றி நிற்றலும் கருதி இன்னோரன்னவற்றையும் திரிசொல் என்பாருமுளர்.

பொருள் வேறுபாட்டானன்றிச் சொற்கள் பலவாகா ஆதலின் ஒவ்வொரு சொல்லும் நிமித்த வேறுபாடுடையனவேயாம். ஈண்டு ஒருபொருள் குறித்த பல சொல் என்றது. செய்யுட்கண் அவை ஒத்தபொருள் பயக்கும்வண்ணம் மாற்றுநிலை (பரியாய)ச் சொற்களாகப் புலவோரான் ஆளப்படுதல் நோக்கி யென அறிக. அஃதாவது, மலையைக் குறித்து வரும் வெற்பு என்பது செறிவை யும், ஓங்கல் என்பது ஓக்கத்தையும் விலங்கல் என்பது நிலத்தை ஊடறுத்து நிற்றலையும் குறிக்கும், இவையாவும் மலையின் பண்புகளேயாதலின் ஒரு பொருளன என்ப. இவ்வாறே ஒரு சொல் பல பொருளைக் குறித்தற்]கண்ணும் அவ்வப் பொருள் களின் மாட்டு அமைந்துள்ள ஒத்ததொரு பண்பினைக் கருதி நிற்கும். அஃதாவது வண்டு என்பது வள் (வளைவு) என்னும் குறைச்சொல்லடியாகப் பிறந்ததொரு பெயராகும். இது சுழன்று பறத்தலான் வண்டிற்கும் வளைந்து அமைதலான் வளையலுக்கும் வளைந்து வட்டமாக அமைதலின் தேர் உருளுக்கும் பெயராயிற்று. இவற்றின் பிற பண்புகளைக் கருதின் தும்பி, தொடி, ஆழி, முதலிய வேறுவேறுசொற்களான் கூறப்படும்

இவைபற்றிய மரபுகளை ஆசிரியர் "வினைவேறுபடூஉம் பலபொரு ளொருசொல்" முதலிய சூத்திரங்களான் கிளவி யாக்கத்துள் விளங்க ஓதியுள்ளமை கண்டு கொள்க.

சூ. 401 : செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி (4)

க-து : திசைச்சொல் வருமாறு கூறுகின்றது.

உரை : செய்யுட் சொல் நான்கனுள் திசைச்சொல் எனப் பட்ட சொற்களாவன செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த ஏனைய பன்னிரண்டு நிலத்தும் தத்தங் குறிப்பினவாய் வழங்குவனவேயாம்.

அஃதாவது, அவ்வந்நிலத்து இயற்சொல்லாய் அமைந்து பிற நிலத்துள் திசைச் சொல்லாய் வழங்கும் என்றவாறு. நிலமக்கள் பெயர்ந்துறைதலன்றி நிலம் பெயர்தலின்றாகலின் திசைச் சொற்கள் அருகிவழங்கும் என்க. இக்காலத்தார் இதனை வட்டார வழக்கு எனக் கூறிக் கொள்வர்.

பன்னிருநிலம் இவை என்பது மேற் கூறப்பட்டது. ஆசிரியர் நூல் செய்த காலத்து வடவேங்கடம் தென்குமரி ஆயிடைக் கிடந்த தமிழ் கூறும் நல்லுலகம் இற்றைக்குச் செம்பாதி தமிழ் திரிந்து கன்னடமும் களிதெலுங்கும் கவின் மலையாளமும் துளுவும் பிறவுமாக மாறிக் கிடக்கின்றமையான் திசைச் சொற்களை வரையறுத்துக்கூறற்கு இயலாமையான் எடுத்துக் காட்டாக உரையாசிரியன்மார் காட்டினவற்றையே காட்டுதும்.

எ-டு : தென்பாண்டி நாட்டார் ஆவினையும் எருமையையும் 'பெற்றம்' என்றும், குட்டநாட்டார் 'தாயை'த் தள்ளை என்றும் குடநாட்டார் தந்தையை 'அச்சன்' என்றும் கற்கா நாட்டார் வஞ்சரைக், கையர் என்றும் சீதநாட்டார் ஏடா (எல்லா) என்பதனை எலுவன் என்றும் தோழியை இகுளை என்றும், தம் மாமி என்பதனை தந்துவை என்றும், பூழி நாட்டார் நாயினை ஞமலி என்றும் சிறு குளத்தைப் 'பாழி' என்றும் அருவா நாட்டார் செய்யைச் செறுவென்றும் சிறுகுளத்தைக் கேணி என்றும், அருவாவடதலையார் குறுணியைக் குட்டை என்றும் வழங்குப. (நச்சினார்க்கினியர் உரை) அந்தோ - கரைய, சிக்க - குளிர செப்பு - பாண்டில் (எருது) கொக்கு (மாமரம்) என்பவற்றைப் பிற நாட்டுச் சொற்களாகக் காட்டுவார் தெய்வச்சிலையார்.

சிங்களம், கருநடம், தெலிங்கம், துளு என்னும் நாடுகளின் பகுதி ஆசிரியர் காலத்துத் தமிழகமாகவே இருந்தமை பாயிரத்தாற் புலப்படுதலின் அவற்றைப்பிற மொழிச் சொற்களாகக் கருதல் முரணாகத் தோன்றுகிறது.

பன்னிரு நிலம் தமிழகத்தின் பகுதிகளே என்பதையும் திசைச்சொல் என்பவை தமிழே என்பதையும் ஓராமல், புட்பகம், சாவகம் முதலிய பிற மொழிக்குரிய அயல்நாடுகளைப் பன்னிரு நிலத்தொடு சேர்த்தும், சேர்க்காமலும் நச்சினார்க்கினியரும் தெய்வச்சிலையாரும் எண்ணிக் கணக்கிட்டுள்ளனர்.

இனி ஒரு மொழியைச் செம்மொழி என்றும் கொடுமொழி என்றும் வகுத்தல் உலகில் வேறு எம்மொழியிலும் காணப்பெறாத விபரீதமாகும். செம்மை என்பதற்குச் சிறப்பென்னும் பொருள் காணாமலும் எதிர்கால விளைவுகளை நோக்காமலும் உரையாளரும் பின்னூலாரும் இக்கொடுமையைக் கையாண்டமையான், செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலமாய தமிழகம் கொடுந்தமிழ் நிலமெனலாயிற்று. அப்பகுதி வாழும் தமிழ் மக்கள் கொடுந்தமிழ் மக்களாயினர். சமய போதகராக வந்த வீரமாமுனிவர் தம் கொள்கை பரப்புதல் வாயிலாகக் கொடுந்தமிழ் இலக்கண நூல் செய்துபோந்தார். உலகவழக்காகிய பேச்சு மொழியைக் கொடுந்தமிழ் என்பதினும் தமிழர்க்கு மானக்கேடு வேறில்லை. பின்னும் ஒருசாரார் பாண்டிநாட்டினைத் தமிழ் நிலம் என்றும், ஏனைய தமிழகப் பகுதியைத் தமிழ்திரி நிலமென்றும் கூறிச்சென்றனர்.

## வடசொல் பற்றியதொரு சிறுகுறிப்பு

குமரி முதல் இமயம் வரையிலான பாரததேயத்துள் வழங்கிய தொன்மொழிகள் வடபகுதியில் ஆரியமும் தென்பகுதியில் தமிழுமாம், அதனான் ஆரியத்தை வடமொழி என்று தமிழைத் தென்மொழி என்றும் வழங்குவர். ஆரியர்க்கும் தமிழர்க்கும் தெய்வக்கொள்கை கலையுணர்வு அரசியற் சூழல் முதலியவை காரணமாக இனக்கலப்பும் மொழிக் கலப்பும் வளர்ந்து வந்த நிலையில் பாரததேயம் முழுமைக்கும் பொதுவாக ஒரு மொழியைப் படைத்துக் கொள்ள முற்பட்டு இருதிறத்துப் பேரறிஞரானும் முயன்று உருவாக்கப்பட்டதே சமற்கிருதமொழி என்பது மொழியாய்வாளர் பலரின் ஒத்தகருத்தாகும்.

சமற்கிருதமொழி யாவர்க்கும் பொது என்னும் உணர்வு கொள்ளவேண்டித் திருந்திய ஆரியமும் தமிழுமேயன்றி

வட்டார மொழிகளையும் கலந்தே சமற்கிருதம் உருவாக்கப் பெற்றது. வட்டார மொழிகளைப் பிராகிருதம் என்பர். பிராகிருதம் என்பதற்கு இயற்கையானது முன்னையது என்பதும் பொருளாகும். பேரறிஞர்கூடித் திட்டமிட்டுப்படைக்க முற்பட்டபோது அஃது ஒலி எழுத்து முதலாகச், சொல், சொற்றொடர் சொற்புணர்ச்சி தொகைச் சொற்கள் யாப்பு முதலிய இலக்கண நெறிகள் ஈறாகச் சீர்மையாகவும் செம்மையாகவும் அமையத் தம்அறிவாற்றல் முழுமையும் பயன்படுத்தியமையின் இற்றைக்கும் அது மொழியியலாரான் பாராட்டப்பெறும் நிலையில் உள்ளது.

பேரறிஞர் யாவரும் அங்ஙனம் உருவாக்கப்பட்ட அம்மொழியிலேயே பெரிதும் இலக்கியங்களைப் படைப்பாராயினர். அதுவே கல்விமொழியாகவும் கொள்ளப்படலாயிற்று. அதனான் வட்டார மொழிகள் படிப்படியாகத் திரிந்து பல்வேறு கிளை மொழிகளாயின.

தமிழ்மொழி, சமற்கிருதம் உருவாவதற்கு முன்பே செம்மையுடையதாய் இலக்கிய இலக்கண வளமுடையதாக இருந்தமையானும் வண்புகழ் மூவரான் (சேர சோழ பாண்டியர்) போற்றிப் பேணப் பட்டமையானும் பெரிதும் திரிபுறாதது மட்டுமன்றி இலக்கண நெறிகளைச் செம்மைபடுத்திப் பல்வேறு துறையிலக்கியங்களையும் படைத்துச் செழிப்புற்று வந்தது.

அந்நிலையில் தொன்மையான பேச்சு வழக்குத்தமிழுக்கும் செம்மையான செய்யுள் வழங்குத் தமிழுக்கும் நேர்ந்து வரும் இடைவெளியைக் குறைத்துத் தமிழ்நெறி மரபினைக் காத்தல் வேண்டி ''வடவேங்கடந் தென்குமரியாயிடைத் தமிழ் கூறும் நல்லுலகத்து வழக்கும் செய்யுளும் ஆயிருமுதலின் எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிச் செந்தமியற்கை சிவணிய நிலத்தொடு முந்துநூல் கண்டு'' அவை ஓர் முறைப்பட எண்ணிப் பேரறிஞரும் ஐந்திரம் நிறைந்தவரும் அருளாளருமான தொல்காப்பியனாராற் றொகுத்து அமைக்கப்பட்டதே இத் தொல்காப்பியநூல்.

சமற்கிருதம் உருவாகத் தமிழ் பெரும்பங்கு அளித்துள்ளமையானும் தமிழ்ப்பேரறிஞர் பலர் துணை நின்றமையானும் அது தமிழர்க்கும் உரிமையுடையதாயிற்று. பல தமிழ் இலக்கியங்கள் சமற்கிருதமாக மொழி பெயர்க்கப்பட்டன. புதிய படைப்புக்கள் பல சமற்கிருதத்தில் செய்யப்பெற்றன. சமயம் தத்துவம் வானியல் கோளியல் முதலியவை சமற்கிருத்தாலேயே

இயற்றப்பட்டன. அதனால் அது தெய்வமொழி, பெருமொழி எனப் போற்றப்பட்டது.

அம்முறையான் சமற்கிருதம் என்னும் வடமொழியிற் கலந்துள்ள பழந்தமிழ்ச் சொற்கள் தமிழுக்குத் தாய உரிமை யுடையவாயின. அவை சமற்கிருத மொழிக்குரிய ஓசை ஒலிகளொடு நிற்பின் தமிழ்ச்செய்யுளுக்குரிய பா ஓசையும் புணர்ச்சிவிதிகளும் இயையாவாகலின் அவற்றைத் தமிழ் இலக்கணநெறிக்கு ஏற்பத் தமிழறிஞர் செப்பஞ்செய்து கொள்வாராயினர். அவை தமிழினின்றும் சென்று மீண்டவை என்பதுவிளங்க அதனைத் தமிழின் சொல்வகையுள் ஒன்றாகக் கொண்டனர். வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே" என்பார் தொல்காப்பியர். அங்ஙனங் கொடுத்ததைக் கொள்ளுங்கால் கொடாதன சிலவும் கொள்ள நேரும், நேரின் அவையும் அப்பெயரானே வழங்கப்பெறும் என்பது விளங்கச் "சிதைந்தனவரினும் இயைந்தன வரையார்" என்றார். இதுகாறுங் கூறியவற்றான் வடமொழி என்பது சமற்கிருதம் என்னும் மொழியைக் குறிக்கும் என்பதும் வடசொல் என்பது சமற்கிருதத்திற்குச் சென்று மீண்ட பழந்தமிழ்ச் சொல்லைக் குறிக்கும் என்பதும் விளங்கும். இவ்வரலாற்றுண்மையைப் பேரறிஞர் பி. டி. சீனிவாச ஐயங்கார் தனது 'பழங்கால இந்திய மக்கள் வாழ்க்கை' என்னும் நூலிற் பின்வருமாறு குறித்துள்ளமை யானும் தெளியலாம்.

The Dravidian Names of things and operations connected with all these arts of Peace are Native and not foreign (i. e., borrowed from Sanskrit). The question has not ate been investigated, but on enquiry it will most probably turn out That many Sankrit words connected with These arts were borrowed from the Dravidian. [Life in Ancient India P. T. S. Iyegar]

சூ. 402 : வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே [5]

க-து : வடசொல்லாமாறு கூறுகின்றது.

உரை : செய்யுட்சொல் நான்கனுள் வடசொல்லாகிவரும் சொற்களாவன சமற்கிருத மொழிக்குரிய எழுத்தொலியின் நீங்கித் தமிழெழுத்திற்குரிய ஒலியொடு புணர்ந்தமையும் சொற்களாகும்,

வடஎழுத்தாவன இருமொழிக்கும் பொதுவாய இருபத்தைந்து அல்லாத ஏனைய இருபத்தெட்டு எழுத்துக்களாம். அவையாவன; உயிர் நெடுங்கணக்கினுள் ரு, ரூ, லு, லூ, அம், அஃ, என்னும் ஆறும். மெய்வரிசையுள் "க ச ட த ப" என்னும் ஐவகை வருக்கங்களின் இடைநிற்கும் பதினைந்தும், வடமொழி நெடுங் கணக்கினுள் முப்பதாம் எழுத்து முதலாக உள்ள எட்டனுள் ளகர மொழிந்த ஏனைய ஏழுமாம்.

இவற்றுள் தமிழ் எழுத்தொலியொடு புணரத்தக்கவை ஐவருக்கங்களின் இடைநின்ற பதினைந்து எழுத்தொலிகளாம். ஏனையவை திரிந்து ஏற்புடைய தமிழெழுத்தொலியாக வரும். இருமொழிக்கும் பொதுவாக உள்ள இருபத்தைந்து எழுத்துக் களான் வரும் சொற்கள் இருமொழிக்கும் பொதுவேயாம். மற்றுச் சமற்கிருத ஓசையமைந்து தமிழ்மொழியடிப்படையிற்றோன்றிச் சமற்கிருத மொழியிற் பயின்று வருபவை மீண்டு வந்து தமிழ்ச் சொல்லாக வழங்குவனவும் வட சொல்லாகக் கொள்ளப்பெறும்.

**எ-டு :** மணி - காலம் - காரணம் - சூத்திரம் என்றாற் போல்வன. தமிழடிப்படையிற் தோன்றி சமற்கிருதத்தில் வழங்குவனவாதலின் தமிழுக்கும் உரியவாயின.

இனி, வடமொழி எழுத்தொலிமாறித் தமிழ் எழுத்தொலி யொடு புணர்ந்து வருவன வருமாறு:

2 நகம், 3 நாகம், 4 மேகம் - இவை / ககர மாகவும் 2 சலவாதி, 3 விசயம் 4 சருச்சரை-இவை சகரமாகவும் 2 பீடம், 3 சடம், 4 கூடம் - இவை டகரமாகவும் 2 தலம், 3 தினம், 4 தரை - இவை தகரமாகவும் 2 பலம், 3 பந்தம், 4 பாரம் - இவை பகரமாகவும் ஒலிக்கப் பெறும். சகரத்தின் மூன்றாம் எழுத்தொலி (ஜ) ஓரோவிடத்து யகரமாகத் திரிதலும் ஏனைய திரிந்து வருமாறும் பின்வரும் சூத்திரத்தாற் கூறுப.

**சூ. 403 :** சிதைந்தன வரினும் இயைந்தன வரையார் [6]

**க-து :** இதுவுமது.

**உரை :** நேரே தமிழ் எழுத்தொடுபுணராமல் யாதேனுமோர் தமிழ் எழுத்தொலியொடு இயைதற் கொத்தனவாய்ச் சிதைந்து வரினும் அவற்றை நீக்கமாமல் வடசொற் கிளவியாகத் தழுவிக் கொள்வர் புலவர்.

சிதைந்து வருவனவற்றுள் ஆரியத்தின் அடிப்படையில் தோன்றியனவும் கொள்க என்புபார். இமையந்தன வரினும்

என்றார். 'இயைந்தன' எனவே இயையாதன வரையப்படும். அவற்றை மொழி பெயர்த்துக் கொள்வர் என்பது செய்யுளியலுட் பெறப்படும். திரிதலாவது: மெய்ப்பிறிதாதல், மிகுதல், குன்றல், என ஓதப்பட்ட திரிபுகள். இத்திரிபு உயிருக்கும் மெய்க்கும் பொதுவென்பது எழுத்ததிகார உரையுள்கூறப் பட்டது. சில எடுத்துக் காட்டுக்கள் வருமாறு: இடபம் - மிருகம்: இவை ஆரிய எழுத்து ஏழாம் உயிர் இ. இரு எனத் திரிந்தவை. சங்கரன், வயம் எனமுப்பதாம் எழுத்துச் சகரமாக வும் யகரமாகவும் திரிந்தது. சண்முகன்-விடம் என முப்பத்தொன்றாம் மெய் சகரமாகவும் டகரமாகவும் திரிந்தது. சபை-மாதம் என முப்பத்திரண்டாம் மெய் சகரமாகவும் தகரமாக வும் திரிந்தது. அரன், மோகம், மயிடன் என முப்பத்து மூன்றாம் மெய் அகரமாகவும் கரமாகவும் யகரமாகவும்திரிந்தது.

பக்கம்-பட்சம் என முப்பந்தைந்தாம் மெய் இரு ககரமாகவும் டகரமாகவும் திரிந்தது. பிறவும் வழக்கு நோக்கி ஏற்பனவாகத் திரித்துக் கொள்ளப்பட்டனவாகும். இவையெல்லாம் மெய் பிறிதாதல் என்னும் திரிபு

இராமன்-உலோபம், அரமியம் என்பவை உயிரெழுத்து முதற்கண் மிக்கன. பிரமன், சிங்கம் போன்றவை எழுத்துக் குன்றலும் திரிதலுமாக வந்தன.

இன்னும் தியாகம், வாக்கியம், பக்குவம் அருத்தம் தசம் யூபம், பங்கயம் என்றாற் போலச் சிதைந்து இயைந்து வருவனவும் பிறவும் கண்டு கொள்க.

வடசொல் செய்யுட்குரியனவாய் ஓதப்பட்டதெனினும் நால்வகைப் பாக்களுக்குரிய ஓசைகட்கும் புணர்ச்சி விதிகட்கும் ஒப்பனவே செய்யுட்கண் கொள்ளப்பெறும் என்பதும், ஏனைய பேச்சுவழக்கினுள்ளும் உரைச்செய்யுளின் கண்ணும் கொள்ளப் பெறும் என்பதும் வழக்குநோக்கிக் கொள்க. பெரும்பான்மையும் வடசொற்கள் பெயராயும் சிறுபான்மை வினையாயும் இடைச் சொல்லாயும் வரும்.

சூ. 404 : அந்நாற் சொல்லும் தொடுக்குங் காலை
வலிக்கும்வழி வலித்தலும் மெலிக்கும்வழி மெலித்தலும்
விரிக்கும்வழி விரித்தலும் தொகுக்கும் வழித் தொகுத்தலும்
நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும்
நாட்டல் வலிய என்மனார் புலவர் [7]

கு-ரு : அந்நால்வகைச் சொற்களும் ஓசைஇயல்பு தொடைநயம் முதலியவற்றைக் கருதி அவற்றின் எழுத்தொலியையும், வடிவையும் வேறுபடுத்திக் கொள்ளுமாறு கூறுகின்றது.

உரை : மேற்கூறிய நால்வகைச் சொற்களும் செய்யுளுறுப் புக்கள் அமையத்தொடுக்கப்படுமிடத்து, அச்சொற்களுள் அமைந் துள்ள எழுத்துக்களை வலித்தலும் மெலித்தலும் விரித்தலும் தொகுத்தலும் நீட்டலும் குறுக்கலும் வேண்டுமிடத்து அங்ஙனம் வேறுபடுத்துச் செய்யுட்கண் நாட்டுதலை வலியாக உடையன என்று கூறுவர் புலவர்.

வலித்தல், மெலித்தல் எனக்கூறுமாற்றான் வேறுபாடுறுபவை எழுத்துக்களே என்பது புலனாம். இவ்வேறுபாடு (விகாரம்) சொற்கள் மாட்டு நிகழ்தலின் இதனைச் சொல்லதிகாரத்து வைத்தார் என்க. இங்ஙனம் வேறுபடுதல் செய்யுட்குச் சிறப்பைத்தருதலின் "வலிய" என்றார்.

எ-டு : தத்தங் கிளவி தம்மகப்பட்ட முத்தை வருஉங் காலந் தோன்றின் (எழு-169) இதனுள் முந்தை என்பது எதுகைநோக்கி வலிக்கப்பட்டது. தண்டையினினக் கிளி கடிவோள் பண்டைய லல்லள் மானோக்கினளே - இதனுள் தட்டை என்பது எதுகை நோக்கி மெலிக்கப்பட்டது. "சிறியிலை வெதிரின் நெல் விளையும்மே" - இதன்கண் விளையுமே என்பது சீர்நிலையும் ஓசையும் கருதி மகரம் விரிக்கப்பட்டது. சிறியவிலை என்பது அவ்வாறே சிறியிலை எனத் தொகுக்கப்பட்டது. "தீத் தொழிலேகன்றித் திரிதந் தெருவைபோற் போத்தறார் புல்லறி வினார்" — இதன்கண் பொத்தறார் என்பது மோனை நயங் கருதிப் போத்தறார் என நீட்டப்பட்டது. "இலங்கிலை வேற்றென்னன் திருத்தார் நன்றென்றேன் தியேன்" என்பதன் கண் தீயேன் என்பது வெண்பாஇறுதி அசைச்சீராதல் வேண்டித் 'தியேன்' எனக் குறுக்கப்பட்டது.

இவ்வாறே செய்யுட்கண் ஓசைநயங்கருதிப் பீச்சிலை என்பதனைப் பாசிலை எனநீட்டலும், ஆழ்ந்துபடு விழுப்புண் என்பதனை அழுந்துபடு விழுப்புண் எனக் குறுக்கலும், "வேதினவெரிநின் ஓதிமுது போத்து" என்பதன்கண் ஓந்தி என்பதனை ஓதி என இடைக்கண் குறைத்தலும், நீலமுண் துகிலிகை என்பதனை நீலுண்துகிலிகை எனக் கடைக்கண் குறைத்தலுமாக வேறுபட வருவனவெல்லாம் நாட்டல் வலிய என்னும் இச்செய்யுள் விகாரத்தில் பாற்படுத்துக்கொள்க. இனித் தொடைநயம் ஓசைநயம் முதலியவற்றைக் கருதாமல்

எழுத்துக்கள் முதலிடைகடைகளுள் குறைந்து வருபவை செய்யுள் விகாரமன்மையான் அவற்தைக் "குறைச்சொற் கிளவி குறைக்கும் வழியறிதல்" எனப்பின்னர்க் கூறுவார்.

இனி "நாட்டல் வலிய" என்றதனான் விரிந்தேவரல் வேண்டிய வேற்றுமை உருபு தொக்கு 'வேண்டார் வணக்கி' 'மழவரோட்டிய' எனவருதலும் 'குன்றிகோபம் கொடிவிடுபவளம்/ ஒண்செங்காந்தள் ஒக்கும் நின்நிறம்' எனச் செவ்வெண் தொகையின்றி வருதலும் விழுமம்சீர்மையும் சிறப்பும் இடும்பையும் (உரி-55) நொசிவு நுழைவு நுணங்கு நுண்மை (உரி-76) எனப் பயனிலை தொக்குவருதலும், தானே, தாமே, தான், தாம் என்றாற்போல அசைச்சொற்கள் கட்டுரைச் சுவைபடச் சூத்திர யாப்பின்கண் விரிந்துவருதலும் செய்யுள் விகாரமாம் எனக் கொள்க.

இனி, யாது என்பது யாவது எனவிரிதலும் யாவர் என்பது யார் எனத்தொகுதலும் பெயர் என்பது பேர் என நீளலும் மிஞிறு என்பது ஞிமிறு என எழுத்து இடம் மாறுதலும் கண்மீ என்பது மீகண் எனச் சொல் நிலைமாறுதலும் மரூஉமுடிபுகளாம். இவற்றைச் செய்யுள் விகாரமெனக் கூறுதல் பொருந்தாதென்க.

சூ. 405 : நிரனிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்று
அவைநான் கென்ப மொழிபுண ரியல்பே (8)

**க-து :** தொடை முதலிய நயங்கருதிச் சொற்கள் விகாரப்படுமாறு கூறி அந்நயங்காரணமாகச் செய்யுட்கண் முறைபிறழக்கிடக்கும் சொற்களை முறைப்படுத்துப் பொருள் கொள்ளும் இலக்கணங்கூறத் தொடங்கி இச்சூத்திரத்தான் மொழிபுணரியல்பு நான்கு வகைப்படுமெனக் கூறுகின்றார். இவற்றைப் பொருள்கோள் மரபு எனக் கூறுவர் புலவர்.

**உரை :** அந்நாற் சொற்களும் செய்யுட்கண் பொருளியயப் புணரும் இயல்பு, நிரல் நிறையும் சுண்ணமும் அடிமறியும் மொழி மாற்றும் என அவை நான்கு என்று கூறுவர் புலவர்.

'பொருள்கோள்' என்பது செய்யுள் பற்றியதோரிலக்கண மன்றே அதனை ஈண்டுக் கூறியது என்னையெனின்? பொருளியைபிற் கேற்பக் கொண்டு கூட்டப்படுவன சொற்களே யாகலானும், முடிக்குஞ்சொல்லும் முடிக்கப்படும் சொல்லும் இவ்வாறு நிற்குமெனக் கூறுதல் சொல்லிலக்கணமே யாதலானும் ஈண்டுக்கூறினார் என்க. செய்யுளுக்குரிய 'மாட்டு' என்னும் இலக்கணம்வேறு, பொருள்கோள் வேறு என்பதை மாட்டுறுப்புப் பற்றிய செய்யுளியலுரையுள் கண்டுகொள்க.

அற்றாயின் அடிமறிச் செய்தியின்கண் மொழிபுணரியல்பு யாதுமின்மையான் அதனை ஈண்டுக்கூறுதல் பொருந்துமோ எனின் ? "ஈற்றடி இருசீர் எருத்து வயிற்றிரியும்" என்னும் மொழி புணரியல்பு அடிமறிச் செய்யுட்கண் நிகழ்வதாதலின் அப் பொருள் கோளிலக்கணங்கூறல் வேண்டி அடிமறிச்செய்தியாவது இன்ன தெனப் புலப்பட அதனை உடன் ஓதினார் என்க. மற்று இந் நால்வகைச் சொற்கள் பற்றி இதுகாறும் ஓதியவை சொல்லிலக் கணமே எனினும் அவை செய்யுட்கண்ணே நிகழாநிற்குமென அறிந்து கொள்க.

இனி, நிரல் நிறையும் சுண்ணமும் ஈற்றுவயிற் றிரிபும் தோற்றமும் மொழிமாற்று எனக் கூறற்கும் ஒக்குமெனினும் இவை ஒவ்வொன்றும் ஒரு வரையறைக்கு உட்பட்டு நிற்றலின் அதனாற் பெயர்கொடுத்து வரையறைப் படாதவற்றை மொழிமாற்றெனத் தொன்னூலாசிரியன்மார் வகுத்துக் கூறியமை தோன்ற 'என்ப' என்றார்.

சூ. 406 : அவற்றுள்
நிரனிறை தானே
வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்
சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல் (9)

க-து : நிறுத்தமுறையானே நிறனிறைப் பொருள்கோளாமாறு கூறுகின்றது.

உரை : மேற்கூறிய நான்கனுள் நிரல்நிறைப் பொருள் கோள் வினையானும் பெயரானும் தோன்றி, முடிக்கப்படும் சொல் ஒருவழி நிற்ப முடிக்குஞ் சொல் ஒருவழி நிற்றலாம்.

பொருளென்றது ஈண்டு முடிக்குஞ்சொல்லை. வினையினும் பெயரினும் எனப் பொதுப்படக் கூறியதனான் இவை தனித் தனியாயும்-கலந்தும் வருமெனக்கொள்க.

எ-டு : "மாசு போகவும் காய்பசி நீங்கவும்
கடிபுனல் மூழ்கி அடிசில் கைதொட்டு"-என்பது நிரலே வினைக்குவினையே முடிக்குஞ் சொல்லாக வந்த வினைநிரனிறை

"கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதி பவளம் முத்தம் முகம்வாய் முறுவல்;" என்பது, நிரலே பெயர்க்குப் பெயரே முடிக்குஞ் சொல்லாகவந்த பெயர் நிரனிறை.

"அடல்வேல் அமர் நோக்கி நின் முகங் கண்டே
உடலும் இரிந்தோடும் ஊழ் மலரும் பார்க்கும்

கடலும் கனையிருளும் ஆம்பலும் பாம்பும்
தடமதியம் ஆமென்று தாம்''-என்பது, நிரலே முடிப்பன வினையாயும் முடிவன பெயராயும் வந்த பொதுநிரனிறை.

நிரலேநிற்றல் என்னாது வேறுவேறு நிலையில் என்றதனான் நிரல் மயங்கி வருவனவும் கொள்க. அவை

களிறும் கந்தும் போல நளிகடற்
கூம்பும் கலனும் தோன்றும்
தோன்றல் மறந்தோர் துறைகெழு நாட்டே - எனவும்

ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்
பாடகமும் ஊரகமும் பஞ்சரமா - நீடியமால்
நின்றான் இருந்தான் கிடந்தான் இதுவன்றோ
மல்றார் மதிற்கச்சி மாண்பு - எனவும்

விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றொரொ டேனை யவர் - எனவும் வரும்.

''நீனையத் தோன்றி'' என்றதனான்,
வாதமணர் ஏறியதும் மாயன் றுயின்றதுவும்
ஆதிதடுத் தாட் கொண்ட அவ்வுருவும்-சீதரனார்
தாள் கொண் டளந்ததுவும் தண்கச்சிக் காவலா
கேள்செங் கழுநீர்க் கிழங்கு - என்னும் செய்யுளுள் ஈற்றடியைச் செங்கழு-நீர்-கிழம்-கு எனப்பிரித்து ஏறியதும், துயின்றதும், ஆட்கொண்டதும், அளந்ததும் என நிரனிறை கோடலும் கொள்க.

இதனை இடைக்காலத்தார் பலவாறாக விரிப்பர் - அவர் எழுத்து நிரனிறையும் கொள்வர். இதனை அலங்காரத்துள் ஒன்றாகக் கொள்வார் தண்டியாசிரியர் - அவையெல்லாம் மொழி புணர்நிலை யாகாமையறிக. இவற்றுள் வினையும் பெயரும் நிரலேநிற்றல் அளவடிக்கண் வருங்கால் தொடைநயம் பயந்து நிற்றலின் ஆசிரியர் இதனைத் தொடைவகையுள் ஒன்றாகக் கொண்டுள்ளமையைச் செய்யுளியலுள் கண்டுகொள்க.

சூ. 407 : கண்ணந் தானே
பட்டாங் கமைந்த ஈரடி எண்சீர்
ஒட்டுவழி யறிந்து துணித்தனர் இயற்றல்

க-து : சுண்ணம் என்னும் பொருள்கோளாமாறு கூறுகின்றது.

உரை : சுண்ணம் என்னும் பொருள்கோளாவது, இயல்பாக அமைந்த ஈரடிக்கண் நிற்கும் எட்டுச்சீர்களுள் அமைந்த

சொற்களைத் துணித்து ஒட்டும் இடமறிந்து இயைத்துக் கொள்ளுதலாம்.

ஒட்டும் வழியறிந்து புணர்த்தலை இயற்றல் என்றார். முச்சீரடியும் ஐஞ்சீரடியும் போல்வனவற்றானும் ஈரடி எண்சீர் அமையுமாதலின் அவற்றை விலக்கப் பட்டாங்கமைந்த ஈரடி என்றார். பட்டாங்கமைந்த அடியாவது. ''நாற்சீர் கொண்டது அடி எனப்படுமே'' எனச் செய்யுளியலுள் வரையறுத்தோதிய அளவடியினை. சுண்ணம் = துகள். அஃது ஈண்டுத் துண்டத்தை உணர்த்தி நின்றது.

எ-டு : சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்துறையும் (முரு: 62-3) -
என்பதனைப்

புலம்பிரிந்துறையும் சேவடி படரும்
நலம் புரி கொள்கைச் செம்மல் உள்ளமொடு - எனவும்

மாயிதழ் ஏந்திய மலிந்துவீழ் அரிப்பனி
செவ்விரல் கடைக்கண் சேர்த்திச் சில தெறியா
(நெடுநல்-164.5)

என்பதை,

மாஇதழ் வீழ்கண் கடைமலிந்தேந்திய
அரிப்பனி சில செவ்விதழ் சேர்த்தித் தெறியா - எனவும்
துணித்துக்கூட்டிப் பொருள் கொள வந்தமை கண்டு கொள்க.

இப் பொருள்கோள் ஈரடியினும் - எண்சீரினும் மிக்கும் குறைந்தும் வருமாயின் சுண்ணமாகாது. அஃது மொழி மாற்றினுள் அடங்கும் என்க. இனி உரையாசிரியன்மார் யாவரும் ''சுரையாழ அம்மி மிதப்ப'' என்னும் வெண்பாவினையே இதற்கு எடுத்துக்காட்டாக்கினர். அஃது அளவடி நாற்சீருக்குள்ளேயே மாறி நிற்றலானும் மறைந்து போன அதன் முதலடியாகிய கரையாடக் கெண்டை கயத்தாட மஞ்ஞை - என்பதனைச் சேர்ப்பின் மூன்றடிக் கண்ணும் அம்மொழி மாற்று நிகழ்தலானும் அது பொருந்தாமையறிக.

சூ. 408 : அடிமறிச் செய்தி அடிநிலை திரியாது
சீர்நிலை திரிந்து தடுமா றும்மே [11]

க-து : அடிமறிச் செய்யுள் ஆமாறும் அதன்கண் மொழி புணரியல்பாகிய பொருள் கோள்வருமாறும் கூறுகின்றது.

**உரை :** அடிமறிச் செய்யுளாவது தன்கண் அமைந்த அடிகளை மாற்றியமைப்பினும் பொருள்நிலை திரியாது வரும். அதன் கண் சீர்நிலைதிரிந்து ஒரோவழித் தடுமாறும் பொருள்கோள் வரும்.

சீர்நிலை தடுமாறுதலாகிய பொருள்கோள் அடிமறிச் செய்யுள் மாட்டே நிகழுமாதலின் அடிமறிச் செய்யுளின் இயல்பு உடன் ஓதப்பட்டதென்க. அடிமறிச் செய்யுட்கள் வருமாறு :

(1) சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளிர் ஆரணங் கினரே
சாரல் நாட நீவர லாறே
வாரல் எனினே யானஞ் சுவலே

(2) இட்டில் இரும்புழை இருளிய பொழுதே
பட்டி உளியங் கொட்கும் ஆறே
பொற்றொடி உண்கண் நீர்நில் லாவே
வெற்ப வாரல் வியன்மலை யாறே

(3) மாறாக் காதலர் மலைமறந் தனரே
ஆறாக் கட்பனி வரலா னாவே
ஏறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழி யான்வாழு மாறே -- எனவரும்.

அடிமறிச் செய்யுளின்கண் சீர்நிலை தடுமாறும் பொருள் கோளியல்பு வருஞ் சூத்திரத்தாற் கூறுப. இங்ஙனம் பிரித்துக் கூறியது இப்பொருள் கோள் அடிமறிச் செய்யுள் எல்லாவற்றினும் வாராது ஓரோ செய்யுட்கண் வரும் என்பதறிவித்தற்கென்க.

**சூ. 409 :** பொருள்தெரி மருங்கின் ஈற்றடி இருசீர்
எருத்துவயிற் றிரியும் தோற்றமும் வரையார்

இச் சூத்திரபாடம் தெய்வச்சிலையார் உரையுட் கண்டது. ஏனையோர் பாடம் :

"பொருள்தெரிமருங்கின்
ஈற்றடி இருசீர் எருத்துவயின் திரியும்
தோற்றமும் வரையார் அடிமறியான" என்பதாகும்.

இப்பாடம் செம்பொருள் கோடற் கோலமை பின்வரும் விளக்கத் தான் அறிக.

**உரை :** அடிமறிச் செய்யுட்கண் வரும் பொருள்கோளை ஆராயுமிடத்து அச்செய்யுளின் ஈற்றடிக்கண் உள்ள இருசீர்கள் ஈற்றயற்கண் சென்றுமாறும் தோற்றமும் வரையார் ஆசிரியர்.

தோற்றமும் என்னும் உம்மை சீர்நிலை திரிந்து தடுமாறுதலே யன்றி என்பதைத் தழுவிநிற்றலின் எச்ச உம்மை. எருத்துவயின் எனப் பொதுப்படக்கூறியதனான் எருத்துச்சீரொடு தடுமாறுதலும் கொள்க.

எ-டு : சூரல்பம்பிய என்னும் செய்யுளுள், யானஞ்சுவலே என்னும் இரண்டு சீர்களும்
சூரல்பம்பிய சிறுகான்யாறு யானஞ்சுவலே
சூரர மகளிர் ஆரணங்கினரே யானஞ்சுவலே
சாரல் நாட நீவரலாறு யானஞ்சுவலே - என எருத்தடிகளின் கண் சென்று தோன்றிப் பொருள் பயக்குமாறு காண்க.

இட்டில் இரும்புழை, என்னும் செய்யுளுள் 'வெற்பவாரல்' என்னும் இரண்டு சீர்களும், இருளிய பொழுதே - கொட்கும் ஆறே என்றவற்றொடும் சென்று தோன்றிப் பொருள் பயக்குமாறு கண்டு கொள்க. இதன் இறுதியடி வெற்பவாரல் வியன்மலையாறே, என நின்றாங்குப் பொருள் கோடற்கும், வியன் மலையாறு வெற்பவாரல் எனமாறிப் பொருள் கோடற்கும் பொருந்தி நிற்குமாறு காண்க. மாறாக்காதலர் என்னும் செய்யுளுள் 'கூறாய்தோழியான் வாழுமாறே என்ற அடியின்கண் யான் வாழுமாறு கூறாய் தோழி' எனமாறிப் பொருள் கோடற்கு ஏற்ப நிற்றலைக் கண்டு கொள்க. ஈற்றடி இருசீர் எருத்தின்கண் செல்லாவாயினும் பொருள் வேறுபடாமையின் "தடுமாறும்மே" என்றார். எல்லா அடியும் மாறி நிற்றற்குரியவாயினும் ஒருகால் அமைந்த நிலைமைக்கண் முதல் இடைஇறுதி எனப் பெயர் பெறுமாதலின் ஈற்றடி இருசீர் என்றார்.

இவ்இரண்டு சூத்திரங்கட்கும் உரையாசிரியன்மார் கூறியுள்ளவை பொருளாயின் அவைவேண்டா கூறலாய்ப் பொருளில மொழிதல் என்னும் குற்றப்படும் எனக.

**சூ. 410 :** மொழிமாற் றியற்கை
சொன்னிலை மாற்றிப் பொருளெதிரியைய
முன்னும் பின்னும் கொள்வழிக் கொளாஅல்

**க-து :** மொழிமாற்றுப் பொருள் கோளாமாறு கூறுகின்றது.

**உரை :** மொழிமாற்றுப் பொருள் கோளின் இயல்பாவது, சொற்கள் பொருளியைபின்றி நிற்பின் பொருள் எதிர்வந்து பொருந்தும் வண்ணம். சொல் நிலையை முன்னும் பின்னும் மாற்றிப் பொருள்கொள்ளுமிடத்துக் கொளுவுதலாம்,

வரையறைப்படாமையின் முன்னும் பின்னும் என்றார். கொளால் (கொளுவுதல்) என்பது தொழிற் பெயர். அது பெயர்ப் பயனிலையாக நின்றது.

எ-டு : ஆரிய மன்னர் பறையின் எழுந்தியம்பும்
பாரி பறம்பின்மேற் றண்ணுமை - காரி
விறன் முள்ளூர் வேங்கைவீ தானாணும் தோளாள்
நிறன் உள்ளூர் உள்ள தலர்.

இதனைப் பாரி பறம்பின்மேற் றண்ணுமைதான் நாணும் தோளாள், நிறன் காரிவிறன் முள்ளூர் வேங்கைவீ, உள்ளூர் உள்ளதாகிய அலர் ஆரிய மன்னர் பறையின் எழுந்தியம்பும் எனக்கூட்டிப் பொருள் கொள்க.

குன்றத்து மேல குவளை, குளத்துள
செங்கோடு வேரி மலர்-இதனைச் செங்கோடு குன்றத்து மேல வேரிமலர்க்குவளை குளத்துள எனக்கூட்டுக.

சுரையாழ அம்மிமிதப்ப - வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலை என்ப - இதனைச் சுரைமிதப்ப அம்மியாழ யானைக்கு நிலை முயற்கு நீத்து என்ப, எனக்கூட்டுக. இவ்வாறு வருவன பிறவற்றையும் இங்ஙனங் கூட்டிப் பொருள் கொள்க.

இனி, பூட்டுவிற் பொருள்கோள் அளைமறிப் பாப்புப் பொருள்கோள், தாப்பிசைப் பொருள்கோள் முதலியன மொழி புணர் இயல்பாய்ச் சொல்லிலக்கணத்துள் அடங்காமல் அணியின் பாற்பட்டு நிற்றலை ஓர்ந்து கொள்க.

சூ 411 : தநநு எஎன அவைமுத லாகிய
கிளைநுதற் பெயரும் பிரிப்பப் பிரியா (14)

க-து : செய்யுட் சொற்பற்றிய இலக்கணங் கூறிய அதிகாரத்தான் செய்யுள் முடிபாக நிற்கும் ஒருசார் ஒட்டுப் பெயர்களின் இயல்பாமாறு கூறுகின்றது.

உரை : த ந நு எ என்பவை முதல் எழுத்தாகக் கிளைமை குறித்து வரும் பெயர்களும் (உம்மையான்) பிற கிளைப் பெயர் களும் முதனிலையும் இறுதிநிலையுமாகப் பிரிப்பின் பொருள் சிதைதலின் பிரியமாட்டா, பிரியாது இணைந்தே வரும் என்றவாறு.

கிளைப்பெயர்க்கும் கிளைநுதற்பெயர்க்கும் உரியவாக வரும் தம், நம், நும், எம் என்பவை அன் ஆன் அள்ஆள் அர் ஆர்

என்னும் பாலுணர்த்தும் இடைச் சொற்களோடு புணர்ந்து ஒட்டுப் பெயராய் நிற்பினும் அவை பன்மைக்கும் ஒருமைக்கும் பொதுவாய் நின்று இறுதிஇடைச் சொற்களுக்கேற்பப் பொருளுணர்த்தலான் பிரிப்பின் பொருள் சிதையும் என்பார் 'பிரிப்பப் பிரியா' என்றார்.

தநநு எஎன அவை முத லாகித்
தன்மை குறித்த னரள வென் இறுதி (விளி-37)

என்னும் விளிமரபுச் சூத்திரத்தான் னரள இறுதிபெற்று வருபவை கிழமை குறித்து வரும் என்பது பெறப்பட்டமையான் ஈண்டு அவை கிளைப்பெயரொடு கிளைநுதற் பெயராய்ப் பிரிப்பப்பிரியா ஒரு சொல்லாய் வருமெனப் புலப்படுத்தினார்.

கிளைப் பெயர்களுள் உடன்பிறந்த மகளிருள் மூத்தாரைக் குறித்துவரும் பெயர்கள் தவ்வை நுவ்வை எவ்வை என வருதலின் அவற்றையும் தழுவதற்கும் தம்நம் நும் எம் என்னாது "தநநு எ" என முதல் எழுத்துக்களைச் சுட்டி ஓதினார்.

அங்ஙனம் வரும் கிளைநுதற் பெயர்களாவன :-

தமன் தமள் தமர் தம்மான் தம்மாள் தம்மார்
நமன் நமள் நமர் நம்மான் நம்மாள் நம்மார்
நுமன் நுமள் நுமர் நும்மான் நும்மாள் நும்மார்
எமன் எமள் எமர் எம்மான் எம்மாள் எம்மார் -
எனவரும். இவற்றுள் நெடிலீறுகள் பயின்றுவாரா

கிளைப்பெயர்களாவன :-

தந்தை நுந்தை எந்தை தந்தாய் நுந்தாய் எந்தாய்
தம்முன் நும்முன் எம்முன் தம்பின் நும்பின் எம்பின்
தங்கை நுங்கை எங்கை தவ்வை நுவ்வை எவ்வை -
எனவரும்.

நம் என்பதனடியாகப் பிறக்கும் கிளைப்பெயர்கள் கவர் பொருள் படுதலின் அவை பயிலாவாயின.

இனி இவற்றின் முதனிலைகளை, தாம் நாம் (நீயிர்) நும்யாம் எனக் கொள்ளல் ஆமே எனின்? ஆகாது. என்னை? அவைஇடஞ் சுட்டி நிற்கும் பன்மைப் பெயர்களாயே வருதலின் என்க.

இவ் இலக்கணம் முதனிலையும் இறுதிநிலையும் பற்றி நிற்றலின் பெயரியல் முதலாயவற்றுள் கூறுதற்கியைபின்மையான் ஈண்டுஓதினார் என்க.

## தொகைமொழி

இனிவரும் தொகைமொழி பற்றி நூலாசிரியருள்ளும் உரையாசிரியருள்ளும் கொள்கை வேறுபாடுடைமையான் அதுபற்றிச் சிறிது கூறுதும்.

ஆசிரியர் எழுத்தானாம் மொழிநிலைபற்றிக் கூறுங்கால் ஓரெழுத் தொருமொழி ஈரெழுத் தொருமொழி இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி எனக் கூறியாங்குச் சொற்கள் தொடர்வது பற்றி வெளிப்படையாகத் தனியொரு சூத்திரமும் கூறாமல் கூறிய சூத்திரங்களான் உய்த்துணர வைத்துள்ளார். இனி, சேனாவரையர் சொல், மொழி, என்னும் குறியீடுகளை ஒத்த பொருளினவாகக் கருதி இருமொழித் தொடரும் பன்மொழித் தொடருமெனத் தொடர்மொழி இருவகைப்படுமெனக்கூறிச் சென்றார்.

ஆசிரியர் அங்ஙனம் கூறினாரில்லை. காரணம், ஒருசார் பெயர்ச்சொற்களும் வினைச்சொற்களும், ஒட்டுப்பெயர்களும், வினைமுற்றுக்களும் இலக்கணமுறைமையான் நோக்குங்கால் இரண்டு முதலாய சொற்களான் ஆகி நிற்பதை அறியலாம். எடுத்துக்காட்டாகத், தாமரை - வேங்கை எட்டு என்றாற் போல்வன ஒருசொல்லாயும் தாம் மரை-வேம் கை-எள் து எனப் பிரித்துக் காணுங்கால் இருசொல்லாயும் நிற்கும்.

மலையன், வெற்பன், பொன்னி, கண்ணன் என்பவை மலை + அன் + வெற்பு + அன், பொன் + இ, கண் + அன் எனப் பெயர்முதனிலையாயும் இறுதிஇடைச் சொல்லுமாக நிற்றலின் இருசொல் எனற்கும் ஏற்கும். நடந்தான் நடவாநின்றனன் என்பவை நடந்த ஆன், நடஆ நின்று அன்அன் என்பவை உறுப்புக்களான் இணைந்து நிற்றலும் முதனிலை தவிர்ந்த ஏனையவை இடைச் சொற்களாக நிற்றலும் காணலாம்.

இனி, கோவூர்கிழார், சீத்தலைச்சாத்தனார் - கரிகாற் பெருவளத்தான் என்பவை பல சொற்களான் ஆகி நிற்பினும் ஒரு பொருளையே சுட்டி நிற்றலின் பொருள் நோக்கின்கண் ஒரு சொல்லாகவே நிகழும். ஆதலின் சொல்லுருவங்களின் எண்ணிக்கைகளைக் கொண்டு ஒருமொழி தொடர்மொழிகட்கு இலக்கணங்கூறாமல், பொருளுணர்த்தும் முறைமையை அடிப்படையாகக் கொண்டு தொடர்மொழி ஆக்கங்கூற முற்பட்ட ஆசிரியர் வினையிற்றோன்றும் பாலறி கிளவியும் பெயரிற் றோன்றும் பாலறி கிளவியும் மயங்கல் கூடா தம்மரபினவே (கிளவி-11 ) என்பதனான் தொடர் என்பது முடிக்குஞ்

சொல்லும் முடிக்கப்படும் சொல்லுமாக அமைந்து நிற்கும் எனப் புலப்படுத்திப், பின்னர் எழுவாய் வேற்றுமையாகிய பெயர் பற்றிக் கூறுங்கால் பெயரினாகிய தொகையுமாருளவே அவ்வும் உரிய அப்பாலான (வேற்-6) என்னும் சூத்திரத்தான் முடிக்கப் படுஞ் சொல் ஒருமொழியாயும் (ஒருசொல்லாயும்) ஒருபொருள் குறித்து வரும் பல சொற்றொகுதியாயும் நிற்கும் எனப் புலப் படுத்தியதனான் தொடர் என்பது எழுவாயும் பயனிலையுமாக தொடர்ந்து நிற்கும் என்பதும், அத்தொடர் இரண்டும், பலவுமாகிய சொற்களால் ஆகிவரும் என்பதும் விளங்க வைக்துள்ளார்.

எ-டு: அரசன் வந்தான் — அரசன் மக்களின் காவலன் அரசன் செங்கோன்மையான் மக்களைப்புரக்கும் அரசன் அறங் கருதிப்பகைவரைப் போரிட்டு வென்றான் என்றாற்போல வரும்.

இனி, சொற்கள் இரண்டு முதலாகத்தொக்கு ஒருபொருளைக் குறித்துவருங்கால்அவை தொடர் எனப்படா. அத்தகையன தொகை மொழி எனப்படும். எ-டு: பொற்றொடி-மதிமுகம்-தாழ்குழல் - செங்காந்தள் — ஆயன்சாதன், பதினொன்று-மணிமேகலை (வந்தாள்) இவை இருமொழித்தொகை. சேர சோழ பாண்டியர் - பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி-தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ் செழியன், ஆசிரியன் பேரூர் கிழான் இளங்கண்ணன் சாத்தன். இவை பன்மொழித்தொகை.

இனி, பல சொற்களாலான தொடர் மொழிக்கும் பலமொழி களாலான தொகை மொழிக்கும் . வேற்றுமையாதெனின்? பலசொல் தொடர் மொழிகளைப் பிரித்துச் சிறுசிறு தொடர் களாகச் செய்யலாம். பன்மொழித் தொகையைப் பிரித்துச் சிறு சிறு தொகைகளாக ஆக்க இயலாது. அதனுள் உட்பிணைப்பாக நிற்கும் மொழிகளான் எழுவாயாகக் கொள்ளப்பெறும் பொருளின் தன்மைகளை மட்டுமே உணரலாம். என்னை? அரசன் அறங் கருதிப் பகைவரைப் போரிட்டு வென்றான். என்பதனை அரசன் அறங்கருதினான். அரசன் பகையை வென்றான் அரசன் போரிட்டான் எனப்பிரித்துணரலாம். பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்பதனை அங்ஙனம் பிரித்துணரின் அவ்வ தொகையாகா என்க.

இனி இங்ஙனம் வரும் தொகைமொழிகளுள் இரண்டு முதலாய மொழிகளான் வருமிடத்து அவைதம்முள் இணைந்து நிற்கும் முறைமைகளை ஆராய்ந்து கூறுதலே தொகைமொழி இலக்கண மாகும். தமிழ் மொழியின்கண் தொகை மொழிகள் பொருள்தரும்

முறைமையான் ஆறு வகையாகக் கொள்ளப்பட்டுள்ளன. தொகை என்னும் சொல். "தொகு" என்னும் புடை பெயர்ச்சிப் பொருள் உணர்த்தும் முதனிலை வினைச்சொல், வினைமுதற் பொருளுணர்த்தும் ஐகார இடைச் சொல்லைப் பெற்றுத் தொழிற் பெயராகி நிற்பதாகும்.

இனி, தொகை என்பதன் பொருளைக்காணுங்கால், மருவின் தொகுதி மயங்கியல் மொழியும் (எழு-112) மக்கள் முறை தொகூஉம் மருங்கினான (எழுத்-351) ஆவறு மூன்றும் உளப்படத் தொகைஇ (சொல்-5) பெயரினாகிய தொகையுமா ருளவே (சொல்-67) தொகுத்தலின்-குறைத்தலின் (சொல்-72) என வருமிடங்களில் கூடுதல் அல்லது இணைதல் என்னும் பொருள் பற்றியும்,

உயர்திணைத் தொகைவயின் (சொல்-94) கருவிதொகுதி (சொல்-359) வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும் (சொல்-32) தம்வயின் தொகுதி கடப்பாடிலவே (சொல்-287) யாவயின் வரினும் தொகையின்றியலா (சொல்-287) எனவரு மிடங்களில் எண்ணிக்கை அல்லது தொகுப்பு ஏன்னும் பொருள் பற்றியும்,

தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும் (எழு-133) ஐயும் ஆனும் தாம் பிரிவிலவே தொகவருகாலை (சொல்-93) குத்தொக வருஉம் கொடை எதிர் கிளவி (சொல்-105) பிறிது பிறிது ஏற்றலும் உருபு தொக வருதலும் (சொல்- ) உம்மை எண்ணின் உருபு தொர்கல் வரையார் (சொல்-291) எனவரு மிடங்களில் மறைந்து நிற்றல் அல்லது குன்றிநிற்றல் என்னும் பொருள் பற்றியும் ஆசிரியர் ஆளுவதைக் காணலாம்.

இவ்வாறே சான்றோர் இலக்கியத்துள், உடன் மூவர் சொல் தொக்கத் தேறப்படும் (குறள்-685) (கூடுதல்) சொல்லின் தொகையறிந்த தூய்மையவர் (குறள்-711) (எண்ணிக்கை) தொல்வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக நல்குரவென்னும் நசை (குறள்-1043) (ஒருங்கிணைதல்) கூடுதல் இணைதல் எண்ணிக்கை ஆயபொருள் பற்றியும் தொல்லூழி தடுமாறித் தொகல் வேண்டும் பருவத்தால் (கலி.129) தொடர் நீப்பின் தொகுமிவள் நலம் (கலி-76) என்னுமிடத்துக் கெடுதல் மறைதல் என்னும் பொருள் பற்றியும் வந்துள்ளமை அறியலாம்.

இனி ஆசிரியர் வேற்றுமைத் தொகை முதலாய அறுவகைத் தொகை மொழிகளைப் பற்றிக் கூறுமிடத்து இவற்றுள் எப்பொருளைக் கொண்டுள்ளார் என்பதனைக் காண்போம்.

"வேற்றுமைத் தொகையே வேற்றுமையியல" "உவமத் தொகையே உவமவியல" "வினையின் தொகுதி காலத்தியலும்" "........அதன் குணம்நுதலி இன்ன திதுவென வருஉம் இயற்கை என்ன கிளவியும் பண்பின் தொகையே"

"இருபெயர் பல்பெயர் அளவின் பெயரே
எண்ணியற் பெயரே நிறைப் பெயர்க்கிளவி
எண்ணின் பெயரோடு அவ்வறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே உம்மைத் தொகையே"

"பண்புதொக வருஉம் கிளவியானும்
உம்மைதொக்க பெயர் வயினானும்
வேற்றுமை தொக்க பெயர் வயினானும்
ஈற்று நின்றியலும் அன்மொழித் தொகையே"

என்பவை ஆசிரியர் கூற்று. இவற்றுள் எந்த ஒரு தொகையைக் கூறியவிடத்தும் உருபு முதலாயின கெடும் என்றோ அப்பொருள்பட இரண்டு முதலாய சொற்கள் இணைந்து நிற்கும் என்றோ வெளிப்படையாகக் கூறினாரில்லை. காரணம், தொகைக் குரிய இலக்கண்மரபுகளுள் பெரும்பான்மையும் ஏனைய இயல் களுள் பெறப்பட்டமையான் மாட்டேற்று முறைமையான் அவற்றைக் கொள்ளவைத்து ஆண்டுப் பெறப்படாமல் நின்ற வற்றையே ஈண்டுக் கூறுகின்றாராதலின் என்க.

அங்ஙனம் முன்னர்ப் பெறப்பட்ட இலக்கணங்களாவன: 'வேற்றுமைஇயல' 'உவமவியல', 'காலத்தியலும்', 'தொழில் தொகுமொழி', 'அதன் குணம் நுதலி வரும்.' 'கண்ணிய நிலைத்தே' என்பவையாம். பெறப்படாமல் நின்றவை "இன்னது இதுவென வருஉம் இயற்கை" என்பதும், "அவ்வறு கிளவியும் என்பதும், அன்மொழித்தொகை இலக்கணமும் ஆம். இனி முன்னர்ப் பெறப்பட்ட இலக்கணங்களை முறையே காண்போம்.

வேற்றுமைத்தொகை பற்றி ; எழுத்ததிகாரத்துள் உருபு நின்று புணரும் புணர்ச்சி இலக்கணத்தை உருபுபுணர்ச்சி என்றும் உருபு மறைந்துநிற்க அவற்றின் பொருள்பட நின்று புணரும் இலக்கணத்தை வேற்றுமைப் புணர்ச்சி என்றும் கூறியுள்ளமை யான் உருபு மறைந்து நிற்க அப்பொருள் தோன்ற இரண்டு சொற்கள் பிளவுபடாமல் ஒருசொல் நீர்மைத்தாக இணைந்து வருதலே வேற்றுமைத் தொகை என்பது பெறப்படும். உருபு மறைந்துநிற்கும் என்பதனைப், பெயருந்தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப வேற்றுமை உருபு நிலைபெறு வழியும் தோற்றம் வேண்டாத் தொகுதிக்கண்ணும் (புணரி-30) என்பதனானறிக

உவமத்தொகைபற்றி; உவமவியலுள் உவமத்தான் பொருள் தோன்றும் வகையினையும், உவமந்தோன்றுதற்குரிய நிலைக் களங்களையும் அவை பற்றிய மரபும் கூறி உவமச் சொற்கள் வெளிப்படாதுமறைந்து நிற்கவும் பெறும் என்பதைச் "சுட்டிக் கூறா உவமமாயின் பொருளெதிர் புணர்த்துப் புணர்ந்தன கொளலே" (உவம-7) எனக் கூறியுள்ளமையான் உவமச் சொல் (உருபு) மறைந்து நிற்க அப்பொருள் தோன்ற இரண்டு சொற்கள் ஒருசொல் நீர்மைப்பட இணைந்து வருதல் உவமத்தொகை என்பது பெறப்படும். இச்சூத்திரத்திற்கு உரையாசிரியன்மார் கூறியுள்ள உரை நூலாசியர் கருத்திற்கு ஒவ்வாது என்பதை உவமவியலுரையுள் கண்டுகொள்க.

வினைத்தொகைபற்றி ; புணரியல் நிலையிடை உணரத் தோன்றாதனவற்றுள் ஒன்றாக இவ் வினைத்தொகையைக் கூறுங்கால் செய்யும் செய்த என்னும் கிளவியின் மெய் யொருங்கியலும் தொழில்தொகுமொழியும் (எழு-482) என்றார். அதனான் செய்யும், செய்த என்பவற்றுள் 'உம்' மும் தகர அகரமும் ஆகிய காலமுணர்த்தும் இடைச்சொற்கள் மறைந்து நிற்க அவற்றின் பொருள் ஒருங்கு இயல முதனிலைத் தொழிற் பெயரும் பிறபெயரும் முறையே ஒருங்கிணைந்து ஒருசொல் நீர்மைப்பட வருதலேவினைத்தொகை என்பது பெறப்படும்.

பண்புத்தொகை பற்றி: நிறுத்த சொல்லும் குறித்து வரு கிளவியும் - எனவும் அடையொடு தோன்றினும் புணர்நிலைக் குரிய (எழுத்-புண-8) என்வும் இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர் (சொல்-18 ) எனவும் அடைசினை முதலென முறை மூன்றும் மயங்காமை நடைபெற்றியலும் வண்ணச்சினைச்சொல் (சொல்-26 ) எனவும் சிறப்பினாகிய பெயர்நிலைக்கிளவிக்கும் இயற்பெயர்க்கிளவி முற்படக்கிளவார் (சொல்-41 ) எனவும் பெயரினாகிய தொகையுமாருளவே (சொல்-வே-6) எனவும் கூறிய வற்றான், இருதிணைப் பெயர்களும் பண்பு முதலாய அடை களை அடுத்துவரும் என்பது பெறுதும், அவ்அடைமொழிகள் தாம் அடுத்து நிற்கும் பொருளுக்குரிய பாலையே கொண்டு இணைந்து வருமிடத்துப் பண்புச் சொல்லுள் பாலுணர்த்தும் இறுதி இடைச் சொற்கள் மறைந்து நிற்கப் பிளவுபடாது அவை இணைந்து தொகை மொழியாகும் என்பதனை உயர்திணை அஃறிணை ஆயிருமருங்கின் ஐம்பாலறியும் பண்புதொகுமொழியும் (எழுத்-482) எனக் கூறியவதனான் அறியலாம். எனவே பண்படி நிற்கப் பாலுணர்த்தும் ஈறுகளும், பண்புச் சொல்லை முதற் பொருளொடு இணைப்பதற்கு வரும் இடைச்சொல்லும் மறைந்து நிற்க அவை

ஒருசொல் நீர்மைப்பட வருவதே பண்புத்தொகை என்பது பெறப்படும்.

உம்மைத்தொகை பற்றி ; எழுத்திகாரத்துள் உம்மை எஞ்சிய இருபெயர்த் தொகைமொழி (எழு.உய-21) எனவும் இடையியலுள் உம்மைதொக்க எனாஎன்கிளவியும் (இடை-41) எனவும் விதந்து கூறினமையான் உம்மை இடைச்சொல் மறைந்து நிற்க எண்ணுப் பொருள் தோன்ற இரண்டு முதலாகிய சொற்கள் இணைந்து வருதலே உம்மைத்தொகை என்பது பெறப்படும், ஆதலின் இவைபற்றிய எஞ்சிய இலக்கணங்கள் ஈண்டுக் கூறப்பட்டுள்ளன. விளக்கம் அவ்வச்சூத்திரவுரையுள் கண்டு கொள்க.

எனவே, அடையாடாது நிற்கும் ''தொகைமொழி'' என்பது சொற்கள் இணைந்து ஒருபொருளைச் சுட்டிப் பிளவு படாமல் ஒரு சொல் நீர்மைப்பட வருமென்பதும், வேற்றுமை, உவமை முதலிய அடையடுத்து நிற்குங்கால் அப்பொருள்கள் அவற்றின்கண் மறைந்து நிற்கும் என்பதும் புலனாகும். வேற்றுமை முதலாய பொருள் என்றது அப்பொருளைப் புலப்படுத்தும் உருபு முதலாய இடைச் சொற்களை யாகும்.

அதனானன்றே வேற்றுமை முதலாய பொருள்கள் தொகை மொழிகளின் கண் மறைந்து நிற்குமிடங்களைக் கூறுமிடத்து, ''அவைதாம், முன்மொழி நிலையலும் பின் மொழி நிலையலும் இருமொழி மேலும் ஒருங்குடன் நிலையலும் அம்மொழி நிலையாது அன்மொழி நிலையலும் அந்நான் கென்ப பொருள் நிலை மரபே'' (சொல்-எச்-23) எனக் கூறுவாராயினார்.

அவ் அறுவகைத் தொகை மொழிகளும் பெயர் சொற்களாகவே தொகையுற்று நிற்குமென அறிக. நிலங்கடந்தான் • என்பது தொகைமொழி யாயவிடத்துக் கடந்தான் என்பது வினையாலணையும் பெயராக நிற்கும். இன்றேல் அவை எழுவாய்த் தொடராகும் என்க. அறுவகைத் தொகை மொழிபற்றி இடைக்கால நூலாசிரியரும் உரையாசிரியன்மாரும் • கூறிய விளக்கங்கள் குன்றக்கூறலாயும் மயங்கவைத்தலாயும் இருத்தலை இதுகாறும் கூறியவற்றான் அறியலாம்.

இனி சமற்கிருத நூலார் கூறும் ''சமாசன்'' என்னும் இலக்கணம் ஈண்டுக் கூறப்படும் தொகைமொழி இலக்கணத்தொடு சில கூறுகள் ஒப்புடையவாயினும் அடிப்படையில் வேறுபாடுடையன. சமாசனைக் குறிக்கோளாகக் கொண்டமையான் சில

உரையாசிரியர் தமிழ்நெறிக் கொவ்வாத பல விளக்கங்களைக் கூறிச்சென்றனர்.

சூ. 412 : வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே
வினையின் தொகையே பண்பின் தொகையே
உம்மைத் தொகையே அன்மொழித்தொகையென்று
அவ்வா றென்ப தொகைமொழி நிலையே [15]

க-து : எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே என்பதனான் தனிச் சொற்கள் இலக்கணமுறைமையாற் பொருளுணர்த்து மாற்றை நான்கு இயல்களாற் கூறிச், சொற்கள் இரண்டும் பலவுமாக இணைந்து ஒருசொல் நீர்மைப் பட்டுப் பொருள் உணர்த்தும் தொமை மொழி பற்றிய இலக்கணங்கள் ஆண்டுக் கூறுதற்கு இயைபின்மையான், அவை தெரிபு வேறு நிலையலும் குறிப்பிற்றோன்றலுமாக நிகழும் மரபுகளை ஈண்டு கூறத் தொடங்கி இச்சூத்திரத்தான் அவற்றின் பெயரும் முறையும் தொகையும் கூறுகின்றார்.

இச்சூத்திரம் தொகுத்துச்சுட்டல் என்னும் உத்தியின் பாற் படும். வேற்றுமைத்தொகை மொழி என்பது ஈறு குறைந்து குறியீடாக நின்றது. பிறவும் அவ்வாறே குறியீடாக நின்றன.

உரை : தொகைமொழிநிலை, வேற்றுமைத்தொகைஉவமத் தொகை வினைத்தொகை பண்புத்தொகை உம்மைத்தொகை அன்மொழித்தொகை என்று கூறப்படும் அவ்ஆறும் என்று கூறுவர் ஆசிரியர்.

சூ. 413 : அவற்றுள்
வேற்றுமைத் தொகையே வேற்றுமை இயல

க-து : வேற்றுமைத் தொகை மொழியினது இலக்கணங் கூறுகின்றது.

உரை : மேற்கூறப்பெற்ற தொகைமொழிகளுள் வேற்றுமைத் தொகையாவது வேற்றுமைபற்றி முன்னர்க் கூறப்பெற்ற அவ்இலக்கணத்தனவேயாம்.

வேற்றுமைபற்றி முன்னர்க் கூறப்பெற்ற இலக்கணங்களாவன: எழுத்ததிகாரத்துள் வேற்றுமை வழியான் நிறுத்தசொல்லும் குறித்துவரு கிளவியும் புணரும் புணர்ச்சியிடத்து வேற்றுமை உருபு தோன்றாமல் அப்பொருள் தோன்றப் புணருமெனக் கூறிய இலக்கணங்களும், வேற்றுமையியலுள் செயப்படுபொருள் முதலாக இடப்பொருள் ஈறாகக் கூறப்பெற்ற வேற்றுமை இலக்கணங்களும் வேற்றுமை மயங்கியலுள் உருபு தொக்கு நின்றவழிச்சிறுபான்மை பொருள் மயங்கி வருமென்று கூறிய இலக்கணங்களும்,

"வேற்றுமைப் பொருளை விரிக்குங்காலைப் பல்லாறாகப் பொருள் புணர்ந்து இசைக்கும்" என்றதும் உருபு தொக்கு வருங்கால் கவர்பொருள் படாதனவே தொகும் என்றதும் பிறவுமாம்.

எ-டு : பழந்தின்னி - ஈர்க்கொல்லி எனவும் வாள்வெட்டு - பொற்றொடி எனவும் நெய்வேலி - நோய்மருந்து எனவும் மலையருவி - கருவூர்க்கிழக்கு எனவும் யானைக்கோடு - அரசாட்சி எனவும் ஊர்மன்று - மாலைவிளக்கு எனவும் - வரும்.

இவற்றுள் தொக்குநிற்கும் வேற்றுமைப் பொருள்விரியுங்கால் முறையே, பழத்தைத் தின்னும் இயல்பினது-ஈரைக்கொல்லுதற் குரிய கருவி எனச் செய்யபடு பொருளும். வாளொடு (கொண்டு) வெட்டிய வெட்டு (புண்) பொன்னான் ஆகிய தொடி எனக் கருவிப்பொருளும். நெல்லுக்கு காவலாக இட்ட வேலி-நோய் தீர்தற்குரிய மருந்து எனக் கோடற் பொருளும். மலையினின்று விழும் அருவி-கருவூரின் கிழக்கு (திசை) என எல்லை (அளவை) ப் பொருளும் யானையது கோடு-அரசனது ஆட்சி எனக்கிழமைப் பொருளும். ஊரின்கண் உள்ளமன்று-மாலையின்கண் ஒளிரும் விளக்கு என நிலமும் காலமுமாகிய இடக் குறிப்புப் பொருளும் விரியும்.

இனி, மலையகம்-முலையிடை என்னும் தொகைமொழிகள் அகமலை-இடைமுலை எனச் சிறுபான்மை முன்பின்னாக மாறித்தொக்கு நிற்றலும் உண்டு. அங்ஙனம்நிற்பினும் அவை வேற்றுமைத் தொகைகளேயாம்.

இங்ஙனம் வேற்றுமைப் பொருளும் உருபுகளுமேயன்றிப் பல்லாறாகப் பொருள் புணர்ந்திசைக்கும் சொற்களும் விரிதலின்-உருபுதொக்கு நிற்றலை மட்டும் வேற்றுமைத்தொகை எனக் கூறின் அது குன்றக்கூறலாயும், உணவுடண்டான் என்றாற்போல உருபு தொக்குவரும் தொடர்மொழிகளும் தொகைமொழியாகி மயங்கவைத்தலாயும் முடியுமென்க.

'வேற்றுமையியல' என ஆசிரியர்பொதுப்படக்கூறியிருப்பினும் "பிறிது பிறிது ஏற்றலும் உருபுதொக வருதலும்" என்பதனான் எழுவாயும் பயனிலையுமாக வருவனவற்றுள் உருபுதொக்குவரும் தொடர்மொழிவேறு, ஒருசொல் நீர்மைத்தாய் இணைந்து வரும் தொகை மொழி வேறு என அறிக.

உருபுதொகையாக வரும் தொடர் மொழிகள் வருமாறு : நிலங்கடந்தான் - வேலெறிந்தான் - கடிசூத்திரப்பொன் - நோய் நீங்கினான், மலையேறினான் எனவரும். இங்ஙனம் உருபு

தொக்கு வருபவை வேற்றுமைப் பொருள் புணர்ச்சியானமைந்த தொடர்களாகும். இனி நிலங்கடந்தான் முதலியவை எழுவாயும் பயனிலையுமாக நில்லாது நிலங்கடந்தவன் என்னும் பொருளில் ஒருபொருளைச் சுட்டிவரின் ஆண்டு அவை தொகை மொழி யாகும் என்க.

இனி இரண்டற்கு மேற்பட்டனவாய்ச், சூடிக்கொடுத்த சுடர்க்கொடி-திரிபுரமெரித்த விரிசடைக்கடவுள்-என்றாற் போல வருவன "பெயரினாகிய தொகை" என்பதனுள் அடங்கும். அவை பலசொல் தொக்க தொகையானாகிய பெயர் எனப்படும். அவை இரண்டாக வகைப்படின் தொகைமொழியாம் என்க.

உரையாசிரியன்மார் சிலர் வேற்றுமைத் தொகை மொழிக்கும் உருபு தொக்குவரும் வேற்றுமைத் தொடர் மொழிக்கும்; பெயரினாகிய தொகைக்கும் உரிய வேறுபாடுணராமல் காட்டும் எடுத்துக் காட்டுக்களையும் உரைகளையும் சுட்டி அவற்றின் ஒவ்வாமையை விளக்கப்புகின் மிகவிரியுமாகலின் மாணாக்கர் ஓர்ந்து தெளிவாராக.

சூ. 414 : உவமத் தொகையே உவம வியல (17)

க-து : உவமத்தொகைமொழியினது இலக்கணங் கூறுகின்றது.

உரை : உவமத்தொகையாவது உவமவியலுள் கூறப்பெற்ற இலக்கணத்தனவாகும்.

என்றது ; உவமவியலுள், உவமத்தாற் பொருள் தோன்றும் வகை, வினை, பயன், மெய், உரு என்ற நான்காம் எனவும் அவை விரவியும் வரும் எனவும், உவமம், சிறப்பு நலன் காதல் வலி கிழக்கிடுபொருள் என்னும் ஐந்தும் நிலைக்களனாகப் பிறக்கும் எனவும் கூறி, மேற்கூறிய நான்கு வகையாக உவமம் செய்வன அன்னஏய்ப்ப என்பவை முதலாகவரும் முப்பத்தாறும் பிறவுமான உவமச்சொற்கள் (உருபுகள்) எனவும் விளக்கி - அவ் உவமச் சொற்கள் வெளிப்பட நில்லாமல் மறைந்து நிற்கவும் பெறும் என்பதைச் "சுட்டிக்கூறா உவமமாயின் பொருளெதிர் புணர்த்துப் புணர்ந்தன கொளலே" (உவமவியல் - 7) எனவும் கூறினாராகலான். ஆண்டுக்கூறிய உவம இலக்கணங்களொடு உவமச்சொல்லும் (உருபும்) தொக்குவருதலைச் சுட்டி ஈண்டு "உவமவியல" என மாட்டெறிந்து கூறினார்.

எனவே, உவமத்தன்மையைப் புலப்படுத்தும் சொற்களும் அன்னஏய்ப்ப முதலாய உவமச் சொற்களும் மறைந்து நிற்க அவற்றின் பொருள் புலப்படுமாறு உவமும் பொருளுமாக வரும்.

அச்சொற்கள் தம்முட் பிளவுபடாமல் ஒன்றுபட்டு ஒருசொல் நீர்மைத்தாய் வருதல் உவமத்தொகையாம் என்பது தெளிவாம்.

எ-டு : கிளிமொழி என்பது வினையுவமத்தொகை, மாரி வெண்கோ என்பது பயனுவமத்தொகை, துடியிடை என்பது மெய்யுவமத் தொகை, கார்வண்ணன் என்பது உருவுமத்தொகை இவை விரியுங்கால், கிளிமொழிமானக்கிளக்கும் மொழி எனவும் மாரிவழங்குதல் பொருவ வழங்கும் வெண்கோ எனவும் துடி நடுவினை ஏய்ப்ப ஒடுங்கிய இடை எனவும் கார்முகிலின் நிறத்தைப் போலக் கரிய வண்ணத்தான் எனவும் விரியும்.

தொக்கு நிற்குங்கால்நிறுத்த சொல்லாகிய உவமமும் குறித்து வருகிளவியாகிய பொருளும் வினை பயன் மெய் உரு என்னும் நான்கனுள் எப்பொருள்படத்தொக்கு நிற்கின்றதென்பதை ஓர்ந்து அப்பொருளையும் அதற்குரிய உருபையும் விரித்துணர்தல் வேண்டுதலின், உவமவியலுள் "சுட்டிக் கூறா உவமமாயின், பொருள் எதிர் புணர்த்துப் புணர்ந்தன கொளலே" என்றார். கிளியன்னமொழி - மாரியன்ன வெண்கோ என உவம இடைச் சொல்லை மட்டும் விரித்துக் கூறுதலும் கிளிமொழி புரையும் மொழி, மாரி ஏய்க்கும் வண்கை எனப்பிறிதொன்றற்குரிய உவமச் சொற்களை விரித்துக் கூறுதலும் பிழை என்க. பிறவிளக்கங் களை உவமவியலுரையுட் கண்டுகொள்க.

இனி, புலிப்பாய்த்துள், மழைவண்கை என்றாற் போல்வன ஒட்டி ஒருசொல் நீர்மைப்படாமையின் அவை எல்லாம் உவம இடைச்சொல் தொக்க தொடர்மொழிகளாம் என்றறிக. தொகை மொழிகளெல்லாம் ஒருசொல் நீர்மைப்பட்டு எழுவாயாகவும் பெயர்ப்பயனிலையாகவும் நிற்பதற்கேற்ப வரும் என்பதே நூலோர் கருத்தென்க. உவம இடைச்சொல் தொக்கு விட்டிசைத்துவரும் தொடர்மொழிக்கும், உருபுமுதாலயினதொக்கு ஒருசொல் நீர்மைப்பட வரும் தொகைமொழிக்கும் வேறு பாடுணராமல் இடைக்காலத்தார் மயங்கவைத்தனர்.

இனி, புலிப்பாய்த்துளை ஒக்கும் பாய்த்துள், மழையை ஒக்கும் வண்கை என விரித்து உவமத்தொகையெல்லாம் வேற்றுமைத்தொகையாதற்கும் ஏற்கும் என விளம்பி அதற்கு அமைதி கூறுவர் உரையாசிரியன்மார். அங்ஙனம் கூறுதல் மயங்க வைத்தலும் மாறுகொளக் கூறுலுமாம். என்னை? புலிப் பாய்த்துளை ஒக்கும் பாய்த்துள் என விரிந்தவழி வேற்றுமை உருபு ஒக்கும் என்னும் வினை நோக்கிப் பாய்த்துள் என்னும் தொழிற் பெயர்க்கண் விரிந்ததன்றிப் புலி என்னும் பெயர்க்கண்

விரியாமையானும் மழையை ஒக்கும் என்பதற்கும் மழை வழங்கும் வழக்கினை ஒக்கும் என்பது பொருளாகலானும் உவமத்தொகை, வேற்றுமைத்தொகையாதற்கு ஏலாமையறிக. உவமத்தொகையை விரிக்குங்கால் பொருள்புலப்பாடு தோன்ற விரியும் உருபிடைச் சொல் வினைநிலைமை எய்துதலான் அவ்வினைக்கு உவமம் செயப்படு பொருளாகலின் இரண்டாவது விரியும். அதனானன்றே இரண்டாம் வேற்றுமைக்குரிய பொருள் கூறுங்கால் "காப்பின் ஒப்பின்" என ஒப்புப்பொருள் கூறியதூஉம் என்க. மற்று உவமமும் பொருளுமாகத் தொக்குநிற்கும் தொகைமொழிக்கண் உவமப்பொருளன்றிப் வேற்றுமைப் பொருள் இன்மையையும் உணர்க.

இனி உரையாசிரியன்மார் "உவமவியல" என்னும் மாட்டேற்றினை, இலக்கணமரபும் ஆசிரியர் வழக்கும் நோக்கா மல்" உவம உருபு தொடர்ப்பொருள் போலப் பொருளுணர்த்தும் என உரை கூறிச்சென்றனர். வேற்றுமைத்தொகை முதலாய அறுவகைத் தொகைமொழிக்கும் இவ்வாறு தொகைப்பட்டுநிற்கும் என்பதை விதிப்பதன்றித்தொகை மொழிகள் எவ்வாறு விரிந்து பொருள் உணர்த்தும் எனக் கூறுதல் ஆசிரியர் நோக்கமன்று ஆதலின் அங்ஙனம் உரை கூறுதல் மற்றொன்று விரித்தலின் பாற்படுமென்க.

இத்தடுமாற்றத்திற்கெல்லாம் காரணம் உவமஉருபு தொக்கு வரும் எனவிதிக்கும் "சுட்டிக்கூறா உவமமாயின்" என்னும் உவமவியற் சூத்திரத்தின் பொருளைப் பிறழ உணர்ந்தமையே யாம். அச்சூத்திரப்பொருள் பற்றியும், அவைதாம், அன்ன ஏய்ப்ப முதலிய உவம உருபிடைச் சொற்கள் தாமே பொருளாயும் உருபாயும் நிற்குமாறு பற்றியும், அவை உவமஞ் செய்யுங்கால் செய்யும் செய்த என்னும் பெயரெச்சவாய் பாடுகளையும் செய என்னும் வினையெச்ச வாய்பாட்டினையும், ஒப்ப நின்று பொருளை விரித்துணர்த்துமாறு பற்றியும் செய்யுமென்னும் முற்றுப் பொருள் படவருவன அவற்றினடியாகப் பிறந்த வினைமுற்றுகளாம் என்பதுபற்றியும் உவம வியலுரைட் கூறுதும்.

**சூ. 415 : வினையின் தொகுதி காலத் தியலும் (18)**

**க-து :** வினைத்தொகைமொழியினது இலக்கணங் கூறுகின்றது,

**உரை :** வினைத்தொகையாவது காலப்பொருளைத்தம்முள் அடக்கிநடைபெறும். என்றது; வேற்றுமைத் தொகை வேற்றுமைப் பொருளையும் உவமத்தொகை உவமப் பொருளையும் தம்முள் அடக்கிக் கொண்டு இயலுமாறு போல வினைத்தொகை வினை

யாகிய காலப்பொருளைத் தன்னுள் அடக்கிக் கொண்டு இயலும் என்றவாறு. [இன் அசைநிலைப்பொருட்டாய் நின்றது].

காலமாவது, இறப்பு-நிகழ்வு - எதிர்வு என ஓதப்பட்ட மூன்றுமாம். எழுத்ததிகாரத்துள் புணரியல் நிலையிடை உணரத் தோன்றாதன பற்றிக் கூறுமிடத்துச் செய்யும் செய்த என்னும் கிளவியின் மெய்யொருங்கியலும் தொழில்தொகு மொழியும் (எழு-482) என வினைத்தொகையின் இலக்கணத்தை ஓராற்றான் பெறப்படவைத்தமையின் ஈண்டுக் காலத்தியலும் எனச் சுருக்கமாகக் கூறினார்.

'ஆண்டுத் தொழில் தொகுமொழி' என்றதனானும் ஈண்டு "வினையின் தொகுதி" என்றதனானும் வினைத்தொகையின் முதன் மொழி முதனிலைத்தொழிற் பெயர் என்பது புலப்படும். அவையாவன அரி, தெரி, செல்' கொல், தேய், பாய், வளர், புணர் கழி, பொழி' ஆடு, எழு, ஆழ், சூழ் என்றாற் போலப் புடைபெயர்ச்சிக் கருத்தமைந்து 'செய்' என்னும் வாய்பாடுபட நிற்கும் சொற்களாம். இவை காலத்தொடு புணர்ந்து நிற்பின் வினைச்சொற்களாம் அல்லாதவிடத்து வினைப் பெயர்களாம். ஆக, வினைத்தொகையின் முதன்மொழியும் பெயர் என்பது புலப்படும்.

செய்யும் செய்த என்னும் கிளவியின் மெய்யொருங்கியலும்... (எழுத்-482) என்பதனுள் 'மெய்' என்றது செய்யும் செய்த என்னும் சொற்களின்பால் ஈற்றில் நிற்கும் காலத்தை யாகலானும், ஒருங்கியலும் என்றதனான் செய்யும் என்பதன் காலமாகிய நிகழ்வும் எதிர்வும், செய்த என்பதன் காலமாகிய இறப்பும் ஆகிய மூன்றையும் வினைத்தொகை பெற்று அவை புலப்படாமல் தன்னுள் அடக்கி நிற்கும் என்பதாயிற்று. "செய்யும் செய்த" என்னும் கிளவிகள் நிலனும் பொருளும் காலமும் கருவியும் வினை முதற்கிளவியும் வினையும் உளப்பட, அவ்வறு பொருட்கும் ஓரன்ன உரிமை" உடையனவாதலின் வினைத்தொகையின் இறுதிச்சொல் நிலமுதலாகிய பெயர்ச் சொற்கள் என்பதும் தொழில் முதனிலையாகிய வினைப்பெயர் நிலமுதலாகிய பெயர்களொடு இணைந்து ஒருசொல் நீர்மைப்பட்டு நிற்பதே வினைத்தொகைமொழி என்பதும் பெறப்படும்.

எ-டு : ஆடரங்கு-செய் குன்று - புணர்பொழுது - அரிவாள் கொல்யானை- செல்செலவு- எனவரும். இவை விரியுங்கால்- ஆடின அரங்கு ஆடும் அரங்கு எனவும் செய்த குன்று செய்யும் குன்று எனவும், புணர்ந்த பொழுது, புணரும் பொழுது எனவும்,

அரிந்தவாள் அரியும் வாள் எனவும், கொன்றயானை, கொல்லும் யானை எனவும், சென்ற செலவு செல்லும் செலவு எனவும் வரும். இவற்றுள் செய்யும் என்பது நிகழ்விற்கும் எதிர்விற்கும் இடம் நோக்கிஅமையும்.

வினைத்தொகை மூன்று காலத்தையும் தம்முள் அடக்கி நிற்குமாயினும் ஒருகால் வழங்குமிடத்து யாதானும் ஒருகாலத்தை உணர்த்துவதன்றி மூன்று காலத்தையும் ஒருங்குணர்த்தா என அறிக. ஆண்டு அஃது எக்காலத்தை உணர்த்தி நிற்கின்றதோ அக்காலத்தொடு கூட்டி இறந்த கால வினைத்தொகை, நிகழ்கால வினைத்தொகை எதிர்காலவினைத்தொகை என வழங்கப் பெறும். சுட்டிக்கூறாமல் நின்றவழிப் பொதுவாக வினைத்தொகை எனப்படும். எ-டு: மாதவி ஆடரங்கினின்று வந்தாள் என்புழி இறந்தகாலமும் மாதவியை ஆடரங்கினிற் காண்க என்புழி நிகழ்காலமும் மாதவி ஆடரங்கிற்குச் செல்வாள் என்புழி எதிர் காலமும் உணர்த்திநிற்குமாறு கண்டு கொள்க.

இனி நெருநல் அடுகளிறு இன்று அகளிறு நாளை அடுகளிறு எனக் காட்டி அடுகளிறு என்பது மூன்றுகாலத்தையும் உணர்த்தி நின்றது என்பார். ஆண்டு நெருநல், இன்று, நாளை என்னும் சொற்கள் காலத்தை விளக்கி நிற்றலின் இவ்வாறு காட்டுதல் முறையன்றென்க.

“இனிக் காலங்கரந்த பெயரெச்சம் வினைத்தொகை” என்பார் பவணந்தியார். பெயரெச்சமாயின் அது முதனிலைத் தொழிற்பெயர் எனற் கேலாமையறிக. பெயரெச்சம் நின்று தொக்கது என்பார் ஒரு சாரார். நிற்குமிடத்து ஒரு காலத்திற் குரியதாய் நிற்பதன்றி மூன்று காலத்தையும் ஒருங்கேற்று நிற்றலின்மையானும் நின்று தொகுதல் என்பது தமிழ்நூலார் மரபன்று ஆகலானும் அங்ஙனம் கூறுதல் பொருந்தாமையறிக.

சூ. 416: வண்ணத்தின் வடிவின் அளவிற் சுவையினென்று
அன்ன பிறவும் அதன்குணம் நுதலி
இன்ன திதுவென வருஉம் இயற்கை
என்ன கிளவியும் பண்பின் தொகையே (19)

க-து: பண்புத்தொகைமொழியது இலக்கணங் கூறுகின்றது.

உரை: வண்ணத்தினையுடையதும் வடிவினையுடையதும் அளவினையுடையதும் சுவையினை உடையதும் என்று சொல்லப்படும், அவை போல்வனவாகிய பிற தன்மைகளை

யுடையனவுமாகிய, பொருளின்கண் கிடக்கும் அதன் குணத்தைச் சுட்டி இப்பொருள் இத்தன்மை உடையது என்று உணரவரும் இயல்பினை உடைய எத்தகைய தொகைமொழியும் பண்பினது தொகையேயாம்.

வண்ணம் முதலியவற்றுள் 'இன்' சாரியை நிற்க உருபிடைச் சொற்களும் எண்ணிடைச் சொற்களும் தொக்கன. குணமும் குணமுடையதும் ஒருபொருளேயாதலின் அதன்குணம் நுதலி என்றார். 'இது' வென்றது பொருளை, இன்னது என்றது ஒன்றுபட்டுக் கிடக்கும் அதன் தன்மையை. 'இன்னது' என்றதனான் இத்தொகை விரியுமிடத்துக் கிழமைப்பொருள் தோன்ற விரியுமென்க. 'என்ன கிளவியும்' என்றுது அத்தகைய எல்லாக்கிளவிகளும் என்றவாறு. கிளவி என்றது தொகை மொழிகளை.

ஒரு பொருளை அதன் தன்மையொடு சுட்டாதவழி அப்பொருட்பெயர் ஒரு சொல்லேயாகுமாதலின் 'அதன் குணம் நுதலிவரும் இயற்கை என்ன கிளவியும்' என்றும், ஒருபொருட்குப் பல்வேறு குணங்கள் உளவாதலின் 'இன்னது இதுவென வருஉம்' என்றும் விளீங்க ஓதினார்.

இனி உவமவேறுபாடாக (உருவகமாக) வரும் முகமதி, அடிமலர் என்றாற் போலத் தொக்குவருவனவும், வடசொற்கிளவி உரிச்சொற்கிளவி, உயர்சொற்கிளவி, வேழக்கரும்பு ஆயன் சாத்தன் என்றாற்போலக் குணத்தைச் சுட்டாமல் அப் பொருளையே சுட்டி வருவனவும். அவைபோல்வனவாய் இன்னது இதுவென ஒன்றைச் சிறப்பித்து வருவனவெல்லாம் இதன்கண் அடங்குமென்பார் "என்ன கிளவியும் பண்பின் தொகையே" எனத் தேற்றஞ்செய்து கூறினார் என்க.

**எ-டு :** கருங்குதிரை - வெண்டிங்கள் (வண்ணம்) எனவும் வட்டப்பலகை - முடத்தெங்கு (வடிவு) எனவும் நெடுமாறன் - குறுங்கை (அளவு) எனவும், தீங்கனி-உவர்நீர் (சுவை) எனவும் - வரும். 'பிற' என்றதனான் - நுண்பொருள் - ஒண்சுடர் - நறும்பூ - மெல்லணை நல்லணி - உரிச்சொல் - எனப்பிற பண்புகள் பற்றி வருவன வெல்லாம் கொள்க. 'என்ன கிளவியும்' என்றதனான் சாரைப்பாம்பு - வேழக்கரும்பு - ஆயன் சாத்தன் எனவும் அடிமலர் - முகமதி - வடசொற்கிளவி - உரிச்சொற்கிளவி- முப்பஃது இருநூறு எனவும் வருவன கொள்க.

வண்ணம் முதலியவற்றானாகிய பண்புத்தொகை மொழிகள் விரியுங்கால் உயர்திணை அஃறிணை ஆயிருமருங்கின் ஐம்பாலறி

யும் பண்புதொகுமொழியும் (எழு-482) என்றதனான் இன்னது என நிற்கும் பண்புரிச்சொற்கள் இதுவென நிற்கும் பொருட் பெயர்க்குரிய பாலான் கிழமைப் பொருள் தோன்ற விரியுமென்க.

வரலாறு: கரியதாகிய நிறனுடைய குதிரை-வெள்ளிதாகிய நிறனுடைய திங்கள் எனவும் வட்டிதாகிய வடிவுடைய பலகை - முடத்ததாகிய வடிவுடையதெங்கு எனவும், நெடிய அளவின னாகிய மாறன் - குறிய அளவுடையதாகிய கை எனவும் தீவிதாகிய சுவையுடைய கனி-உவர்ப்பாகிய சுவையுடைய நீர் எனவும். நுண்ணிதாகிய நோக்குடைய பொருள் எனவும் ஒள்ளி தாகிய தேசுடைய சுடர் எனவும் நறிதாகிய மணமுடையபூ எனவும் மெல்லிதாகிய பண்புடைய அணை எனவும் அழகிதாகிய பண்புடைய அணி எனவும் உரியதாகிய சொல் எனவும் விரியும் (உரிமை என்பது கிழமைப்பண்பு)

'என்னகிளவியும்' என்றதனான்வரும் பண்புத்தொகைகள் விரியுங்கால் அப்பொருளை விளக்குதற்கு ஏற்ற சொற்களான் விரியும். அவை விரியுமாறு : சாரை என்று சொல்லப்படுவதாகிய பாம்பு, வேழமென்று கூறப்படுவதாகிய கரும்பு எனவும் (இவை சாதிப்பண்பு) ஆயன் என்று அழைக்கப்படும் சாத்தன் எனவும் (இதுவும் சாதிப்பண்பாம்) அடியாகிய மலர் - முகமாகிய மதி எனவும் (இவை உருவகப்பண்பு) வடசொல்லாகிய கிளவி-உரிச் சொல்லாகிய கிளவி எனவும் (இவை மீமிசைப்பண்பு) மூன்றாகிய பத்து, இரண்டாகிய நூறு எனவும் (இவை உறழ்ச்சிப்பண்பு) விரியும்.

பண்புத்தொகைகளை விரிக்குமிடத்து வரும் 'ஆகிய' என்னும் சொல் ஆக்கங்கருதிய வினைச்சொல்லன்று, பண்புத் தொகைகளை விரித்தற்குத் துணையாவதோர் இடைச்சொல் என அறிக. இதனைப் பண்புருபு என்பாருமுளர்.

இனி உரையாசிரியன்மார் "இன்னது இதுவெனவருஉம்" என்பதற்கு வடநூன் முறைமைபற்றிய விசேட இலக்கணத்தைக் காட்டி ஒன்றை ஒன்று பொதுமை நீக்கவரும் என்பார். அவ்விலக்கணம் கடைபோகாமை அவர்தம் உரையானே விளங்கும். மற்று, பண்புத்தொகை எவ்வாறு அமைத்துநிற்கும் என்பதன்றி அஃது எங்ஙனம் விரிந்து பொருள்பயக்கும் என்பது ஈண்டு ஆராய்ச்சியின்றென்க.

இனி, தெய்வச் சிலையார் இச்சூத்திர உரைவிளக்கத்துள் "அஃதேல் இவைகரிய குதிரை, நெடிய கோல் எனப் பெயரெச்ச வாய்பாட்டான் விரிதலானும் பண்புபற்றி வருஞ்சொல் வினைக்

குறிப்பாகிமுடிதலானும் வினைத்தொகையுள் அடங்குமெனின், பண்புத் தொகை ஒருவாய்ப்பாட்டான் விரிக்கப்படாதென்பது எழுத் ததிகாரத்துட் கூறுதலின் பெயரெச்ச வாய்பாடும் வரும், வினைக்குறிப் பாதலானேயன்றே வினைக்குறிப்போடு சேர ஓதுவராயிற்று என உணர்க''. என்றும் ''கருமையை உடைய குதிரை என வேற்றுமைத் தொகையாயும் அடங்குமால் எனின் அஃது இன்னது இதுவென ஒன்றையொன்று விசேடித்துவரல் வேண்டும். அவ்வாறு வருங்கால் வேற்றுமைத் தொகையாகா, தென்க. வேற்றுமைத் தொகை, உவமத்தொகை, வினைத்தொகை பண்புத்தொகை என்பன தம்மில் ஒருபுடை ஒற்றுமை யுடையவாகலின் பாணினியார் தற்புருடசமாசன் என்று குறியிட்டார்'' என்றும் கூறியுள்ளார்.

தமிழ் இலக்கணம் வடநூல் முறைமைக்கு மாறானதன்று எனக்காட்டுதல் அவர் விருப்பமென்பது இங்ஙனம் அவர் கூறும் ஒவ்வா விளக்கத்தால் புலனாகும். ஆசிரியர் பண்புத்தொகை மொழிக்கண் தொக்குநிற்பவை ஐம்பாலறியும் இறுதிஇடைச் சொற்களே என்பது நன்கு புலப்பட

உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின்
ஐம்பாலறியும் பண்புதொகு மொழியும் (எழுத் - 482) எனக் கூறியுள்ளமையான், விரிக்குங்கால் ஐம்பாலுணர்த்தும் ஈறுகளை விரித்தலே இலக்கண மரபென்பதைக் கருதாமல் கரியகுதிரை - கருமையாகிய குதிரை - கருமையை உடைய குதிரை எனத் தமக்குத்தோன்றியவாறெல்லாம் விரித்து அமைதி கூறுதல் அறிவியலுக்கும் இந்நூல் நெறிக்கும் ஒவ்வாதென்க.

சூ 417 : இருபெயர் பல்பெயர் அளவின் பெயரே
எண்ணியற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி
எண்ணின் பெயரொடு அவ்வறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே உம்மைத் தொகையே

க-து : உம்மைத்தொகைமொழியினது இலக்கணங் கூறுகின்றது.

உரை : உம்மைத்தொகையாவது இருபெயரும் பல்பெயரும் அளவினாகிய பெயரும் நிறைப்பெயராகிய கிளவியும், எண்ணி னாகிய பெயரும் ஆகிய அவ்அறுவகைச் சொற்களையும் கருதி வரும் நிலைமைத்தாகும்.

தொகை என்ற அளவானே இரண்டு முதலாய சொற்கள் இணைந்து வருமென்பது பெறப்படுமாதலின் இருபெயர், பல்பெயர் என்றதுமிகையாம் எனின்? அற்றன்று வேற்றுமைத்

தொகை முதலிய ஏனைத்தொகைமொழிகள் இருசொல்லாயே தொகும். இஃது இரண்டு சொல்லானும் இரண்டிறந்த சொல்லானும் தொகும் என்பது அறிவித்தற்கு விதந்து கூறினார் என்க. மற்றும். வேற்றுமைத்தொகை முதலியவை இரு சொற்களாய்த் தொகுமாயினும் அவையெல்லாம் ஒருசொல் நீர்மைப்பட்டு ஒருபொருளுணர்த்திவரும். உம்மைத்தொகையுள் ஒருசாரன பலசொல் நீர்மைத்தாயே நிற்கும். அதனான் இரு மொழி பன்மொழி என்னாது இருபெயர்-பல்பெயர் என்றார் என அறிக.

அற்றாயின், கற்சுனைக் குவளையிதழ், பேரமர்க்கட் பேதை என்றாற் போல வருபவை பல சொல்லாற்றொக்கனவன்றோ எனின்? அன்று. என்னை? அவற்றை நிலைமொழி வருமொழி செய்து காணுங்கால் கல் என்பது சுனையொடு தொக்கு ஒரு சொல்லாகிப் பின் குவளையொடு தொக்கு ஒருசொல்லாய் நின்று பின்னர் இதழ் என்பதனொடு இயையுமாதலின் இருசொல் நின்று புணர்ந்தனவேயாம். காரணம் நோக்குடைய பொருள் குவளை யிதழ் என்பதாகலின், கற்சுனை என்பது குவளைக்கு அடையாகி நின்றது என்க. ஏனையவும் இவ்வாறே இரு சொல்லாகியே தொகும் என்க. உம்மைத்தொகையின்பால் நிற்கும் சொற்கள் அங்ஙனம் ஒன்றொடு ஒன்று இயைதற்கேலாவாதலின் இரு சொல்லும் பல சொல்லுமாகவே நின்று தொகுமென்க.

கண்ணிய நிலைமத்தாவது அவற்றின் தொகையைக் கருதிய நிலைமைத்தாம். அஃதாவது தொகைப் பெயர் (தொகுதியைச் சுட்டும் சொல்) மறைந்து நின்று அப்பொருளைப் புலப்படுத்தலே உம்மைத்தொகையின் பொருளாம் என்றவாறு.

உம்மை எனப் பொதுப்பட ஓதினாரேனும் ஏனையபொருள் பற்றிவரும் உம்மை இடைச்சொல் தொக்குவாராமையானும் உம்மை இடைச்சொல் தொகையொடு முடிதலானும் ஈண்டு உம்மை என்றது, எண்ணும்மை என்பது பெறப்படும். எண்ணின் பெயர் என்றது பெயரியலுள் "இனைத்தெனக் கிளக்கும் எண்ணுக்குறிப் பெயர்" (பெய - 14) எனக்கூறிய அஃறிணைப் பெயர்களையாம். எண்ணுப் பெயர் பிரிக்கப்பட்டமையான் அளவுப் பெயர் நிறைப்பெயர்களையும் பிரித்தோதினார் என்க.

எ-டு : உவாஅப்பதினான்கு -- ஆடல்பாடல் (இவை இரு பெயர்த்தொகை) புலிவிற்கயல் -- சேரசோழபாண்டியர் (இவை பல்பெயர்) தூணிப்பதக்கு -- கலனே தூணிப்பதக்கு (இவை அளவுப்பெயர்) பன்னிருவர் -- நூற்றுப் பதினைவர் (இவை

எண்ணியற்பெயர்) தொடியரை -- தொடியே கஃசரை (இவை நிறைப்பெயர்) பதினைந்து -- நூற்றுப் பதின்மூன்று (இவை எண்ணின்பெயர்) எனவரும்.

இவை விரியுங்கால், உவாவும் பதினான்குமாகிய இரு மதி நிலைகள், ஆடலும் பாடலுமான இரண்டு, புலியும் வில்லும் கயலுமாகிய மூன்று, சேரனும் சோழனும் பாண்டியனும் ஆனமூவர் -- தூணியும் பதக்குமாகிய தொகுதி - கலனும் தூணியும் பதக்குமாகிய தொகுதி - பதின்மரும் மூவருமான குழுவினர், நூற்றுவரும் பதின்மரும் மூவரும் ஆன குழுவினர் - தொடியும் அரையுமாகிய தொகுதி - தொடியும் கஃசும் அரையு மாகிய தொகுதி - பத்தும் ஐந்துமாகிய தொகுதி - நூறும் பத்தும் மூன்றுமாகிய தொகுதி என விரியும். இவற்றுள் பல்பெயர்த்தொகை தவிர்ந்த ஏனையவை இருபெயர்த் தொகை யாகவே கொள்ளப்படுமென்க.

இனி உரையாசிரியன்மார் இவற்றை விரிக்குமிடத்து உவாவும் பதினான்கும்-புலியும் வில்லும் கயலும் என்றாற் போல உம்மையை மட்டும் விரித்து அவாய் நிலையாகவிட்டனர்- ஏனைத் தொகைகளைப் பொருள் விளக்கத்திற்கு வேண்டிய சொற்களைக் கூட்டி விரித்துக் கொள்ளுமாறு போல உம்மைத் தொகையினையும் அங்ஙனம் விரித்து முடித்துக்கொடலே நூலோர் துணிபென்க.

அற்றாயின், உவாவும் பதினான்கும் ஆகிய இருமதிநிலைகள் என்றும் புலியும் வில்லும் கயலும் ஆகிய மூன்று என்றும் விரித்து முடிப்பின் அவை பிற சொல்லான் முடிதலின் அன்மொழித் தொகையை ஒக்குமெனின்? அற்றன்று. என்னை? அன்மொழித் தொகையாவது தொக்க இருமொழி மேலும் பொருள் நில்லாமல் அவைபற்றுக்கோடாகப்பிறிதொரு மொழியின்கண்ணே பொருள் நிற்கும் இயல்பினதாகும். உம்மைத் தொகைக்கண் தொக்க மொழிகளின் மாட்டன்றி முடித்தற்பொருட்டு விரிந்து நிற்கும் சொற்களின்பால் பொருள் நில்லாமையான் அன்மொழிப் பொருட்டாகாதென்க.

உம்மைத்தொகையை விரிக்குங்கால் முடிக்கும் சொற்கள் ஈற்றின் கண் வரும் என்பது புலப்படுத்தற்கு இதனை ஈற்று நின்றியலும் அன்மொழித் தொகையொடு சேரவைத்தார் எனத் தெரிக.

சூ. 418 : பண்பு தொகவரூஉம் கிளவி யானும்
உம்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்
ஈற்று நின்றியலும் அன்மொழித் தொகையே

க-து : அன்மொழித்தொகையினது இலக்கணங் கூறுகின்றது.

உரை : அன்மொழித்தொகையாவது பண்புத்தொகையாதற் குரிய சொற்களின் சார்பானும், உம்மை தொக்கு நிற்பச் செவ்வெண்ணாக வரும் பெயர்கள் சார்பானும், வேற்றுமை உருபுதொக்கு நிற்கும் பெயர்கள் சார்பானும் அவற்றின் ஈற்றின்கண் மறைந்து நின்று நடைபெறும்.

அன்மொழி என்றது சொல்லின் முடியும் இலக்கணத்ததாய் நின்றது. அஃதாவது தொக்க மொழிகளல்லாததொரு மொழிப் பொருள் ஈற்றின்கண் தொக்கு நிற்கும் தொகை மொழி என்பதாம். மொழி என்றது பொருளை.

பண்புத்தொகையது முதன்மொழி குறையுரிச் சொல்லாதலின் பண்புதொக்க பெயர்வயினான் என்னாது பண்புதொக வரூஉம் கிளவியானும் என்றார்.

கண்டுகேட்டுணர்தல் - உண்டுயிர்த்து நின்றான் என வினைக்கண்ணும் உம்மைத்தொக்குவருதலின் உம்மைத்தொகை ஓதிய பெயர்பற்றி வரும் என்பது புலப்பட உம்மைத்தொக்க பெயர் வயினானும் என்றார்.

நிலங்கடந்தான், வேலெறிந்தான் என வினைமுற்றொடு தொடர்தற் கண்ணும் வேற்றுமையுருபு தொகுமாதலின் வேற்றுமை தொக்கபெயர் வயினானும் என்றார். வேற்றுமை என்றது ஈண்டு உருபினை. இவை மூன்றும் மேற்கூறிய பண்புத் தொகை, உம்மைத்தொகை வேற்றுமைத்தொகைகள் அல்ல என்பது விளங்க இங்ஙனம் தெரியக்கூறினார்.

பண்புதொகவரூஉம் கிளவிகள் முதலாய சொற்கள் தனக்குச் சார்பாக நிற்றலன்றி அவற்றின் கண் பொருள் தொக்கு நில்லாது அவையல்லாத பிறிதொன்றின்கண் நிற்கும் என்பது விளங்க 'ஈற்று நின்று இயலும்' என்றார். அஃதாவது பண்புத் தொகை முதலியவாக விரியாமல் அன்மொழித்தொகைப் பொருள் மட்டுமே விரியும் என்றவாறாம்.

எ-டு : வெள்ளாடை - செங்கோல்-தகரஞாழல்-புலிவிற்கயல் பொற்றொடி-மணிமேகலை செய்யுளிலக்கணம், கிள்ளிகுடி எனவரும். இவை முறையே வெள்ளாடை வந்தாள், செங்கோல் புரிந்தான் தகரஞாழல் கொணர்ந்தான், புலிவிற்கயல் பறந்தது எனவும், மணிமேகலை சென்றாள், பொற்றொடி பாடினாள், செய்யுளிலக்கணம் வாங்கினான்-கிள்ளிகுடி வாழ்ந்தான் எனவும் முடியும். இவை விரியுங்கால் வெள்ளாடை உடுத்தற்குரிய பெண்மகள் - செங்கோலான் நிகழும் நீதி - தகரமும் ஞாழலும் கூட்டிச்செய்தசாந்து-புலிவிற்கயல் பொறித்தகொடி,மணிமேகலையை அணியும் நங்கை - பொற்றொடி பூணும் மங்கை செய்யுளிலக்கணம் கூறும் நூல் - கிள்ளியது குடியிருக்கும் ஊர் என விரியும். எனவே வெள்ளாடை, செங்கோல், தகரஞாழல், புலிவிற்கயல், பொற்றொடி, மணிமேகலை செய்யுளிலக்கணம் கிள்ளிகுடி என்னும் தொகை மொழிகள் முறையே பெண்மகள், நீதி, சாந்து, கொடி, நங்கை - நூல் - ஊர் என அவையல்லாத மொழிப் பொருள்களைப் பயந்து நின்றவாறறிக.

இவற்றுள் வெள்ளாடை முதலியவை பெண்மகள் முதலிய அன்மொழிப் பொருளைப் பெறுதற்குச் சார்பாக நின்றமையன்றி அவற்றுள் அன்மொழிப் பொருள் இன்மையுமறிக. அவை அன்மொழிப்பொருள் தாராவிடத்துப் பண்புத்தொகை முதலியவாய் ஆதற்கு உரிமைபெற்று நிற்குமாறும் கண்டுகொள்க. இனி வெளிதாகிய ஆடையை உடுத்தவளாகிய பெண்மகள் வந்தாள் என விரிப்பின், வெள்ளாடையை உடுத்தியமை காரணமாகப் பெற்ற பெயராய் பெருந்தீனி தின்பவனைப் பெருந்தீனி என்று கூறுமாறு போன்று ஆகுபெயராகிவிடுமென்க.

அதனான் அன்மொழித்தொகையை விரிப்புழி அன்மொழிப் பொருளுக்கும் தொகை மொழிக்கும் இடையே வேண்டும் சொற்களை விரித்தலன்றி தொகைமொழியை விரித்தலாகாதென்க.

கடு, புளி என்னும் சொற்கள் கடுத்தின்றான் புளிதின்றான் எனவரும் பயனிலைகளான் ஆகுபெயரானமை அறியுமாறு போல அன்மொழித்தொகையும் பயனிலைகளான் அறியப்படும் என்க.

இனி உவமந்தொக்க பெயர்கள்பற்றியும், வினைதொகவருஉம் கிளவி பற்றியும் அன்மொழித்தொகை பிறக்குமென ஆசிரியர் கூறாதது என்னை எனின் ? அவை உவமத்தொகைப் பொருளையும் வினைத்தொகை பொருளையும் தாராமல் பிறிது பொருள் தருங்கால் அவை இருபெயரொட்டு ஆகுபெயர்

ஆவதன்றி பெரும்பான்மையும் அன்மொழித்தொகையாகா ஆதலின் என்க.

அஃதாவது, துடியிடை-தாழ்குழல் என்னும் உவமத்தொகை-வினைத்தொகைகளில் வரும் இடை என்பதும் குழல் என்பதும் தொடர்புடைய பிறபொருள் உணர்த்தி அடையடுத்து நிற்றலின் அவை சினையிற் கூறும் முதலறி கிளவியாய் ஆகுபெயராகும் என்க.

மற்று உவமத்தொகைக்குரிய சொற்களானும் வினைத் தொகைக்குரிய சொற்களானும் அன்மொழித்தொகை வாராதோ எனின்? அவை ஆகுபெயராதற்கியைபின்றிச் சிறுபான்மை பிறபொருள் உணர்த்திவரின் அன்மொழித்தொகையாதற்கு ஏற்கும். என்னை? தொடலைக் குறுந்தொடி, பான்மொழி என்றாற்போலவும் பெய்வளை பணிமொழி என்றாற்போலவும் வருவன சினையிற் கூறும் முதலறி கிளவி முதலிய ஆகுபெயர்ப் பொருள்தரற்குஏலாமல் நிற்றலின் அவை அன்மொழிப் பொருள் தரும் என்க. இங்ஙனம் அவை சிறுபான்மையாக வரும் என்பதை உணர்த்தவே சிறுபான்மையாக வரும் உம்மைதொக்க பெயர்வயினான் வரும் அன்மொழித்தொகையை இடைவைத்துப் பெரும்பன்மையாக வரும் வேற்றுமை தொக்க பெயர்வயினான் வரும் அன்மொழித்தொகையை இறுதிக்கண் வைத்தாரென அறிக. இதனைத் தலைதடுமாற்றந் தந்துபுணர்ந்துரைத்தல் என்னும் உத்தி என்ப.

சூ. 419: அவைதாம்
முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்
இருமொழி மேலும் ஒருங்குடன் நிலையலும்
அம்மொழி நிலையாது அன்மொழி நிலையலும்
அந்நான் கென்ப பொருள் நிலை மரபே

க-து: மேற்கூறிய தொகை மொழிகளுள் தொகைப் பொருள் நிற்கும் முறைமை கூறுமுகத்தான் அவற்றை விரித்துணருமாறு கூறுகின்றது.

உரை: மேற்கூறிய அறுவகைத் தொகை மொழிகள் தாம் விரியுமிடத்து அவற்றின் தொகைப் பொருள் நிற்கும் முறைமை யாவது முன்மொழிக்கண் நிற்றலும், பின்மொழிக்கண் நிற்றலும், இரு மொழிக்குள்ளும் அவற்றின் மேற்பட்டும் ஒருங்குஉடன் நிற்றலும், அம்மொழிக்கண் நில்லாது அயல் மொழிக்கண் நிற்றலும் ஆகிய நான்கு என்று கூறுவர் ஆசிரியர்.

உம்மைத்தொகை இரு சொல்லானும் இரண்டிறந்த சொல்லானும் வருதலின் இருமொழி மேலும் என்றார். இருமொழிக் கண்ணும் இரண்டிறந்ததன் மேலும் என விரிக்க. ஒருங்குடன் என்பது மீமிசைச் சொல்.

பொருள் நிலைமரபு பற்றி 'வேற்றுமையியல' 'உவமவியல' 'காலத்தியலும்' 'இன்னதிதுவென வரூஉம்' 'கண்ணிய நிலைத்தே' ''ஈற்று நின்றியலும்'' எனக்குறிப்பாற் கூறினமையின் அவற்றின் நிலைமரபுகளைச் சுருங்கச் சொல்லல் என்னும் அழகுபற்றி இதனாற்றொகுத்துக் கூறினார் என்க.

எ-டு : வேங்கைப்பூ - பொற்றொடி எனவரும் வேற்றுமைத் தொகைகளுள் வேற்றுமை கொள்வன பூவும் தொடியுமாகலின் வேற்றுமைத் தொகையுள் முன்மொழிக்கண் தொகைப்பொருள் நிற்கும்.

2) மதிமுகம் - தேமொழி எனவரும் உவமத்தொகைளுள் உவமிக்கப்படுவன முகமும் மொழியுமககிலின் உவமத்தொகையுள் முன்மொழிக்கண் தொகைப் பொருள் நிற்கும்.

3) கொல்யானை - தாழ்குழல் எனவரும் வினைத் தொகை களுள் காலத்தியல்வன கொல், தாழ் என்னும் முதனிலை வினைப்பெயர் களாதலின் வினைத்தொகையுள் பின்மொழிக்கண் தொகைப் பொருள் நிற்கும்.

4) கருங்குதிரை - வெண்டிங்கள் எனவரும் பண்புத்தொகை களுள் இன்னது இதுவெனப் பண்பு விரிதற்குரியவை குதிரையும், திங்களுமாதலின் பண்புத்தொகைக்கண் முன் மொழிக்கண் தொகைப்பொருள் நிற்கும், வேழக்கரும்பு - ஆயன் சாத்தன் என வரும் இருபெயர் ஒட்டுப் பண்புத்தொகைகள் ஒன்றனை ஒன்று சிறப்பித்து நிற்றலின் இருமொழிக்கண்ணும் தொகைப்பொருள் நிற்கும்.

5) தகர ஞாழல் - புலிவிற்கெண்டை எனவரும் உம்மைத் தொகைகளுள் எண்ணும்பொருள் ஒவ்வொன்றையும் பற்றி விரிதலின் உம்மைத்தொகையுள் இருமொழியினும் பன்மொழி யினும் தொகைப் பொருள் ஒருங்குடன் நிற்கும்.

6) பொற்றொடி - சேயிழை எனவரும் அன்மொழித் தொகை களுள் தொகைச் சொற்கள் இரண்டும் தம் இயற்பொருள் உணர்த்தாமல் நங்கை மங்கை என்றாற் போல பிற சொற் பொருள் உணர்த்தலின் அன்மொழித் தொகைக்கண், அதன்

தொகைப் பொருள் அம்மொழி நிலையாது அயல் மொழிக்கண் நிற்கும் என்க.

இனி அடி மலர் பெண்ணணங்கு எனவரும் பண்புத் தொகைகள் (உருவகமாதலின்) பின்மொழிக்கண் தொகைப் பொருள் நிற்கும் என்க. பின் முன் என்றது ஈண்டு இடம் பற்றி நின்றன.

இச்சூத்திரம் தொகை மொழிக்கண் பொருள்சிறக்கும் சொற்கள் நிற்குமிடம் உணர்த்தியதாகப் பொருள் கூறினர் உரையாசிரியன்மார். சொற்பொருள் சிறக்குமிடம் என்பது தொகை மொழி தொடர்மொழிக்கட்கெல்லாம் பொதுவாகலானும் ஆசிரியர் "அவைதாம் - பொருள்நிலை மரபு" எனத்தொகைப் பொருள் நிற்குமிடமே சுட்டிக்கூறலானும் அவர் தம் கருத்து நூல் நெறிக் கொவ்வுமாறில்லை என்க.

சூ. 420 : எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய (23)

**க-து :** தொகைமொழிகட்கெல்லாம் ஆவதொரு பொதுவியல்பு கூறுகின்றது.

**உரை :** மேற்கூறிய அறுவகைத் தொகை மொழிகளும், பெயரினாகிய தொகையாக வருவனவும், பிறவுமெல்லாம் ஒருசொற் போன்று நடக்கும் இயல்பினவாம்.

ஒருசொல் போறலாவது, எழுவாயாக நின்று உருபேற்றலும் பயனிலை கோடலும், பெயராதலும் பெயர்ப்பயனிலை யாதலுமாம்.

எ-டு : பொற்றொடி கழன்றது. துடியிடை துவண்டது. தாழ்குழல் அலைந்தது. செந்தாமரை பூத்தது. இயலிசை நிகழ்ந்தன. சேர சோழ பாண்டியர் ஆண்டவர். சேயிழை வந்தாள் எனவும். இளம்பெருவழுதி வந்தான் கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார் வந்தார், கங்கை கொண்டான் வந்தான், எனவும் வரும். இவை எழுவாயாய் வினைமுற்றுப் பயனிலை கொண்டன. இவற்றிற்கு ஏற்கும் உருபு கொடுத்துப் பயனிலை களோடு கூட்டிக் கண்டுகொள்க. இது பொற்றொடி - இவள் மணிமேகலை எனப் பெயர்ப் பயனிலைகளாக வந்தன. மாகீர்த்தி என்பவன் நிலந்தரு திருவிற்பாண்டியன் - எனப் பெயரினாகிய தொகை பயனிலையாக வந்தது பிறவும் இவ்வாறே கண்டு கொள்க.

இனி, இச்சூத்திரத்தானும் உருபு முதலாயின தொக்கு நிற்பினும் கடந்தாள்நிலம் - இருந்தான் குன்றத்து - என

விட்டிசைத்து வருவன தொகைமொழி யாகா என்பது நன்கு பெறப்படும்.

ஒருசொல் நீர்மைய, என்னாது "ஒருசொல் நடைய" என்றதனான், யானை கோடுகூரிது-இரும்பு பொன்னாயிற்று என்றாற்போல வினை முற்றுப் பயனிலைகள் பிறசொல்லொடு தொக்கு விட்டிசையாது வருவன வற்றையும் ஒருசொல் நடையின் பாற்படுத்துக் கொள்க.

'தொகைமொழி' என்னும் சொல்லே இவ்விதியை உட்கொண்டு நிற்குமாயினும் பெயரினாகிய பலசொல்தொகும் தொகை மொழிகளும், பெயரொடு வினைவிரவியதொகை மொழிகளும் வேற்றுமைத்தொகை முதலிய அறுவகைத்தொகை மொழிகளைப் போன்று முடிக்குஞ்சொல்லாயும் முடிக்கப்படும் சொல்லாயும் நிற்குமென்பதறிவித்தற்கு இங்ஙனம் விதந் தோதினார் என்க.

சூ. 421 : உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே
பலர்சொல் நடைத்தென மொழிமனார் புலவர் *(24)*

**க-து :** உயர்திணைபற்றி வரும் உம்மைத்தொகைக்காவதொரு சிறப்பு விதி கூறுகின்றது.

**உரை :** உயர்திணையிடத்ததாகவரும் உம்மைத்தொகை முடிபு கோடற்கண் பலர்சொல் நடையினது எனக் கூறுவர் புலவர். 'பலர்சொல்' என்றது பல்லோரறியுஞ் சொற்குரிய ஈற்றிடைச் சொல்லொடு நிற்கும் சொல்.

**எ-டு :** கபிலபரணர் வந்தார்-சேரசோழபாண்டியர் வந்தார். தாய் தந்தையர் வாழ்த்தினர், நம்பி, நங்கையர் வந்தனர் எனவரும்.

எண்ணப்படும் பெயர்கள் உம்மைதொக்க வழி அவை செவ்வெண்ணாம் "செவ்வெண் இறுதி யாவயின் வரினும் தொகையின்றியலா" என்பது விதி. உம்மைத்தொகை மொழிகள் செவ்வெண்ணாக நில்லாமல் ஒருசொல் நடையவாய் நின்று முடிபு கோடலின் பன்மைச் சொல்லாக வரும் முடிக்குஞ் சொல்லொடு முடியும் வழி ஒருமையீறாக நின்று முடிதல் வழுவாதல் நோக்கிப் பலர் சொல் நடைத்து என்றார்.

இவ்வாறு வருதல் மரபு என்பது தோன்றப் பலர் சொல் ஈறாகும் என்னாது "பலர் சொல் நடைத்தென மொழிமனார் புலவர்" என்றார்.

இதன்பயன் கபில பரணர் - சேரசோழ பாண்டியர் என்னு மிடத்துப் பரணர் - எனவும் பாண்டியர் எனவும் பன்மையீறாக நின்றன வேனும் அவை ஒருமைச் சொல்லே என உணர்த்தலாம்.

மாபலா வாழை சிறந்தன, யானை தேர் பரிமா வந்தன. என அஃறிணைப்பெயர் பற்றி வரும் உம்மைத்தொகை நின்றாங்கே நின்று பன்மைச்சொல்லொடு முடிதல் வழுவன்மையின் "உயர்திணை மருங்கின் உள்மைத்தொகையே" என விதந்து கூறினார். உயர்திணை விரவுப் பெயரும் அடங்க உயர்திணை மருங்கின் உம்மைத்தொகையே என விளங்க ஓதினார் என்க.

தெய்வச் சிலையார் "பல சொல்நடைத்து" எனப்பாடங் கொள்வார் அது கூறியது கூறல் என்னும் குற்றமாகும் என்க.

சூ. 422 : வாரா மரபின வரக் கூறுதலும்
என்னா மரபின எனக் கூறுதலும்
அன்னவை எல்லாம் அவற்றவற் றியலான்
இன்ன என்னும் குறிப்புரை யாகும் (25)

க-து : ஒருசார் குறிப்பு மொழிகள் ஆமாறு கூறுகின்றது.

உரை : வாராதமரபினவாய பொருள்களை வருவனவாகக் கூறுதலும் வாயாற் சொல்லற் கியலாமரபினவாய பொருள்ளைச் சொல்லுவனவாகக் கூறுதலும் அவ்வாறு வருவனவாகிய பிற வெல்லாம் அவற்றவற்றினுடைய இயல்பு காரணமாக இத் தன்மைய என்று உணரக்கூறும் குறிப்பு மொழிகளாம். அன்னவை என்றதனான் - செல்லுதல் - கிடத்தல், உண்ணுதல்- தடுத்தல் முதலாய தொழில் பற்றிக் கூறப்படுவன வெல்லாம் கொள்க.

எ-டு : அந்நெறி ஈண்டு வந்து கிடந்தது (நெறி - சாலை) எனவும், அம்மலை அம்மலையொடு சென்று பொருந்திற்று - எனவும் அவல் அவல் என்கின்றது நெல் - மழை மழை என்கின்றது பைங்கூழ் எனவும் நீலுண்துகிலிகை எனவும் வரும். பிறவும் அன்ன.

அந்நெறி இது வரை நீண்டுளது எனற்பாலதனை அதன் நெடுமை நோக்கி வந்துகிடந்தது என உணர்த்தியதன்றி இஃது தொடர் மொழியாக்கம் பற்றிய மரபன்மையின் கிளவியாக்கத்துட் கூறாமல் 'பொற்றொடி தந்த புனைமடல்' என்றாற் போலக் குறிப்பாற் பொருளுணர்த்தும் இலக்கணம் கூறும் வழி இக்குறிப்பு

மொழிகளையும் அதனைச் சாரவைத்தோதினார் என அறிக. அதனான் அன்மொழித் தொகைமொழியும் குறிப்பாற் பொருளுணர்த்தும் என்பதை உய்த்துணரவைத்தார் என்க.

இனி 'கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே, என்றாற்போல அஃறிணைப் பொருள்பற்றி வருவன அகப்பொருள் பற்றிய மரபாகலான் அக்குறிப்பு மொழிகள் வேறு இவைவேறு என அறிக.

சூ. 423 : இசை நிறை அசைநிலை பொருளொடு புணர்தலென்று
அவை மூன் றென்ப ஒருசொல் லடுக்கே (26)

க-து : தொகைமொழிகளைப் பற்றிய இலக்கணங்கூறிய அதிகாரத்தான் ஒரு பொருள்பற்றி அடுக்கி வரும் அடுக்குத் தொடர் பற்றிய இயல்பினைக் கூறத் தொடங்கி இச்சூத்திரத்தான் அவற்றின் பெயரும் தொகையும் கூறுகின்றார்.

உரை : ஒரு சொல், இரண்டு முதலாக அடுக்கி வரும் அடுக்குத்தொடர், இசை நிறையடுக்கு - அசைநிலையடுக்கு - பொருள் நிலையடுக்கு என்று கூறப்படும் அவை மூன்று என்று கூறுவர் புலவர்.

அவை சொல்லின் முடியும் இலக்கணத்தனவாய் நின்றன. சொல் எனப் பொதுப்பட ஓதியதனான் பெயர்ச் சொல் முதலாய நால்வகைச் சொற்களும் கொள்ளப்படும்.

இசைநிறை என்பது செய்யுள் வழக்காகிச் செய்யுட்கண் சீர்முதலிய நிரம்புதற்கு வரும். அசைநிலையும் செய்யுட்குரியதாயினும் அஃது அசைநிலைப் பொருளாக நில்லாமல் இசைநிறை போலப் பொருளுணர்த்துதலின் அதனைச் சாரவைத்து ஈண்டு ஓதினார். பொருளொடு புணர்தல் என்பது அடுக்கிவரும் சொல் தனக்குரிய இயற்பொருளொடு பிற குறிப்புப் பொருளையும் சுட்டி வருதலாம். அவ்வாறு வருதலைப் பின்னர் விரைசொல்லடுக்கே மூன்றுவரம்பாகும். என்பதனான் அறியலாம். அக் குறிப்பொருள்களாவன : விரைவு - துணிவு - உடன்பாடு - வலியுறுத்தல் - அவா முதலியனவாம்.

எ-டு : ஏஏஏஏ அம்பல் மொழிந்தனள் : இஃது இசை நிறை. அன்றே அன்றே - மற்றோ மற்றோ : இவை அசை நிலை. பாம்பு பாம்பு-அவன் அவன்-வைதேன்-வைதேன் விடுவிடுவிடு - படை படை, உய்யேன் உய்யேன், வருக வருக, இவை பொருளொடு புணர்ந்தன. முறையே இவை, விரைவு, துணிவு, உடன்பாடு, வலியுறுத்தல், அச்சம், அவலம், அவா என்னும் குறிப்புப் பொருள்களொடு வந்தன. பிறவும் அன்ன.

அடுக்கு என்பது சொல்லாற் பலவாயினும் பொருளான் ஒன்றேயாகலின் அஃது ஒரு சொல்லினது விகாரம் எனப்படும். இரட்டைக்கிளவி வேறு அடுக்கு வேறு. இரட்டைக்கிளவி பிரிந்த வழிப் பொருளுணர்த்தாது. அடுக்கு உணர்த்தும்.

இந்நூற் பாவைத் தொகை மொழி இலக்கணங்கூறும் சூத்திரங் களுக்கு முன்வைத்துத் தெய்வச்சிலையார் தவிர்ந்த ஏனை உரை யாசிரியன்மார் பொருள் கூறியுள்ளனர். ஆண்டுக் கூறுதற்கு யாதும் இயைபின்மையறிக. பொருளொடு புணர்தலாகிய அடுக்கு, விரைவு முதலிய குறிப்புப் பொருளும் தருதலான் "வாரா மரபின வரக்கூறுதலும்" எனக் குறிப்புமொழி இலக்கணம் கூறிய சூத்திரத்தின் பின்னர் அமைதலேதக்கது. தெய்வச்சிலையார் இவ்வாறே கொண்டார். இசை நிறையடுக்கு விரைசொல்லடுக்கு ஆயவை பற்றி இலக்கணங்கூறும் சூத்திரங்களொடு அவற்றின் தொகைகூறும் சூத்திரம் ஒருங்கிருத்தலே முறையாகும் என்க.

சூ. 424 : இசைப்படு பொருளே நான்குவரம் பாகும் (27)

**க-து :** இசைநிறை அடுக்கிற்கு மேல் வரம்பு கூறுகின்றது.

**உரை :** மேற்கூறிய மூன்றனுள் இசைபற்றி வரும் அடுக்கினது சொல்வரம்பு நான்காகும்.

**எ-டு :** பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ யான். எனவும் ஒக்குமே ஒக்குமே ஒக்குமே ஒக்கும் குளக்கொட்டிப் பூவின் நிறம் எனவும் வரும். மேல் எல்லை நான்கு எனக் கூறவே இது மூன்றும் இரண்டுமாக நிற்கவும் பெறும் எனக் கொள்க.

சூ. 425 : விரைசொல் லடுக்கே மூன்று வரம் பாகும் [28]

**க-து :** பொருளொடு புணரும் அடுக்கிற்கு மேல் வரம்பு கூறுகின்றது.

**உரை :** விரைவு பற்றி வரும் அடுக்குச் சொற்கு வரம்பு மூன்றாகும்.

**எ-டு :** பாம்பு பாம்பு பாம்பு எனவும், தீ தீ தீ எனவும் வரும். இச்சூத்திரபாடம் "உரை சொல்லடுக்கே மூன்று வரம்பாகும்" என இருந்திருத்தல் வேண்டும். என்னை? பொருளொடு புணர்தல் எனத் தொகைச் சூத்திரத்தின்கண் பொதுப்பட ஓதி யுள்ளமையான் பொருள்களுள் ஒன்றாகிய 'விரைவு' என்பதனை மட்டும் விதந்து கூறுதல் குன்றக் கூறலாம். (உரை-பொருள்)

இசைநிறைக்கும் பொருளொடு புணர்தற்கும் மேல் வரம்பு கூறி அசைநிலையடுக்கிற்குக் கூறாமையின் அஃது இரண்டற்கு மேல் அடுக்கிவராதென்பது உய்த்துணரப்படும். அடுக்கு நால் வகைச் சொற்கண்ணும் நிகழ்தலின் எச்சவியலுள் ஓதப்பட்ட தென்க.

சூ. 426 : கண்டீர் என்றா கொண்டீர் என்றா
சென்ற தென்றா போயிற் றென்றா
அன்றி யனைத்தும் வினாவொடு சிவணி
நின்ற வழி அசைக்கும் கிளவி என்ப (29)

**க-து :** ஒரு சார் அசைநிலைக்கிளவிகள் வருமாறு கூறுகின்றது.

**உரை :** கண்டீர், கொண்டீர், சென்றது, போயிற்று என்னும் அவ்வனைத்துச் சொற்களும் வினாஇடைச் சொல்லொடு பொருந்தி நிற்குமிடத்து அசைப்பொருளாகும் சொற்கள் என்று கூறுவர் புலவர்.

கண்டீர், கொண்டீர் என்பவை முன்னிலைப்பன்மை வினை முற்றுச் சொற்கள். சென்றது போயிற்று என்பவை படர்க்கை ஒருமை அஃறிணை வினைமுற்றுச் சொற்கள். வினாவொடு சிவணி நின்ற வழி என்றதனான் கண்டீரா-கண்டீரே-கண்டீரோ என நின்றவழி வினை முற்றுப் பொருளும் வினாப் பொருளும் தாராமல் அசைநிலையாக நிற்கும் என்பது சூத்திரக்கருத்தாதல் புலனாகின்றது.

இவை அடுக்கியும் அடுக்காதும் வரும் என்பார் சேனாவரையர். அடுக்கி வருமென்பதற்குச் சூத்திரத்துள் யாதொரு குறிப்பும் காணப்படவில்லை. அவர் அடுக்குச் சொல் பற்றிய அதிகாரம் நோக்கி அவ்வாறு கொண்டார் போலும். மற்றும் அவர் உதாரணங் காட்டுமிடத்துக் கண்டீரே கண்டீரே எனக் காட்டி உடன்படாமை குறித்து நின்றன என்பார். பொருள் தருமாயின் அசைநிலை என்பது முரணாகும். மேலும் அவர் அவை கட்டுரையகத்து வருமென்பார், பேச்சு வழக்கில் மட்டும் வரும் என்பது அவர் கருத்துப்போலும்.

தெய்வச்சிலையார் இசைக்கும் எனப்பாடங்கொண்டு வினா வொடு கூடிய வழி வினைச்சொல்லாய் நிற்கும். கூடாதவழி அசைநிலையாம் என்று கூறிப், படையிடுவான் மற்கண்டீர் காமன் மடையடும் பாலொடு கோட்டம்புகின் (முல்லைக்கலி-9) என உதாரணங்காட்டியுள்ளார்,

நச்சினார்க்கினியர் இவ் அடிகட்கு எழுதிய உரையுள் கண்டீர் என்பது வினாவொடு சிவணி நின்ற அசை என்கிறார். அதனான் கண்டீர் என்பதே ஓசை வேறுபாட்டான் வினாவாக நின்ற தென்பது அவர் கருத்துப்போலும். இனி

கண்டீரோ பெண்காள் கடம்பவனத் தீசனார்
பெண்டிர் தமைச் சுமந்த பித்தனார் - எண்டிசைக்கும்
மிக்கான தங்கைக்கு மேலே நெருப்பையிட்டார்
அக்காளை ஏறினார் ஆம் (தனிப்பாடல் - காளமேகம்)

என்னும் பாடலுள் கண்டீரோ என்பது அசைநிலையாகக் கொள்ளுமாறு நிற்கின்றது. இவ்வாறு ஆசிரியர் காலத்து இலக்கியங்களுள் வழங்கியிருத்தல் கூடும் எனத் தெரிகின்றது. சங்கால-இடைக்கால இலக்கியங்களுள்காண அரிதாக உளது.

சூ. 427 ; கேட்டை என்றா நின்றை என்றா
காத்தை என்றா கண்டை என்றா
அன்றி யனைத்தும் முன்னிலை யல்வழி
முன்னுறக் கிளந்த இயல்பா கும்மே (30)

க-து : இதுவுமது.

உரை : கேட்டை, நின்றை, காத்தை, கண்டை என்னும் அவ் அனைத்துச் சொற்களும் முன்னிலை வினைப் பொருள் தாராமல் நிற்குமிடத்து மேலைச் சூத்திரத்துட் கூறிய சொற்களை ஒத்த இயல்பினவாகும். அஃதாவது அசைநிலையாக நிற்கும் என்றவாறு,

'முன்னிலை அல்வழி' என்பதற்குக் கேட்டையோ நின்றையோ என வினாவொடு நின்றவழி அசைநிலையாகா வினாவொடு கூடாதவழியே அசைநிலையாகும் எனப் பொருள் கூறுவர் இளம்பூரணர். சேனாவரையர், வினாவொடு சிவணல் இவற்றிற்கு ஒன்றான் எய்தாமையின் விலக்கவேண்டா. அதனான் அவர்க்கது கருத்தன்று. என இளம்பூரணரை மறுப்பதன் கருத்துப் புலனாகவில்லை. தெய்வச் சிலையார் இவை முன்னிலை வினைச்சொல் அல்லாத வழி அசைநிலையாகும் எனக்கூறி மோரொடு வந்தாள் தகைகண்டை யாரொடும் சொல்லியாளன்றே வனப்பு (முல்லைக்கலி-9) என்று எடுத்துக் காட்டுகின்றார். நச்சினார்க்கினியர் கலித்தொகை உரையுள் நெஞ்சே காண்பாயாக' என இப்பகுதிக்கு உரை கூறியுள்ளார்.

சேனாவரையர் மாட்டேற்றினை "அசைக்கும்" என்ற அளவில் கொள்ளுகின்றார் எனத் தெரிகின்றது. இவை பற்றியு

வழக்கு அருகிவிட்டமையின் தெளிவான கருத்தறிதற்கியல வில்லை. இவ் எட்டுச் சொற்களும் வினைமுற்று வடிவத்தான் அமைந்து இடைச் சொல்லுக்குரிய அசைநிலைப் பொருளில் வழங்குதலான் இவற்றை ஈண்டு (எச்சவியலுள்) வைத்தார் என்க.

சூ. 428 : இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றச்
சிறப்புடை மரபின் அம்முக் காலமும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ விடத்தான் வினையினும் குறிப்பினும்
மெய்ம்மை யானும் இவ்விரண் டாகும்
அவ் ஆறு என்ப முற்றியன் மொழியே (31)

க-து : பன்மையும் ஒருமையுமாகிய பாலறிய நிரம்பிவந்து உயர்திணைக் கண்ணும் அஃறிணைக்கண்ணும் தோன்றி வருவனவும் பாலறிய இயலாது நிரம்பி விரவுத்திணைக்கண் தோன்றி வருவனவும் ஆகிய வினைச் சொற்களுக்கு ஆயதோர் குறியீடும் அவற்றின் தொகையும் கூறுகின்றது.

இது முதலாக மூன்று சூத்திரங்களும் வினையியலுள் "செய் தென்னெச்சத்து" (வினை-42 )என்னும் சூத்திரத்தின் பின் இருத்தல் வேண்டும். என்னை ?

வினையியலுள் முதற்கண் வினைச்சொற்களின் பொதுவியல்பு கூறி, அம்மூஉருபின தோன்றலாறே (வினை-4 ) என அதனை வகைப்படுத்து முறையே ஏழு சூத்திரங்களான் உயர்திணைத் தெரிநிலை வினை இலக்கணமும் பின்னர் ஏழு சூத்திரங்களான் உயர்திணைக் குறிப்புவினை இலக்கணமும் கூறி அதன் பின் மூன்று சூத்திரங்களான் அஃறிணைத் தெரிநிலை வினை இலக்கணமும் அதன்பின் மூன்றுசூத்திரங்களான் அஃறிணைக் குறிப்புவினை இலக்கணமும் கூறி அவற்றின் பின்னர்ப் பதினெட்டுச் சூத்திரங்களான் விரவுவினைகளின் இலக்கணங் களை விரிவாக ஓதினார் ஆசிரியர்.

வினைஎச்சமும் பெயரெச்சமுமாகிய குறைச் சொற்கள் விரவுவினையின் பாற்படுதலின் வினையெச்சம் பற்றிய வாய்ப் பாடும் இறுதிஇடைச் சொல்லும் கூறுமுகத்தான் வினை எச்சத் தின் தொகையினைப் புலப்படுத்து. "அவற்றுள், முதனிலை மூன்றும் வினைமுதல் முடிபின" "ஏனையெச்சம் வினை முதலானும் ஆன்வந்தியையும் வினை நிலையானும்" என்பவற்றான் அவற்றின் முடிபும், "பன்முறையானும் வினை யெஞ்சு கிளவி" "அடுக்குநவரினும்" என்றவற்றான் அவை

அடுக்கிவருமாறும் கூறினார். பின்னர் "நிலனும் பொருளும்" (வினை-37) என்பதனாற் பெயரெச்சத்தின் பொருளுரிமையும். "செய்யும் செய்த" என்பதனான் வாய்பாடும் தொகையும் பெறப்படவைத்து அவை சிறுபான்மை அடுக்கி வரும் என்பதனையும் குறிப்பாற் புலப்படுத்தினார். பெயர்கொண்டு முடியும் என்பதனை இவ்வியலின்கண் பின்னர்க் கூறுவார். 'பெயரெஞ்சு' கிளவியும் வினையெஞ்சு கிளவியும் என்பதனான் அவற்றின் குறியீடுகளும் புலப்படுத்தினார். அவை அங்ஙனமாக;

உயர்திணை வினைகளைக் கூறுமிடத்துப் "பன்மையுரைக்கும் தன்மைச் சொல்லே" (வினை - 5) "தன் வினையுரைக்கும் தன்மைச் சொல்லே" (வினை - 6) "படர்க்கைச் சொல்லே" (வினை - 9) எனவும் அஃறிணை வினைகளைக் கூறுமிடத்துப், "பலவற்றுப்படர்க்கை" (வினை-19) "ஒன்றன் படர்க்கை" (வினை-20) எனவும் கூறி விரவு வினைகளைக் கூறுமிடத்து எச்சவினை ஒழிந்தவற்றை "முன்னிலை வியங்கோள் இன்மை யெப்பல் வேறென் கிளவி" எனக் கூறியதன்றி அவை முற்றி நிற்கும் என்பதையும், இன்னவாறு முடியும் என்பதையும், அடுக்கியும் வரும் என்பதையும் பற்றிக் கூறினாரில்லை. இன்றியமையாத அவ் இலக்கணங்களை வினையியலுட் கூறாமல் யாதொரு காரணமுமின்றி எச்சவியலுட் கூறினார் எனக் கோடல் பொருந்துமாறில்லை. முற்றி நிற்றல் உயர்திணை வினை, அஃறிணை வினை, விரவுவினை மூன்றற்கும் எய்தும் இலக்கணமாதலின் அம்மூன்றற்கும் உரிய சிறப்பியல்களைக் கூறியபின்னர், இப்பொது வியல்பாகிய இலக்கணங்களைச் "செய்தென்னெச்சத்து" (வினை - 42) என்னும் சூத்திரத்தின் பின் வைத்து ஓதியிருத்தல் வேண்டும்.

தெய்வச்சிலையார் மட்டும் இவற்றை வினையியலுள்வைத்து உரை கூறினார். எனினும் உரிய இடத்தில் வையாமல் இறுதிக்கண்வைத்துள்ளார். ஏனைய உரையாளர் இவற்றை ஈண்டே கொண்டு உரை கூறினர். அதுபொருந்தாதெனினும் இதுகாறும் பதிவாகி வந்துள்ள வழக்கு நோக்கி இவற்றை ஈண்டே வைத்து இவ்வுரை கூறப்பட்டதென அறிக.

**உரை :** இறப்பு நிகழ்வு எதிர்வெனக் கூறப்பட்னவாகிய அச் சிறப்புடைய மரபினானே வரும் மூன்று காலமும், தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் அம்மூவிடத்தின் கண்ணும், தெரிநிலையாயும் குறிப்பாயும் உயர்திணை அஃறிணை விரவுத்திணை ஆகிய பொருள்தொறும் (எச்சமின்றி) நிரம்பிவரும்

அவ் ஆறுவகைச் சொற்களும் முற்றியல் மொழி எனக் கூறுவர் ஆசிரியர்.

நால்வகைச் சொற்களுள் காலம் என்னும்உறுப்பு வினைச் சொற்கே உரிமையுறலான். "அச்சிறப்புடை" என்றும், இறப்பில் இறப்பு, இறப்பில் நிகழ்வு, இறப்பில் எதிர்வு என்றாற் போல ஒவ்வொன்றும் ஏற்றபெற்றி பிரித்துணர்தற்கு வாய்ப்புடைய வாய் நிற்பினும் அங்ஙனம் பகுத்துக்கோடலான் பெறும் பயன் இன்றென்பதை ஓர்ந்து தமிழ்நூலார் மூன்று காலமே கொண்டமை தோன்ற "மரபின்" என்றும் கூறினார்.

வடநூலார் கூறும் பத்துவகைக் காலமும் இவற்றுள் அடங்கும் என்பதுணர 'அம்முக்காலமும்' எனச் சுட்டினார். செய்யுமென்னும் முற்றும் விரவுத்திணையுள் ஒருசாரனவும் பால் காட்டுதலின்மையானும் யாவும் இடம்பற்றி நிற்பதற்குரிமை யுடையவாகலானும் "அம்மூவிடத்தான்" என்றார் ஆன் உருபு இடப்பொருட்டாய் நின்றது.

மெய்ம்மையாவது பொருள், அஃது ஈண்டு அம்மூஉருவின தோன்றலாறே (வினை - 4 ) என்றதனான் திணையை உணர்த்தி நின்றது. அச்சூத்திரத்தான் அது மூவகைப்படு மென்பதுபெறப்பட்டமையின் "மெய்ம்மையானும்" என வாளா கூறினார். ஆன் உருபு 'தொறு' என்னும் பொருட்டாய் நின்றது. எனவே முற்று வினைகள் மூவகைத் திணைப்பகுதி தொறும் தெரிநிலையும் குறிப்புமாய் வரும் என்பதாயிற்று. முற்றியியலும் மொழி என்பது குறியீடுகருதி முற்றியல்மொழி என நின்றது. வினைத்தொகை எனினும் அமையும். எனவே வினைமுற்று அல்லது முற்றுவினை என்பது குறியீடாதலும் பெறப்பட்டது. முற்றுவினை எனினும், வினைமுற்று எனினும் முற்றியல்மொழி எனினும் ஒக்கும்.

வினைஎச்சம் வாய்பாட்டு வகையானும் ஈற்றிடைச் சொல் வகையானும் ஓதற்கு ஏற்புடைத்தாக நின்றமையின் அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி (வினை-31 ) அன்னமரபிற் காலங்கண்ணிய என்ன கிளவியும் அவற்றியல் பினவே (வினை-32) என்பனவற்றான் ஒருவாறு தொகை கூறினார். பெயரெச்சம் செய்யும் செய்த என்னும் இரண்டேவாய்பாடு பற்றி வருதலின் அவ்வாய்பாடுகளைக் கூறித்தொகையை உணர வைத்தார்.

முற்றுவினைச் சொற்கள் வாய்பாட்டாற் கூறற்கு அடங்காமையானும் ஈற்றிடைச் சொற்கள் பரப்புடையனவாயும்

திரிபுடையனவாயும் நிகழ்தலானும் அவற்றான் வகைப்படுத் தாமல் திணையுணர்த்தும் முறைமையான் தொகைப்படுத்து அவ்ஆறு என்ப, என வழிநூல் வாய்பாடுபடக் கூறினார்.

எனவே, வினைமுற்றுச் சொற்கள் உயர்திணைத்தெரிநிலை வினைமுற்று உயர்திணைக் குறிப்புவினை முற்று எனவும் அஃறிணைத் தெரிநிலை வினைமுற்று அஃறிணைக்குறிப்பு வினைமுற்று எனவும் விரவுத்திணை தெரிநிலைவினைமுற்று விரவுத்திணைக்குறிப்பு வினைமுற்று எனவும் வழங்கப் பெறும் என்றவாறாயிற்று.

**எ-டு :** உண்டான், கரியன், உயர்திணை. உண்டது, கரிது, அஃறிணை. உண்டனை, கரியை விரவுத்திணை - என வரும்

இனி ஆடூஉவறி சொல் முதலியபாலானும், தன்மை முதலிய இடத்தானும் ஒருமை, பன்மையாகிய பாலானும் இறப்பு முதலிய காலத்தானும் உறழப் பலவாகப் பெருகி நிற்குமென்க. அவை யெல்லாம் இவ்அறுவகையுள் அடங்குமாறும் இவற்றினும் சுருக்க இயலாவாறும் அறிந்து கொள்க.

இனி, வினையியலுள் ஓதப்பட்டன சில வினைச்சொற் களுக்கு முற்றுச்சொல் என்னும் குறியீடுதல் நுதலிற்று இச்சூத்திரம் என உரையாசிரியர் கூறியதனைச் சேனாவரையர் மறுத்துக் கூறும் விளக்கத்தை அவர் உரையுள் கண்டு கொள்க. அது பொருந்தும். பிற உரையாசிரியன்மார் கூறும் கருத்துக்கள் இந்நூல் நெறிக்குப் பொருந்தாதனவாகும்.

சூ. 429 : எவ்வயின் வினையும் அவ்வியல் நிலையும்

**க-து :** சில வினைமுற்றுக்களைப்பற்றி யெழும் ஐமகற்றுகின்றது.

**உரை :** பொருள். தொறும் வினையும் - குறிப்புமாகத் தன்மை முதலாய இடம்பற்றி நிரம்பி வரும் எல்லாச் சொற்களும் மேற்கூறிய அவ்விலக்கணத்துள் அடங்கும்.

அவ்வியல் என்றது முற்றிநிற்கும் இயல்பினை. என்றது, நட, வா, மடி-உரிஞ், பொருந், தின் முதலிய தொழில் முதனிலை பற்றியும், பொருள், இடம், காலம் முதலிய பொருட்பெயர் பற்றியும் வரும். இருவகை வினைமுற்றுக்களைப் போலாமல், யார், எவன், இல்லை, வேறு என்றாற்போல வருவன "அம்மூவிடத்தான்" என்ற விதிக்கு உட்படாமல் இடப்பொதுவாக நின்று, முடிக்கப்படும் சொல்லான் பாலும் இடமும் காட்டி நிற்றலின்

அவை எச்சத்தின் பாற்படுங்கொல்? என எழும் ஐயத்தைக் களைந்து அவை எச்சமாய் நில்லாமையான் அவையும் அல்வாறு வருவனபிறவும் வினைமுற்றுக்களே என்றவாறாம். இவ்வகை வினைச் சொற்கள் இடத்தை விதந்துணர்த்தாமை பற்றியே "எவ்வயின் வினையும்" என்றார். இச்சூத்திரத்திற்கு உரையாசிரியன்மார் தம்முள் ஒத்தும் ஒவ்வாதும் வரைந்து சென்ற விளக்கங்களை ஆராயப்புகின் விரியுமாகலின் மாணாக்கர் ஓர்ந்துணர்ந்து கொள்க.

எச்சவினை என்பது இயற்கையன்று. அது முற்றுவினையின் விகாரமாய்க் குறைந்துநிற்கும் (குறைந்தது வினையன்று பால் என்றறிக) இயல்பினதே என்னும் மெய்ம்மையை இங்சூத்திரத்தைப் பயன்படுத்திச் சேனாவரையர் இனி ஓர் உரை என்ற பகுதியில் விளக்கினார். ஆசிரியர் அது சொல்லின் முடியும் இலக்கணத்ததாகி நிற்றலின் மிகைபடச் சூத்திரம் செய்யாராயினார்

முழுமை அல்லது முற்று, நிறைவு என்பது, ஒருபொருள் சிலபல கூறுகளான் ஓர் அளவைக்கு உட்பட்டு நிறைந்து நிற்றலாகும். அங்ஙனம் நிறைவுடையதாக வீகுத்துக் கொள்ளப்பட்ட ஒரு பொருளின் கூறுகளுள் ஒன்றோ சிலவோ குறைந்து அல்லது எஞ்சிநிற்பின் அதனைக் குறைப்பொருள் என்பது பொருள்நூல் முடிபாகும் என்க. எனவே, முற்றுச் சொல் என்பது உறுப்புக்களான் நிரம்பி நிற்பது என்பதும் எச்சச்சொல் என்பது உறுப்புக்களுள் ஒன்றோ சிலவோ குறைந்து நிற்பது என்பதும் புலப்படும்.

சூ. 430 : அவைதாம்
தத்தங் கிளவி அடுக்குந வரினும்
எத்திரத் தானும் பெயர்முடி பினவே (33)

க-து : வினைமுற்றுக்கள் அடுக்கியும் வரும் என்பதும் அவை முடியுமாறும் கூறுகின்றது.

உரை : அறுவகையாகி நிகழுமென மேற் கூறப்பெற்ற வினைமுற்றுச் சொற்கள் தம்முள் சிலபலவாக அடுக்கிவரினும் தம்முள் முடியாது எத்திறத்தானும் பெயர்சொல்லொடு முடிவனவேயாகும்.

எழுவாயாக நிற்கும் பெயர், பெயர்கொள வருதல் (வேற்று - 5) என்பதனான் பிறிதொரு பெயரொடு முடிதல்

போல, வினைமுற்றும் பிறிதொரு வினையொடு முடியாது. எவ்வாறுவரினும் பெயர்ச் சொல்லையை கொண்டுமுடியும் என்பதை வலியுறுத்துவாராய் ''எத்திறத்தானும்'' என்றார்.

ஓரேவொரு வினைமுற்றொடு முடியும் தொடர்க்கண் ஐயம் நிகழாமையான் ''அடுக்குநவரினும்'' என்றார். அடுக்குநவரினும் என உடம்பொடு புணர்த்துக் கூறியதனான் ஒரு தொடரின்கண் சிலபல வினைமுற்றுக்கள் அடுக்கியும் வரும் என்பது இலக்கண மாதல் பெறப்பட்டது. உம்மை எச்சவும்மை.

எ-டு: வந்தான் சாத்தன் - கரியன் கொற்றன்-என இவை தனித்து வந்தன, தின்றான், ஆடினான், பாடினான் சாத்தன் எனவும்; நல்லன், இளியன், செவ்வியன் மன்னன்மகன் எனவும் வரும். இவை அடுக்கி வந்தன.

இனி சாத்தன் வந்தான் எனவும் கொற்றன் கரியன் எனவும் எழுவாய்த் தொடர்க்கண் முடிக்குஞ் சொல்லாக நிற்பினும், வந்தான் - கரியன் என்னும் முற்றுவினைகட்கு முடிபு சாத்தன் கொற்றன் என்னும் பெயர்ச் சொற்களேயாகலானும் ''அகரமுதல் னகர இறுவாய் முப்பஃதென்ப'' ''அவ்வாறென்ப முற்றியல் மொழியே'' என்றாற் போல எழுவாயாகும் பெயர் வெளிப்படாது நிற்பின் அதனை விரித்து அதனொடு முடியுமாக லானும் எத்திறத்தானும் பெயர் முடிபினவே என்றார்.

இதனானே முற்றுச் சொல் என்பது வினைச்சொல்லுக்குரிய உறுப்புக்களான் முற்றிநிற்கும் என்றதன்றி அதுதானே தொடர் மொழி போல முற்றி நிற்கும் என்பது பொருளன்மை விளங்கும். எனவே முற்றுச்சொல் என்பது தானே முற்றுநிற்கும் என்று கூறும் சேனாவரையரின் வல்லுரை ஒவ்வாமையறிக. எவன், இல்லை வேறு என்பவை அவர் கூறுமாறு முற்றிநில்லாமையும் காண்க. எழுவாய் வேற்றுமையாகிய பெயர் வெளிப்படாது தொக்கும் நிற்கும் என்பது வேற்றுமையோத்துட் கூறப்பட்டது.

சூ. 431 : பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை
எதிர்மறை உம்மை எனவே சொல்லே
குறிப்பே இசையே ஆயி ரைந்தும்
நெறிப்படத் தோன்றும் எஞ்சுபொருட்கிளவி

க-து : மேலையில்களுள் கூறப்பெற்ற ஒரு சார் எச்சக்கிளவிகளையும் பிறவாற்றான் வரும் எச்சக்கிளவிகளையும் தொகுத்து அவை முடிவு கொள்ளுமாறு கூறுவராய் அவற்றின் பெயரும் தொகையும் இச்சூத்திரத்தாற் கூறுகின்றார்.

**உரை :** இலக்கண நெறிப்படத் தோன்றும் எஞ்சுபொருட் கிளவிகளாவன, பிரிநிலை எச்சமும், வினையெச்சமும், பெயரெச்சமும், ஒழியிசை எச்சமும், எதிர்மறையெச்சமும் உம்மை எச்சமும், எனவென் எச்சமும், சொல்லெச்சமும், குறிப்பெச்சமும் இசையெச்சமும் ஆகிய பத்துமாம்.

வினையெச்சமும், பெயரெச்சமும் ஒருசார் இடைச்சொல் பற்றி வரும் எச்சமும் அவற்றின் இலக்கணம் கூறிய வழி அவை முடிபு கொள்ளுமாறு ஓராற்றான் கூறியமை சுட்டி நெறிப்படத் தோன்றும் எஞ்சுபொருட்கிளவி என்றார்.

இங்ஙனம் வரையறுத்தமையான் பேச்சின்கண் பல்வேறு குறிப்புப்பற்றி வரும் எச்சங்களும், செய்யுள் வழக்கின்கண் நோக்கு என்னும் உறுப்புப்பற்றியும் உள்ளுறை முதலிய உவமம் பற்றியும் குறிப்பாக வரும் எச்சங்களும் இவற்றுள் அடங்கா என்பது புலப்படும்.

சொல்லும், சொற்றொடரும் அடங்கக் 'கிளவி' என்றார். பொருளும் சொல்லும் ஒருங்கு எஞ்சிற்கும் என்பதுபுலப்பட 'எஞ்சு பொருட் கிளவி' என்றார். பிரிநிலை முதலாய ஏழும் மேல்வந்து முடிக்குஞ் சொற் பொருளை அவாவி நெறிப்படநிற்பனவாகும். ஏனைய மூன்றும் எஞ்சிநிற்கும் பிறபொருளைத் தோற்று விப்பதற்குக் கருவியாக நிற்பனவாகும். பொருளும் முடிபும் ஒத்தலின் என்றென்னும் எச்சம் 'என' என்பதனுள் அடக்கப்பட்டது.

இவ் எச்சங்கள் ஒருசார் பெயரும், வினையும் இடைச்சொல்லு மாக வருதலின் மேலையியல்களுள் ஒருங்கு ஓதற்கு இயையாமை யான் இவை எச்சவியலின்கண் ஓதப்படலாயின என்க.

இச்சூத்திரம் தொகுத்துச் சுட்டல் என்னும் உத்தியான் அமைந்ததாகும். முற்றுச்சொல்லுணர்த்தி எச்சமாமாறு உணர்த்துகின்றார் என்னும் சேனாவரையர் கருத்துப் பொருந் தாமையை மேல் விளக்கியவற்றான் அறிந்து கொள்க.

சூ 432 : அவற்றுள்
பிரிநிலை எச்சம் பிரிநிலை முடிபின (35)

**க-து :** பிரிநிலை எச்சங்கள் முடியுமாறு கூறுகின்றது.

**உரை :** மேற்கூறியவற்றுள் ஓகாரமும் ஏகாரமும் பற்றிவரும் பிரிநிலை எச்சங்கள் தம்மாற்பிரிக்கப்பட்ட சொற்பொருளை முடிபாக உடையனவாம்,

**எ-டு :** அவனோகொண்டான் - அவனே உண்டான் - என வரும். இவை முறையே பிறர் கொண்டிலர் - பிறர் உண்டிலர் என்பவற்றை உணர்த்தி அவற்றொடு முடிந்தமை கண்டு கொள்க. அவனே உண்டான் என்புழி அவன் என்பது உண்டான் என்பதனொடுமுடிய ஏகாரம் பிறர் உண்டிலர் என்பதை அவாவி முடிந்ததென்க.

இவை கொண்டான் உண்டான் என்னும் வினையொடு முடிந்ததென்பர் சிலர். அவ்வாறாயின் ஓகாரமும் ஏகாரமும் வினாவும் தேற்றமுமாதலன்றிப் பிரிநிலை உணர்த்தா என்க.

நச்சினார்க்கினியர் இடையியலுள் பொருள்முடிபு கூறி ஈண்டுச் சொல்முடிபு கூறுவதாக விளக்கந்தருவார். எதிர்மறை எச்சம்பற்றி அவர் கூறும் விளக்கம் அவர்கருத்திற்கே முரணாக அமைதலைத் தெரிக.

சூ. 433 : வினையெஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்
நினையத் தோன்றிய முடிபா கும்மே
ஆவயிற் குறிப்பே ஆக்கமொடு வருமே (36)

**க-து :** வினையெச்சங்கட்கு முடிபாமாறு கூறுகின்றது.

**உரை:** வாய்பாட்டானும் இறுதியிடைச் சொல்லானும் உடைமை முதலிய பொருளானும் கூறப்பட்டு வரும் வினையெச்சங்கட்கெல்லாம் தெரிநிலை வினையும் குறிப்பு வினையும் கருதத்தோன்றிய முடிபாக வரும் அவ்விடத்துக் குறிப்பு வினை ஆக்கச் சொல்லொடு நினையத்தோன்றிவரும்.

"நினையத் தோன்றி" என்பதனைப் பின்னும் கூட்டிக் கொள்க. 'நினையத் தோன்றி' என்றதனான் தெரிநிலை வினைப்பெயராய் வருதலும், புடைப்பெயர்ச்சி தோன்றத் தொழிற் பெயர் வருதலும், ஆக்கச் சொல் தொக்கு வருதலும் இலக்கணமாகக் கொள்க.

**எ-டு :** உழுதுவந்தான் - உண்குபுவந்தான் எனவும் கற்று வல்லனாயினான் - எனவும். உழுதுவந்தவன் - அருந்திமகிழ்தல் எனவும், வேங்கையும் காந்தளும் நாறி ஆம்பல் மலரினும் தான் தண்ணியளே எனவும் வரும். தொழிற்பெயரின்பின் ஆக்கச் சொல் குன்றி நிற்கும் என அறிக.

வினையியலுள் வாய்பாடுபற்றியும் இறுதி இடைச்சொல் பற்றியும் வரும் வினையெச்சங்கள் வினைமுதல் வினையானும்

ஆன்வந்தியையும் வினைநிலையானும் முடியும்எனக் கருத்தா வேறுபாடு பற்றிய முடிபு கூறியதன்றி வினையெச்சமெல்லாம் இவ்வாறு முடியும் எனப் பொதுவிதி கூறினாரல்லர் ஆதலின் வினையெச்சம் வினைகொண்டு முடியுமென்னும் வரையறையும், குறிப்புவினை ஆக்கம் பெற்று முடியும் என்னுமியல்பும், வினைப் பெயரானும், தொழிற்பெயரானும் முடிவுழி அவை வினையொடு ஒக்கும் என்னும் மரபும் தோன்ற ஈண்டு வினையெச்சங்கட்குமுடிபு விதி கூறினார் என்க. விதிக்கப்படுவதும் விதியும் பற்றிய நிலை களைக் கருதாமல் உரையாசிரியன்மார் கூறும் அமைதிகள் சிறவாமையறிக.

சூ 434 - பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே (37)

க-து : பெயரெச்சத்திற்கு முடிபாமாறு கூறுகின்றது.

உரை : இருவகை வாய்பாட்டானும் வரும் பெயரெச்சங்கள் நில முதலாகிய அறுவகைப் பெயர்களைக் கொண்டு முடியும். ஏ, இசைநிறை.

நிலனும் பொருளும் காலமும் கருவியும் (வினை - 37) என்னுஞ் சூத்திரத்தான் உய்த்துணர நின்றதை ஈண்டு விதியாக்கிக் கூறினார். எனவே வினையியலுள் கூறியது அது குறைந்து நிற்கும் நிலையையே என்பது விளங்கும்.

எ-டு : இவன் உண்ணும் சாத்தன், இவன் உண்ட சாத்தன் எனவும் இது நல்லவீடு எனவும் வரும். ஏனைப் பெயரொடும், இவ்வாறே ஒட்டிக் கொள்க. செய்யுமென்னும் வாய்ப்பாட்டுப் பெயரெச்சம் காலம் புலப்பட நிற்குமாதலின் அதுபற்றிக் குறிப்பு வினைப் பெயரெச்சம் வாராதென்க.

சூ 435 : ஒழியிசை யெச்சம் ஒழியிசை முடிபின (38)

க-து : ஒழியிசை பற்றிவரும் எச்சங்கட்கு முடிபாமாறு கூறுகின்றது.

உரை : மன், தின், ஓகாரம் ஆகிய இடைச்சொற்கள் பற்றி வரும் ஒழியிசை எச்சங்கள் (அவற்றிற்குப் பொருந்தியவையாக) ஒழிந்து நின்ற எச்சப் பொருளை முடிபாக உடையனவாம்.

எ-டு : கூரியதோர் வாள்மன் எனவும், வருகதில் அம்ம எம் சேரிசேர எனவும், காணவோ வந்தான் எனவும் வரும். இவை முறையே இப்பொழுது கூர்மைமழுங்கித்திட்பமின்றாயிற்று.

வரின் நினக்கு ஆவன செய்வல் - கண்டு பொருள்பெறற்கு வந்தான் என நின்ற ஒழியிசைப் பொருள்களை உணர்த்தி அவற்றொடு முடிந்தவாறு கண்டு கொள்க.

சூ. 435 : எதிர்மறை எச்சம் எதிர்மறை முடிபின (38)

க-து : எதிர்மறை எச்சக்கட்கு முடிபாமாறு கூறுகின்றது.

உரை : ஓகாரமும், ஏகாரமும், உம்மையும், பற்றிவரும் எதிர் மறை எச்சங்கள் மறுக்கப்பட்ட சொற்பொருளை முடிபாக உடையனவாம்

எ-டு : யானோ கொள்வேன் எனவும், யானே வைவேன் எனவும், சாத்தன் வருதற்கும் உரியன் எனவும் வரும். இவை முறையே யான் கொள்ளேன் - யான் வையேன் - சாத்தன் வாராமைக்கும் உரியன் என நின்ற எதிர்மறைப் பொருள்களொடு முடிந்தவாறு கண்டுகொள்க.

சூ. 437 : உம்மை எச்சம் இருவீற் றானும்
தன்வினை ஒன்றிய முடிபா கும்மே (40)

க-து : எச்சஉம்மைக்கு முடிபாமாறு கூறுன்கிறது.

உரை : தானும் தன்னாற் றழுவப்படுவதுமாக இருகூற்றான் வரும் உம்மை எச்சத்திற்கு ஒன்றனது வினை ஏனையதன் வினைக்கும் பொருந்திய சொல் முடிபாக வரும்.

ஒன்றிய வினை என்றது, காலத்தான் ஒத்தவினையை. என்னை? தன்மேற் செஞ்சொல் வருஉங்காலை, காலம்மயங்கி யும் வரும் என மேற்கூறுதலான் இருவீற்றானும் வரும் உம்மை எச்சம் அங்ஙனம் மயங்காது காலம் ஒத்துவரும் என்பது பெறப் படும்.

''ஒன்றிய முடிபாகும்' என்றது; சாத்தனும் வந்தான் என்னும் உம்மைக்குக் கொற்றனும் வந்தான் என்னும் உம்மையும் கொற்றனும் வந்தான் என்னும் உம்மைக்குச் சாத்தனும் வந்தான் என்னும் உம்மையும் காலத்தால் ஒன்றிய முடிபாகும் என்றவாறாம்.

எ-டு : அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள் எனவும் உணவும் உண்டான் உடையும் பூண்டான் இனிப் புறப்படும் எனவும் பைம்புதல் வேங்கையும் ஒள்ளிணர்விரிந்தன நடு வெண்டிகளும் ஊர்கொண்டன்றே எனவும்வரும்.

இவற்றுள் உண்டான், பூண்டான் எனவும் விரிந்தன ஊர் கொண்டன்று எனவும் வினைவேறுபடினும் அவை காலத் தான் ஒன்றி நின்று ஒன்று மற்றொன்றற்கு முடிபாயினவாறு கண்டுகொள்க.

சூ. 438 : தன்மேற் செஞ்சொல் வருஉம் காலை
நிகழுங் காலமொடு வாராக் காலமும்
இறந்த காலமொடு வாராக் காலமும்
மயங்குதல் வரையார் முறைநிலை யான [41]

க-து : உம்மை எச்சத்தின் முடிபிற்கு எய்தியதன் மேற் சிறப்பு மரபு கூறுகின்றது.

உரை ஒரு கூற்றான் வரும் உம்மை எச்சத்தின் முன் உம்மையில்லாத செஞ்சொல் வருமிடத்து முறைநிலையானே நிகழ்காலத்தொடு எதிர்காலமும் இறந்தகாலத்தொடு எதிர் காலமும் மயங்கி முடிதலை நீக்கார் ஆசிரியர்.

இதனை இலக்கண மரபாகக் கொள்வர் என்பதாம். 'முறை நிலையான' என்றமையான் எதிர்காலத்தொடு ஏனைக் காலங்கள் மயங்கிவாரா என அறிக. வரின் அவை வரையப்படு மென்க.

எ-டு : கனியுண்ணாநின்றான் பாலும் பருகுவன். எனவும் கனியுண்டான் பாலும் பருகுவன் எனவும் வரும். பாலும் பருகுவன் என்னும் எச்சஉம்மை செஞ்சொல்லாக நின்ற 'கனி' உண்ணாநின்றான் - உண்டான் என்னும் எச்சப் பொருளொடு முடிந்தவாறு கண்டு கொள்க. இவற்றான் எச்ச உம்மை ஒன்றை ஒன்று தழுவுதலும், இறந்தது தழுவதலும் என இருவகையாக வரும் என்றறிக. எஞ்சுபொருட் கிளவி செஞ்சொல்லாயின் பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல் (இடை-36) என்றதனான் தன்மேற் செஞ்சொல் வருஉங்காலை எனச் சுட்டிக் கூறினார்.

இனி இடைக்கால உரையாசிரியன்மார் எதிரதுதழீஇய எச்சஉம்மை என ஒன்றைத் தாமே பகுத்துக் கொண்டு "சாத்தனும் வந்தான்" என்னும் உம்மை இனிக் கொற்றனும் வருவான் என்பதைத் தழுவி நின்றது என்பார். கொற்றனும் வருவான் என்னுமிடத்து முன்னிற்கும் தொடர் சாத்தன் வந்தான் என உம்மையின்றிச் செஞ்சொல்லாக நிற்றற்கும் ஏற்குமாகலின் கொற்றனும் என்னும் உம்மையே இறந்தது தழுவும் என்க.

இனி, சாத்தனும் வருவான் என்றவிடத்து அவனேயன்றிக் கொற்றனும் வருவான் எனப் பொருள்வரின் ஆண்டஃது எதிரதுதழீஇயதாகுமால் எனின் ? அவையிரண்டும் எதிர்காலமே பற்றி ஒத்து நிற்றலின் மேற்சூத்திரவிதிப்படி ஒன்றையொன்று தழுவி நின்றனவன்றி எதிரது தழீய தாகாது என்க.

சூ. 439 : எனவென் னெச்சம் வினையொடு முடிமே

க-து : எனவென்னும் எச்சத்திற்கு முடிபு ஆமாறு கூறுகின்றது.

உரை : எனவென்னு இடைச்சொல் பற்றிவரும் எச்சம் வினைச்சொல்லை முடிபாகக் கொண்டு முடியும்

எ-டு ; வெள்ளென விளர்த்தது - துண்ணெனத் துடித்தது. பொள்ளென ஆங்கே புறம் வேரார் - ஒல்லென ஒலித்தது - என வரும். என்று என்னும் இடைச்சொல் எனவென்பதனுள் அடக்கப்பட்டமையின் அதுவும், நன்றென்று கொண்டான். தீதென்று கடிந்தான் என வினையொடு முடியும் என்க.

இத்தொடர்களில் 'என' என்னும் இவ்இடைச்சொல் "என்பதாக" என்னும் பொருள்பட நிற்கும். கொள்ளெனக் கொடுத்தான் என்னுமிடத்துக் கொள்ளெனச் சொல்லிக் கொடுத்தான் எனப் பொருள்தரின் ஆண்டு என என்னும் இடைச்சொல் சொல்லெச்சத்தின் பாற்படும். கண்ணெனக் காத்தான் என்னுமிடத்துக் கண்ணைக் காப்பது போலக்காத்தான் எனப் பொருள்தரின் ஆண்டு என என்பது "என்ன" என்னும் உவம உருபிடைச்சொல் இடைக்குறையாக நின்றதாம். பிறவும் பொருள் நோக்கி அதன் இலக்கணநிலையை அறிந்து கொள்க.

சூ. 440 : எஞ்சிய மூன்றும் மேல்வந்து முடிக்கும்
எஞ்சு பொருட்கிளவி இலவெனமொழிப (43)

க-து : சொல்லெச்சம் முதலிய மூன்றற்கும் உரியதொரு பொதுவியல்பு கூறுகின்றது.

உரை : இதுகாறும் கூறியவை போக எஞ்சிநின்ற சொல்லெச்சம் குறிப்பெச்சம், இசையெச்சம் ஆகிய மூன்றும் மேல்வந்து தம்குறை முடிக்கும் எஞ்சுபொருட்கிளவி இல்லாதன எனக் கூறுவர் ஆசிரியர்.

தம்மை முடிக்கும் எஞ்சு பொருட்கிளவி இல்லாதன எனவே இவை தம்மாற்பெறப்படும் எஞ்சுபொருட்கிளவிகளையுடையன. என்பது கருத்து, அங்ஙனம் எஞ்சுபொருட் கிளவிகள் தோன்ற

இவை காரணமாதலின் இவையும் எச்சம் எனப் பெயர்பெற்றன.

சூ. 441 : அவைதாம்
தத்தங் குறிப்பின் எச்சஞ் செப்பும் (44)

க-து : மேற்கூறிய மூன்றும் எச்சப்பொருள் பயக்குமாறு கூறுகின்றது.

உரை : அம்மூன்றும் சொல்லின் முடியும் இலக்கணத்தவாய் நிற்றலின் அவ்விலக்கணத்தான் அவை எச்சப்பொருள் உணர்த்துமென்க. தத்தம் இயல்பாவன : சொல்லெச்சம் என்பது, இயற்சொல் முதலியவற்றைத் தன்னுள் அடக்கிக் கொண்டு பெயரும் வினையுமாக நின்று எச்சப்பொருளாதல். குறிப்பெச்சம் என்பது : ஒன்றைக்கூறுவோர்தம் இன்றியமை யர்த கருத்துக்குறிப்பாக அமைந்து எச்சப்பொருளாதல். இசையெச்சம் என்பது : கூறுவோரது கூற்றினுள் பெறவேண்டிய விளக்கம் நுட்பமாக அமைந்து எச்சப்பொருளாதல். இசையாவது சொல் : அதனை இசைதிரிந்திசைப்பினும் இயையுமன் பொருளே, அசைதிரிந்திசையா என்மனார் புலவர் (பொரு ளியல்-1) என்பதனான் அறிக.

சொல்லெச்சம், ஒரு சொல் அளவாக அமைந்து எச்சப் பொருள்தரும். இசையெச்சம் பல சொல்லான் தொடர்மொழி யாக அமைந்து எச்சப்பொருள் தரும் ஆதலின் அவற்றைப் பிரித்தோதினார்.

சொல்லெச்சம் ஒரு சொல்லாகவும் இசையெச்சம் பல சொல் லாகவும் வருமெனவே குறிப்பெச்சம் இவ்இருவகையானும் வரும் என்பதுணர அதனை இடை வைத்தார் என்க.

சொல்லெச்சம் யாரென்றான் ? யான் என்றேன். என்னு மிடத்து இவைமுறையே யார் என்று கேட்டான், யான் என்று சொன்னேன் எனவிரிதலின் கேட்டான் சொன்னேன் என்பவை சொல்லெச்சமாயின - பிறவிளக்கங்களைச் சிறப்புச் சூத்திர உரையுட் கண்டு கொள்க.

குறிப்பெச்சம் :- நீயிர் பெரிதும் அறிதிர் என்றவழி (கூறுவோன் குறிப்பினான்) நீயிர் சிறிதும் அறியீர் என்பது குறிப்பெச்சமாக நின்றது. குழலினிது யாழினிது என்பதம் மக்கள் மழலைச் சொல் கேளாதவர்'' என்னுமிடத்துக் கேட்டவர் மழலையே இனிதென்பர் என்பது குறிப்பெச்சமாக நின்றது. இவ்வாறே, இழுக்கலுடையுழி ஊற்றுக் கோலற்றே ஒழுக்க முடையார் வாய்ச்சொல்-என்னுமிடத்து 'அவற்றைக்கேட்க'

என்பதும், குறிக்கொண்டு நோக்காமையல்லால் ஒருகண் சிரக்கணித்தாள் போல நகும்-என்னுமிடத்து இனி இவளை எய்துதல் ஒருதலை என்பதும் குறிப்பெச்சமாக நின்றன.

இசையெச்சம் :- வானுயர் தோற்றம் எவன் செய்யும் தன் நெஞ்சம் தானறி குற்றப்படின் - என்னுமிடத்து ஒழுக்கத்திற்கு ஒவ்வாத தவவேடம் என்பதும். தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது இன்னுயிர் நீக்கும் வினை - என்னுமிடத்து யாவினும் உயர்வாகப் பேணப்படும் உயிர் என்பதும் தும்முச் செறுப்ப அழுதாள் நுமருள்ளல் 'எம்மை மறைத்திரோ என்று - என்னுமிடத்து நும்மொடு யாதும் இயைபில்லாத எம்மை என்பதும் இசை எச்சமாக நின்றன. பிறவும் கூறுவோரது உணர்வு நோக்கி அறிந்து கொள்க.

இனி உரையாசிரியன்மார் அவாய் நிலையாகத் தொக்கு நிற்பனவற்றையும் சொற்பொருளின் நயமாக விரிவனவற்றையும் செய்யுட்கண் 'நோக்கு' என்னும் உறுப்புப்பட அமைந்தன வற்றையும் சொல்லொடும் பொருளொடும் முடிவுகொள் இயற்கை யாக வருவனவற்றையும் குறிப்பெச்சமென்றும், இசையெச்ச மென்றும் ஒருவரொடு ஒருவர் ஒத்தும் ஒவ்வாதும் பலவாறு கூறுவர். அவையெல்லாம், ஆசிரியர். "மேல் வந்து முடிக்கும் எஞ்சுபொருட்கிளவி இலவெனமொழிப" என்ற விதிக்கு முரணாதலின் இந்நூல் நெறிக் கொவ்வாமையை ஓர்ந்துகொள்க.

சூ. 442 - சொல்லெ னெச்சம் முன்னும் பின்னும்
சொல்லள வல்லது எஞ்சுத லின்றே [45]

க-து : சொல்லெச்சத்திற்குரிய சிறப்பியல்பு கூறுகின்றது.

உரை : சொல்லெச்சம் எனப்படும் எச்சம் அச்சொல்லளவிற் பொருள் தோன்றுவதன்றி முன்னோ பின்னோ பிறிதாக எஞ்சி நிற்பதன்று.

என்றது ; பிற எச்சங்கள் முன்னோ பின்னோ வரும் பிற சொற் பொருளான் முடிவனவும், பிறசொற்பொருளைப் தோற்று விப்பனவுமாகி நிற்குமன்றே ; இஃது அங்ஙனமாகாது அச் சொல்லே எச்சப்பொருள் பயந்து நிற்கும் என்றவாறு.

எ-டு : "அகர முதல் னகர இறுவாய் முப்பஃதென்ப" என்பதன்கண் என்ப என்னும் பயனிலை அத்தொடரை முடித்து நின்றது. அதனைவிரிப்பின் என்று கூறுப, எனப் பொருள் தரும். அங்ஙனம் விரிந்த அவ்எச்சப்பொருள் என்ப என்னும் சொல்லி

னிடமாகவே நிற்றலைக் காணலாம். அதனான் ‘சொல்லள வல்லது முன்னும் பின்னும் எஞ்சுதலின்றே’’ என்றார்.

சொல்லளவு என்றதனான் அஃது ஒரு சொல்லாயே நிற்கும் என்பதும், அஃது என் என்னும் இடைச் சொல்லடியாகப் பிறந்த ‘எனல்’ என்னும் தொழிற்பெயராக அமைந்து ஐம்பால் மூவிடத்தினும் முற்றாயும்-பொருந்துமாற்றான் எச்சமாயும் நிற்கும் என்பதும் இடத்திற்கு ஏற்பப் பொருள்படும் என்பதும் உணரப் படும்.

எ-டு ; இரப்பின் கரப்பாக் கறிவல் அனைத்திற்கே ஏதில ரென்னுமிவ்வூர். ‘என்னும்’ = என்று சொல்லாநிற்கும். தொல் வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக நல்குர வென்னும் நசை. என்னும் = என்று சொல்லப்படும். நிறையரியர் மன் அளியர் என்னாது காமம் மறையிறந்து மன்றுபடும் - என்னாது = என அஞ்சாமல். அறிகிலர் எல்லாரும் என்றே என் காமம் மறுகின் மறுகும் மருண்டு-என்று = என்று கருதி. பிரிவுரைக்கும் வன்கண்ணராயின் அரிதவர் நல்குவர் என்னும் நசை, என்னும் = என்றிருக்கும். பிறவும் அன்ன.

இச்சொல்லெச்சம் ‘என்’ என்பதையே அடியாகக் கொண்டு நிற்றலான் ‘என்’ சொல் எச்சம் என நச்சினார்க்கினியர் பதம் பிரித்து உரைகூறினார்.

இனி, உயர்திணை என்மனார், என்புழி ஆசிரியர் என்னும் சொல்லும், மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே, என்புழி எமக்கு என்னும் சொல்லும் முன்னும் பின்னும் எஞ்சி நின்றன எனக்கூறி இவ்வாறு வருவனவே சொல்லெச்சம் என்பார் ஒருசாரார், இவை இன்றியமையாத முடிக்குஞ் சொற்க ளாதலின் தொக்குநின்றன என்பதல்லது சொல்லெச்சம் எனற்கு ஏலாவென்க.

சூ. 443: அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்

க-து : ஆகுபெயராகவும், அன்மொழியாயும், பெயரினும் தொழிலினும் பிரிபவை யாயும் குறிப்பெச்சம் முதலியவையாயும் வரும் குறிப்புச் சொற்கள் போலாமல் மரபு பற்றிப் பிறவாற்றான் வரும் ஒருசார் குறிப்பு மொழி களைப்பற்றி உணர்த்தத் தொடங்கி, அவையல் கிளவியாக நிற்கும் சொற்களைக் குறிப்பொடு கிளக்குமாறு இரண்டு சூத்திரங்களாற் கூறுகின்றார்.

உரை : சான்றோர் அவைக்கண் வழங்குவதல்லாத சொற் களை மறைத்து அப்பொருள் ஒருவாற்றான் புலப்படப்பிற சொற் களாற் கூறுக.

எ-டு: கண்கழீஇ வருதும், கால்கழீஇ வருதும் எனவும் ஆன்முன் வரும் ஈகார பகரம், வாலெயிறு ஊறியநீர் - எனவும் புலிநின்றிறந்த நீரல்லீரத்து எனவும் கருமுகமந்தி-செம்பின் ஏற்றை எனவும் வரும். [கருமுகம் - கருவுயிர்க்கும் வாயிலாகிய பெண் உறுப்பு. செம்பின் - சிவந்தபின்புறம் அஃதாவது இருப்புறுப்பு.]

சூ. 444 : மறைக்குங் காலை மரீஇயது ஒராஅல் (47)

உரை : அவையல் கிளவியை மறைத்துச் சொல்லுமிடத்து மேற்றொட்டு மரபாகி வருவனவற்றை அங்ஙனம் மறைத்தலைத் தவிர்க. என்றது. மரபாக வருவனவற்றை மறையாது கூறுக என்றவாறு.

எ-டு - "மெழுகும் ஆப்பி கண்கலுழ் நீரானே" எனவும் "தலையினிழிந்த மயிர்", எனவும் "பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பருதி" எனவும் வரும்.

சூ. 445 : ஈதா கொடு வெனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகிடன் உடைய (48)

க-து : ஒருசார் வினைச்சொற்கள் குறிப்புப் பொருளொடு வருமாறு கூறுகின்றது.

உரை : ஈ தா கொடு எனக்கிளக்கப்படும் மூன்று வினைச் சொற்களும் இரத்தற்பொருளுணர்த்தும் கிளவியாக வருமிடனும் உடையவாம்.

இவ் வினைச்சொற்கள் முன்னிலைக்கண் வியங்கோட் பொருள்பட நிற்குமிடத்தன்றி இரத்தற் பொருட்குரியவாய் நில்லாமையான் "ஆகிடன் உடைய" என்றார். அங்ஙனங் கூறியதனான் அவ்வவற்றிற்குரிய இயற்பொருள்பற்றி வருதலே பெரும்பான்மையாம் என அறிக.

இவை இரவின்கிளவி ஆகுமிடத்தன்றி இனிக் கூறப்பெறும் குறிப்புப் பொருள் தாராமையான் இச் சூத்திரத்தான் இன்னபொருளின்கண் வருவன எனவரையறை கூறப்பட்டது. எடுத்துக்காட்டுப்பின்னர்க் காண்க.

சூ 446 : ஈயென்கிளவி இழிந்தோன் கூற்றே (49)

சூ 447 : தாவென்கிளவி ஒப்போன் கூற்றே (50)

சூ 448 : கொடுவென்கிளவி உயர்ந்தோன்மேற்றே

**க-து :** மேற்கூறிய மூன்றற்கும் உரிய குறிப்புப்பொருள் இவை என்கின்றது. இத்தகவுகள் வழங்குவோனை நோக்கிக் கூறப்பெற்றவனவாகும்.

**உரை :** வெளிப்படை

**எ-டு :** சிறிதுசோறீ-ஓராடை ஈக, ஒருநாழி அசிரி தருக ஒருவேல் தருக எனவும் பூணற்குப் பொன்னாடை கொடு-மணியலங்கல்கொடு எனவும் வரும். இவை அங்ஙனம் கேட்போர் தகவுகளைப் புலப்படுத்து நிற்குமாற்றை அறிந்து கொள்க.

**சூ. 449 :** கொடுவென் கிளவி படர்க்கை யாயினும்
தன்னைப் பிறன்போற் கூறும் குறிப்பான்
தன்னிடத் தியலும் என்மனார் புலவர் (52)

**க-து :** ''கொடு''வென்னும் கிளவி பற்றியதோ ரையமகற்றுகின்றது.

**உரை :** ஏனையிரண்டும் ஏனையிடத்த (கிளவி - 30) என்றதனான் கொடு என்னும் சொல் படர்க்கைக்குரியதாயினும் கூறுவோன் தன்னைப் பிறன்போல வைத்துக் கூறும் குறிப்பானே தன்மைக் கண்ணதாகி இயலும் எனக் கூறுவர் புலவர்.

'கொடு' என்பது இரவின் கிளவியாதல் யாங்ஙனம்? என நின்ற ஐயம் நீங்கத் தன்னைப் பிறன்போற் கூறும் குறிப்பான் தன்மை இடமுணர்த்தி நிற்றலின் இரத்தற்குறிப்புப் பெறப்படு மென்றவாறாம். எ-டு : மேற்காட்டப் பெற்றது

நச்சினார்க்கினியர் நூல்நெறிக்கு ஒவ்வா உரைகூறிஇவற்குக் கொடு என உதாரணங்காட்டுவார். அங்ஙனம் கூறுதல் கட்டளை (ஆணை) ஆதலன்றி இரவின் கிளவியாகாமையறிக.

மேற்கூறிய ஏழு சூத்திரங்களும் தொடர் மொழியாக்கம் பற்றியோ, சொல்லிலக்கணம் பற்றியோ நில்லாமையின் ஈண்டுக் கூறினார் என்க.

**சூ. 450 :** பெயர்நிலைக் கிளவியின் ஆஅ குநவும்
திசைநிலைக் கிளவியின் ஆஅ குநவும்
தொன்னெறிமொழிவயின் ஆஅ குநவும்
மெய்ந்நிலை மயக்கின் ஆஅ குநவும்
மந்திரப் பொருள்வயின் ஆஅ குநவும்
அன்றி அனைத்தும் கடப்பாடிலவே (53)

**க-து :** கடப்பாடின்றி வரும் குறிப்புச் சொற்கள் வருமாறும் அவற்றின் பெயரும் கூறுகின்றது.

**உரை :** பெயர்நிலைக்கிளவியின் ஆகிவருவன முதலாக மந்திரப்பொருள் வயின் ஆகிவருவன ஈறாக வரும் அவ் அனைத்துக் குறிப்புச் சொற்களும் எவ்வகையான கடப்பாடு மின்றி வருவனவாகும். "கடப்பாடில" என்றது இவை இவ்வாறாம் என்று கூறுதற்குரிய இலக்கணமின்றி வருவன என்றவாறாம்.

1. பெயர்நிலைக் கிளவியின் ஆகுந, என்றது. இயற் சொல்லாக நின்று பொருளுணர்த்துதற்குரிய பெயர்ச்சொற்களி னாற் குறிப்புப் பொருள் தோன்றி வருவன என்றவாறு. அவை வருமாறு :- திருமுகம் என்னும் தொகைமொழி தனது இயற் பொருளைத்தாராமல் ஓலை என்னும் பொருள்குறித்து வருதலாம். சுடுகாட்டை நன்காடென்பதும், இறந்தானைக் கல் நின்றான் என்பதும் அது. இதனை இடைக்காலத்தார் மங்கல வழக்கு எனக் கூறுவர்.

2. திசைநிலைக்கிளவியின் ஆகுந என்றது : திசைச் சொற்களான் குறிப்புப் பொருள் தோன்றி வருவன என்றவாறு. அவை வருமாறு : பறி என்னும் சொல் தன் இயற்பொருளைத் தாராமல் பொன் என்னும் பொருள் குறித்து வருதலும் காரை என்னும் சொல் ஆடையைக்குறித்து வருதலும் பிறவுமாம். இதனை இடைக்காலத்தார் குழூஉக்குறி என்பர். இக்கால ஆய்வாளர் வட்டார வழக்கு என்பர்.

3. தொன்னெறி மொழி வயின் ஆகுந, என்றது : தொன்மை யான மரபுபற்றிக் கூறும் மொழியினிடத்தனவாய்க் குறிப்புப் பொருள் தோன்றி வருவன என்றவாறு. பிறை கவ்வி மலை நடக்கும் என்பது யானையை உணர்த்தி வருதல்போல்வன.

எழுதுவரிக் கோலத்தார் ஈவார்க் குரியர்
தொழுதிமைக் கண்ணமைந்த தோட்டார் - முழுதகலா
நாணிற் செறிந்தார் நலங்கிள்ளி நாடோறும்
பேணற் கமைந்தார் பெரிது.

இங்ஙனம் ஒரு நங்கையை வருணித்தல்போல வருணித்து நூற்சுவடியை (புத்தகத்தை) குறிப்பால் உணர்த்துவதும் அது. இதனைச் செய்யுள் வகையுள் 'பிசி' எனக் கூறுவர். விடுகதை என இக்காலத்து வழங்குபவை இதனுள் அடங்கும். இவற்றுள் வரும் சொற்கள் தமக்குரிய இயற் பொருளைப் பயந்து நின்றன வாயினும் உயர்திணை வாய் பாட்டாற்கூறி அஃறிணையைப் புலப்படுத்தலின் குறிப்பாயின என்க. குறிப்புப் பொருள்தரும்

சொற்களைக் கருதி இதனைச் சொல்லிலக் கணத்துட் கூறினார் என்க.

4. மெய்ந்நிலைமயக்கின் ஆகுந, என்றது: சொற்கள் தம் வடிவுமயங்கி மாறுதலாற் குறிப்புப் பொருள் தோன்றி வருவன என்றவாறு. அவை வருமாறு: தீத்தீண்டுகையார் என்பது வேம்-கை எனப் பொருள் மயங்கி வேங்கை என்னும் மரத்தைக் குறித்து வருதல் போல்வன. வேங்கையார் என உயர்திணை வாய்பாடுபட நிற்றலும் குறிப்பேயாம். முசுமுசுக்கை என்னும் கொடியை இருகுரங்கின்கை என்பதும் அது. இனி நிலையாமை கடைப்படி சிவபுண்ணியம் செய் என்னும் கருத்தை

நீத்தொழிந்த ஆறைந் தடக்கிப்பின் நிச்சயமே
வாய்த்தமைந்த வாயில் பெண்ணானையே — கூத்தற்கு
வாளேறோ டோசை விளைநில மிவ்வல்லாற்
கேளாய் உடன்வருவதில். என மயக்கிக் கூறலும் அது.

நீத்து ஒழிந்த ஆறு - நிலை, ஐந்தடக்கி - ஆமை, அமைந்த வாயில் - கடை, பெண்ணானை-பிடி, கூத்தன் - சிவம், வாளேறு- புண். ஓசை - இயம், விளைநிலம் - செய், இவற்றைக் கூட்ட நிலையாமை கடைப்பிடி. சிவபுண்ணியம் செய் என்னும் பொருள் தோன்றியவாறு கண்டுகொள்க.

5. மந்திரப்பொருள்வையின் ஆகுந, என்றது: மந்திரப் பொருளைக் குறித்துக் குறிப்பாக வரும் சொற்கள் என்றவாறு: அச்சொற்களும் இயற்பொருள் உணர்த்தாமல் குறிப்பாக நிற்கும் என்பார். மந்திரமொழி வயின் என்னாது மந்திரப் பொருள்வயின் என்றார். அவை வருமாறு:-

“பட்டி மண்டபம் ஏற்றினை ஏற்றினை
எட்டினோடி ரண்டும்மறி யேனையே” (திருவாசகம் -

திருச்சதகம்-49) இதனுள் எட்டு இரண்டு என்பவை எண்ணை உணர்த்தாமல் அவற்றின் வரிவடிவ அடையாளத்தை “அ - உ” எனச் சுட்டி அவற்றின் வாயிலாகச் சிவசத்தியாகிய அக்கரப் பொருளைக் குறித்து நின்றன. எட்டு - அ - (சி) - சிவம்-இரண்டு உ - (வ) - சக்தி. சிவ என்பது ஈண்டு மந்திரப் பொருள்.

அந்தம் நடுவிரல் ஆதி சிறுவிரல்
வந்த வழிதுறை மாறி உரை செயும்
செந்தமிழாதி தெரிந்து வழிபடு
நந்தி இதனை நவமுரைத்தானே (திருமந்திரம் - வயிரவி மந்திரம் - 9) என்பதும் அது. பிறவும் மந்திரப் பொருளைப் பிற

சொற்களாற் சுட்டிக் கூறப்படுவனவெல்லாம் இக் குறிப்பு நிலையாகக் கொள்க. அவற்றின் பொருளை அவைவல்லார் வாய்க் கேட்டுணர்க.

இனி இத்திருமந்திரச் செய்யுளான் மந்திரம் என இந்நூலாசிரியர் கூறுவது தமிழ்மொழியின்கண் அமைந்த மந்திரங்களையே என்பதும், ஆசிரியர் காலத்துத் தமிழ் மந்திரங்களும் அவைபற்றிய இலக்கியங்களும் மிக்கிருந்தன என்பதும் புலனாகும். ஏழுவகைச் செய்யுட்களுள் 'வாய்மொழி' என்னும் மந்திர இலக்கியங்கள் ஒன்று என்பதையும் அதுபற்றிய விளக்கங்களையும் நிறைமொழி மாந்தர் ஆணையிற்கிளந்த மறைமொழி தானே மந்திரமென்ப (செய்- - 171) என்னும் சூத்திரவுரையுட்கண்டு கொள்க. அகத்தெழுவளியிசையானமைவனவும், ஒலிக்குறியீடுகளாகப் புறத்தெழுவனவுமாகிய மந்திரங்கள் வடமொழிக்கும் தமிழ் மொழிக்கும் ஒத்த உரிமையுடையவை என்பதைத் திருமந்திரம் முதலிய அருளாளர் தம் கூற்றான் உணர்ந்துதெளிக.

அன்றியனைத்தும் கடப்பாடிலவே என்றது: குறிப்பிற் றோன்றலாக வருவனபற்றி இவ்வதிகாரத்துள் கூறப்பெற்றன வெல்லாம் ஓராற்றான் இலக்கண நெறியாற் சொல்லுதற்குரிய கடப்பாட்டினவாய் அமைந்தன. இவ் ஐவகைக் குறிப்பிற் றோன்றுவன அங்ஙனம் வகுத்துக் கூறற்குரிய கடப்பாடில்லாதன வாம் என்றவாறு.

எனவே, இன்மையும் ஏரணநெறியாற்பொருண்மையாயவாறு போல, இவை "கடப்பாடில்லாக் குறிப்பு மொழி" எனக், குறியீடு பெற்று அக்குறியீடுகளே இலக்கணமாக அமையப் பெற்றன என அறிக.

**சூ. 454** செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்யன் கிளவி ஆகிடன் உடைத்தே (54)

**க-து:** செய்யாய் என்னும் வாய்பாட்டு வினைச் சொல் குறிப்பாற் பொருள் வேறுபட்டு வருமாறு கூறுகின்றது.

**உரை:** முன்னிலையில் செய்யாய் என்னும் வாய்பாடு பற்றி வரும் முற்றுவினைச்சொல் செய் என்னும் வாய்பாட்டுப் பொருள் பட வருமிடம் உடையதாகும்.

செய் என்பது ஐயத்திற்கிடமில்லாத விதிவினையேயாகும். செய்யென் கிளவி ஆகிடன் உடைத்தே" என்றதனான் செய்யாய் என்பது மறைவினையை உணர்த்தி நின்றல் புலப்படும்.

செய்யாய் என்னும் முற்றுச்சொல் கால எழுத்துப்புணராமல் (செய் + ஆய்-செய்யாய்) விதிவினையாயும்-எதிர்மறை ஆகாரம் விகாரத்தாற் கெட்ட (செய்-ஆ-ஆய்-செய்யாய்) மறைவினையாயும் வடிவான் ஒன்றுபட்டு நிற்பினும் விதிவினைக்கண் "செய்வாய்" எனக் காலஎழுத்தொடு புணர்ந்து நிற்கும் பிறிதொரு வாய்பாடும் உண்மையான், செய்யாய் எல்பது மறைவினைக் குரியதாகச்சான்றோர் வழங்கும் வழக்கினைக் கருதி அஃது விதிப் பொருளை ஏற்றுவருமிடமுமுண்டென்பாராய்ச் "செய்யென்கிளவி ஆகிடன் உடைத்தே" என்றார். இவ்உடன்பாட்டுப் பொருளை இடம் நோக்கிப் பெற வேண்டுதலின் இதனைக் குறிப்பிற் றோன்றும் கிளவிகளைப் பற்றிய அதிகாரத்து வைத்தார்.

**எ-டு :** சாத்தா இஃது அமிழ்தொக்குமாதலின் உண்ணாய், இறைவா நின்னருள் வேண்டினேன் தாராய், சுடர்த்தொடீ கேளாய் எனவரும்.

விதிக்கும் மறைக்கும் ஒப்பநிற்கும் இச்சொல் கூறுவோர் குறிப்பானே உடன்பாட்டுப் பொருள்பயந்து நின்றவாறு காண்க.

இனி, சேனாவரையர் செய்யாய் என்னும் சொல் "ஆய்" என்னும் ஈறு கெட்டுச் 'செய்' எனவருமிடமுமுடைத்தென்பார். சிவ ஞானமுனிவரும் அவ்வாறே கூறுவார். அஃது ஆசிரியர் கருத்தாயின் செய்யாயென்னும் கிளவிதானே செய்யென் கிளவியாகியும் வருமே என்றாற்போலக் கூறாமல் ஆகிடன் உடைத்தே எனக் கூறார் என்க. அன்றியும் தொகை மரபினுள் உயிரீறாகிய முன்னிலை கிளவியும், புள்ளியிறுதி முன்னிலைக் கிளவியும் (தொகை - 9) எனவும், உயிர் மயங்கியலுள் ஏவல்கண்ணிய வியங்கோட் கிளவியும் (உயிர் - 10) எனவும் கூறியவாற்றான் முதனிலை வினைச்சொற்கள் எடுத்தலோசையான் முன்னிலை ஏவற்பொருள் உணர்த்தும் என நேர்ந்தாராகலின் அதனை ஈண்டுங் கூறலுற்றாராயின் இது பயனில் கூற்றாய் முடியுமென்க. அங்ஙனம் ஆசிரியர் உடம்பொடுபுணர்த்துக் கூறும் பலவற்றிற்கு எடுத்தோத்தின்மையும் உணர்ந்து கொள்க. இது குறிப்பாற் பொருள் கொள்ளநிற்றலின் வினையியலுட் கூறாது ஈண்டுக் குறிப்பு மொழி பற்றிக் கூறும் வழி ஓதினார் என்க.

**சூ. 452 :** முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே (55)

**க-து :** முன்னிலையீறு பற்றியதோ ரியல்பும் அதன் பொருட்குறிப்பும் ஆமாறு கூறுகின்றது.,

**உரை :** முதனிலையாய் ஏவற்பொருள் குறித்து வரும் முன்னிலை வினைச்சொல்லின் முன்னர் ஈகாரமும் ஏகாரமும் மரபினான் அதனதன் நிலைக்கேற்ற மெய்யினை ஊர்ந்து வரும்.

**எ-டு :** சென்றீபெருமநிற் றகைக்குநர் யாரே (அகம்-46) எனவும் அட்டிலோலை தொட்டனை நின்மே (நற்-300) எனவும் வரும். இவற்றுள் ஈகாரம் றகர மெய்யினையும் ஏகாரம் மகர மெய்யினையும் ஊர்ந்து வந்தன.

"இ ஐ ஆய் என வரூஉம் மூன்றும்" முன்னிலைக்கண் ஒருமை குறித்துவரும் இறுதியிடைச்சொற்கள் என வினையியலுட் கூறினார். ஈயும் ஏயும் அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வந்தவிடத்து அவை வியங்கோளாய்ப் பொருள் பயந்து நிற்றலானும் யாதானுமோர் மெய்யினை ஊர்ந்தன்றிவாரமையானும் ஆண்டுக் கூறாது குறிப்புச் சொற்களின் அதிகாரத்து வைத்து ஈண்டுக் கூறினார் என்க.

இவ்விடைச் சொற்கள் இயற்பெயர் முன்னர் ஆரைக்கிளவி போல வந்தன எனக் கொள்க. இந்த றகர மகரங்களை எழுத்துப் பேறெனக் கூறுவர் உரையாசிரியன்மார்.

சூ. 453 : கடிசொல் இல்லை காலத்துப் படினே (56)

**க-து :** காலத்தாற் புதியனவாகத் தோன்றி வரும் சொற்களை ஏற்குமாறு கூறுகின்றது.

**உரை :** அவ்வக்காலத்துச் சான்றோர் வழக்கின்கண் யாதானுமோர் நிமித்தம்பற்றித் தோன்றி வழங்கப்படுமாயின் தொன்றுதொட்டனவல்ல என்றானும் இலக்கணவழுவாகும் என்றானும் அவை கடியப்படும் சொற்கள் இல்லை.

**எ-டு :** சமன், சமழ்ப்பு, சவட்டுதல் என்பனபோலத் தோன்றிவந்தனவும் அமைத்தல் - சமைத்தல், சமன் - ஞமன், நிணம் - ஞிணம் யாவன் - யவன், என்றாற்போலத் திரிந்து வந்தனவும் யவனர் யூபம் என்றாற் போல ஆக்கமுற்று வந்தனவும் பிறவுமாம். இவ்ஆசிரிய 'ஆணை' பெயர்க்கும் வினைக்கும் பொதுவாகலின் ஈண்டு ஓதப்பட்டதென்க.

சூ. 454 : குறைச்சொற் கிளவி குறைக்கும்வழி யறிதல்

**க-து :** சொல்லின் வடிவினைக் குறைத்து வழங்கும் வழக்கிற்காவதோராணை கூறுகின்றது.

உரை : சீர்நிலைகருதியும் தொடைநயங்கருதியும் அமைத்துக் கொள்ளப்படும் குறுக்கும்வழிக்குறுக்கும் செய்யுள் விகாரமன்றிஇரு வகை வழக்கினும் ஒரு சொல்லைக் குறைத்து வழங்குமிடத்து அச்சொல்லின்கண் குறைத்தற்குரிய இடமறிந்து குறைக்க.

முதல், இடை, கடை என்னும் மூன்றிடங்களுள் சொற் பொருள் சிதையாமற் குறைக்கப்படுமிடம் அறிந்து குறைத்தல் வேண்டுதலின் 'குறைக்கும் வழி அறிதல்' என்றார். அறிதல் என்றது அறிந்து குறைக்க என்றவாறாம்.

எ-டு : மரையிதழ் புரையும் அஞ்செஞ் சீறடி. தாமரை என்னும் சொல்லுள் முதல் குறைந்து வந்தது. உளங்கரந்துறை யும். உள்ளம் என்னும் சொல் இடை குறைந்து வந்தது. ஒந்தி - ஓதி என வருதலும் அது. எம்பின், தம்பின், கரும்புல், என்பவை எம்பி, தம்பி, கரும்பு என ஈறுகுறைந்துவந்தன. நீலம் நீல் என வருதலும் அது.

சூ. 455 : குறைத்தன வாயினும் நிறைப்பெய ரியல

க-து : குறைத்து வழங்கும் சொற்கள் விகாரமுற்றனவல்ல என்கின்றது.

உரை : மேற்கூறியாங்குக் குறைக்கப் பெற்று வழங்கும் சொற்கள் குறைக்கப் பெற்றன வேனும் பொருள் தருமிடத்து நிறைந்து நின்ற பெயரியல்பினவேயாம்.

பிற சார்பு வேண்டாமல் பொருள்தந்து நிற்கும் என்பார் நிறைப்பெயரியல என்றார். இதனான் அங்ஙனம் குறைக்கப் பெறுவன பெயர்ச் சொற்களே என்பதும், இவை செய்யுள் விகாரமல்ல என்பதும் புலப்படும். இவை பெயர்ச் சொற்குரிய இலக்கணமாகாமையானும் ஓராற்றான் குறிப்பின்பாற்படுதலானும் ஈண்டுக் கூறினார் என்க.

சூ 456 : இடைச்சொல்லெல்லாம் வேற்றுமைச்சொல்லே (59)

க-து : ஒருசொல்லை அடுத்து ஒருசொல் நின்று அதன்பொருளை வேறுபடுத்துங் கால் வேறுபடுத்திய சொல்லை அடை அல்லது வேறுபடுத்தும் (வேற்றுமைச்) சொல் என்றும், வேறுபாடுற்ற சொல்லை அடைகொளி அல்லது வேறுபடுக்கப்படும் சொல் என்றும் கூறுப. இவற்றை முறையே விசேடணபதம் விசேடியபதம் என்பார் வடநூலார். அங்ஙனம் வேறு படுப்பனவெல்லாம் இடைச்சொற்கள் என்கிறது.

பெயர் முதலிய நால்வகைச் சொற்களுள் பெயரும் வினையும் அடையாயும் அடைகொளியாயும் வரும். இடைச்சொல் அடையாகு

வன்றி அடைகொளியாக வாராது. உரிச்சொற்களுள் ஒருசாரன இருநிலைமையவாயும் ஒருசாரன அடையாயுமே வரும்.

இருநிலைமையும் இஎய்துவனவற்றை எடுத்துணர்த்த வேண்டாமையின் ஒருநிலையே எய்துவனவற்றை உணர்த்துவாராய் இச்சூத்திரத்தான் இடைச்சொல்லின் இயல்பினைக் கூறுகின்றார்.

**உரை :** ஏழுவகைப்படுமென மேற்கூறிய இடைச்சொற்கள் எல்லாம் தாம் சார்ந்து வரும் சொற்களின் பொருளை வேறு படுத்தும் சொற்களேயாம்.

"முன்னும் பின்னும் மொழியடுத்து வருதலும்" (இடை-3) என்றதனான் இடைச்சொல் முன்வரினும் பின்வரினும் அஃது அடையென்றே கொள்ளப்படும் என அறிக. இதன்பயன் இடைச் சொல்பற்றியதோ ரையங்களைதலும் அதன்பொரு ளியல்பினை வலியுறுத்தலுமாம்.

இடையியலுள் ஏழுவகையாக ஓதியவிடத்துப் புணரியல் நிலையிடைப் பொருள்நிலைக் குதநவும், காலமொடு வருநவும், உருபாகுநவும் என்றதன்றி இம்முறைமையாற் பொருள் செய்யும் என வெளிப்பட ஓதாமையானும் அசைநிலைக்கிளவியாகி வருநவும் இசைநிறைக் கிளவியாகி வருநவும் என்றமையான் மற்றவை பொருளின்றி வருவன போலும் என ஐயுறக்கிடந்தமையானும், தத்தங்குறிப்பிற் பொருள் செய்குநவும் என்றதனான் "தமக்கியல்பிலவே" என்றதற்கு முரணாக இவைதாமாகப் பொருள் செய்வனபோலும் எனக் கருதக்கிடந்தமையானும், அவ்வையமும் மருட்கையும் நீங்க இச்சூத்திரத்தான் அவை எல்லாவற்றிற்கும் உரிய பொருளியல்பு கூறினார் என்க.

இதனை இடையியலுள் ஓதின் அவ்வியலுள் விதந்து கூறியவற்றிற்கே இவ்விதி கொள்ள நேருமாதலின் ஈண்டுக் கூறினார் என்க.

**எ-டு :** நம்பி-சாத்தன்-மரம் என்னும் பெயர்கள், நம்பியின், சாத்தனின், மரத்தின் எனச் சாரியையுற்ற வழி அவை செய்யப்படுபொருள் முதலிய வேற்றுமைப்படுதலை அவாவி நிற்றலின் புணரியல் நிலையிடைப் பொருள்நிலைக்குதவும் சாரியை இடைச் சொற்கள் முன்னடுத்து வேறுபடுத்தின. நட என்னும் தொழிற் பெயர் நடந்-நடக்-நடப் என நின்றவழி அது காலமுணர்த்தலை அவாவி நின்றலின் காலமொடு வரும் இடைச் சொற்கள் அதனை வேறுபடுத்தி நின்றன. மேலும் அது கால எழுத்தொடு ஆன், ஆள், ஆர் என்னும் இடைச்சொற்களைப்

பெற்ற வழி அவை நடந்தான் - நடந்தாள் - நடந்தார் எனப் பாலுணர்த்தற்குரியவாக வேறுபடுத்தி நின்றன.

சாத்தன் என்னும் பெயர் ஐ ஒடு கு முதலிய வேற்றுமை உருபிடைச் சொற்களைப் பெற்றுச் சாத்தனை, சாத்தனொடு, சாத்தற்கு என நின்றவழி அவை செய்யப்படுபொருள் முதலாக வேறுபடுத்தி நின்றன.

படுத்தலோசையாற் கூறும் வழித்தொழிற் பெயராக நிற்கும் கேள், உரை என்பவை மியா - மதி என்னும் இடைச் சொற் களைப் பெற்றவழி கேண்மியா, உரைமதி என அவை அவற்றை முன்னிலை வினைச் சொற்களாக வேறுபடுத்தின.

பல்குரைத்துன்பங்கள் சென்றுபடும் என்னுமிடத்துப் 'பல்' என ஓர் இயலசையாய் நின்றதனைக் குரை என்னும் இடைச் சொல் சார்ந்து அதனைப் பாதிரி என்னும் இயற் சீராய்ப் பொருள் வேறுபடுத்தி நின்றது. கூரியதோர் வாள்மன் என்னுமிடத்து மன் என்னும் இடைச்சொல் வாள் இப்பொழுது திட்பமின்று எனப் பொருள் வேறுபடுத்தி நின்றது. மதி - மயில் என்னும் பெயர்கள் அன்ன என்னும் இடைச்சொல்லொடு கூடியவழி அது, மதியன்ன, மயிலன்ன என் அவற்றை உவமமாக வேறுபடுத்தி நின்றது.

இங்ஙனம் எல்லா இடைச்சொற்களும் தாம் சார்ந்த பெயர் வினைகளை வேறுபடுத்து நிற்றலல்லது தாம் பிறிதொன்றான் வேறுபடாமை விளங்க ''வேற்றுமைச் சொல்லே'' என்றார் ஏகாரம் தேற்றம்.

சூ 457 : உரிச்சொல் மருங்கினும் உரியவை உரிய [60]

**க-து :** பெயரினும் வினையினும் மெய்தடுமாறாமல் ஒருபாலமைந்து பெயர்ப் போலியாயும் வினைப்போலியாயும் வரும் உரிச்சொற்களுள் ஒரு சாரன வேறுபடுக்குஞ் சொல்லாகி வருமென்கின்றது.

**உரை :** மேற்கூறிய இடைச் சொற்களேயன்றி உரிச் சொற்களின் கண்ணும் வேற்றுமைப் படுத்தும் சொல்லாதற் குரியவை வேற்றுமைப்படுத்தும் சொல் எனற்கு உரியவாம்.

உறு, தவ, தட, கய, ஏ என்றாற் போல்வன வேறுபடுத்தும் சொல்லாயே வரும். பழுது, சாயல், செல்லல் என்றாற் போல்வன இருநிலைமையும் உடையவாய் வரும்

எ டு உறுகால், தவப்பெரியன், கயந்தலை, இவை வேறுபடுத்து வந்தன. பழுதுகழி வாணாள் - பெரும்பழுது உற்றது, சாயல்மார்பு - மயிலன்ன சாயல். கேழ் கிளரகலம் -

செங்கேழ் மென்கொடி. செல்லல் நோய் - அருஞ் செல்லல் இவை இருநிலையாயும் வந்தன. ஏனையவும் இவ்வாறே சான்றோர்வழக்கு நோக்கிக்கண்டு கொள்க. இடைச் சொல்லொடு மாட்டெறிந்து சொற் சுருங்கக் கூறுதலாம் பயன் நோக்கி இதனை ஈண்டு வைத்தார்.

சூ. 458 : வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய

க-து : வினைஎச்சம் பற்றிய மரபாமாறு கூறுகின்றது.

உரை : வினையியலுள் ஓதப்பெற்ற வினையெஞ்சு கிளவி களும் (உம்மையான்) வினைமுற்றுக்களும் (சிறுபான்மை) பெயரெஞ்சு கிளவிகளும் வேறுபட்ட பலகுறியவாம்.

'குறிய' என்றது குறிப்பின என்றவாறாம். அற்றாயின் குறிப்பின எனனாது குறிய என்றது என்னையெனின்? சிறு பான்மை சொல் வடிவு திரிதலும் கோடற்கு அவ்வாறு கூறினார் என்க.

"முதல்நிலை மூன்றும் வினைமுதல் முடிபின" எனவும், "ஆன்வந்தியையும் வினை நிலையானும் தாமியல் மருங்கின் முடியும்" எனவும் "எத்திறத்தானும் பெயர் முடிபினவே" எனவும் கூறப்பெற்ற வினையெச்சங்களும் வினைமுற்றுக்களும் தம் பொருள் திரியாமல் வேறுபல குறிப்பினவாயும் வரும். அவை தம்மரபினவாகக் கொள்ளப்படும் என்பது கருத்து.

அவை வருமாறு : மரற்புகா அருந்திய மா எருத்திரலை உரற்கால் யானை ஓடித்துண்டெஞ்சிய யாவிரிநீழற் றுஞ்சும் (குறுந் 232 - ) என்புழி. 'உண்டு' என்னும் செய்தென்னெச்சம் "உண்டலான்" எனக்காரணக் குறிப்பாய் வேறுபட்டு நின்றது. ஞாயிறு பட்டு வந்தான் என்னும் செய்தென்னெச்சம் ஞாயிறுபட (எழ) என்னும் ஏதுப்பொருட் குறிப்பாய் வேறுபட்டு நின்றது. ஓடிவந்தான் - போய் நின்றான் எனச் செய்தென்னெச்சம் வாய்பாடு திரிந்து வந்தது.

காக்கைகரைய விருந்துவந்தது என்னும் செய்தென்னெச்சம் காரணப்பொருள் உணர்த்தாது உடனிகழ்ச்சிக் குறிப்பாய் வேறு பட்டு நின்றது. "பெருங்கையற்றவென் புலம்பு முந்துறுத்து" என்னுமிடத்துச் செயவெனெச்சம் (பெருங்கையற) திரிந்து நின்றது.

"பெயர்த்தனென் முயங்கயான் வியர்ந்தனென் என்றனள்" என்புழிப் பெயர்த்தனென் என்னும் முற்றுவினை எச்சப்பொருள்

குறித்து நின்றது. கண்ணியன் வில்லன் வரும் என்புழிக் கண்ணியன் என்னும் வினைக்குறிப்புமுற்று செய்தென் எச்சப் பொருட்டாய் வேறுபட்டு நின்றது. கண்ணும்படுமோ என்றி சின் யானே - ஈங்குவந்தீத்தோய் - புகழ்ந்திகுமல்லரோ - என வினை முற்றுக்கள் வடிவு திரிந்து நின்றன.

'சினைஇய வேந்தன் எயிற்புறத்திருந்த' கடைஇய நின் மார்பு, எனச் செய்த என்னும் பெயரெச்சங்கள் ஈறுதிரிந்து நின்றன. பிறவும் இவ்வாறு வருவனவற்றிற்கெல்லாம் இதுவே ஓத்தாகக் கொண்டு முடித்துக் கொள்க.

இங்ஙனம் செம்பொருள் வேறுபட்டுக் குறிப்பொடு கூடிப் பொருளுணர நிற்றலான் இதனை வினையியலுட் கூறாது ஈண்டுக் கூறினார் என்க. இச்சூத்திரத்திற்கு உரையாசிரியன்மார் கூறிய விளக்கங்களை ஆய்ந்துணர்த்தப்புகின் மிகவிரியுமாகிலின் இந்நூல் நெறிக்கு ஏற்ப அவற்றை ஆய்ந்து ஒவ்வுவன ஒவ்வாதன கண்டு கொள்க.

## சூ 459 : உரையிடத் தியலும் உடனிலை அறிதல் (62)

**க-து :** வேறுபல் குறிப்பினவாய் வடிவொன்று பட்டுவரும் சொற்களை அறிந்து கொள்க என்கின்றது.

**உரை :** மேற்கூறிய வினை எச்சமும் பெயரெச்சமும் முற்று மாகிய வினைச் சொற்கள் உரைக்குமிடத்து வடிவத்தான் ஒருங்கு நிற்கும் நிலையினை அறிந்து கொள்க.

என்றது ; அவை ஒன்றுபட்டு நிற்பினும் முன்னும் பின்னும் வருவனவற்றான் வேறுபடும் அவற்றின் பொருட் குறிப்பினை அறிந்து கொள்க என்றவாறாம்.

**எ-டு ;** ஆடிய என்னும் சொல் - ஆடிய வந்தான், ஆடிய கூத்தன், மயில்கள் ஆடிய, என வருதற்கண் செய்யிய என்னும் வினைஎச்சங்குறித்தும் செய்த என்னும் பெயரெச்சம் குறித்தும் செய்தன என்னும் வினைமுற்றுக்குறித்தும் வந்தவாறு கண்டு கொள்க.

வினைகளை என்னாது பொதுப்படக் கூறியதனான் சாத்தன் ஆடற்குவந்தான், சாத்தன் ஆடற்கு இசைதுணையாகும் என்புழி முன்னது செயற்கு என்னும் வினைஎச்சமாயும் பின்னது நான்கனுருபேற்று பெயராயும் நின்றவாறு கண்டு கொள்க. கற்றபின் நிற்க அதற்குத் தக - கற்றபின் உண்க என்புழிப் முன்னது வினைஎச்சமாயும் பின்னது காலப் பெயராயும் நின்றன.

இவையும் ஓராற்றான் குறிப்பாலுணரப்படுதலின் ஈண்டுவைத்தோதினார்.

சூ. 460 - முன்னத்தின் உணருங் கிளவியும் உளவே
இன்ன என்னுஞ் சொன்முறை றயான (63)

**க-து.** குறிப்பானன்றி முன்னத்தான் பொருள்பயப்பனவும் உளவென்கின்றது.

**உரை :** சொல்லும் முறைமையானே இவை இன்ன பொருளின என்னும் வண்ணம் முன்னத்தாற் பொருளுணர வரும் சொற்களும் உள. அவற்றை உய்த்துணர்ந்து கொள்க என்றவாறு.

குறிப்புவேறு முன்னம்வேறு. குறிப்பு யாதானுமோர் இயைபு பற்றி வரும். முன்னம் உய்த்துணர்வு பற்றி வரும்,

**எ-டு :** "குழை கொண்டு கோழி யெறியும் வாழ்க்கையர்" எனின், அன்ன பொருஞ்செல்வர் என்பது முன்னம். "உவர்க் கடலன்ன செல்வரும் உளரே கிணற்றூற்றன்ன நீயு மாருளையே" எனின், பயனில் செல்வர் என்பதும் பெறப்பெற வழங்கும் வள்ளியோன் என்பதும் முன்னம். "அறனோ மற்றிது விறன் மாண்குடுமி இன்னாவாகப் பிறர் மண் கொண்டு இனியசெய்தி நின் ஆர்வலர் முகத்தே" - எனின் மாவீரனும் வள்ளலுமாயினை என்பது முன்னம். பிறவும் இவ்வாறு வருவனவற்றை ஓர்ந்து கொள்க.

"கிளவியும்" என்ற உம்மையான் கிளவிகள் சார்பாக வரும் முன்னமும் கொள்க. தொடிநோக்கி மென்றோளும் நோக்கி அடிநோக்கி அஃதாண்டு அவள் செய்தது. என்றவழிப் பிரிவாற்றாள் என்பதும் உடன் போக்கிற்குடம்படாள் என்பதும் முன்னத்தான் உணர்தலாம்- செஞ்செவியர் - வெள்ளொக்கலர் என உலக வழக்கிலும் வரும். இதற்கு நச்சினார்க்கினியர் கூறும் விளக்கம் உத்தியுள் அடங்கு மாகலின் அவர் கருத்து ஒவ்வாமையறிக.

சூ. 461 ஒரு பொருள் இருசொல் பிரிவில வரையார்

**க-து :** ஒரு சார் மரபு கூறுகின்றது.

**உரை :** இருசொற்கள் தம்முட் பிரிவிலவாய் ஒருபொருள் குறித்து வருதலை மிகையென்று கருதி நீக்கார் ஆசிரியர். மரபாகக் கொள்வர் என்றவாறு.

**எ-டு :** நிவந்தோங்கு பெருமலை - எனவும், உச்சிமீமிசை எனவும், நிலத்து வழி மருங்கிற்றோன்றலான - எனவும் வரும்.

"பிரிவில" என்றது இடையே வேறு சொல்லின்றி இணைந்து நிற்கும் என்றவாறு, இதனை மீமிசைச் சொல் என வழங்குவர் உரையாளர். இரட்டைக்கிளவி வேறு - இதுவேறென அறிக. இது தொடர்மொழியாக்கம் பற்றிய மரபன்மையான் கிளவியாக்கத்துட் கூறாமல் ஈண்டுக் கூறினார்

சூ 462 - ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக் காகும் இடனுமா ருண்டே (65)

க-து : பால்பற்றியதொரு மரபு கூறுகின்றது.

உரை : ஒருமை ஈற்றினைச் சுட்டி நிற்கும் பெயர்நிலையாய சொல் பன்மைப்பால் உணர்த்தற்கு ஆகும் இடனும் உண்டு. உம்மை சிறுபான்மையை உணர்த்தி நின்றது.

எ-டு : '-புலையன் எறிந்த பூசற்றண்ணுமை ஏவலிளையர் தாய் வயிறு கரிப்ப"-எனவும், "அஃதை தந்தை அண்ணல் யானை அடுபோர்ச்சோழர்" எனவும் வரும். தாய், தந்தை என்னும் ஒருமைச் சொல் தாயர் தந்தையர் என்னும் பன்மை உணர்த்தி நின்றன.

'இடனுமாருண்டே' என்றதனான் பன்மைச் சொல் ஒருமைப் பொருள் உணர்த்தி வருவனவும் கொள்க. ஏனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்துணையும் தேரான் பிறனிற் புகல் - எனவரும். இங்ஙனம் வருவனவற்றை ஒருமை பன்மை மயக்க மாகிய வழுவமைதி என்பார் ஒருசாரார்.

சூ. 463 : முன்னிலை சுட்டிய ஒருமைக் கிளவி
பன்மையொடு முடியினும் வரைநிலையின்றே
ஆற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும்

க-து : இதுவுமது.

உரை : முன்னிலை குறித்து நின்ற ஒருமைப்பெயர் பின்னர்ப் பன்மைப்பெயரொடு முடியினும் நீக்கும் நிலைமைத்தன்று, இவ்வியல்பினை ஆற்றுப்படுத்து உரைக்குமிடத்துப் போற்றிக் கொள்க. ஆற்றுப்படையாவது ஆற்றுப்படுத்துரைக்கும் செய்யுட்டுறையாம்.

எ-டு : கூத்தராற்றுப்படையுள் "கலம்பெறு கண்ணுளர் ஒக்கற்றலைவ!" என விளியுற்றுநின்ற ஒருமைச் சொல், பின்னர்

"இரும்பே ரொக்கலொடு பதமிகப்பெறுகுவிர்" எனப் பன்மைச் சொல்லொடு முடிந்தவாறு காண்க. பெயர் என்றது மேலைச் சூத்திரத்தினின்று அதிகரித்தது. "போற்றல் வேண்டும்" என்றதனான். "என்னிர் அறியாதிர் போல இவை கூறின் நின்னிர வல்ல நெடுந்தகாய்" என ஆற்றுப்படுத்தலின்றி வருவனவும் கொள்க. இவை வழுவமைதியாகலின் கிளவி யாக்கத்துட் கூறாது ஈண்டுக்கூறினார்.

சூ. 464 : செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி யெல்லாம்
பல்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது
சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல் (67)

க-து : இவ்வதிகாரத்திற்குப் புறனடை கூறுமுகத்தான் சொல்லிலக்கணங்களை உணர்த்தும் முறைமை கூறுகின்றது.

உரை : செய்யுளிடத்தனவாயும் வழக்கிடத்தனவாயும் பொருள்பெறக் கிளக்கப் பெற்ற சொற்களையெல்லாம் பல்வேறு பட்ட செய்கைகளான் எழுத்திலக்கண முறைமை பிறழாமல், உரைப்போர் அச்சொற்களை வரையறைப்படுத்து உணருமாறு அவற்றின் இலக்கணக் கூறுகளை வகைபடப் பிரித்து எடுத்துக் காட்டுக.

'மெய்பெறக்கிளந்த' என்றது : ஒருமொழி - தொகைமொழி - தொடர் மொழிகளாக வகுத்துக் கூறியவற்றை. 'கிளவியெல்லாம்' என்றது : பெயர்வினை முதலிய குறியீடுகளானும் இயற்சொல், திரிசொல் முதலிய குறியீடுகளானும் கிளந்தவற்றை. 'நூல்நெறி' என்றது : மொழிநிலையும் அவை புணர்நிலையும் பற்றி ஓதப்பட்ட எழுத்திலக்கண முறைமைகளை. (நூல் - எழுத்து) செய்தி = செய்கை. அஃதாவது மரபாகவும் இலக்கணமாகவும் கூறிய விதிகள். 'பிரித்தனர் காட்டல்' என்றது வேறு வேறு இடங்களிற் கூறிய விதிகளை அவ்வவற்றிற்குப் பொருந்தப் பிரித்து எடுத்துக் காட்டுக என்றவாறு.

உரை கூறுமிடத்து வினையியலுள் வினைச்சொற்களின் கூறுகள் முதனிலையும், காலங்காட்டும் இடைநிலையும் சாரியையும் இறுதிநிலையுமாகப் பிரித்துக் காட்டப் பெற்றன.

உரியியலுரையுள் குறைச் சொற்கிளவி உரிச் சொல்லாக நிரம்பி நிற்குமாறும் அவற்றின் பல்வேறுபட்ட நிலைகளும் பிரித்துக் காட்டப்பெற்றன. எச்சவியலுள் தொகை மொழிகள்

இடத்திற்கேற்ப விரியுமாறும், எச்சங்கள் சொற்பொருளைத் தருமாறும் பிரித்துக் காட்டப் பெற்றன.

"பிரித்தனர் காட்டல்" என்றது புறனடைவாய்பாடு. அதனான் கூறப்படாமல் எஞ்சிநின்றவற்றை இதுவே களனாகச் சார்த்தி அறிந்து கொள்க.

எ-டு : யானும் நீயும் செல்வேம். யானும் நீயும் அவனும் செல்வேம் எனவும், நீயும் அவனும் சென்மின் எனவும் இடம் விரவித் தன்மையினும், முன்னிலையினும் முடிந்தன. இவை வழக்கியல் மரபாயின.

'முரசு கெழுதானை மூவிருள்ளும்' எனற்பாலது 'மூவருள்ளும்' எனவும், நில்லாது பெயர்ந்த பல்லே முள்ளும் எனற்பாலது பல்லோருள்ளும் எனவும் படர்க்கையாக வருவனவும் மரபாயின. இவற்றைப் பிரித்து நோக்குமிடத்து வழாநிலையாமாறும் கண்டு கொள்க. பிறவும் அன்ன.

எச்சவியல் முற்றியது.

சொல்லதிகாரம் -

ஆராய்ச்சிக் காண்டிகை உரை முற்றியது.

## சூத்திர முதற்குறிப்பு அகரநிரல்

சூத்திர முதற்குறிப்பு அகரநிரல்

முற்றும்.

# பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 32 | காலாடு | காலமொடு |
| 6 | 29 | எனைய | ஏனைய |
| 28 | 25 | பாடாராயின்மை | பாடாராயினமை |
| 30 | 28, 29 | ஆடூஉ மகடூஉ | ஆடூஉ-மகடூஉ இப்பெயர்களை |
| | | ஏனையஇடங்களிலும் | இவ்வாறேதிருத்திக் கொள்க. |
| 31 | 2 | உடைமையாகும் | உடைமையானும் |
| 31 | 32 | வாய்ப்பாட்டாற்பெயற் | வாய்பாட்டாற்பெயர் |
| 44 | 22 | செப்பியனும் | செப்பினும் |
| 57 | 3 | ஆயிரிடத்தே | ஆயீரிடத்த |
| 57 | 24 | என்றும் | என்னும் |
| 62 | 13 | வறையறை | வரையறை |
| 63 | 4 | வாய்ப்பாடு | வாய்பாடு.ஏனைய இடங்களிலும் |
| | | | இவ்வாறே திருத்திக் கொள்க. |
| 65 | 5 | சொல்லிக்கட்சோர்வு | சொல்லின்கண் சோர்வு |
| 66 | 9 | சுட்டுப் பெராகலின் | சுட்டுப்பெயராகலின் |
| 69 | 2 | உயர்தினைக்கே | உயர்திணைக்கே.ஏனைய இடங் |
| | | களிலும் தினையைத் | திணை எனத் திருத்திக் கொள்க. |
| 69 | 16 | முறைக்கள் | முறைக்கண் |
| 72 | 16 | மருங்கிலும் | மருங்கினும் |
| 73 | 2 | ஓகு | ஒரு |
| 75 | 18 | வேறுபடுஉம் | வேறுபடூஉம் |
| 76 | 17 | இம்மாவாயிரம் | இம்மாவயிரம் |
| 77 | 3 | என்பது | என்புழிச் |
| 78 | 12 | கிள 78-21 வந்து | கிளி - வந்தது |
| 82 | 20 | எவரும் | எனவரும் |
| 94 | 4 | கருகருமத்தா | கருமகருத்தா |
| 96 | 27, 28 | கடலுன்-யன்னல் | கடலுள்-யண்ணல் |
| 97 | 28 | கிளவியக்கத்துள் | கிளவியாக்கத்துள் |
| 98 | 8 | எழுவாயாப் | எழுவாயாய்ப் |
| 98 | 15 | என்மனார் | என்மனார், |
| ,, | | கக்கட்சுட்டே | மக்கட்சுட்டே |
| ,, | 22 | அறிவித்ததற்கு | அறிவித்தற்கு |
| 107 | 22 | அயிற்று | ஆயிற்று |
| ,, | 30 | வேறுபடாயிற்று | வேறுபாடாயிற்று |

* இன்றியமையாத சிலவற்றிற்கே திருத்தம் கொடுக்கப் பட்டுள்ளது. ஏனையவற்றை மாணாக்கர் திருத்திக் கொள்வாராக.

| | | | |
|---|---|---|---|
| 109 | 11 | எது | ஏது |
| 110 | — | ஓடு எல்லாவற்றையும் ஒடுவெனத் திருத்திக் கொள்க. | |
| 112 | 23 | வினையாகாமைபின் | வினையாகாமையின் |
| 125 | 21 | இடந்த ஆ | கிடந்த ஆ |
| 135 | 13 | யாதானுமொறு | யாதானுமொரு |
| 141 | 12 | கொடைஎநிர் | கொடைஎதிர் |
| 143 | 4 | நீங்னான் | நீங்கினான் |
| ,, | 14 | என்பத்தொரு | என்பதொரு |
| 150 | 2 | அகரதொடு | அகரத்தொடு |
| 152 | 7 | செய்யப்படு | செயப்படு |
| 154 | 32 | ஐம்பாற்பொருள் | ஐம்பாற் பொருள் |
| 160 | 3 | பிரிதின் | பிறிதின் |
| 167 | 10 | அறிவித்ததற்கு | அறிவித்தற்கு |
| 167 | 16 | உரிமையும் | உரியவும் |
| 177 | 32 | (தொழிஇ)தொழிஇஇ | (தொழீ இ) தொழீ இஇ |
| 182 | 1 | நிலையிலும் | நிலையலும் |
| 183 | 6 | மருங்கிற் தோன்று | மருங்கிற்றோன்று |
| ,, | 23 | ஓரன்ன | ஓரன்ன |
| ,, | 33 | விகாரப்பாட்டுகின்து | விகாரப்பட்டு நின்றது |
| 184 | 6 | விரைவுப்பெயர் | விரவுப்பெயர் |
| 187 | 31 | அன்னிற்று | அன்னீற்று |
| 188 | 16 | கிளவியாகவோ | கிளவியாகாவோ |
| 189 | 9 | பென்தண்மை | பெண்தன்மை |
| 191 | 13 | பெயர்களொம் | பெயர்களாம் |
| 192 | 28 | வினையாடுதற்கண் | விளையாடுதற்கண் |
| 198 | 25, 35 | நிகழுஉநின்ற | நிகழூஉ நின்ற |
| 199 | 23 | வினாயாற் | வினையாற் |
| 200 | 18 | பெயரெனிலும் | பெயரெனினும் |
| 206 | 27 | கொள்வதானமும் | கொள்வதனானும் |
| 211 | 13 | மாறிற்னை | மாற்றினை |
| 214 | 9 | திரிந்தம் | திரிந்தும் |
| 215 | 8 | முலன் | மூலன் |
| 222 | 24 | குற்றுகரஈற் | முற்றுகரஈற்று |
| 222 | 30 | யோயினமை | போயினமை |
| 223 | 17 | திரியேயாம் | திரிபேயாம் |
| 227 | 7 | முடித்தவாறு | முடிந்தவாறு |
| ,, | 25 | என்பட | என்பதுபட |
| 235 | 10 | பாலுணத்துதல் | பாலுணர்த்துதல் |
| 239 | 17 | வாய்பாடுற்றி | வாய்பாடுபற்றி |
| 241 | 28 | வரும் | வருஉம் |

| | | | |
|---|---|---|---|
| ,, | 29 | ஒப்பந்தோன்றும் | ஒப்பத்தோன்றும் |
| 242 | 1 | முன்றுனுள் | மூன்றனுள் |
| 248 | 5 | காலற்திற்கும் | காலத்திற்கும் |
| 249 | 19 | இடக்கை | கிடக்கை |
| ,, | 35 | அறிம்புரி | அறம்புரி |
| 250 | 37 | யோக | போக |
| 252 | 21 | ஆற்றுடைய | ஆற்றலுடைய |
| 258 | 9 | முழுங்கும் | முழங்கும் |
| 261 | 31 | கூறப்படபட்டது | கூறப்பட்டது |
| 264 | 18 | மொழினும் | மொழியினும் |
| 269 | 33 | குரித்தாலின் | குரித்தாகலின் |
| 272 | 9 | லோத்தினுள் | சொல்லோத்தினுள் |
| 278 | 31 | திரிந்தசைப்பினும் | திரிந்திசைப்பினுப் |
| 280 | 33 | இம்பொழுது திட்டமின்று | இப்பொழுது திட்பமின்று |
| 285 | 9 | ஊடம்பின் | உடம்பின் |
| 288 | 11 | பெயற்களின் | பெயர்களின் |
| 295 | 16 | முற்றுமை | முற்றும்மை |
| 296 | 19 | நீலனென | நிலனென |
| 298 | 28 | எண்ணுமயின் | எண்ணும்மையின் |
| 303 | 35 | சொற் களவிகள் | சொற் கிளவிகள் |
| 311 | 28 | மிருதி செய்யும் | மிகுதி செய்யும் |
| 317 | 14 | வைஎயிற்றுச் | வை எயிற்றுச் |
| 318 | 29 | செறிவுமாரும் | செறிவுமாகும் |
| 336 | 24, 25 | பூசப்பூரும்மே | பசப்பூரும்மே |
| 344 | 6 | வந்தது | வந்தன |
| 345 | 23 | தென்பாட்டி | தென்பாண்டி |
| 347 | 27 | செந்தமியற்கை | செந்தமிழியற்கை |
| 348 | 25 | ate | yet |
| 341 | 26 | Sankrit | Sanskrit |
| 349 | 35 | இமையந்தன | இயைந்தன |
| 350 | 24 | ஓதப்பட்டதெனினும் | ஓதப்பட்டனவெனினும் |
| 354 | 30 | கண்ணந்தானே | சுண்ணந்தானே |
| 355 | 20 | செவ்விதழ் | செவ்விரல் |
| 356 | 25 | திரியும் | திரிபும் |
| 380 | 24 | நிலையிலும் | நிலையலும் |
| 381 | 15 | மொழியுமக்கிலின் | மொழியுமாகலின் |
| 394 | 29 | பெயரெ | பெயரே |
| 404 | 12 | மெழுகும் | மெழுகும் |
| ,, | 33 | மேற்றே | கூற்றே |
| 408 | 27 | செய்யன் கிளவி | செய்யென் கிளவி |



ச. பாலசுந்தரம்



இவர் தஞ்சாவூர் கரந்தையில் 1924 இல் பிறந்தார். கரந்தைப் புலவர் கல்லூரியில் பயின்று வித்துவான் வகுப்பில் முதலாவதாகத் தேர்ந்து 1950 முதல் அக் கல்லூரியிலேயே பேராசிரியராகவும் துணை முதல்வராகவும் பணியாற்றி 1982 இல் ஓய்வு பெற்று இப்பொழுது தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் சங்க இலக்கிய அகராதித் திட்டத்தில் பணியாற்றி வருகிறார். கரந்தைத் தமிழ்ச்சங்கப் பணிகள் நூல் வெளியீடுகள் தமிழ்ப் பொழில் ஆகிய வற்றில் இவர்க்குக் குறிப்பிடத் தக்க பங்கு உண்டு.

தொல்காப்பியர் கழகத் தலைவராக இருந்து சிறந்த இலக்கியத் தொண்டாற்றியுள்ளார். கரந்தைக்கோவை முதலிய இலக்கியங்களும் புலவருள்ளம் முதலிய கவிதைநாடக நூல்களும் சார்பெழுத்தாய்வு முதலிய பல இலக்கணக் கட்டுரைகளும் நாடகத்தமிழ் முதலிய இலக்கியக் கட்டுரைகளும் சொல்லாய்வுக் கட்டுரைகளும் வரைந்துள்ளார். தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடான புதிய ராகங்கள் நூலுக்கு இசைப் பாடல்களும் இசைக் கருத்தரங்கக் கட்டுரைகளும் எழுதியுள்ளார். சரசுவதிமகால் நூலகத்திற்காகப் பல நூல்கள் பதிப்பித்துள்ளார். வானொலி நாடகங்கள் பலவற்றில் நடித்துள்ளார். நூற்றுக்கும் மேற்பட்ட கவியரங்குகளிற் பங்கேற்றும் தலைமை தாங்கியும் கவிதைப் பணியாற்றியுள்ளார். சிறந்த இலக்கிய மன்றங்கள் பல இவர்க்குப் பாவலரேறு, கவிஞர்கோ, செஞ்சொற்கவிவலவன் தொல்காப்பியப் பேரறிஞர் முதலிய விருதுகள் அளித்துப் பாராட்டியுள்ளன. இவருடைய நூல்கள் சென்னை, மதுரை, அண்ணாமலை, பாரதிதாசன் பல்கலைக் கழகங்களில் இளங்கலை, முதுகலைப் பட்டப்படிப்பிற்குப் பாடநூல்களாக அமைந்துள்ளன. இப்பொழுது தமிழியற் கோட்பாடுகளை அறிவியல் நோக்கில் ஆராய்ந்து வருகிறார்.

அ. கி. மூர்த்தி.